தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—135

# வளர்ச்சியுறாத நாடுகளின் அரசாங்க நிதியியல்

**(Public Finance in Underdeveloped Countries)**

ஆசிரியர்:
**ஏ. ஆர். பிரெஸ்ட்**

தமிழாக்கம்:
**க. வெற்றிவேல்**, எம்.ஏ.,
பொருளாதார விரிவுரையாளர்,
தியாகராசர் கல்லூரி, மதுரை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு—அரசாங்கம்

B.T.P. No. 135

Bureau of Tamil Publications

# Public Finance in Underdeveloped Countries

A. R. PREST

*Translation*
G. VETRIVEL

Price Rs. 4-25

English Edition A. R. Prest, 1962.
This translation is published by arrangement with M/s. George Weidenfeld & Nicolson Ltd., 20, New Bond Street, London, W.1. England

Printed By
NOVEL ART PRINTERS
MADRAS-14

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாண வர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வரு கின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய் வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும், மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல் கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வரு கிறது.

இவற்றுள் ஒன்றான 'வளர்ச்சியுறாத நாடுகளின் அரசாங்க நிதி யியல்' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 135ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 170 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயி லும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முகவுரை

1961ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் லிஸ்பனிலுள்ள புள்ளி விவரப் பொருளாதார ஆய்வுக் கழகத்தில் தொடர்ச்சியாக ஏழு சொற்பொழிவுகள் நிகழ்த்தினேம். இந்த உரைகளின் அடிப்படையில் இந்நூல் உருவாகியுள்ளது. இவ்வுரைகளைத் திருத்தியும் மிகுதியாக்கியும் புத்தக வடிவில் வெளியிட்டுள்ளோம். ஆருவது அத்தியாயத்திற்கான இரண்டாவது பிற்சேர்க்கை தவிர, ஏனைய பிற்சேர்க்கைகள் நாம் ஏற்கெனவே வெளியிட்டுள்ள புத்தகங்களில் பிரசுரமாகியுள்ளவையேயாகும்.

ஆய்வுக் கழகத்தின் இயக்குநராகிய பேராசிரியர் ஆல்விஸ் மார்டின்ஸ் அவர்கட்கும், அவருடன் பணிபுரிந்து வருகின்ற நண்பர்கட்கும் முதற்கண் எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேம். நாம் ஆற்றிய சொற்பொழிவுகளைப் புத்தகமாக வடிப்பதற்கு இவர்களே பெரும் தூண்டுகோலாக இருந்தனர். மேலும், நாம் ஆற்றிய உரைகளைப்பற்றிய தங்களுடைய மதிப்பிடற்கரிய கருத்துகளையும் தெரிவித்தனர். இரண்டாவதாக, நுட்பமான பல அரிய கருத்துகளை வாரி வழங்கிய பேராசிரியர் பாயர் அவர்கட்கு எம்முடைய நன்றி உரித்தாகுக. கொலம்பியப் பல்கலைக்கழகத்திலுள்ள அரசாங்கப் பொதுநிதி ஆய்வுக் கூடத்தின் உறுப்பினர்களுடன் இப் புத்தகத்திலுள்ள சில பகுதிகளைப்பற்றி நடத்திய விவாதங்களால் நாம் பெரிதும் பயனடைந்தோம். இவர்கட்கும் எம் நன்றி உரித்தாகுக. தொழில்நுட்ப ஒத்துழைப்புத்துறை, 'பொருளாதார சஞ்சிகை'யின் ஆசிரியர்கள், ஆலன் அண்ட் அன்வின் கம்பெனியார்—ஆகியோர் நாம் ஏற்கெனவே வெளியிட்டுள்ள புத்தகங்களிலிருந்து சில பகுதிகளை எடுத்து அவற்றை இப் புத்தகத்தில் சேர்ப்பதற்கு அனுமதி வழங்கியுள்ளனர். இவர்கட்கும் எமது நன்றி உரித்தாகுக.

கிறிஸ்துக் கல்லூரி,
கேம்பிரிட்ஜ்.

ஏ. ஆர். பிரெஸ்ட்

# பொருளடக்கம்

# 1. அறிமுகம்

நாம் இப் புத்தகத்திற்கு வழங்கியுள்ள, 'வளர்ச்சியுருத நாடுகளின் அரசாங்க நிதியியல்' என்ற தலைப்பானது பல பொருள்களை உணர்த்தக்கூடியது. எனவே, இத் தலைப்பை நாம் எந்தப் பொருளில் பயன்படுத்தியுள்ளோம் என்பதை முதற்கண் தெளிவுபடுத்தவேண்டியது இன்றியமையாததாகும். மத்திய அரசாங்கத்தின் பொருளாதாரத் திட்டத்தைப்பற்றிப் பொதுவாக விளக்கக்கூடிய பாடமே அரசாங்க நிதியியல் (Public Finance) என்று சிலர் கருதலாம். அதாவது, இந்தியாவிலுள்ளதுபோலத் திட்டமிடுவதால் நேரக்கூடிய நன்மைகள் யாவை, தீமைகள் யாவை என்பனபற்றியும், இதுபோன்ற திட்டத்தை உருவாக்குவதற்குப் பொருத்தமான வழி எது என்பதுபற்றியும் விவாதிப்பதே அரசாங்க நிதியியலின் நோக்கம் என்று கருதலாம். இவ்வாறன்றி, வளர்ச்சியுருத நாடுகளில் விதிக்கப்பட்டுவருகின்ற வரிகள் யாவை, இந் நாடுகள் வருவாயை எவ்வாறு செலவிடுகின்றன, இந் நாடுகளிலுள்ள நிறுவன அமைப்பு முன்னேறியுள்ள நாடுகளில் இருப்பதைவிட எவ்வாறு வேறுபட்டுள்ளது என்பனபோன்ற பல விஷயங்களை வருணிக்கவேண்டியதே அரசாங்க நிதியியலின் நோக்கம் என்று வேறு சிலர் கருதலாம். நம்முடைய சிறிய ஆராய்ச்சியில் அரசாங்க நிதிபற்றிய எல்லா அம்சங்களையும் விளக்க முடியாது என்பதை நாம் இங்கு எடுத்துக்காட்டாகக் கொடுத்துள்ள இந்த இரண்டு வேறுபட்ட கருத்துகளே உணர்த்தக்கூடும். எனவே, எல்லா அம்சங்களையும் விவாதிக்க முற்படாது ஒருசிலவற்றைமட்டும் தேர்ந்தெடுத்து நாம் விவாதிக்க முற்படுவோம். என்னென்ன இனங்கட்கு (items) அரசாங்கம் செலவுசெய்யவேண்டும், அரசாங்கச் செலவின் உத்தம அளவு (optimum size) எவ்வளவு, விரிவான வளர்ச்சித் திட்டத்தினால் நேரக்கூடிய நன்மைகள் யாவை என்பனபோன்றவற்றைப்பற்றி நாம் விரிவாக விளக்கம் தர இயலாது. இதற்குப் பதில், தற்சமயம் பல நாடுகளில் அரசாங்கச் செலவு எவ்வாறு அமைந்திருக்கின்றது, இச் செலவிற்கான நிதி

திரட்டுவதில் உள்ள இடர்ப்பாடுகள் யாவை, பல்வேறு வகை யான வரிகளில் எவ்வெவ் வரிகளை இந் நாடுகளில் விதிக்கலாம் என்பனபோன்ற பிரச்சினைகளை ஆராய்வோம்—இவ்வாருன விஷயங் களையே நாம் விவாதிக்கத் திட்டமிட்டிருப்பதற்கு இரண்டு கார ணங்கள் உள்ளன. முதலாவதாக, பேராசிரியர் மஸ்க்ரேவ் அவர்கள் தமது புத்தகத்தில்[1] வலியுறுத்திக் கூறியிருப்பதுபோல, அரசாங்கத் துறை எவ் அளவினதாக இருக்கவேண்டும் என்பதுபோன்ற விஷ யங்கள் இந் நாடுகளில் அரசியல் ரீதியாகத் தீர்மானிக்கப்படுகின் றனவேயன்றிப் பொருளாதார அடிப்படையில் அல்ல. எனவே, இவ் விஷயங்கள் முக்கியமானவையாகவும் கவர்ச்சியுள்ளவையாகவும் இருந்தபோதிலும், இங்கு அவற்றை விவாதிக்கும் நோக்கம் நமக்குக் கிடையாது. இரண்டாவதாக, பொதுவான பொருளாதாரக் கொள்கைகளின் அடிப்படையில் இந் நாடுகளிலுள்ள பிரச்சினையை அணுக முயன்ருல், நாம் பல்வேறு நாடுகளில் அமைந்துள்ள நிறுவன அமைப்புமுறைகளைப்பற்றியும் விளக்காமல் இருக்கமுடியாது. ஆனல், பல நாடுகளைப்பற்றி நாம் விவாதிக்கும்போது அடிக்கொரு முறை ஒவ்வொரு நாட்டிலுமுள்ள நிறுவன அமைப்பைப்பற்றி விளக்கிக் கொண்டுசென்ருல், அது தொந்தரவானதாகவும் சோர்வை உண் டாக்கக்கூடியதாகவும் அமையலாம்.

எனவே, ஆரம்பத்திலிருந்தே நாம் அரசாங்கப் பொது நிதியின் ஒருசில அம்சங்களைமட்டுமே விளக்குவோம் என்பதையும், நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் அரசாங்கத்தின் பங்கு யாது என்று தற்காலத்தில் பெரிதும் விவாதிக்கப்பட்டுவருகின்ற விஷயங்களைப் பற்றி நாம் ஏதும் சொல்லமாட்டோம் என்பதையும் மீண்டும் வலி யுறுத்த விரும்புகிறேம். இவ்வாறு நாம் தீர்மானித்திருப்பது தவறு என்று கருதுவோர், இந் நூலைப் படிக்கமுயலாது இந்த விஷயங்களை விரிவாக விளக்கியுள்ள நூல்களைப் படிக்க முயலுவதே சிறப்புடைய தாகும்.

நம்முடைய ஆராய்ச்சியை இன்னெரு வகையிலும் வரை யறுத்துக்கொள்ளவேண்டியிருக்கின்றது. அதாவது, பிரிட்டிஷ் காமன்வெல்த்திலுள்ள பின்தங்கிய நாடுகளைப்பற்றியும், கடந்த காலத்தில் பிரிட்டனுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்த பின் தங்கிய நாடுகளைப்பற்றியுமே நாம் இந் நூலில் பெரிதும் விளக்க முயலுவோம். இதற்கான காரணங்கள் மிகச் சாதாரணமானவை யாகும். ஏனைய பின்தங்கிய நாடுகளைப்போலல்லாது இந் நாடு களுடன் நமக்கு நேரடியான அநுபவம் உண்டு என்பது முதலாவது

[1] R. A. Musgrave, 'The Theory of Public Finance' (McGraw-Hill, New York, 1959), Parts I and II passim ஐப் பார்க்கவும்.

காரணமாகும். காமன்வெல்த் நாடுகளைப்பற்றிய விஷயங்களைச் சேகரிப்பதும், இந் நாடுகளில் நேர்ந்துவருகின்ற மாற்றங்களைக் கண்காணித்துவருவதும் பிரிட்டனில் வசித்துவருபவர்களுக்கு மிகவும் எளிதானவை என்பதே இரண்டாவது காரணமாகும். எனினும், நாம் இவ்வாறு வரையறுத்திருப்பதனால் இடர்ப்பாடு ஏதேனும் நிகழக்கூடும் என்று ஐயப்படவேண்டுவதில்லை. ஏனெனில், ஜனத்தொகையின் அளவு, பரப்பளவு, அரசியல் சுதந்திரம் பெற்றுள்ள அளவு, சீதோஷ்ணநிலை, பூகோள அமைப்பு ஆகிய பல விஷயங்களைப் பொறுத்தவரையில் இந்த நாடுகள் பலவாறு வேறுபட்டுத் திகழ்கின்றன. எனவே, இந் நாடுகளில் இல்லாத பிரச்சினைகள் வேறு பின்தங்கிய நாடுகளில் பெரிதும் இருக்க முடியாது என்பதே நம்முடைய கருத்தாகும். உண்மையில் நமக்கு நேரக்கூடிய இடைஞ்சல் நாம் மேலே குறிப்பிட்டுள்ளதற்கு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. அதாவது, இந் நாடுகட்கிடையே உள்ள வேறுபாடுகள் சிறிய அளவிலல்லாது பெரும் அளவிலுள்ளது இடர்ப்பாடாக இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது.

இறுதியாக நாம் ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறோம். நாம் விவாதிக்கவிருக்கும் சில விஷயங்கள் நாம் தேர்ந்தெடுத்துள்ள நாடுகள் எல்லாவற்றிற்கும் பொருந்தக்கூடியவை என்று கூறுவதற்கில்லை; இவை சில நாடுகட்கே பொருந்தக்கூடியவையாக இருக்கலாம். மேலும், சில நாடுகட்குமட்டுமே பொருந்தக்கூடிய (ஒருவேளை இவை எல்லா நாடுகட்கும் பொருந்தக்கூடியவையாகவும் இருக்கக்கூடும்) பல விஷயங்களை நாம் இங்கு விவாதிக்கவில்லை. இவை தவிர்க்கமுடியாதவையாகும்.

இப் புத்தகத்தை அறிமுகம் செய்யும் வகையில் பொதுவான குறிப்புகளை இதுகாறும் நாம் விளக்கினோம். அடுத்து, வளர்ச்சியுறாத நாடுகளின் சிறப்பான அம்சங்களைப்பற்றிச் சுருக்கமாக விளக்க முயலுவோம். இதை விளக்கியபின் இந் நாடுகளின் பொருளாதார வளர்ச்சியில் தற்சமயம் அரசாங்கத்தின் பங்கு யாது என்று ஆராய்வோம். இதை ஆராயும்போது அரசாங்கம் என்னென்ன செய்யவேண்டும் என்று கோட்பாட்டு ரீதியாக விவாதிக்காது, இந் நாடுகளில் அரசாங்கம் என்ன செய்துவருகின்றது என்பதுகுறித்தும், அரசாங்கம் என்ன செய்யவேண்டும் என்று மக்கள் எதிர்பார்க்கின்றனர் என்பதுகுறித்தும் விவாதிப்போம். இதையொட்டி இந் நாடுகள் கடைப்பிடிக்கவேண்டிய வரிக்கொள்கை (fiscal policy) எவ்வாறு இருக்கவேண்டும் என்பதுகுறித்தும், பல்வேறு வரிவிதிப்புக் கொள்கைகட்கு முன்னேறிய நாடுகளில் அளிக்கப்படுகின்ற முக்கியத்துவத்தினின்றும் இந் நாடுகளில் அளிக்கப்படவேண்டிய முக்கி

யத்துவம் வேறுபடவேண்டுமா என்பதுகுறித்தும் நாம் விவாதிக்கவேண்டியிருக்கும்.

வளர்ச்சியுருத நாடுகளின் சிறப்பான அம்சங்களை விளக்கும் நோக்கத்தோடு அறிஞர் பலர் பெரியபெரிய முயற்சிகள் செய்துள்ளனர். இதனுல் பெரிதும் பயன் விளையக்கூடும் என்று நாம் கருதவில்லை. யானைகளைப்பற்றி மோர்லி பிரபு கூறியுள்ளது இங்கு நினைவுக்கு வருகின்றது. யானையைப்பற்றிச் சரியாகத் தன்னுல் விளக்க முடியாவிடினும், யானை இதுதான் என்று தான் கண்டு கொள்ளமுடியும் என்று மோர்லி பிரபு கூறியுள்ளார். இது பின் தங்கிய நாடுகட்கும் பொருந்தும். இவற்றைப்பற்றி நம்மால் சரியான விளக்கம் தரமுடியாவிட்டாலும், பின்தங்கிய நாடு இது என்று நாம் எளிதில் கண்டுகொள்ளமுடியும். உற்பத்தியைச் (production) சார்ந்த சில பொதுவான அம்சங்களை நாம் பின்தங்கிய நாடுகளில் காணலாம். அவை வருமாறு: 'சாதாரணமாக இந் நாடுகளில் மூலதனத்தைவிட (capital) ஜனத்தொகை (population) அதிகமாக உள்ளது. இவை பெரிதும் மூலப்பொருள்களையே (primary products) உற்பத்திசெய்துவருகின்றன. இம் மூலப்பொருள்களில் பலவற்றை இந் நாடுகளிலுள்ள மக்கள் தமது ஜீவனத்திற்கென்றே (subsistence) பயன்படுத்திவருகின்றனர். உற்பத்தி முறையானது இந் நாடுகளில் பெரிதும் வேறுபட்டு அமைந்திருந்தபோதிலும் (உதாரணமாக, பார்படோஸ் நாட்டில் கரும்பு சாகுபடி எஸ்ட்டேட் அளவில் நடைபெற்றுவருகின்றது. ஆனுல், கானு நாட்டில் கோகோ சாகுபடி சிறு குடியானவர்களால் செய்யப்பட்டுவருகின்றது), நாம் இங்கு விளக்கியுள்ள பொதுவான அம்சங்கள் யாவும் எல்லாப் பின்தங்கிய நாடுகட்கும் பொருந்தக்கூடியவையேயாகும். இவை தவிர, நுகர்வைச் (consumption) சார்ந்த பின்தங்கிய நாடுகளின் சிறப்பான அம்சம் வருமாறு: மேல்நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இந் நாடுகளில் மக்களின் வருமானமும் வாழ்க்கைநலமும் மிகவும் குறைவான்வையாகும். உதாரணமாக, இங்கிலாந்தில் ஆண்டொன்றுக்கு மக்களின் தலா வருமானம் (per capita income) 400 பவுனுகும். ஆனுல், பல ஆப்பிரிக்க நாடுகளில் மக்களின் தலா வருமானம் 10 பவுனிலிருந்து 20 பவுனேயாகும். காலப்போக்கில் நேரக்கூடிய மாற்றங்களைப்பொறுத்தவரையில், இந் நாடுகட்கிடையே பெரிதும் ஒத்தநிலை உள்ளது என்று கூறுவதற்கில்லை. நாட்டின் வருமானம் (income), உற்பத்தி (output) ஆகியவற்றில் குறுங் காலத்தில் (short-run) பல பின்தங்கிய நாடுகளில் பெரிதும் ஏற்ற இறக்கங்கள் நேர்ந்துவருகின்றன. மிகப் பிரபலமான அறிக்கை[1]

[1] 'Instability in Export Markets for Underdeveloped Countries' (UN, New York, 1962) பார்க்கவும். இரண்டாவது உலகப் போருக்குப் பின்

ஒன்று கூறியுள்ளதுபோல, இந் நாடுகளில் 1901–50-க்கு உட்பட்ட 50 ஆண்டுகளில் ஆண்டுதோறும் 18 மூலப்பொருள்களின் விலைவாசிகளில் நேர்ந்த மாற்றங்களின் சராசரி 14 சதவீதமாகும். ஆண்டுதோறும் ஏற்றுமதியில் நேர்ந்த மாற்றங்களின் சராசரி 18 சதவீதத்திலிருந்து 19 சதவீதத்திற்கு உட்பட்டதாகும். ஆண்டுதோறும் ஏற்றுமதிமூலம் கிட்டிய வருவாயில் நேர்ந்த மாற்றங்களின் சராசரி 23 சதவீதமாகும். விலைவாசி, உற்பத்தி ஆகியவற்றில் இவ்வாறு நேரக்கூடிய ஏற்ற இறக்கங்களைஒட்டி எழக்கூடிய பிரச்சினைகளை அடுத்து நாம் விரிவாக விவாதிக்கவிருப்பதால், இதை இந்த அளவோடு தற்போதைக்கு நிறுத்திக்கொள்வோம். பெரும்பாலான பின்தங்கிய நாடுகளில் ஜனத்தொகை விரைந்து வளர்ந்துகொண்டிருப்பது இந் நாடுகளின் மற்ருெரு சிறப்பான அம்சமாகும். ஐரோப்பிய நாடுகளில் (திருத்தப்படாத) பிறப்பு வீதங்கள் (birth rates) 1000-க்கு 16 என்றவாறு அமைந்துள்ளன. (இந் நாடுகளில் மிக அதிகமான பிறப்பு வீதமான 1000-க்கு 27·4ஆனது 1958ஆம் ஆண்டு ஐஸ்லாந்தில் நேர்ந்தது. மிகக் குறைவான பிறப்பு வீதமான 1000-க்கு 8·5 ஆனது இதே ஆண்டு மேற்கு பெர்லினில் நேர்ந்தது.) ஆனல், கானு நாட்டின் பிறப்பு வீதம் 1000-க்கு 52·4 ஆகும். பிரிட்டிஷ் கயானுவில் இது 1000-க்கு 44·5 ஆகும். மலேயாவில் இது 43·2 ஆகும். இந் நாடுகளில் பிறப்பு வீதத்தைப்போலவே (திருத்தப்படாத) இறப்பு வீதமும் (death rate) மிக அதிகமாக உள்ளபோதிலும் (உதாரணமாக, ஐரோப்பாவில் இறப்பு வீதம் 1000-க்கு 9-லிருந்து 12 ஆகும். ஆனல், கானுவில் இது 20·9 ஆகும்), இந்த நாடுகளின் ஜனத்தொகை மிக விரைவான வீதத்திலேயே அதிகரித்துவருகின்றது. பின்தங்கிய நாடுகளில் பெரும்பாலான நாடுகளின் ஜனத்தொகை வளர்ச்சி வீதம் (rate of population growth) ஆண்டொன்றுக்கு 3 சதவீதத்தை ஒட்டி அமைந்துள்ளது. சில நாடுகளின் ஜனத்தொகை வளர்ச்சி வீதமானது 3 சதவீதத்தைவிட அதிகமாக உள்ளது. (உதாரணமாக, 1947–57-க்கு இடைப்பட்ட காலத்தில் சிங்கப்பூரில் ஜனத்தொகை வளர்ச்சி வீதம் 4·3 சதவீதமாக இருந்தது.[1])

---

மூலப்பொருள்களை உற்பத்திசெய்யும் நாடுகளில் ஏற்றுமதிகளின்மூலம் கிடைத்து வந்த வருவாயானது ஆண்டுதோறும் சராசரி 9-லிருந்து 12 சதவீத ஏற்றஇறக்கத்திற்கு உள்ளாகியது என்று இவ்வறிக்கையை அடுத்துப் பிரசுரமான மற்ருேர் அறிக்கை கூறுகின்றது ('International Compensation for Fluctuations in Commodity Trade', UN, New York, 1961).

[1] இந்தப் புள்ளிவிவரமானது 'United Nations Statistical Yearbook' 1959 (New York, 1960)-லிருந்து எடுத்துத்தரப்பட்டதாகும். பிரிட்டனில் 19ஆம் நூற்ருண்டின் முதற் பகுதியில் பொருளாதார வளர்ச்சியை ஒட்டித் தோன்றிய பிரச்சினைகளோடு பின்தங்கிய நாடுகளில் தற்போதுள்ள பிரச்சினைகளை இந்த ஒரு விஷயத்தைப் பொறுத்தவரையில் ஒப்புநோக்க முடியாது. ஏனெனில், இங்கிலாந்திலும் வேல்ஸிலும் 1811-க்கு 1861-க்கும் இடைப்பட்ட காலத்தில் ஜனத்தொகை ஆண்டுதோறும் 1·4 சதவீதமே உயர்ந்துகொண்டிருந்தது.

தலா வருமானமானது (per capita income) இந் நாடுகளில் ஒரே அளவில் மாற்றமுற்றுச் செல்கின்றது என்று கூறுவதற்கில்லை. நெடுங்கால அடிப்படையில் நோக்கும்போது சில நாடுகளில் வியக்கத்தக்க அளவு தலா வருமானம் அதிகரித்துள்ளது. (உதாரணமாக, 1900-ல் நைஜீரியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட எண்ணெய் வித்துகளின் அளவு 65,000 டன்களாகும். இது அண்மைக் காலத்தில் 800,000 டன்களாக உயர்ந்திருக்கின்றது. இவ்வாறே வேறு சில பொருள்களின் ஏற்றுமதியும் உயர்ந்துள்ளது.) வேறு சில நாடுகளில் அண்மைக் காலத்தில் விரைவான வளர்ச்சி நேர்ந்துள்ளது. (உதாரணமாக, 1950–59-க்கு உட்பட்ட காலத்தில் ஜமாய்க்காவில் தேசீயப் பணவருமானம் மும்மடங்காகப் பெருகியது. ஜனத்தொகையில் நேர்ந்த மாற்றங்கள், விலைவாசிகளில் நேர்ந்த மாற்றங்கள் ஆகியவற்றிற்காகச் சில தள்ளுபடிகள் செய்தபின்னும், இது ஒரு வியக்கத்தக்க மாற்றம் என்றே சொல்லத் தோன்றுகிறது. 1952–4-க்கும் 1957–9-க்கும் இடைப்பட்ட காலத்தில் கென்யாவில் உண்மையான தலா வருமானம் 40 சதவீதம் அதிகரித்தது.) எனினும், வேறு சில நாடுகளில் இவற்றிற்கு மாருக நேர்ந்துள்ளதைக் காணமுடியும். தம்முடைய முந்தைய வருமான அளவுகள் குறைந்துவிடாது அவற்றைப் போற்றிப் பாதுகாப்பதற்கென்று இந் நாடுகள் பெரிதும் முயற்சி செய்யவேண்டியுள்ளது. மொரீஷஸ் நாட்டில் 1953-க்கும் 1958-க்கும் இடைப்பட்ட காலத்தில் மக்களின் உண்மையான தலா வருமானம் முன்பு இருந்ததைவிட 10 சதவீதம் குறைவுற்றது என்று மொரீஷஸ் நாட்டைப்பற்றி அண்மையில் ஆராய்ந்துள்ள பேராசிரியர் மீட்[1] அவர்கள் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

எனவே, தலா வருமானம் ஒரு காலத்திற்கும் இன்னொரு காலத்திற்கும் இடையே மாறிச்செல்கின்ற வீதமானது பின்தங்கிய நாடுகள் எல்லாவற்றிலும் ஒரேமாதிரியாக அமைந்திருக்கவில்லை. பெரிதும் மாறிமாறி அமைந்துள்ளது. இவ் வீதமானது நாட்டின் வளர்ச்சி வேகத்தை உணர்த்தக்கூடிய முக்கியச் சாதனம் என்று ஒருசிலரும், மிகமிக முக்கியமான சாதனம் என்று வேறு சிலரும் கருதுகின்றனர். இது நிற்க. தலா வருமானம் நாட்டிற்கு நாடு வேறுபடுவதுபோலவே, பின்தங்கிய நாடுகளில் தலா நிலமும் (land per head) நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றது. பெரும்பாலும் தலா வருமான வேறுபாட்டிற்கும், தலா நில வேறுபாட்டிற்கும் இடையே பரஸ்பர சம்பந்தம் (இது எல்லாச் சூழ்நிலைகளிலும் உள்ளது என்று கூறுவதற்கில்லை) உள்ளது. அதாவது, ஜனத்-

[1] J. E. Meade et al, 'The Economic and Social Structure of Mauritius' (Methuen, London, 1961) பார்க்கவும்.

தொகை வளர்ச்சி வீதம் அதிகமாக உள்ள நாட்டில்—இதன் விளைவாகத் தலா நிலம் குறைய நேர்வதால்—தலா வருமான வளர்ச்சி வீதம் மிகக் குறைவாக இருக்கின்றது. இவ்வாறன்றி ஜனத் தொகை வளர்ச்சி வீதம் மிகக் குறைவாக உள்ள நாட்டில்—தலா நிலம் பெரிதும் பாதிக்கப்பட்டிருப்பதால்—தலா வருமான வளர்ச்சி வீதம் அதிகமாக இருக்கின்றது. எனினும், இதுபோன்ற அரும் பெரும் பிரச்சினைகளை இங்கு ஆராய்வது நமது தலையாய நோக்கமன்று. எனவே, இதை இத்துடன் முடித்துக்கொண்டு மேலே செல்வோம்.

பின்தங்கிய நாடுகளின் பொதுவான தன்மைகுறித்து இதுகாறும் நாம் தந்துள்ள விளக்கத்தின் அடிப்படையில் இந் நாடுகளிலுள்ள நிதிப்பிரச்சினைகளை விவாதிக்க முயலுவோம். நம்முடைய விவாதத்தைக் கீழே தந்துள்ள இரண்டு முக்கியத் தலைப்புகளின் கீழ் ஒழுங்குசெய்துகொள்வது சௌகரியமாக இருக்கும். (1) அரசாங்கச் செலவுகள் நெடுங்காலத்தில் உயர்ந்துகொண்டே செல்லும் தன்மையன; (2) பின்தங்கிய நாடுகளின் அரசாங்க நிதிகள் பெரிதும் நிலையற்றவை. இவ்வாறு இரண்டு தலைப்புகளின்கீழ் நாம் விவாதம் செய்வது சரியானதுதான் என்பது நாம் இவற்றை விளக்கிச் செல்லச்செல்லத் தெளிவாகும்.

அரசாங்கச் செலவுகள் அதிகரித்துக்கொண்டே செல்லும் தன்மையன என்பதை உணர்த்தப் பலவகையான உதாரணங்கள் உள்ளன. நாம் எந்த ஒருவகை உதாரணத்தைத் தேர்ந்தெடுத்தாலும் அது இந்த உண்மையைத் தெற்றென விளக்குகிறது. உதாரணமாக, 1958ஆம் ஆண்டு நைஜீரியாவில் அரசாங்கச் செலவானது (இது மத்திய அரசாங்கம், பிரதேச அரசாங்கங்கள் ஆகியவற்றின் செலவுகளைக் குறிக்கின்றது. ஸ்தலஸ்தாபனங்களின் செலவை நாம் இத்துடன் சேர்க்கவில்லை) 1939ஆம் ஆண்டில் இருந்ததைவிடச் சுமார் 15 மடங்கு அதிகமானதாகும். இந் நாட்டில் இந்தக் காலத்தில் நேர்ந்த விலைவாசி மாற்றங்கட்கென்று சில தள்ளுபடிகள் செய்துகொண்டபின்னும் இது மாபெரும் உயர்வேயாகும் என்று அறியவருகிறோம். உதாரணமாக, இக் காலத்தில் பிரிட்டனில் அரசாங்கச் செலவு எந்த அளவு உயர்ந்ததோ அதைவிட அதிகமான அளவு நைஜீரியாவில் அரசாங்கச் செலவு உயர்ந்தது. 1959ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் காலனிகளாக இருந்த நாடுகளின் மொத்தச் செலவை உற்றுநோக்கினால், இது 1939 ஆம் ஆண்டில் இருந்ததைவிட 10 மடங்கு அதிகமானது என்பது தெளிவாகும். குறுங்காலத்தில்கூட அரசாங்கச் செலவு உயரலாம் என்பதற்கு லிபியா நாடு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழுகின்றது. அதாவது, லிபியாவில் 1954–5-க்கும் 1957–8-க்கும் இடைப்பட்ட

காலத்தில் அரசாங்கத்தின் பணச்செலவானது இரண்டு மடங்காக உயர்ந்தது.[1]

இங்கு நாம் ஒரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்க வேண்டும். நாம் மேலே கொடுத்துள்ள புள்ளிவிவரங்கள் யாவும் கடந்த காலத்தில் அரசாங்கங்கள் எந்த அளவு செலவிட்டன என்பதையே குறிப்பனவாகும். எனவே, அரசாங்கச் செலவுகள் நெடுங்காலத்தில் உயர்ந்துகொண்டே செல்லும் தன்மையன என்பதை உணர்த்த இப் புள்ளிவிவரங்கள் ஓரளவுக்கே பயன்படக் கூடியன. உதாரணமாக, கடந்த காலத்தில் ஒவ்வோர் ஆண்டும் மக்கள் எவ்வளவு உருளைக்கிழங்கை நுகர்ந்தனர் என்று நாம் கணக்கிட்டுவைத்துள்ள புள்ளிவிவரமானது உருளைக்கிழங்கின் விலைக்கும், உருளைக்கிழங்கிற்கான தேவைக்கும் இடையே உள்ள உறவை உணர்த்தமுடியாது. இதுபோலவே, கடந்த காலத்தில் ஒவ்வோர் ஆண்டும் அரசாங்கம் எவ்வளவு செலவுசெய்தது என்று நாம் கணக்கிட்டுவைத்துள்ள புள்ளிவிவரமானது, நாட்டின் சட்டமன்றம், பல்வேறு குழுக்கள் ஆகியவற்றின் வற்புறுத்தலின்பேரில் அரசாங்கமானது எந்த அளவுக்குச் செலவுசெய்திருக்கவேண்டுமோ, அந்த அளவையே குறிக்கின்றது என்று கொள்ளமுடியாது. இக் கருத்தை விளக்குமுகத்தான் புள்ளிவிவரங்களைக் கையாளமுடியாது. எனினும், நாட்டிலுள்ள பலரும் அரசாங்கச் செலவானது எந்த அளவுக்கு அதிகமாகவேண்டுமென்று கடந்த காலத்தில் விரும்பினர்களோ, அதைவிட உண்மையில் செய்யப்பட்ட செலவு குறைவானதுதான் என்பதை நாம் உணரவேண்டும். தான் நிர்ணயித்துள்ள செலவைவிட அதிகமாகச் செலவிடவேண்டும் என்ற கட்டாயம் எல்லா நாடுகளிலும் எல்லாக் காலத்திலும் அரசாங்கங்கட்கு நேர்ந்து வந்துள்ளது. எனினும், குறிப்பாகப் பின்தங்கிய நாடுகளிலுள்ள அரசாங்கங்களே இதுபோன்ற கட்டாயங்கட்குப் பெரிதும் ஆளாகி வருகின்றன என்பது உண்மையாகும்.

அரசாங்கச் செலவுகளில் அண்மைக் காலத்தில் இவ்வாறு பெருமளவு மாற்றங்கள் நேர்ந்துள்ளதற்கான காரணங்கள் யாவை என்பது குறித்து இனி ஆராய்வோம். (பொதுவான விலைவாசி உயர்வு நீங்கலாக) இதற்கான முக்கியக் காரணங்கள் பின்வரும் மூன்றுகும் : 1. ஜனத்தொகை வளர்ச்சி; 2. உள்நாட்டில் உருவாகி

[1] ஆசியாவிலுள்ள நாடுகளில் அண்மைக் காலத்தில் அரசாங்கச் செலவு எவ்வாறு வளர்ந்துள்ளது என்பதுகுறித்துச் சுருக்கமான விளக்கத்தைக் கீழ்க்காணும் புத்தகத்தில் காணலாம்: 'Economic Survey of Asia and the Far East', 1960 (UN, Bangkok, 1961) p. 45. 1950ஆம் ஆண்டிற்கும் 1958ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் எல்லா நாடுகளிலும் அரசாங்கச் செலவானது 50 சதவீதத்திற்குக் குறையாமல் அதிகரித்தது. சில நாடுகளில் அரசாங்கச் செலவு 8 மடங்காகவும் 9 மடங்காகவும் பெருகியது.

யுள்ள சக்திவாய்ந்த கருத்துகள்; 3. உலகெங்கணும் நிலவிவருகின்ற சக்திவாய்ந்த கருத்துகள். இம் மூன்று காரணங்களையும் தனித் தனியே விவரமாக நாம் விளக்கும்போது பொருளாதார எல்லைகளை விட்டுச் சிறிது விலகிப்போக நேரிடும். எனினும், இவ்வாறு செய்வ தானது தவிர்க்கமுடியாத ஒன்று என்பதும், அவசியமான ஒன்று என்பதும் இவற்றை விளக்கும்போது புலனாகும்.

பின்தங்கிய நாடுகளில் ஜனத்தொகையானது எந்த வீதத்தில் வளர்ந்துசெல்கின்றது என்பது குறித்து நாம் ஏற்கெனவே விளக்கி யுள்ளோம். இவ்வாறு ஜனத்தொகை வளர்ச்சியடைவதால் அரசாங் கத்திற்கு அதிகப்படியாகச் செலவினங்கள் எவ்வாறு நேரக்கூடும் என்பதை இங்குக் காண்போம். ஜனத்தொகை விரைந்து வளர்ச்சி யடைவதன் விளைவாக நாட்டில் சாலைகள், வீட்டு வசதிகள், சாக்கடை வசதிகள், தண்ணீர் விநியோகம் ஆகியவற்றை விஸ்தரிக்கவேண்டிய அவசியம் நேரிடும். எனவே, இவற்றிற்கான செலவுகளை அதிகரிக்கவேண்டிய அவசியமும் நேரிடும். மேலும், ஜனத்தொகை எந்த வீதத்தில் வளர்ச்சியடையுமோ அந்த வீதத்தைவிட அதிகமாக நாட்டில் குழந்தைகளின் எண்ணிக்கை பெருகும். எனவே, ஜனத்தொகை வளர்ச்சி வீதத்தைவிட அதிக மான வீதத்தில் குழந்தைகட்கான கல்வி வசதிகளை அரசாங்கம் விஸ்தரிக்கவேண்டி நேரிடும். மேலும், ஜனத்தொகை விரைந்து வளர்ச்சியுறும் காலங்களில் பெரும்பாலும் மக்கள் கிராமப்புறங்களி லிருந்து நகரப்புறங்கட்குக் குடிபுகலாம்.[1] பொதுமக்களின் சௌகரி யத்திற்காக அரசாங்கம் ஆற்றிவருகின்ற சேவைகளின் தரம் கிராமப் புறங்களில் இருப்பதைவிட நகரப்புறங்களில் அதிகமாக இருப்பதால், இதன் விளைவாக அரசாங்கத்தின் செலவு பெருமளவு அதிகரிக்கக் கூடும். இது நிற்க. ஜனத்தொகை எந்த வீதத்தில் வளர்ந்துகொண்டு செல்லுமோ அதே வீதத்தில் எல்லாவகையான அரசாங்கச் செலவு களும்(உதாரணமாக, மத்தியஅரசாங்கத்தின் நிருவாகச் செலவுகள்) உயர்ந்துசெல்லவேண்டும் என்ற அவசியமில்லை. எனினும், பல துறை களிலும் அரசாங்கச் செலவு உயருவதற்கு ஈடாக நாட்டின் உற்பத்தித் திறன் (productivity) பெருகும் என்று கூறிவிடமுடியாது. (இதற்கு உதாரணமாக, ஆசிரியர்கள், போலீஸ்காரர்கள் ஆகியவர்கட்காக அரசாங்கம் செய்துவருகின்ற செலவினங்களைக் குறிப்பிடலாம்.) எனவே, ஜனத்தொகை வளர்ச்சி வீதத்தைவிடப் பொதுவாக அரசாங்கச் செலவின் வளர்ச்சி வீதம் அதிகமாக இருக்கக்கூடும் என்று நாம் முடிவுகட்டலாம்.

[1] U. K. Hicks, 'Development from Below' (Oxford, 1961), p. 233 பார்க்கவும்.

அண்மையில் அரசாங்கச் செலவு பெருமளவு அதிகரித்துள்ளமைக்கு 3 சதவீதத்தையொட்டி அமைந்துள்ள ஜனத்தொகை வளர்ச்சி வீதமே முழுக்கமுழுக்கக் காரணமாகும் என்று கூறிவிடமுடியாது. எனவே, செலவுப் பெருக்கத்திற்கான ஏனைய காரணங்களையும் ஆராயவேண்டும். உள்நாட்டில் உருவாகியுள்ள சக்திவாய்ந்த கருத்துகளே இதற்கான இரண்டாவது காரணமாகும். இக் காரணத்தை நாம் இங்கு விளக்கத் தலைப்படுவோம். பொருளாதார அம்சங்களும், வேறு பல அம்சங்களும் இக் காரணத்தில் பின்னிப் பிணைந்துள்ளன. முதற்கண், எல்லா நாடுகளிலும் மக்கள் தங்களுடைய வாழ்க்கைத்தரம் பெரிதும் முன்னேறவேண்டும் என்ற பெரு விருப்பு உடையோராக உள்ளனர். எனவே, வீட்டுவசதிகள், சமூகப் பாதுகாப்பு வசதிகள், மருத்துவ வசதிகள்போன்ற பல வசதிகளையும் தாம் பெற்றுத் திகழவேண்டும் என்று உலகெங்கணும் உள்ள மக்கள் பெரிதும் விரும்புகின்றனர். இதேபோல நெடுங்காலத்தில் பயனளிக்கக்கூடிய கல்வி வசதி, சாலைகள் அமைத்தல்போன்ற பொது நன்மைகட்காகவும் அரசாங்கம் பெருமளவு செலவிடவேண்டும் என்று எல்லா நாடுகளிலும் மக்கள் எண்ணத் தலைப்பட்டுள்ளனர். நயாசாலாந்தில் ஆப்பிரிக்கர்களின் கல்விக்கென்று செலவிடப்பட்டுள்ள தொகை இதைத் தெற்றென விளக்கும். இந் நாட்டில் **1948**ஆம் ஆண்டு கல்விக்கென்று அரசாங்கம் *114,000* பவுன்கள் செலவிட்டது; இது *1957*ஆம் ஆண்டில் *530,000* பவுன்களாகவும், *1960–1*ல் *1,075,000* பவுன்களாகவும் உயர்ந்துள்ளது. மேலும், இந்நாட்டில் **1948**ஆம் ஆண்டு கல்விக்கென்று கிறிஸ்துவ மிஷன்கள் **58,000** பவுன்கள் செலவிட்டன; இது *1957*ஆம் ஆண்டு *201,000* பவுன்களாக உயர்ந்தது. இவை தவிர, இந் நாட்டில் ஸ்தல ஸ்தாபனங்கள் கல்விக்கென்று செலவிட்ட தொகையும் அதிகரித்துள்ளது.[1] இங்கு நாம் ஒரே ஓர் எடுத்துக்காட்டுமட்டும் கொடுத்துள்ளோம். இதுபோன்ற பல எடுத்துக்காட்டுகளை நாம் கூறிக்கொண்டே போகமுடியும். இதுநிற்க. இங்கு நாம் ஒரு விஷயத்தைக் குறிப்பிடவேண்டியுள்ளது. அதாவது, பின்தங்கிய நாடுகளில் சில பொருள்கட்கும் சேவைகட்குமான ஏற்பாடுகளைச் செய்வதில் சில எதிர்பார்க்கமுடியாத தொந்தரவுகள் உள்ளன. ஆஸ்பத்திரிகள் கட்டுவதை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். பெரும்பாலும் உஷ்ணப் பிரதேசங்களான பின்தங்கிய நாடுகளில் புயற்காற்றுலும் சூறுவளியாலும் அடிக்கொருமுறை கேடுகள்நேரக்கூடும். இவற்றின் விளைவாக வீடுகள்மட்டுமன்றி ஆஸ்பத்திரிகளும் தரைமட்டமாக நேரலாம். எனவே, எந்தச் சூழ்நிலையில் ஆஸ்பத்திரிகளின் சேவை பெரிதும் இன்றியமையாததோ, அந்தச் சூழ்நிலையில் அவை

[1] D. T. Jack, 'Report on Economic Survey of Nyasaland', 1958–59 (Federation of Rhodesia and Nyasaland, 1960) பார்க்கவும்.

பயனற்றுப்போக நேரலாம். ஆகவே, இந் நாடுகளில் சூருவளி, புயற் காற்று ஆகியவற்ருல் பாதிக்கப்படாத வகையில் ஆஸ்பத்திரிகள் கட்டப்படவேண்டுவது மிகவும் அவசியமாகும். இதன் விளைவாக அரசாங்கத்திற்கு அதிகச் செலவுகள் நேருவது இயற்கையேயாகும். இதுபோலவே, கல்விச் செலவுகளும் இந் நாடுகளில் அதிகமாக இருக்கக்கூடும். ஏனெனில், இந் நாடுகளில் பெரும்பாலும் பல்வேறு இனத்தவர் வாழ்ந்துவருவதையொட்டிப் பல்வேறு மொழிகளும் பழக்கவழக்கங்களும் உள்ளன. இவற்றிற்கு ஏற்ற வகையில் கல்வித்தரத்தை ஒரே சீராக நிலைநிறுத்துவதற்கு அரசாங்கம் அதிகமான பணம் செலவிடவேண்டி நேரலாம். குறிப்பிட்ட ஒவ்வொரு வசதியையும் தனித்தனியே நோக்குங்கால், அவ்வவ் வசதிகள் இந்த நாடுகளில் மிகவும் இன்றியமையாதவை என்றே வாதிடத்தோன்றும். உதாரணமாக, சுயகவுரவத்தை நிலைநிறுத்த விரும்பும் எந்தச் சமுதாயத்திலும் சமூகப் பாதுகாப்பு இன்றியமையாதது என்று சொல்லத் தோன்றும். இதேபோலச் சாலைகளைச் சீர்திருத்தவேண்டுவது மிக அவசியமானது என்று சொல்லத் தோன்றும். நவின சுகாதார வசதிகட்கான ஏற்பாடுகளை உடனடியாகச் செய்யவேண்டும் என்றும் சொல்லத் தோன்றும். இவ்வாறு குறிப்பிட்ட ஒவ்வொரு வசதியும் மிக அவசியமானது என்று நாம் எளிதில் வாதிடலாம். ஆனுல், இவ் வசதிகள் யாவற்றையும் ஒருங்கே ஒரே காலத்தில் இந் நாடுகளில் ஏற்படுத்த முடியுமா என்பது ஐயப்பாட்டிற்குரியதேயாகும்.

தம்முடைய நாட்டின் பொருளாதார நிலையிலும் சமுதாய அமைப்பிலும் பெருமுன்னேற்றங்கள் நேரவேண்டும் என்ற விழிப்புணர்ச்சி பின்தங்கிய நாடுகளில் குறுகிய காலத்தில் உருவாகியுள்ளதற்குப் பல காரணங்கள் உள்ளன. இரண்டாவது உலகப் போர் நடந்துகொண்டிருந்த சமயம் நேர்ந்த நிகழ்ச்சிகள் இதற்கு ஓரளவுக்குக் காரணமாகும். இதன் விளைவாக உயர்ந்த வாழ்க்கைத் தரம் உள்ள மக்களுக்கும், தாழ்ந்த வாழ்க்கைத்தரம் உள்ள மக்களுக்கும் இடையே தோன்றியுள்ள தொடர்புகளும் ஓரளவுக்குக் காரணமாகும். இரண்டாவது உலகப் போருக்குப்பின் விமானப் போக்குவரத்து பெரிதும் முன்னேறியுள்ளதையொட்டிப் பின் தங்கிய நாடுகட்கும் முன்னேறிய நாடுகட்கும் இடையே எளிதில் தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்ள முடிகின்றது; இதேபோல உஷ்ணப் பிரதேசங்களும் குளிர்ப் பிரதேசங்களும் சிரமமின்றித் தங்களுக்குள் தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்ளமுடிகின்றது. இதன் விளைவாக, நாட்டில் பொருளாதார முன்னேற்றம் எவ்வாறு நேரக்கூடும் என்ற கருத்துகளில் மாற்றங்கள் நேர்ந்துள்ளன. நாட்டில் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்குமுகத்தான் அரசாங்கம் ஏற்பாடுகள் செய்யமுடியும் என்ற கருத்து இந் நாடுகளில் ஆக்கம்

பெற்றுள்ளது. இக் கருத்து அண்மைக் காலத்திலேயே பெரிதும் ஆக்கம்பெற்றுள்ளது என்பது உண்மையாகும். உதாரணமாக, இரண்டாவது உலகப் போருக்குமுன் பிரிட்டிஷ் காலனிப் பிரதேசங்களில் வளர்ச்சித் திட்டங்களைப்பற்றி விவாதங்கள்கூட நடக்கவில்லை. ஆனால், தற்சமயம் இவ் வளர்ச்சித் திட்டங்கள் இப் பிரதேசங்களில் பெரும் பங்கு பெற்றுள்ளன. (வளர்ச்சித் திட்டங்கள் உருவாக்கப் படுவதால் நாட்டில் பொருளாதார வளர்ச்சியும் முன்னேற்றமும் நேரக்கூடுமோ என்பதுகுறித்து ஈண்டு நாம் விவாதிக்கவேண்டியதில்லை. எனினும், இவ்வாறான திட்டங்கள் தீட்டப்படுவதானது பொருளாதாரத்துறையில் முன்னேற வாய்ப்புகள் உள்ளன என்று மக்களிடையே ஏற்பட்டுள்ள விழிப்புணர்ச்சியைப் புலப்படுத்துகின்றது என்பது தெளிவாகும்.) அண்மைக் காலத்தில் இந் நாடுகளில் நேர்ந்துள்ள வியக்கத்தக்க அளவு அரசியல் மாற்றங்கள் நாம் இங்கு இதுகாறும் விவாதித்த பல காரணங்களினும் மிக முக்கியமானதாகும். ஐ.நா. சபையில் சுதந்திரம் பெற்ற ஆப்பிரிக்க நாடுகளின் எண்ணிக்கை 1960ஆம் ஆண்டு பெரும் அளவுக்கு இருக்கக்கூடும் என்று யாரும் 1950-ல் எதிர்பார்த்திருக்கவே முடியாது. இதை யாராவது எதிர்பார்த்துக் கூறியிருந்தால், அவரை மக்கள் எள்ளி நகையாடியிருப்பர்.

பின்தங்கிய நாடுகளில் புதிய விழிப்புணர்ச்சி எவ்வாறு தோன்றியது என்பதை நாம் வரலாற்றின் அடிப்படையில் ஆராய்ந்துகொண்டே செல்வது மிகவும் கவர்ச்சிகரமானது என்பதில் ஐயமில்லை. எனினும், இவ்வாறு நாம் செய்யும்போது பொருளாதார விளக்கத்தைவிட்டுப் பெரிதும் விலகிக்கொண்டே செல்ல நேர்வதால், இதை இத்துடன் முடித்துக்கொண்டு நாம் விவாதித்துக்கொண்டிருந்த முக்கியமான விஷயத்திற்கு மீண்டும் வருவோம். தம் நாடு பொருளாதார முன்னேற்றம் காணவேண்டுவது அவசியம் என்றும், பொருளாதார முன்னேற்றத்தை அடைவது சாத்தியமானது என்றும் பின்தங்கியுள்ள நாடுகளிலுள்ள மக்களிடையே நேர்ந்துள்ள விழிப்புணர்வையொட்டி அரசாங்கம் என்னென்ன பணிகள் ஆற்றவேண்டும் என்ற மக்களின் கருத்திலும் மாற்றங்கள் நேர்ந்துள்ளன. பவிதமான பொருள்கள், சேவைகள் ஆகியவற்றை அரசாங்கமே விலை கொடுத்து வாங்கவேண்டும். இவற்றில் சிலவற்றை அரசாங்கமே உற்பத்திசெய்ய முன்வரவேண்டும். நாட்டிலுள்ள பல வகுப்பாருக்குமிடையே உள்ள வருமான ஏற்றத்தாழ்வுகளைப் போக்க அரசாங்கம் முயலவேண்டும் என்று இந் நாடுகளிலுள்ள மக்கள் எண்ணத் தலைப்பட்டுள்ளனர். இது விரும்பத்தக்கதா அல்லது பழிக்கத்தக்கதா என்று கூறவேண்டுவது இங்கு நம்முடைய கடன் அன்று; உள்ள நிலையை உள்ளவாறே இங்கு விளக்கி

யுள்ளோம். இவ்வாறு பல பணிகளிலும் அரசாங்கமானது தன்னை ஈடுபடுத்திக்கொள்ளவேண்டும் என்ற கருத்து ஆக்கம்பெற்றுவருவ தற்குப் பல சான்றுகள் கூறமுடியும். இந் நாடுகளில் அரசாங்கம் தேசிய வளர்ச்சித் திட்டங்களைத் தயாரிப்பது ஒரு சான்ருகும். இந் நாடுகள் வகுத்துள்ள திட்டங்களில் அரசாங்கத்துறைக்குப் பெரும் பங்கு [உதாரணமாக, இந்தியாவில் மூலதன ஆக்கத்தைப் (capital formation) பெருக்கும் நோக்கத்தோடு அரசாங்கத்துறைக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது] அளிக்கப்படுவது மற்ருெரு சான்ருகும். பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான தொழில்களையும் வசதிகளையும் அரசாங்கமே உருவாக்கவேண்டும் என்ற கருத்து அண்மைக் காலத்தில் ஆக்கம்பெற்றுவருவது மற்றும் ஒரு சான்ருகும். 25 ஆண்டுகட்குமுன் அரசாங்கம் என்னென்ன பணிகளை ஆற்றவேண்டும் என்று மக்கள் கருதியதோடு, இதை ஒப்பிட்டு நோக்கினுல் இம் மாற்றம் வியக்கத்தக்க அளவினது என்றே கூறத் தோன்றுகிறது. கம்பெனிகளும் வியாபாரிகளும் நாட்டில் தங்களுடைய பொருளாதார நடவடிக்கைகளை யாதொரு சிரமுமின்றி நடத்திவருவதற்கு ஏதுவாக அமைந்துள்ள ஒரு நிறுவனமே அரசாங்கம் என்ற கருத்து 25 ஆண்டுகட்குமுன் நிலவியது. இப்போது இக் கருத்தில் பெருமாற்றங்கள் நேர்ந்துள்ளன. பொருளாதார முன்னேற்றத்தைத் துரிதப்படுத்துவதில் குறைந்தபட்சமாவது அரசாங்கம் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளவேண்டும் என்ற கருத்துத் தற்போது ஆக்கம்பெற்றுள்ளது. அதாவது, குறைந்தபட்சம், பொருளாதார வளர்ச்சிக்கு ஆதாரமாக உள்ள தனியார் துறைக்கு நேரக்கூடிய இடைஞ்சலைக் குறைக்கவும் அகற்றவும் அரசாங்கமானது தேவையான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று கருதப்படுகின்றது. உண்மையில் பெரும்பாலான நாடுகளில் அரசாங்கமானது திட்டவட்டமான முறையில் நாட்டின் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்க முன்வரவேண்டும் என்ற கருத்தே நிலவிவருகின்றது. அதாவது, தனியார்துறைக்குத் தான் ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தும், தனியார்துறையை அறிவுறுத்தியும் அரசாங்கம் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கவேணடும் என்ற எண்ணம் பல நாடுகளிலும் வேரூன்றியுள்ளது.

இவ்வாறு உலகெங்கும் நேர்ந்துள்ள கருத்து மாற்றத்திற்கு—சிலர் கூறுவதுபோல நம்பிக்கைக்கு—பல காரணங்கள் உள்ளன. நாம் ஏற்கெனவே விளக்கியுள்ளதுபோல இரண்டாம் உலகப் போரின்போது அரசாங்கங்கள் பெற்றிருந்த முக்கியத்துவம் ஒரு காரணமாகும். எனினும், இக் காரணத்தை நாம் அதிமாக வலியுறுத்தக்கூடாது. ஏனெனில், இரண்டாம் உலகப் போரைச் சமாளிப்பதற்கென்றே நாடு முழுவதையும் வேறு எந்த நாடும் செய்

யாத வகையில் தயார்செய்த நாடு பிரிட்டன் ஆகும். இதனுல் பிரிட்டிஷ் பொருளாதார அமைப்பில் பல நீங்காத மாற்றங்கள் ஏற்பட்டன. எனினும், சோவியத் ரஷ்யாவையும் அதைச் சார்ந்த நாடுகளையும் நீக்கிப் பார்க்கும்பொழுது, பின்தங்கிய நாடுகளைப்போலல்லாது பிரிட்டனில் இரண்டாம் உலகப் போருக்குப்பின் முன்பு இருந்ததைவிட அரசாங்கக் கட்டுப்பாடுகள் குறைந்துள்ளன என்பதை நாம் அறியலாம். எனவே, இரண்டாம் உலகப் போரை விடப் பல ஆண்டுகளாக உலகெங்கணும் பரவிவந்துள்ள சமதர்மக் கொள்கைகளே முக்கியக் காரணமாகத் தோன்றுகிறது. அதாவது, சமதர்மக் கோட்பாடுகள் ஓரளவுக்கும், சோவியத் யூனியனைச் சார்ந்த நாடுகளின் பொருளாதார முன்னேற்றம் ஓரளவுக்கும் முக்கியக் காரணமாகத் தோன்றுகிறது. இவை தவிர, உள்நாட்டுத் தொழில் நிருவாகிகளின் ஊக்கமின்மையும் தேக்கநிலையும் சில நாடுகளில் அரசாங்கம் பொருளாதார வளர்ச்சியில் பெரும்பங்கு வகித்துவருவதற்கான காரணமாகும்.[1] தொழில் நிருவாகிகளின் ஊக்கமின்மையின் விளைவாக அரசாங்கமே தொழில் முன்னேற்றத்திற்கான பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றதோர் கருத்து இந்நாடுகளில் உருவாகி, அரசாங்கம்தான் தொழில் முன்னேற்றத்தை ஏற்படுத்தமுடியும் என்ற கருத்தாக மலர்ந்திருக்கிறது.

உலகெங்கணும் உருவாகியுள்ள விழிப்புணர்வுக்குக் காரணங்கள் யாதாயினும் ஆகுக. அவை முழுவதையும் நாம் ஈண்டு விளக்க இயலாது. எனினும், ஒன்றுமட்டும் உண்மையாகும். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை ஊக்குவிப்பதற்கு அரசாங்கம் வன்மையான திட்டவட்டமான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று மக்கள் ஒத்துக்கொள்வதுடன், இவ்வாறே எதிர்பார்க்கவும் செய்கின்றனர். இதையொட்டி நாம் இங்கு மற்ருெரு விஷயத்தைக் குறிப்பிடவேண்டியுள்ளது. மக்கள் இவ்வாறு எதிர்பார்க்கிருர்கள் என்றுமட்டும் கூறிவிடமுடியாது. ஓட்டுரிமை வழங்கப்பட்டிருப்பதால் இதைச் செயற்படுத்தும் ஆற்றலோடும் மக்கள் திகழுகின்ருர்கள் என்றே சொல்லவேண்டும். தற்சமயம் ஆப்பிரிக்கா முழுவதுமட்டுமன்றி உலகெங்கணும் பெரும்பாலான நாடுகளில் மக்களே தம்மை ஆளவேண்டிய அரசாங்கத்தை நிர்ணயிக்கும் ஆற்றலோடு திகழ்கிருர்கள். ஆப்பிரிக்க நாடுகளில் 25 ஆண்டுகட்குமுன் ஐரோப்பியர்களே அரசாங்கத்தை நடத்திவந்தனர். உள்நாட்டு மக்களுக்கு எந்தவிதமான பங்கும் வழங்கப்படவில்லை. ஆனுல்,

[1] ஏனைய நாடுகளைவிட்டுத் தனித்து இருக்கக்கூடிய சிறிய பிரதேசத்தில் என்னென்ன பிரச்சினைகள் தோன்றக்கூடும் என்று தெளிவான முறையில் J. W. F. Rowe அவர்கள் தம்முடைய 'The Economy of the Scychelles and its Future Development' (mimeographed, Septemper 1958) என்ற புத்தகத்தில் விளக்கியுள்ளார்.

தற்சமயம் இதற்கு நேர்மாருக அமைந்துள்ளது. அதாவது, உள் நாட்டு மக்களே அரசாங்கத்தை நிர்ணயிக்கக்கூடிய உரிமை பெற்றுத் திகழ்கின்றனர். இந் நாடுகளில் அரசியல் மாற்றங்கள் எந்த வேகத்தில் உருவாகி வரவேண்டும் என்ற விஷயத்தைப் பொறுத்தவரையில் பலதரப்பட்ட கருத்துகள் நிலவமுடியும். ஆனால், இந் நாடுகளில் அரசியல்துறையில் உள்நாட்டிலுள்ள அரசியல்வாதிகளே ஆற்றலுடன் திகழுகின்றனர் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. இதனுல் நேரக்கூடிய சில விரும்பத்தகாத விளைவுகள்குறித்து நாம் வருத்தப்படலாம். மேலும், இதனுல் இந் நாடுகளின் நலன்கள் பாதிக்கப்படக்கூடும் என்று நாம் அஞ்சலாம். உதாரணமாக, நாவன்மையுள்ள அரசியல்வாதி வாக்காளர்கட்கு இலஞ்சம் கொடுப்பதுபோன்ற தவருன வழிகளைக் கடைப்பிடிப்பதால் நாட்டிற்குக் கேடு நேரலாம். பொருளாதாரப் புலவோர் (Economists) என்ற முறையில் நமக்கும் இதற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை என்று கருதி இதை இத்துடன் விடுகிறேம்.[1] எனினும், பின்தங்கிய நாடுகளில் தாங்கள் விரும்பும் அரசாங்கத்தைப் பதவியில் இருத்தவும், விரும்பாத அரசாங்கத்தைப் பதவியினின்றும் அகற்றவும் மக்களே அதிகாரம் பெற்றுள்ளனர் என்பதை நாம் அறியவேண்டும்.[2]

அரசாங்கச் செலவுகள் உயர்ந்துகொண்டே செல்வதற்கு ஏற்ற முறையில் உள்நாட்டில் உருவாகியுள்ள கருத்துகள் யாவை என்பது குறித்து நாம் இதுகாறும் விளக்கமாக ஆராய்ந்தோம். அவற்றைச் சுருக்கமாக மீண்டும் இங்குக் காண்போம். மக்களின் வாழ்க்கைத் தரம் உயருவதற்குத் திட்டமான நடவடிக்கைகள் எடுக்கப்பெற வேண்டும் என்ற கருத்து நிலவுவதும், இந் நடவடிக்கைகளில் அரசாங்கமே பெரும்பங்கு பெறவேண்டும் என்ற கருத்து உருவாகியிருப்பதும், இவ்வாருன பங்குபெற்று ஆற்றலுடன் திகழாத அரசாங்கங்களை அகற்றக்கூடிய அதிகாரம்பெற்று மக்கள் திகழுவதும் இந் நாடுகளில் அரசாங்கச் செலவுகள் உயர்ந்துகொண்டே செல்வதற்கு ஏற்ற முறையில் அமைந்துள்ள விஷயங்களாகும். இதுகாறும் அரசாங்கச் செலவு உயர்ந்துசெல்வதற்கான மூன்று காரணங்களில் இரண்டு காரணங்களை விளக்கினேம். இனி, மூன்ருவது கார

1 நமக்கு ஆதரவு தெரிவித்த மக்களுக்கு அரசியல்வாதியானவர் அரசாங்க வேலை வாங்கித்தருவதை ஒட்டி அரசாங்கச் செலவு அதிகரித்தால் நமக்கும் இதற்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்று கூறிவிட முடியாது.

2 அண்மையில் சுதந்திரம் பெற்றுள்ள பல நாடுகளில் ஜனநாயக முறை வேரூன்ற முடியாமையால் இராணுவ ஆட்சியும் இராணுவ ஆட்சிபோன்ற சர்வாதிகார ஆட்சியும் தோன்றியுள்ளன. இந்த இராணுவ அரசாங்கங்கள் ஜனநாயக அரசாங்கங்களைவிடப் பெருமளவு நாட்டுப் பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றன. இதில் வியப்பிற்கு இடமே இல்லை. இராணுவத்தினரின் மனேநிலை இவ்வாறே அமையும் என்று நாம் அனுமானிப்பதில் தவறென்றுமில்லை.

ணத்தை—அதாவது, உலகெங்கணும் ஒருமித்த வகையில் உருவாகியுள்ள வன்மையான கருத்துகளை ஆராய்வோம்.

உள்நாட்டில் நிலவக்கூடிய கருத்தால் நேர்ந்த விளைவு இது. உலகெங்கணும் நிலவிவருகின்ற கருத்தால் நேர்ந்த விளைவு அது என்று நாம் திட்டவட்டமாகக் கருத்துகளைப் பாகுபாடு செய்வதென்பது சாத்தியமில்லை. உதாரணமாக, கல்விக்காகவும் சுகாதாரத்திற்காகவும் அரசாங்கம் அதிகப் பணம் ஒதுக்குவதை, உள்நாட்டு மக்களைத் திருப்திபடுத்துவதற்கென்று அரசாங்கம் இவ்வாறு செய்ய முனைந்துள்ளது என்றோ, அல்லது வேறு நாடுகளிலுள்ள முறைகளைக் கடைப்பிடிக்கும் நோக்கத்தோடும் அம் முறைகளை ஒட்டித் தம் நாட்டுக் கல்விமுறையை உருவாக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் அரசாங்கம் இவ்வாறு செய்கின்றது என்றோ திட்டவட்டமாக நாம் எதுவும் கூறமுடியாது. எனினும், இதுபோன்ற விஷயங்களில் உலக நாடுகள் கொண்டுள்ள அக்கறையின் விளைவாகத் தனிப்பட்ட நாடுகள் தங்களுடைய செலவின் அளவை ஓரளவுக்கு உயர்த்தவேண்டி நேர்ந்துள்ளது என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. இவ் விஷயங்களில் உலக நாடுகளின் அக்கறையானது, ஐ.நா. சபையில் நடக்கின்ற விவாதங்கள், பொருளாதாரப் புலவர்களின் மாநாடுகள், பன்னாட்டு உதவி நிறுவனங்களின் நடவடிக்கைகள் ஆகியவற்றின்மூலம் பிரதிபலிக்கின்றது. மேலும், தனியாரின் செலவைவிட அரசாங்கச் செலவைப் பொறுத்தவரையில், கவர்ச்சி விளைவின் ஆற்றல் (demonstration effect) அதிகமானது என்பது உண்மையாகும். இதற்கு மாருக, பின்தங்கிய நாடுகளைப்பற்றிப் பல உலக நிறுவனங்களில் விவாதங்கள் நடைபெறுவதன் விளைவாக அரசாங்கச் செலவுகள் குறைக்கப்படுவதற்கன்றோ வாய்ப்புகள் உள்ளன என்று வாதிடுவோரிடம், 'நீங்கள் இவ்வாறு வாதிடுவதற்கு ஆதாரம் ஏதுமுளதோ? உளதெனில், அவற்றைக் காண்பியுங்கள்' என்று நாம் கேட்கத் தோன்றுகிறது. இவர்களின் கருத்துச் சரியானதொன்றன்று. இதற்கு மாறுபட்ட கருத்தே சரியானது என்பதை இவ் விவாதங்களை மேற்போக்காக நோக்கியமாத்திரத்திலேயே யாரும் கூறுவர்.

பின்தங்கிய நாடுகளில் நெடுங்காலத்தில் அரசாங்கச் செலவுகள் உயர்ந்தே செல்லும் தன்மையன என்ற கருத்திற்கு ஆதரவாக நாம் இதுகாறும் பொருளாதார அடிப்படையிலும் வேறு அடிப்படையிலும் பல காரணங்கள் கண்டோம். இவ் விவாதத்தை முடிக்கும் வகையில் ஐ.நா. சபை அண்மைக் காலத்தில் பிரசுரித்துள்ள சில புள்ளிவிவரங்களைக் காண்போம். பல நாடுகளையும் ஒரு பொதுவான அடிப்படையில் இங்கு நாம் வகைப்படுத்தியுள்ளோம். அதாவது, பின்னே தரப்பட்டுள்ள அட்டவணையில் நாடுகளை முன்

னேறிய நாடுகள் என்றும், பின்தங்கிய நாடுகள் என்றும் தனித் தனியே இருபெரும் பிரிவாகப் பிரித்துள்ளோம்.

கீழே கொடுத்துள்ள அட்டவணையைப்பற்றி விவாதிக்கப் புகு முன் ஒரு விஷயத்தை உள்ளத்தில் இருத்திக்கொள்ளவேண்டியது அவசியமாகும். செலவுமுறையைப் பொறுத்தவரையில் பின்தங்கிய நாடுகட்கும் முன்னேறியுள்ள நாடுகட்கும் இடையே பொதுவாக ஒரு வேறுபாடு உள்ளது. அதாவது, பின்தங்கிய நாடுகளைவிட முன்னேறிய நாடுகளில் பாதுகாப்புச் செலவானது அதிகமான முக்கியத்துவம் வகித்துவருகின்றது. பாதுகாப்புச் செலவானது பெரிதும் முக்கியத்துவம் வகித்துவருகின்ற நாடுகளை (உதாரணமாக, பிரிட்டன், அமெரிக்கா போன்ற நாடுகளை) நாம் கீழே தந்துள்ள அட்டவணையில் கணக்கிடவில்லை. எனினும், மற்றவை மாறுதிருக் குமேயானால், மொத்தச் செலவில் நடப்புப் பண்டங்கட்கும் (current goods) சேவைகட்கும் என்று முன்னேறிய நாடுகள் செலவிடும் விகிதத்தைவிட இவற்றிற்கென்று பின்தங்கிய நாடுகள் செலவிடும் விகிதமானது குறைவானதேயாகும் என்பதை அறியவருவோம்.

மத்திய அரசாங்கச் செலவு

(1957-59-க்கான சராசரி)
(சதவீதத்தில்)

| | முன்னேறிய நாடுகள் | பின்தங்கிய நாடுகள் (இந்தியா நீங்கலாக) | பின்தங்கிய நாடுகள் (இந்தியா உட்பட) |
|---|---|---|---|
| நடப்புப் பண்டங்கள், சேவைகள் ஆகியவற்றுக்காக | 42·4 | 41·2 | 33·7 |
| மொத்த மூலதன ஆக்கம் | 5·8 | 25·1 | 23·2 |
| நடப்புக் காலப் பண மாற்றங்கள் | 25·1 | 18·7 | 15·3 |
| நடப்புக் கால மானியங்கள் | 15·0 | 3·1 | 4·8 |
| மூலதன மானியங்கள் நிதிச் சொத்துகளிலான பேரங்கள் ஆகியவற்றிற்காக | 11·7 | 11·9 | 23·0 |
| மொத்தம் | 100·0 | 100·0 | 100·0 |

மூலம்: UN Statistical Year Book, 1959 (UN, Newyork, 1960)

குறிப்புகள்: (1) 'முன்னேறிய நாடுகள்' என்ற தலைப்பின் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள புள்ளிவிவரங்கள், ஆஸ்திரியா, ஃபின்லண்ட், ஃபிரான்ஸ், இத்தாலி, நெதர்லண்ட்ஸ், நார்வே, ஸ்வீடன், நியூஸிலண்ட் ஆகிய நாடுகட்கான புள்ளிவிவரங்களின் 'நிறைசெய்யப்பட்ட சராசரி' (weighted average) ஆகும்.

(2) 'பின்தங்கிய நாடுகள்' என்ற தலைப்பின்கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள புள்ளிவிவரங்கள், இலங்கை, சிலி, ஈகுவேடார், கானு, ஹாண்டுராஸ், இந்தியா, கொரியா, வெனிசூலா ஆகிய நாடுகட்கான புள்ளிவிவரங்களின் 'நிறைசெய்யப்பட்ட சராசரி' ஆகும். ஏனைய நாடுகளைக்காட்டிலும் இந்தியாவானது மிகப் பெரிய நாடாகையால், இந்தியாவை நீக்கியும் இந்தியாவை உட்படுத்தியும் இரண்டு வகையான புள்ளிவிவரங்கள் தரப்பட்டுள்ளன.

(3) அட்டவணையிலுள்ள இனங்கட்கு (items) வழங்கப்பட்டிருக்கின்ற இலக்கணமானது (definition) எல்லா நாடுகட்கும் ஒரே வகையில் பொருந்தக் கூடியது என்று கொள்வதற்கில்லை; இவற்றிற்கிடையே சிறு சிறு வேறுபாடுகள் உள்ளன. மேலும், சில இனங்கட்கான புள்ளிவிவரங்கள் 1957—9-க்கே உரித்தானவை என்று கொள்வதற்கில்லை; இவை 1957—9ஐ விடச் சிறிது வேறுபட்ட ஆண்டுகட்கு உரியவையாக இருக்கலாம்.

முன்னேறிய நாடுகளைவிடப் பின்தங்கிய நாடுகளில் நடப்புப் பணங்கட்கும் முதற்கருவிப் பொருள்கட்கும் (capital goods) செலவிடப்படுகின்ற விகிதம் மிகவும் அதிகமானது என்பதை அட்டவணை தெளிவுறுத்துகின்றது. அதாவது, முன்னேறிய நாடுகளில் இப் பொருள்கட்காக 50 சதவீதத்திற்கும் குறைவாகச் செலவிடப்படுகின்றது. ஆனல், பின்தங்கிய நாடுகளில் இப் பொருள்கட்காக 60 சதவீதத்திற்கும் அதிகமாகச் செலவிடப்படுகின்றது. பின்தங்கிய நாடுகளில் நடப்புக் காலப் பணமாற்றங்கள் (சமூகப் பாதுகாப்புக்கான செலுத்தினங்கள் போன்றவை) பெரிதும் முக்கியத்துவம் பெருதது இதற்கு ஒரு காரணமாகும். இந் நாடுகளில் மூலதனச் செலவுகள் பெரிதும் முக்கியத்துவம் பெற்றிருப்பது மற்ருேர் காரணமாகும். இவ்விரண்டு காரணங்களுள், இரண்டாவது காரணம் குறிப்பிடத்தக்கதாகும். ஏனெனில், முன்னேறிய நாடுகளில் மூலதன ஆக்கத்திற்கென்று (capital formation) சுமார்

6 சதவீதம்மட்டுமே செலவிடப்படுகின்றது; ஆனல், பின்தங்கிய நாடுகளில் மூலதன ஆக்கத்திற்கென்று சுமார் 25 சதவீதம் செலவழிக்கப்படுகின்றது. பின்தங்கிய நாடுகளில், நாட்டுப் பொருளாதார வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதில் அரசாங்கம் பெரும் பங்கு வகித்துவருகின்றது என்ற உண்மையை இது தெற்றென விளக்குகின்றது.

மேலே தரப்பட்டுள்ள அட்டவணையின் அடிப்படையில், இறுதியாக ஒரு விஷயத்தைமட்டும் நாம் குறிப்பிட விரும்புகிறேம். சில சந்தர்ப்பங்களில், நடப்புக் காலப் பணமாற்றங்கட்காகச் செலவழிப்பதைவிடப் பொருள்கள், சேவைகள் ஆகியவற்றிற்காக ஒரு பவுன் அதிகமாகச் செலவிடப்பட்டால், வருமானப் பெருக்க விளைவுகள் (income generating effect) அதிகமாக நேரக்கூடும் என்பது, தற்கால வரிக்கோட்பாட்டின் (fiscal theory) ஒப்பமுடிந்த முடிவாகும். மேலும், நடப்புக் காலப் பணமாற்றங்கட்காக ஒரு பவுன் அதிகமாகச் செலவிடப்படும்போது, அரசாங்கத்தின் வருவாய் ஒரு பவுன் அதிகரித்தால், இதனல் நாட்டின் வருமான மட்டம் எந்த விதத்திலும் பாதிக்கப்படமாட்டாது. ஆனல், அரசாங்கத்தின் வருவாய் ஒரு பவுன் அதிகமாவதை ஒட்டிப் பொருள்கள், சேவைகள் ஆகியவற்றிற்காக ஒரு பவுன் அதிகமாகச் செலவிடப்பட்டால், இதன் விளைவாக ஓரளவுக்கு வருமானப் பெருக்க விளைவு ஏற்படும். 'சமநிலை பட்ஜெட் பெருக்கி'க் (balanced budget multiplier) கோட்பாட்டின் எடுகோள்களைப் (assumptions) பற்றியும், பலதரப்பட்ட விளக்கம்பற்றியும் ஈண்டு நாம் ஏதும் சொல்ல விரும்பவில்லை. இவை யாவும் மஸ்க்ரேவ்[1] அவர்களின் புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ளன. விளக்கத்தை அப்புத்தகத்திலேயே காண்க. நாம் இங்குக் குறிப்பிட விரும்புவது ஒரே ஒரு விஷயத்தைத்தான். அது வருமாறு: நாம் மேலே கொடுத்துள்ள அட்டவணையில் உள்ளதுபோலவே இறுதிநிலைப் பேரங்கள் யாவும் அமையுமேயாயின், பின்தங்கிய நாடுகளில் அரசாங்க வருவாய் ஒரு பவுன் அதிகமாவதை ஒட்டி அரசாங்கச் செலவு ஒரு பவுன் அதிகமானல், இதில் பெரும் பகுதிப் பொருள்கள், சேவைகள் ஆகியவற்றிற்காகச் செலவு செய்யப்படும்; ஒரு சிறு பகுதியே நடப்புக் காலப் பணமாற்றங்கட்காகச் செலவழிக்கப்படும். எனவே, அதிகப்படியான வரிகள்மூலம் கிட்டிய தொகையைக்கொண்டு செய்யப்படுகின்ற அதிகப்படியான செலவினல் முன்னேறிய நாடுகளைவிடப் பின்தங்கிய நாடுகளிலேயே வருமானப் பெருக்க விளைவு அதிகமாக இருக்கமுடியும்.[2]

[1] R. A. Musgrave, 'The Theory of Public Finance', Chap. 18.

அரசாங்கச் செலவுகள் நெடுங்காலத்தில் அதிகரித்துக் கொண்டே செல்லும் தன்மையன என்பது குறித்து இதுகாறும் நாம் விரிவாக நடத்திய விவாதத்தின் திரண்ட கருத்தைக் கீழே சுருக்கித் தந்துள்ளோம். இதற்கான காரணங்கள் மூன்று என்று கண்டோம். ஜனத்தொகை வளர்ச்சி முதலாவது காரணமாகும். பொருளாதார, சமுதாய முன்னேற்றத்திற்காக அரசாங்கம் பெருமளவு செலவு செய்ய முன்வரவேண்டும் என்ற கருத்து இந் நாடுகளில் உருவாகியிருப்பதுவும், இந் நாடுகளில் நேர்ந்துள்ள அரசியல் மாற்றங்களை ஒட்டி மக்கள் ஓட்டுரிமை பெற்றிருப்பதன் விளைவாகப் பொருளாதார, சமுதாய முன்னேற்றங்கட்கான ஏற்பாடுகளை அரசாங்கமே செய்ய வேண்டும் என்ற கருத்து ஆக்கம் பெற்றிருப்பதுவும் இரண்டாவது காரணமாகும். உலகெங்கணும் ஒருமித்த வலிமையான கருத்துகள் தோன்றியிருப்பது மூன்ருவது காரணமாகும். நாம் மேலே விளக்கியுள்ள காரணங்கள் யாவும் பொருளாதார அடிப்படையில் அமைந்தவை என்று கூறுவதற்கில்லை. அதாவது, அரசாங்கத்தின் சேவை, அரசாங்கம் விநியோகித்துவருகின்ற பொருள்கள் ஆகியவை பெரிதும் வருமானம்சார் தேவை நெகிழ்ச்சி (income elasticity of demand) உடையவை என்பதுபோன்ற பொருளாதார அடிப்படையில் அமைந்துள்ள காரணங்களைமட்டும் நாம் மேலே விளக்கவில்லை. அரசாங்கச் செலவு உயர்வுக்கு இவையும் ஓரளவுக்குக் காரணமாகும் (உதாரணமாக, தங்கள் வருமானம் எந்த அளவு அதிகரிக்கின்றதோ அதைவிட அதிகமான அளவு பணத்தை அரசாங்கம் கல்விக்காகச் செலவிட வேண்டும் என்று மக்கள் விரும்புகின்றனர்) என்பது உண்மையேயாயினும், இவையே முக்கியமான காரணங்கள் என்று கொள்வதற்கில்லை. எனவே, பொருளாதார அடிப்படையில் அமைந்துள்ள பல கருத்துகளை (உதாரணமாக, கல்விக்காக அரசாங்கம் அதிகப் பணம் செலவழிக்கவேண்டும் என்று மக்கள் விரும்புவதற்கு, அவர்களுடைய சுவையுணர்வு, வருமானம் ஆகியவற்றில் நேர்ந்துள்ள மாற்றங்கள் எந்த அளவுக்குக் காரணமாகும் என்பதைப் பொருளாதார அடிப்படையிலேயே தீர்மானிக்கமுடியும்) நாம் விவாதிக்க வேண்டியது நேரிடும் என்பது உண்மையேயாயினும், பொருளாதார அடிப்படையான விஷயங்கள்மட்டுமன்றி அரசியல் அடிப்படையில் அமைந்துள்ள விஷயங்களும் முக்கியமான காரணங்களாக உள்ளன என்பதை நாம் அறியவேண்டும். எழுபது, எண்பது ஆண்டுகட்கு முன், ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த பொருளாதாரப் புலவராகிய வேக்னர் (Wagner) அவர்கள், அரசாங்க நடவடிக்கைகள் என்றென்

2 மூலதன ஆக்கத்திற்கென்று அரசாங்கம் அதிகப் பணம் செலவிடுவதன் விளைவாக வெளிநாடுகளிலிருந்து முதற் கருவிப் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டியது நேரிடும். இதுபோன்ற சூழ்நிலையில் நாம் மேலே கூறியிருப்பதற்கு மாறுபட்ட விளைவே ஏற்படும்.

றும் வளர்ந்தே செல்லக்கூடியன என்று விளக்கியுள்ள விதியை ஏற்றுக்கொள்ளும் அளவுக்கு நாம் அரசியல் அடிப்படையில் அமைந்துள்ள காரணங்கட்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டியதில்லை. எனினும், அரசாங்கச் செலவுகள் உயர்ந்து செல்லும் தன்மையை வழி வழியாக வந்துள்ள பொருளாதாரக் கோட்பாட்டின் துணை கொண்டே முழுவதும் விளக்கிவிட முடியாது என்பதையும், இக் கோட்பாடு இதை ஓரளவுக்கே விளக்கவல்லது என்பதையும் நாம் உணரவேண்டும்.

இனி, நாம் தேர்ந்தெடுத்துள்ள இரண்டாவது தலைப்பைப்பற்றி— அதாவது, பின்தங்கிய நாடுகள் இயல்பாகவே பொருளாதார நிலைபேறு அற்றிருப்பதால் இந் நாடுகளின் நிதிகள் எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பது குறித்து— விவாதிப்போம்.

பின்தங்கிய நாடுகளில் ஏற்றுமதிப் பொருள்களின் விலைகளும் அளவுகளும் அடிக்கொருமுறை ஏற்ற இறக்கங்கட்கு உள்ளாகின்றன என்பதை ஏற்கெனவே நாம் விளக்கிப் புள்ளிவிவரங்கள் தந்துள்ளது நினைவில் இருக்கலாம். பொருள்களின் அளிப்பில் (supply) நேரக் கூடிய மாற்றங்கள் அல்லது பொருள்கட்கான தேவையில் நேரக் கூடிய மாற்றங்கள் அல்லது இவை இரண்டிலும் நேரக்கூடிய மாற்றங்கள் ஆகியவற்றின் விளைவால் இவ்வாறு ஏற்றுமதிப் பொருள்களின் விலைகளும் அளவுகளும் ஏற்ற இறக்கங்கட்கு உள்ளாகி வருகின்றன. பொருள்களின் அளிப்பில் மாற்றங்கள் நேர்வதை ஒட்டி நிலைபேறின்மை ஏற்படுவதை விளக்குமுகத்தான் இந் நாடுகளின் அண்மைக் கால அநுபவங்களினின்றும் பல எடுத்துக்காட்டுகள் தர முடியும். அதாவது, அண்மையில் கரிபியப் பிரதேசத்தில் சூறுவளியாலும், மொரீஷஸில் புயல்காற்றினுலும், அகாதிரில் (Agadir) நில அதிர்ச்சியினுலும் பயிர்கள் நாசமானதன் விளைவாகப் பொருள்களின் அளிப்புப் பெரிதும் பாதிக்கப்பட்டது. இவை தவிர, உஷ்ணப் பிரதேசமான இந் நாடுகளில் வெட்டுக்கிளியாலும், வரட்சியாலும், மிகுதியான மழையாலும் பயிர்கள் பெரிதும் நாசமாகிவருகின்றன. பொருள்கட்கான தேவையில் (demand) மாற்றங்கள் ஏற்படுவதை ஒட்டியும் ஏற்றுமதியானது ஏற்ற இறக்கங்கட்கு உள்ளாகலாம். இதற்கான காரணங்கள் இரண்டு ஆகும். நாட்டின் மொத்த ஆக்கத்தில் (gross national product) ஏற்றுமதிப் பொருள்கள் பெரும் பங்கு பெற்றிருப்பது (அல்லது, ஏற்றுமதிப் பொருள்களின் ரொக்க மதிப்பு பெரும் பங்கு பெற்றிருப்பது) முதலாவது காரணமாகும்.[1] நாட்டின் மொத்த ஏற்றுமதியில் ஓரிரண்டு பொருள்கள்மட்டும் பெரும் பங்கு பெற்றிருப்பது இரண்டாவது காரணமாகும். எனவே,

[1] எல்லாப் பின்தங்கிய நாடுகட்கும் இது பொருந்தும் என்று கூறமுடியாது. உதாரணமாக, இந்தியா இதற்கு ஒரு முக்கியமான விதிவிலக்காகத் திகழுகின்றது.

இவ் ஓரிரண்டு பொருள்கட்கான தேவைநிலையில் மாற்றங்கள் நேர்வதை ஒட்டி நாட்டின் வருமானங்களில் பெருமளவு மாற்றங்கள் நேரக்கூடும். இங்கு விளக்கப்பட்டுள்ள முதல் காரணத்திற்கு பார்பேடாஸ், இலங்கை ஆகிய நாடுகள் எடுத்துக்காட்டாகத் திகழுகின்றன. இந் நாடுகளில் நாட்டின் மொத்த ஆக்கத்தில் 40-லிருந்து 50 சதவிதம் ஏற்றுமதி செய்யப்படுகின்றது. இரண்டாவது காரணத்திற்கு மொரிஷஸ், கானு, வடரொடீஷியா ஆகிய நாடுகள் எடுத்துக்காட்டாகத் திகழுகின்றன. மொரீஷஸ் நாட்டில் எஸ்டேட்டுகளே பெருமளவில் உள்ளன (இந் நாட்டின் மொத்த ஏற்றுமதியில் சர்க்கரையின் பங்கு 90 சதவீதமாகும்); கானு நாட்டில் கோகோ பயிரிடும் குடியானவர் பெருமளவில் உள்ளனர் (இந் நாட்டின் மொத்த ஏற்றுமதியில் கோகோவின் பங்கு 60 சதவீதமாகும்); வடக்கு ரொடீஷியாவில் சுரங்கங்கள் பெருமளவில் உள்ளன.

பின்தங்கிய நாடுகள்மட்டுமன்றி வேறு எந்த நாடும்— முன்னேறிய நாடாக இருந்தாலும் சரி அல்லது ஓரளவு முன்னேறிய நாடாக இருந்தாலும் சரி, — இயற்கையின் சீற்றத்திற்கு உள்ளாகக்கூடியதுதான் என்று சிலர் வாதாடலாம். மேலும், பொருள்கட்கான தேவை குறைவதால் பொருள்களின் அளிப்பில் உபரி நேரவேண்டும் என்பதில்லை; பொருள்கட்கான தேவை குறையும்போது பொருள்களின் அளிப்பும் குறைய நேரலாம் என்றும் வாதாடலாம். எனவே, இவ் விஷயங்களையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். எனினும், பின்தங்கிய நாடுகளில் குறுங்காலத்தில் அரசாங்கப் பொதுநிதியானது நிலைபேறின்மைக்குப் பெரிதும் ஆளாகக்கூடியது என்பது உண்மையேயாகும். ஏற்றுமதியாளர் ஈட்டக்கூடிய இலாபத்தின்மீது விதிக்கப்படுகின்ற வரியின்மூலம் கிடைத்துவந்த வருவாய் குறைவதை ஒட்டியும், ஏற்றுமதி வரிகளினின்றும் கிடைத்துவந்த வருவாய் குறைவதை ஒட்டியும் இவ்வாறு நேரலாம். ஏற்றுமதி குறைவதை ஒட்டி இறக்குமதியும் குறைய நேர்ந்தால், இறக்குமதி வரிகளையே பெரிதும் சார்ந்திருக்கக்கூடிய பெரும்பாலான நாடுகளின் வருவாய் பெரிதும் குறைய நேரிடும். உதாரணமாக, உலக மார்க்கெட்டில் 1956ஆம் ஆண்டுடன் ஒன்றுக்கு 350 பவுனுகஇருந்த செம்பின் விலை, 1958ஆம் ஆண்டுடன் ஒன்றுக்கு 200 பவுனுகக் குறைந்தது. இதன் விளைவாக, வடக்கு ரொடீஷியாவில்[1] செம்பு உற்பத்தி செய்துவந்த கம்பெனிகளின்மீது விதிக்கப்பட்ட வருமான வரியினின்றும் கிடைத்துவந்த வருவாயானது, செம்பு விலை எந்த வீதத்தில் குறைந்ததோ அதைவிட அதிகமான வீதத்தில் குறைந்தது. மேலும், இதன் விளைவாக

[1] 1956ஆம் ஆண்டு வடக்கு ரொடீஷியாவிலுள்ள இக் கம்பெனிகள் 78 மில்லியன் பவுன் நிகர இலாபம் ஈட்டின. ஆனுல், இது 1958 ஆம் ஆண்டு 29 மில்லியன் பவுன்களாகக் குறைந்தது.

வடக்கு ரொடீஷியாவானது வருமான வரியின்மூலம் பெற்றுவந்த வருவாய் கால்பங்கு குறைந்தது. **1951**ஆம் ஆண்டு உகாண்டாவின் பட்ஜெட்டில் **3** மில்லியன் பவுன் உபரியாக (surplus) இருந்தது; ஆனால், **1958–9**ஆம் ஆண்டில் (**20** மில்லியன் பவுனிலிருந்து **25** மில்லியன் பவுனுக்கான பட்ஜெட்டில்) பட்ஜெட்டில் **6** மில்லியன் பவுன் பற்றுக்குறை (deficit) நேர்ந்தது. இவ்வாறான மாற்றங்களின் விளைவுகளைச் சரிவர உணருவதற்கு, பிரிட்டனில் முக்கிய வரியான வருமான வரியினின்றும் கிடைத்துவருகின்ற வருவாயானது அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்படாத காரணங்களின் நிமித்தம் ஓராண்டில் கால்பங்கு குறைந்தால் நேரக்கூடிய விளைவுகள் யாவை என்று நாம் கற்பனைசெய்து பார்க்கவேண்டும். வரிகளின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் குறைவதை ஒட்டி, பட்ஜெட்டில் பற்றுக்குறை நேரும்பொழுது பற்றுக்குறை நிதியாக்க முறையைக் (deficit financing) கைக்கொள்வதில் தவறில்லை என்ற கருத்து முன்னேறிய நாடுகளில் நிலவிவருகின்றது. இக் கருத்து இந் நாடுகளில் நிலவிவருகின்றதே ஒழிய இம் முறையை இந் நாடுகள் பெரிதும் கையாளுவதில்லை. ஆனால், பின்தங்கிய நாடுகளில் இதற்கு மாறுபாடாக நடந்து வருகின்றது.

இவ்வாறு வருவாயில் ஏற்ற இறக்கங்கள் நேர்ந்துவருவது வருவாயைமட்டும் பொறுத்த விஷயம் என்று கூறிவிட முடியாது. முன்னேறிய நாடுகளைவிடப் பின்தங்கிய நாடுகளில் மொத்தச் செலவில் பெரும் பகுதி நடப்புப் பண்டங்கட்காகவும் சேவைகட்காகவும் செலவிடப்பட்டுவருகின்றது என்று நாம் ஏற்கெனவே கண்டோம்.[1] எனவே, வருவாய் குறைவுறுகின்ற ஆண்டுகளில் அரசாங்கச் செலவைக் குறைப்பதற்கான வாய்ப்புகள் பின்தங்கிய நாடுகளில் மிகக் குறைவேயாகும். எனினும், இக் கருத்தானது எந்தச் சூழ்நிலைக்கும் பொருந்தக்கூடிய உண்மை என்று கூறிவிட முடியாது. ஏனெனில், மானியங்களையும் நடப்புக் காலப் பண மாற்றங்களையும் உடனடியாகக் குறைத்துவிட முடியாது (வேலையில் இல்லாதவருக்கு அளிக்கவேண்டிய உதவி நிதியின் அளவு, இது போன்ற காலங்களில் குறையாது; இதற்கு மாறாக அதிகரிக்கலாம்) என்பது உண்மையேயாயினும், சில நடப்புப் பண்டங்கள், சில சேவைகள் ஆகியவற்றிற்காகச் செய்யப்படுகின்ற செலவுகளை உடனடியாகக் குறைத்துக்கொள்ள முடியும். எனினும், வருவாய் குறைவதை ஒட்டி அரசாங்கச் செலவைக் குறைப்பதற்கான வாய்ப்புகள் பின்தங்கிய நாடுகளில் மிகச் சிலவேயாகும் என்ற கருத்தானது பொதுவான முறையில் ஏற்றுக்கொள்ளத்தக்க ஒன்றேயாகும் என்று தோன்றுகிறது.

[1] இவ்வத்தியாயத்தில் கொடுத்துள்ள அட்டவணைக்கான விளக்கத்தில் இதைக் குறிப்பிட்டுள்ளோம்.

பின்தங்கிய நாடுகளின் அரசாங்கப் பொது நிதியின் இரண்டு அம்சங்களை—அதாவது, அரசாங்கச் செலவுகள் நெடுங்காலத்தில் உயர்ந்துகொண்டே போகும் தன்மையன என்ற அம்சத்தையும், குறுங்காலத்தில் அரசாங்கப் பொது நிதியானது பெரிதும் ஏற்ற இறக்கங்கட்கு உட்பட்டது என்ற அம்சத்தையும்—நாம் இதுகாறும் விவாதித்தோம். இதனினின்றும் இந் நாடுகட்குப் பொருந்தக் கூடிய வரிமுறை எவ்வாறு இருக்கவேண்டும் என்பது குறித்து நாம் ஏதேனும் அறிந்துகொள்ளமுடியுமா என்று அடுத்து ஆராய்வோம்.

மேலே நம்முடைய விவாதத்தில் ஏற்கெனவே ஒரு விஷயத்தைக் குறிப்பாக உணர்த்தியுள்ளோம்; அதை இங்குத் தெளிவாக்க வேண்டியது அவசியமாகும். அதாவது, நெடுங்காலத்தில் உயர்ந்து கொண்டே செல்லும் தன்மையதான அரசாங்கச் செலவைச் சமாளிப்பதற்கு ஏற்ற வகையில் வரிமுறையானது வருமானம் சார் நெகிழ்ச்சி (income elastic) உடையதாக அமையவேண்டுவது அவசியமாகும். பின்தங்கிய நாடுகளில் அரசாங்கங்கள் தங்களுடைய செலவுக்குமட்டுமன்றிப் பணவீக்க (inflation) விளைவுகள் உருவாகாது தனியார் முதலீடு நடைபெறுவதற்குப் ஏதுவான முறையில் உபரி பட்ஜெட் தயாரிக்கவேண்டியிருப்பதால், அரசாங்கச் செலவு வளர்ச்சி வீதத்திற்கும் தனியார் முதலீட்டு வீதத்திற்கும் (இது தனியார் சேமிப்பைப் பொறுத்து அமையக் கூடியது) ஏற்ப வரி முறையானது வருமானம்சார் நெகிழ்ச்சி உடையதாக அமையவேண்டுவது மிக அவசியமாகும். வருமானம் சார் நெகிழ்ச்சி உடைய வரிமுறையானது, கீழே விளக்கியுள்ள இரண்டு விஷயங்களில் ஏதாவது ஒன்றினையாவது அல்லது இரண்டையுமே பெற்றிருக்கும்: (1) தேசீய வருமானத்தில் ஏற்படுகின்ற மாற்றங்கட்கு ஏற்ப, வருவாயிலும் (revenue) மாற்றங்கள் நேரக்கூடிய நெகிழ்ச்சியுடன் ஒவ்வொரு வரியும் அமைந்திருக்கலாம் [உதாரணமாக, தலைவரிக்குப் (poll tax) பதில் வளர்வீத வருமான வரியை (progressive income tax) விதிக்கலாம்]; அல்லது (2) தேசீய வருமானத்தில் ஏற்படுகின்ற மாற்றங்கட்கு ஏற்ப, வருவாயிலும் மாற்றங்கள் நேரக் கூடிய நெகிழ்ச்சியை உடைய வரிகளே வரிமுறையில் பெரும் பங்கு பெற்றிருக்கலாம். வரிமுறையை இவ்வாறு அமைத்துவிட்டால் பட்ஜெட் சமன் செய்யப்படும்; சமனற்ற பட்ஜெட்டால் ஏற்படக் கூடிய கேடுகள் நேராதொழியும். ஆனல், இவ்வாறு வரிமுறையானது வருமானம்சார் நெகிழ்ச்சி உடையதாக அமையுமேயாயின், வரியினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயானது, தேசீய வருமானத்தில் நெடுங்காலத்தில் நேரக்கூடிய மாற்றங்கட்குமட்டுமன்றிக் குறுங் காலத்தில் நேரக்கூடிய மாற்றங்கட்கும் ஏற்ப நெகிழ்ச்சி உடைய

தாக அமையும். (குறுங்காலத்திலும் நெடுங்காலத்திலும் நாட்டில் வருமானப் பகிர்வு பெரிதும் வேறுபட்டிருக்குமேயாயின் இது உண்மையாகாது. எனினும், இவ்வாறு வருமானப் பகிர்வில் பெருத்த வேறுபாடு ஏற்படுவதானது, சில எதிர்பாராத வாய்ப்பான சூழ்நிலையில்மட்டுமே நேரக்கூடியது என்பதை நாம் அறிய வேண்டும்.) இவ்வாறு வரிமுறையானது நெடுங்காலத்திலும் குறுங் காலத்திலும் வருமானம்சார் நெகிழ்ச்சி உடையதாக அமைவது விரும்பத்தக்கதே என்று எண்ணத் தோன்றலாம். ஏனெனில், குறுங் காலத்தில் தனியார் துறையின் வருமானங்கள் குறையும்போது அரசாங்கம் பற்றுக்குறை பட்ஜெட் முறையைக் கையாளவேண்டும் என்பது, தற்காலத்தில் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள கொள்கையாகத் திகழுகின்றது. எனினும், இக் கொள்கையைப் பின்தங்கிய நாடுகளில் செயல்படுத்துவது எளிதான காரியமன்று என்பதை நாம் அடுத்து அறியவருவோம். இதை ஒட்டி எழக்கூடிய பிரச்சினைகளை ஐந்தாம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். எனவே, இங்கு இவற்றை விரிவாக விளக்கத் தலைப்படவில்லை. எனினும், பின்தங்கிய நாடுகளில் இக் கொள்கையைக் கடைப்பிடிப் பதற்கான சாத்தியக்கூறுபற்றி நாம் முன்கூட்டியே எச்சரிக்கை விடுத்துள்ளோம் என்று இதனைக் கொள்க.

மற்றும் ஒரு விஷயத்தையும் நாம் இங்குக் குறிப்பிட வேண்டி யுள்ளது. நெடுங்காலத்திலும் வருமானம்சார் நெகிழ்ச்சியுடையதாக இருக்கக்கூடிய வரிகளை விதிப்பதால், மக்களின் வேலை செய்யும் ஆர்வம், சேமிக்க எண்ணும் நோக்கம், ஆபத்துகளைத் தாங்க முன் வரும் துணிவு ஆகியவை பாதிக்கப்படலாம். இவ் விஷயத்தை விரிவாக இந் நூலில் அடுத்து வருகின்ற அத்தியாயங்களில் விளக்கி யுள்ளோம். இங்குக் குறிப்பிட விரும்புவது ஒன்றைமட்டும்தான். உதாரணமாக, நீடித்த நுகர்வுப் பொருள்களின் (durable consumer goods) மீது மறைமுக வரி (indirect tax) விதிக்கப்பட்டால் (இப் பொருள்கட்கான வருமானம்சார் தேவை நெகிழ்ச்சி அதிகமான தாகும். எனவே, நாட்டின் வருமானம் உயரும்போது, வருமான உயர்வு வீதத்தைவிட இவ் வரியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் உயரும் வீதம் அதிகமாக இருக்கக்கூடும் என்ற காரணத்தினால் இப் பொருள்களின்மீது வரி விதிக்கப்படலாம்), சிறிது கடினமாக உழைத்து அதிகமான பொருள் ஈட்டி, இப் பொருள்களை விலை கொடுத்து வாங்கவேண்டும் என்ற ஆர்வம் உடைய மக்களின் ஆர்வம் குன்றலாம். இவ்வாறு ஒரு நோக்கம் பிறிதோர் நோக்கத் தோடு முரணுவதை எல்லா நாடுகளிலுமுள்ள வரி முறைகளில் நாம் காணமுடியும். எனினும், பின்தங்கிய நாடுகளிலுள்ள வரி முறையில் இது குறிப்பாகப் பெரும் பிரச்சினையாக இருக்கக்கூடும் என்று தோன்றுகின்றது.

# 2. நேர்முக வரிகளின் பங்கு

பல வளர்ச்சியுருத நாடுகள் பெருமளவு செலவுத் திட்டங்களைக் கைக்கொண்டுள்ளன என்றும், இந் நாடுகளிலுள்ள அரசாங்கச் செலவுகள் உயர்ந்துகொண்டே செல்லும் தன்மையனவாக உள்ளன என்றும் நாம் முந்திய அத்தியாயத்தில் கண்டோம். இவ் வரசாங் கங்களின் செலவுத் திட்டங்கட்குத் தேவையான பணத்தை நேர்முக வரிகளின்மூலம் திரட்டுவதற்கான சாத்தியக்கூறுகளையும், இவ்வாறு திரட்டுவதனுல் நேரக்கூடிய விளைவுகளையும் இங்கு ஆராய்வோம். நேர்முக வரிகள் என்ற தலைப்பின்கீழ் எந்தெந்த வரிகள் இடம்பெற வேண்டும், எந்தெந்த வரிகள் இடம்பெறமுடியாது என்று இங்கு நாம் விளக்க விரும்பவில்லை. வழக்கமாக நேர்முக வரிகள் என்ற தலைப் பின்கீழ் என்னென்ன வரிகள் விவாதிக்கப்பட்டுவருகின்றனவோ அவற்றையே நாமும் இங்கு விவாதிக்க முடிவுகட்டியுள்ளோம். தனியார் வருமான வரி (personal income tax), மொத்தச் செலவு களின்மீது விதிக்கப்படுகின்ற வரி, அதாவது, செலவீட்டு வரி (expenditure tax), கம்பெனி வருமானவரி (company income tax), மூலதன வரி (capital tax) ஆகியவற்றை ஈண்டு நாம் விவாதிக்கத் தீர்மானித்துள்ளோம்.

இந்த வரிகளைக் குறித்து, தனித்தனியே விவாதிக்கப் புகுமுன், நேர்முக வரிமுறை பொதுவாகப் பல நாடுகளில் எவ்வாறு அமைந் துள்ளது என்று அறிய முயலுவது பயன் தரக்கூடியதாகும். பின் தங்கிய நாடுகளில் மத்திய அரசாங்க வருவாயில் நேர்முக வரிகளின் மூலம் கிடைத்துவருகின்ற வருவாயின்பங்கு மிகமிகக் குறைவானதே யாகும் என்று 55 நாடுகட்கான புள்ளிவிவரங்களைச் சேகரித்துள்ள ஐ. நா. அறிக்கை[1] ஒன்று கூறுகின்றது. உதாரணமாக, சூடான், காடிமாலா, ஹெய்தி, ஈரான், ஜார்டான், தாய்லாந்து ஆகிய ஆறு நாடுகளிலும் மொத்த வருவாயில் நேர்முக வரிகளினின்றும் கிடைத்த

[1] UN Statistical Year-book, 1959 (New York, 1960).

வருவாய் 10 சதவீதத்திற்கும் குறைவானதேயாகும். இதற்கு மாருக கனடா, அமெரிக்கா, நெதர்லாந்து, பிரிட்டன், ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகிய ஆறு நாடுகளிலும் மொத்த வருவாயில் நேர்முக வரிகள்மூலம் கிடைத்த வருவாயின் பங்கு 50 சதவீதத்திற்கும் அதிகமாக இருந்தது. மேலும், இவை தவிர 19 நாடுகளில் மொத்த வருவாயில் நேர்முக வரிகளின்மூலம் கிடைத்த வருவாயின் பங்கு 20 சதவீதத்திற்கும் குறைவானதேயாகும். இந்த நாடுகள் 19-ம் பின்தங்கிய நாடுகள் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு பல நாடுகளிலுமுள்ள நேர்முக வரிமுறையை ஒப்பிட்டு நோக்குவதில் பல குறைகள் உள்ளன (உதாரணமாக, அமெரிக்காவிலுள்ள நேர்முக வரிமுறையை பிரிட்டனிலுள்ள முறையோடு ஒப்பிட்டு நோக்கினுல், மொத்த வருவாயில் நேர்முக வரிகளின் பங்கானது, பிரிட்டனேவிட அமெரிக்காவில்தான் அதிகம் என்று சொல்லத் தோன்றும். ஆனுல், இது தோற்றமேயன்றி உண்மையன்று. ஏனெனில், அமெரிக்கப் புள்ளிவிவரங்கள் மத்திய அரசாங்கத்திற்கான புள்ளிவிவரங்களைமட்டுமே குறிக்கின்றன. இவற்றுள் ராஜ்ய அரசாங்கங்கட்கான புள்ளிவிவரங்கள் சேர்க்கப்படுவதில்லை) என்பது உண்மையேயாயினும், பொதுவான அடிப்படைக் கருத்துத் தெளிவாகியிருக்கும் என்று எண்ணுகிருேம். அதாவது, மொத்த வருவாயில் நேர்முக வரிகளின் பங்கானது, முன்னேறிய நாடுகளை விடப் பின்தங்கிய நாடுகளில் மிகவும் குறைவானதே ஆகும்.

**தனியார் வருமானவரி**

தனியார் வருமானவரியைப் பொறுத்தவரையில், முன்னேறிய நாடுகட்கும் பின்தங்கிய நாடுகட்கும் இடையேயுள்ள வேறுபாடு மலேக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடுபோன்றதாகும். பலவாறு இதை நாம் விளக்க முடியும். பிரிட்டனில் சுமார் 19 மில்லியன் மக்கள் ஒவ்வோர் ஆண்டும் வருமான வரி செலுத்திவருகின்றனர். அமெரிக்காவில் சுமார் 50 மில்லியன் மக்கள் வருமான வரி செலுத்திவருகின்றனர். அதாவது, இந் நாடுகளில் மொத்த ஜனத்தொகையில் (வயதுவந்தோர்மட்டும் என்று எண்ணிவிடலாகாது) சுமார் 30-லிருந்து 40 சதவீத மக்கள் வருமான வரி செலுத்திவருகின்றனர். ஆனுல், கரிபியப் பிரதேசத்தில் இதற்கு நேர்மாருக அமைந்துள்ளது. உதாரணமாக, ஜமாய்க்கா, பிரிட்டீஷ் கயாணு ஆகிய நாடுகளில் மொத்த ஜனத்தொகையில் 2-லிருந்து 3 சதவீத மக்கள்மட்டுமே வருமான வரி செலுத்திவருகின்றனர். ஆப்பிரிக்கா, ஆசியா ஆகிய கண்டங்களில் ஏதாவது ஒரு நாட்டில் மொத்த ஜனத்தொகையில் 1-லிருந்து 2 சதவீத மக்கள் வருமானவரி செலுத்திவந்தால், அந்த நாடானது இக் கண்டங்களிலுள்ள ஏனைய நாடுகளைவிடச் சிறந்து விளங்குகின்றது என்று

முடிவுகட்டிவிடலாம்.[1] தனியார் வருமான வரிக்காக பிரிட்டனில் கணக்கிடப்படுகின்ற மொத்த வருமானமானது தேசீய வருமானத்தில் சுமார் 75 சதவீதமேயாகும். ஆனல், கரிபியப் பிரதேசத்தில் இது 10-லிருந்து 20 சதவீதமேயாகும். உதாரணமாக, பிரிட்டீஷ் கயானுவில் 12 சதவீதமும், ஜமாய்க்காவில் 20 சதவீதமுமாகும். ஆப்பிரிக்காவில் நிலைமை இதைவிட மோசமானதாகும். அதாவது, ஆப்பிரிக்கப் பிரதேசங்களில் இது 5 சதவீதமாகவும், அதற்குக் குறைவாகவும் உள்ளது.

ஒரு நாட்டிற்கான புள்ளிவிவரத்தைப் பிறிதோர் நாட்டிற்கான புள்ளிவிவரத்தோடு ஒப்பிட்டு நோக்குவதில் பல குறைபாடுகள் இருக்கக்கூடும். ஏனெனில், எல்லா நாடுகளும் ஒரே அடிப்படையில் புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதில்லை. இதுபோன்ற குறைபாடுகள் நேரக்கூடியன என்பது உண்மையேயாயினும், இப் புள்ளிவிவரங்கள் புலப்படுத்துகின்ற அடிப்படையான உண்மையை நாம் மறந்துவிடலாகாது. அதாவது, பின்தங்கிய நாடுகளைவிட முன்னேறிய நாடுகளில் தனியார் வருமானவரி பெரிதும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. இதற்கு நான்கு காரணங்கள் கூறமுடியும். முதற்கண், வருமானத்தைப்பற்றிய சரியான விளக்கம் தருவதை ஒட்டிப் பின்தங்கிய நாடுகளில் பல பிரச்சினைகள் தோன்றுகின்றன. இரண்டாவதாக, வருமானத்தை இவ்வாறுதான் விளக்கவேண்டும் என்று ஒப்பமுடிந்த கருத்து உருவாகிவிட்டால்கூட, இந் நாடுகளில் தனியாரின் வருமானங்களை மதிப்பிடுவதில் பல சிரமங்கள் உள்ளன. மூன்ருவதாக, வரிவீதங்கள், தள்ளுபடிகள் ஆகியவற்றை நிர்ணயிப்பதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. நான்காவதாக, வருமான வரி விதிப்பதற்காக வருமானத்தை எவ்வாறு கணக்கிடுவது என்பது குறித்துச் சில பிரச்சினைகள் உள்ளன. இந்த நான்கு விஷயங்களையும் அடுத்தடுத்து ஓரளவுக்கு விரிவாக விவாதிப்போம்.

முன்னேறிய நாடுகளில் தரப்படுகின்ற வருமானத்தைப்பற்றிய விளக்கங்கள்கூடத் திருப்திகரமான முறையில் அமைந்துள்ளன என்று கூறுவதற்கில்லை. அங்கும் இதை ஒட்டிப் பல பிரச்சினைகள் எழுந்துவருகின்றன. எடுத்துக்காட்டாக, சாதாரணமாக எழக்கூடிய பிரச்சினை ஒன்றைக் காண்போம். முதலீட்டு ஆதாயத்தை

[1] கிழக்கு ஆப்பிரிக்காவிற்கான புள்ளிவிவரங்களை அறிய விரும்புவோர் கீழே கொடுத்துள்ள அறிக்கையை நோக்கவும்: 'The East Africa Commission on Enquiry on Income Tax, 1956-57' (Nairobi, 1957), p. 17. மலேயாவில் 0.65 சதவீத மக்கள்மட்டுமே வருமான வரி செலுத்திவருகின்றனர். (M. C. Taylor, 'Income Taxation in the Federation of Malaya', National Tax Journal, June, 1961 பார்க்கவும்). லாவோஸில் இதைவிடக் குறைந்த சதவீத மக்களே வருமான வரி செலுத்திவருகின்றனர். (N. H. Jacoby, 'Taxation in Laos', National Tax Journal, June, 1961 பார்க்கவும்).

(capital gains) தனியாரின் வருமானத்தின்பாற்பட்டதென்று கொள்ளுவதா? அல்லது அதனின்றும் வேறுபட்டது என்று தள்ளுவதா? இது ஒரு பெரும் பிரச்சினையாக உள்ளது. பிரிட்டனில் இதை வருமானத்தினின்றும் வேறுபட்டது என்று கருதுகின்றனர். ஆனால், அமெரிக்காவில் இதை வருமானத்தின்பாற்பட்டதென்று கொள்ளுகின்றனர். இவ்வாறு இவ்விரு நாடுகளிலுமுள்ள முறையை ஒப்பு நோக்குவதற்காக இந் நாடுகளிலுள்ள வரிச் சட்டங்களிலுள்ள சிக்கல்களை விடுத்து இவற்றை மிக எளிதானவையாகத் தோன்றும்படி செய்துள்ளோம் என்பது உண்மையேயாயினும், இங்கு நாம் விளக்கப்போந்த அடிப்படைக் கருத்தை உணர்த்த இவ்வாறு செய்துள்ளதே போதுமானதாகும் என்பதை அறியவேண்டும். எனவே, பின்தங்கிய நாடுகளில், உதாரணமாக, மேற்கு ஆப்பிரிக்காவில் வருமானத்தைப்பற்றிய விளக்கம்தர முனையும்பொழுது நேரக்கூடிய இடர்ப்பாடுகளைத் தவிர்க்குமுகத்தான், மேல்நாடுகளிலுள்ள வரிச் சட்டங்களை அப்படியே கையாளலாம் என்று எண்ணுவது தவருகும். ஏனெனில், எந்த நாட்டுச் சட்டத்தை நாம் கைக்கொள்வது என்ற பிரச்சினை உருவாகக்கூடும்.

மேல்நாடுகள் யாவும் வருமானத்தை எவ்வாறு விளக்குவது என்ற விஷயத்தைப் பொறுத்தவரையில் ஒருமித்த கருத்து உடையனவாய்த் திகழுகின்றன என்று வைத்துக்கொண்டாலும், மேல் நாட்டு வரிச் சட்டங்களை ஆப்பிரிக்காபோன்ற பின்தங்கிய நாடுகளில் ஆராய்ச்சி செய்யாமல் கைக்கொள்ள முனைவது தவருகும். ஏனெனில், பின்தங்கிய நாடுகளில், முன்னேறிய நாடுகளில் தோன்ற முடியாத, இரண்டு அடிப்படையான சிரமங்கள் உள்ளன. முதலாவதாக, ஜீவனமட்ட அளவில் பல விவசாயிகள்[1] உள்ளதை ஒட்டிச் சிரமங்கள் பல தோன்றியுள்ளன. இரண்டாவதாக, ஒருவர் பிறருக்குக் கொடுக்ககூடிய செலுத்தினங்கள், வருமானத்தைப் பெருக்கக்கூடிய பேரங்கள் ஆகியவற்றைப் பொறுத்தவரையில் முன்னேறிய நாடுகளினின்றும் பின்தங்கிய நாடுகள் பெரிதும் வேறுபட்டு விளங்குகின்றன. எனவே, இதை ஒட்டியும் பல பிரச்சினைகள் தோன்றியுள்ளன.

நிலத்திலிருந்து உற்பத்திசெய்து தமது நுகர்வுக்கு என்று வைத்திருக்கக்கூடிய பொருள்களை, விவசாயிகளின் பொருள் வருமானம் (income in kind) என்று கருதலாம். இத் தன்மைத்தான வருமானங்களின்மீது மேல்நாடுகளில் வருமான வரி விதிக்காது விடுத்தால், அது பெரிய பிரச்சினையை உருவாக்கக்கூடும் என்று

1 இவர்கள் தமக்குத் தேவையான பொருள்களைத் தாமே உற்பத்தி செய்துகொள்ளும் விவசாயிகள் ஆவர்.

கொள்வதற்கில்லை. ஏனெனில், இந் நாடுகளில் தேசீய வருமானத்தில்மட்டுமன்றி நிலத்தின்மூலம் கிடைத்துவருகின்ற மொத்த வருமானத்திலும், இதுபோன்ற வருமானங்கள் ஒரு சிறு பங்கே வகித்துவருகின்றன. எனவே, வருமான வரி விதிப்பதற்காகப் பொருள் வருமானங்களைக் கணக்கிட்டாலும் அல்லது கணக்கிடாது விட்டாலும் மேல்நாடுகளில் எவ்விதக் கேடுகளும் விளையப்போவதில்லை. ஆனால், பின்தங்கிய நாடுகளைப் பொறுத்தவரையில் இவ்வாறு கூறிவிடமுடியாது. இந் நாடுகளில் நிலைமை முற்றிலும் மாறுபாடாக உள்ளது; அதாவது, இந் நாடுகளில் ஜீவனமட்ட உற்பத்தியானது (subsistence output) பெரும் பங்கு வகித்துவருகின்றது. எனவே, இந் நாடுகளில் வருமான வரி விதிப்பதற்காகப் பொருள் வருமானங்களையும் கணக்கிடவேண்டுமா இல்லையா என்பதைப் பற்றித் தெளிவான முறையில் தீர்மானிக்கவேண்டுவது இன்றியமையாததாகும்.

தேசீய வருமானத்தை மதிப்பிடுவதில் தேர்ச்சிமிக்க புள்ளி விவர நிபுணர்கள் இப் பிரச்சினையைப் பல காலமாக விவாதித்து வந்துள்ளனர். ஜீவனமட்ட உற்பத்தியைக் கணக்கிடாது தேசீய வருமானத்தை மதிப்பிடுவது முறையானதன்று என்ற கருத்தை இவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நாம் கருதுகிறோம். கடந்த காலத்தில் இக் கருத்தை நாம் வலியுறுத்தி வந்துள்ளோம் . இப்பொழுதும் இக் கருத்தே சரியானது என்று நாம் நம்புகிறோம். எனினும், இது நம்முடைய பிரச்சினையைத் தீர்த்துவிட்டது என்று கூறுவதற்கில்லை. ஜீவனமட்ட உற்பத்தியையும் ஒருவரின் வருமானமாகக் கணக்கிடவேண்டும் என்ற கருத்தை எல்லோரும் ஏற்றுக்கொள்கின்றனர் என்று வைத்துக்கொண்டாலும், இந்த ஜீவனமட்ட உற்பத்தியின்மீது வருமான வரி விதிக்கவேண்டுவது அவசியந்தானா என்ற வினா எழுகின்றது. ஜீவனமட்ட உற்பத்தியாளரிடம் ரொக்கம் ஏதும் கிடையாது; ரொக்க வருமானம் இல்லாத நிலையில் எங்ஙனம் இவர்கள் வருமான வரி செலுத்தமுடியும்? என்று சிலர் வாதிடுகின்றனர்.

இந்த விவாதமானது முறையானதாகத் தோன்றவில்லை. பின்தங்கிய நாடுகளில் மக்கள் ஜீவனமட்ட உற்பத்தியைப் பெருமளவு சார்ந்துள்ளனர் என்று கூறலாமே ஒழிய, ஜீவனமட்ட உற்பத்தியைமட்டுமே சார்ந்துள்ளனர் என்று கூறுவதற்கில்லை. எனவே, இவர்கட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கம் காலந்தோறும் முறைப்படி

[1] A. R. Prest and I. G. Stewart, 'The National Income of Niegeria, 1950-51, (HMSO, London, 1953) and A. R. Prest, 'The Investigation of National Income in British Tropical Dependencies' (Athlone Press, London, 1957).

கிடைத்துவரக்கூடியதாக இல்லாவிட்டாலும், மிகக் குறைந்த அளவின.தாக இருப்பினும், பின்தங்கிய நாடுகளில்— குறிப்பாக, ஆப்பிரிக்காவில் பின்தங்கிய பகுதிகளில்கூட— மக்களிடம் ஓரளவுக்கு ரொக்கம் புழங்கிவருகின்றது என்றே கூறவேண்டும். மேலும், ரொக்க வருமானம் இல்லாத மனிதனிடம் ரொக்கம் இருக்கமுடியாது என்று நாம் முடிவுகட்டிவிடமுடியாது. பின்தங்கிய நாடுகள் சிலவற்றில் வழிவழியாகத் தற்காலச் சமூகப் பாதுகாப்பு (social security) முறை போன்றதோர் முறை கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. இம் முறையின்கீழ் வசதியுள்ளவர்கள் வசதியற்றோருக்கு உதவிபுரிந்துவருகின்றனர். இவ்வாறு அளிக்கப்படுகின்ற உதவி, பணவுதவியாக இலலாவிட்டாலும், இதன்மூலம் ஜீவனமட்ட விவசாயிகட்கு ரொக்கம் கிடைக்காவிட்டாலும், ஏதோ ஒருவகையில் இந் நாடுகளிலுள்ள ஜீவனமட்டக் குடும்பங்கள் ஒவ்வோர் ஆண்டும் ஓரளவுக்கு ரொக்கம் ஈட்டி அதைச் செலவிட்டுவருகின்றன என்பது உண்மையாகும். இதுபோன்ற காரணங்களை முன்னிட்டு, ஜீவனமட்ட உற்பத்தியையும் வருமானவரிக்கென்று கணக்கிடப்படுகின்ற வருமானத்தோடு சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லத் தோன்றுகின்றது. இவற்றை வருமானவரிக்கென்று கணக்கிடாது விட்டுவிடவேண்டும் என்ற கூற்றுப் பொருத்தமற்றதாகத் தோன்றுகிறது. நாம் மேலே விளக்கியுள்ளவை தவிர வேறு பல காரணங்களும் உள்ளன. சில காரணங்கள் ஜீவனமட்ட உற்பத்தியின்மீது வருமானவரி விதிக்கக்கூடாது என்ற கருத்துக்கு ஆதரவாக அமைந்துள்ளன; வேறு சில இக் கருத்துக்கு எதிராக உள்ளன. எனினும், இங்கு எல்லா விவாதங்களையும் ஆராயும் நோக்கம் நமக்கு இல்லை.

பணமாற்றங்கள், பேரங்கள் ஆகியவற்றில் எவ்வெவற்றை வருமானமாகக் கணக்கிடுவது என்று தீர்மானிப்பதை ஒட்டியும் பின்தங்கிய நாடுகளில் பல பிரச்சினைகள் எழக்கூடும். பணமாற்றம் ஒருமுகமாக அமையக்கூடியது; ஆனால், பேரம் இருமுகமாக அமையக்கூடியது. ஆப்பிரிக்கப் பிரதேசத்தில் பலவகையான செலுத்தினங்கள் பழக்கத்தில் இருந்துவருகின்றன. உதாரணமாக, கையூட்டுக் கொடுத்தல், பணக்கொடை (gratuity) வழங்குதல், உறவினருக்குப் பணம் அனுப்புதல், வழிவழி வந்த பழக்கவழக்கங்களின் அடிப்படையில் தன்னுடைய சமூக அமைப்பிற்குக் கொடுக்கவேண்டிய சந்தாத் தொகைகளைக் கொடுத்தல், தன்னுடைய சமூகக் காரியங்கட்காகப் பணம் கொடுத்தல் ஆகிய பல செலுத்தினங்கள் நடைமுறையில் உள்ளன. இவற்றுள் எவ்வெவற்றை வருமானமாகக் கணக்கிடுவதென்பது மாபெரும் பிரச்சினையாகும். சாதாரணமாகக் கையாளப்படுகின்ற முறைகளைக் கடைப்

பிடிக்கலாமே; இந்தச் செலுத்தினங்கள் சட்ட வரம்பிற்கு உட்பட்டவையா அல்லது புறம்பானவையா என்று தீர்மானிக்கலாமே; ஒருவர் பிறருக்குப் பணம் கொடுக்கும்போது அதற்கு ஈடாக உதவி ஏதேனும் பெறுகின்ருரா என்று ஆராயலாமே என்றெல்லாம் கூறத் தோன்றலாம். எனினும், இந்த முறையைக் கடைப்பிடித்து இப் பிரச்சினைக்கு எளிய முறையில் தீர்வு காணமுடியும் என்று தோன்றவில்லை. உதாரணமாக, ஆப்பிரிக்க நாடு ஒன்றில் வழக்கு மன்றத்தில் தன்னுடைய வாதத்தைச் சிறந்த முறையில் எடுத்துரைப்பதற்கென்று மொழிபெயர்ப்பாளருக்கு ஒருவர் கையூட்டு வழங்குகிருர் என்று வைத்துக்கொள்வோம். இக் கையூட்டை நாம் மொழிபெயர்ப்பாளரின் வருமானமாகக் கணக்கிடுவதா, இல்லையா என்று தீர்மானிப்பது பெரும் பிரச்சினையாகும். இக் கையூட்டானது சட்டத்திற்குப் புறம்பானது என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. இருப்பினும் இது அளிக்கப்படாவிட்டால் மொழிபெயர்ப்பாளர் ஆற்றலுடனும் திறமையுடனும் வாதத்தை எடுத்துரைப்பார் என்று கூறமுடியாது. எனவே, இக் கையூட்டையும் வருமானமாகக் கருதவேண்டும் என்றே தோன்றுகின்றது. இதுபோன்ற உதாரணங்கள் பலவற்றை நாம் கூறிக்கொண்டேபோகமுடியும். எனினும், இந்த ஓர் உதாரணமானது அடிப்படைக் கருத்தை உணர்த்துவதற்குப் போதுமானதாகும் என்று நாம் நினைக்கிருேம். அதாவது, பின்தங்கிய நாடுகளைப் பொறுத்தவரையில், தனியாரின் வருமானத்தைக் கணக்கிடுவதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. வருமானவரியைக் கணக்கிட்டு வசூல் செய்யுமுன்பே இவ் விடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. இந் நாடுகளில் இயல்பாக அமைந்துள்ள இதுபோன்ற இடர்ப்பாடுகளை நாம் நன்கு அறிந்திருந்தாலன்றி, இந் நாடுகளில் வருமானவரி விதிப்பதிலுள்ள இடர்ப்பாடுகளை நன்கு உணர முடியாது.

வரி விதிப்பதற்கான வருமானத்தை எவ்வாறு மதிப்பிடுவது என்பது அடுத்து நாம் ஆராயவேண்டிய பிரச்சினையாகும். வருமானவரியானது இந் நாடுகளில் தலைவரியைவிட (poll tax) வேறுபட்டதாக விளங்கவேண்டுமேயாயின், அல்லது தொழில்வரிபோலவாவது அமைய வேண்டுமேயாயின், தனியாரின் வருமானத்தை மதிப்பீடு செய்ய வேண்டுவது அவசியமாகும். பின்தங்கிய நாடுகளில் இது எளிதான விஷயம் என்று கூறுவதற்கில்லை. இதை ஒட்டிப் பல இடர்ப்பாடுகள் நேரக்கூடும். இந் நாடுகளில் எடைகள், அளவைகள் ஆகியவை தரப்படுத்தப்பட்டவை.[1] (standardised)

[1] A. R. Prest and I. G. Stewart, 'The National Income of Nigeria, 1950-1951' (HMSO, London, 1953) Appendix C-ல் நைஜீரியாவில் எடைகள், அளவைகள் ஆகியவை எவ்வாறு வேறுபட்டு விளங்குகின்றன என்ற விளக்கத்தைக் காணலாம். 'முடு' என்ற பெயரை உடைய அளவை ஒன்று, நைஜீரியாவின் வட பகுதியில்மட்டும் 13 விதமாகப் பல பொருள்களை அளப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது.

என்று கூறமுடியாது; விவசாயிகள் கல்வி அறிவில்லாதவராக இருப்பதால், இவர்களால் கணக்குகளை முறையாக வைத்திருக்க முடியவில்லை; ஓரளவு கல்வியறிவு உள்ளவர்களும் கணக்கு வைத்திருப்பதில் நாட்டம் உடையவராக இல்லை[1]; மேலும், நாட்டின் மொத்த உற்பத்தியில் பெரும் பகுதி மார்க்கெட்டுக்கு விற்பனைக்கென்று வருவதில்லை. இதுபோன்ற சூழ்நிலையில் ஒரு குறிப்பிட்ட கூட்டத்தைச் சேர்ந்த மக்களின் மொத்த வருமானத்தை மதிப்பிடுவதுகூட பெரிதும் சிரமமான காரியமேயாகும். மேலும், இந் நாடுகளில் பண்டமாற்றுச் செய்யப்படுகின்ற உற்பத்தியின் மதிப்பையும் ஜீவியத்திற்காகப் பயன்படுகின்ற உற்பத்தியின் மதிப்பையும் எந்த அடிப்படையில் தீர்மானிப்பது என்ற வினாவிற்கும் விடை காணவேண்டும். சில்லறை விலையின் அடிப்படையிலா அல்லது பண்ணை விலையின் (ex-farm price) அடிப்படையிலா என்பதை நாம் தீர்மானிக்க வேண்டும். இவ்விரண்டு முறைகட்கும் ஆதரவாகப் பல விவாதங்கள் உள்ளன என்பது உண்மையேயாயினும், சில்லறை விலையின் அடிப்படையில் தீர்மானிப்பதே சிறந்த முறை என்று தோன்றுகிறது. இப் பிரச்சினைகளை விளக்கமாக இவ் அத்தியாயத்திற்கான பிற்சேர்க்கையில் விளக்கியுள்ளோம்.[2]

இவை தவிர வேறு பல பிரச்சினைகளும் உள்ளன. ஒரு கூட்டத்தைச் சேர்ந்த மக்களின் வருமானத்தை மதிப்பிட்டுவிட்டபோதிலும், இக் கூட்டத்தின் அங்கத்தினரிடையே ஒவ்வொருவருக்கும் இவ்வளவு வருமானம் (இந்த வருமானம் ரொக்க உருவில் இருக்கவேண்டிய அவசியமில்லை) என்று எவ்வாறு தீர்மானிப்பது? இது மிகப் பெரும் பிரச்சினையாகும். ஞானி சாலமன் பெற்றிருந்த அறிவுநுட்பம் உடையவரே இப் பிரச்சினையைத் தீர்த்து வைக்க முடியும்.

பின்தங்கிய நாடுகளில்மட்டுமே இதுபோன்ற பிரச்சினைகள் உள்ளன என்று முடிவுகட்டிவிடலாகாது. முன்னேறிய நாடுகள் சிலவற்றிலும்கூட இதுபோன்ற பிரச்சினைகள் உள்ளன. பொதுவாக மூலப் பொருள்களை உற்பத்தி செய்துவருகின்ற மக்கள் பெரும் அளவிலுள்ள[3] நாடுகளிலும் (உதாரணமாக, ஃபிரான்ஸ் போன்ற

[1] மலேயா சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் வேறு பல சிரமங்கள் உள்ளன. இந் நாடுகளிலுள்ள சீனர்கள், கணக்குகள் வைத்திருக்கும் முறை எளிதானதொன்றேயல்ல. மேலும், இந்நாடுகளில் உள்நாட்டு வியாபாரிகள் தங்களுக்கு என்று செய்யப்படுகின்ற பேரங்களை வியாபார பேரங்களினின்றும் வேறுபடுத்திக் காட்ட விருப்பமற்றவர்களாக இருப்பதும் பெரிதும் இடையூறாக உள்ளது.

[2] இவ்வத்தியாயத்திற்கான பிற்சேர்க்கை I ஐப் பார்க்கவும்.

[3] மூலப் பொருள்களின் மொத்த உற்பத்தியைவிட, மூலப்பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கக்கூடிய மக்களின் எண்ணிக்கையே மிகவும் முக்கியமானதாகும்.

நாடுகளிலும்) இதுபோன்ற பிரச்சினைகள் உள்ளன. பின்தங்கிய நாடுகளில் இப் பிரச்சினைகள் இந் நாடுகளிலுள்ளதைவிடச் சிறிது சிக்கல் நிறைந்ததாக அமைந்துள்ளது என்றுமட்டும் கூற முடியும். எனவே, மூலப்பொருள் உற்பத்தியையே பெரிதும் சார்ந்துள்ள பின்தங்கிய நாடுகளில் இதுபோன்ற பிரச்சினைகள் உருவாகி இருப்பதில் வியப்பிற்கு இடமில்லை.

அடுத்து, வரிவீதங்களையும் தள்ளுபடிகளையும் நிர்ணயிப்பதிலுள்ள இடர்ப்பாடுகள்குறித்து ஒருசிறிது ஆராயவேண்டியுள்ளது. பின்தங்கிய நாடுகள் பொருத்தமான வரிவீதங்களை நிர்ணயிக்கத் தவறியிருப்பதனுலேயே, தனியார் வருமான வரியினின்றும் கிடைத்துவருகின்ற வருவாயானது, மிகக் குறைவாக உள்ளது என்று தோன்றுகின்றது. மார்டின், லூயி[1] ஆகிய இருவரும் இவ்வாறே கருத்துத் தெரிவித்துக் கீழ்க்கண்டுள்ள காரண விளக்கத்தையும் தந்துள்ளனர். பிரிட்டனிலுள்ள வருமான வரிவீதங்கள், கானு, நைஜீரியா ஆகிய நாடுகளில் கையாளப்படுகின்றது என்று வைத்துக்கொள்வோம். இந்த வரிவீதங்கள் இந் நாடுகளில், பிரிட்டனில் இருப்பதைப் போன்ற சிறப்பு மட்ட வருமானத்தின்மீது (absolute level of income) விதிக்கப்படுகின்றனவா அல்லது தராதர மட்ட வருமானத்தின்மீது (relative level of income) விதிக்கப்படுகின்றனவா என்பது மிகவும் முக்கியமான விஷயமாகும். உதாரணமாக, பிரிட்டனில் ஆண்டொன்றுக்கு 500 பவுன்கள் வருமானம் ஈட்டிக்கொண்டிருக்கின்ற நபர் ஒருவர், தன்னுடைய வருமானத்தில் 5 சதவீதத்தை வரியாகச் செலுத்துகிருர் என்றும், 1,000 பவுன் வருமானம் ஈட்டிக்கொண்டிருக்கின்ற நபர், வருமானத்தில் 25 சதவீதத்தை வரியாகச் செலுத்துகிருர் என்றும் வைத்துக்கொள்வோம். பிரிட்டனிலுள்ள வரிவீதங்களை இந் நாடுகள்—கானுவும் நைஜீரியாவும்—விதித்தால், பிரிட்டனிலுள்ளது போலவே வருமானத்திற்கும் வரித் தொகைக்கும் இடையே உள்ள விகிதம் இந் நாடுகளிலும் அமையும் என்று கூற முடியாது. ஏனெனில், இந்நாடுகளில் ஆண்டுதோறும் 500 பவுனிலிருந்து 1,000 பவுன் வரை வருமானம் உடையவர்களின் மொத்த வருமானமானது, நாட்டின் மொத்த வருமானத்தில், பிரிட்டனில் இருப்பதைவிட மிகவும் குறைவானதேயாகும். இதே கருத்தை முறைப்படி கீழே கண்டவாறு கூறலாம். பிரிட்டனில் மூன்று விதமான வருமான அடுக்குகளின் (slabs) மீது முறையே a, b, c என்ற மூன்று விதமான வரிவீதங்கள் விதிக்கப்படுகின்றன என்று வைத்துக்கொள்வோம். வருமானத்திற்கும் வரித் தொகைக்கும் இடையேயுள்ள விகிதமானது, பிரிட்டனி

[1] A. M. Martin and W. A. Lewis, 'Patterns of Public Revenue Expenditure,' Manchester School, September 1956 p. 223 ஐப் பார்க்கவும்.

லுள்ளது போலவே நைஜீரியாவிலும் அமையவேண்டும் என்று கருதினால், பிரிட்டனில் எந்தெந்த வருமான அடுக்கின்மீது எந்தெந்த வீதத்தில் வரி விதிக்கப்படுகின்றதோ அதே போல நைஜீரியாவிலும் செய்யவேண்டும். நாம் இங்கு விளக்கிக்கொண்டிருக்கின்ற விவாதத்தில் வருமானங்களைக் கணக்கிட்டுக் கொள்கின்றோமேயன்றி, வருமானங்களை ஈட்டிக்கொண்டிருக்கக்கூடிய நபர்களின் எண்ணிக்கையை அல்ல என்பதை அறிய வேண்டும். ஏனெனில், முன்னேறிய நாட்டைவிடப் பின்தங்கிய நாட்டில் வருமானமானது சமமாகப் பங்கிடப்பட்டிருந்தால், அதிகமான வருமான அடுக்கில் உள்ள நபர்களின் மொத்த வருமானமானது, நாட்டின் மொத்த வருமானத்தில் மிகக் குறைவாகவே இருக்கும்; ஆனால், குறைவான வருமான அடுக்கில் உள்ள நபர்களின் மொத்த வருமானம், நாட்டின் மொத்த வருமானத்தில் பெரும் பங்கு வகிக்கும். எனவே, பின்தங்கிய நாட்டில் முன்னேறிய நாட்டிலுள்ள வரிவீதங்களை வருமானங்களின் அடிப்படையிலல்லாது வருமானத்தை ஈட்டிக்கொண்டிருக்கின்ற நபர்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் விதித்தால், வரித்தொகைக்கும் வருமானத்திற்கும் இடையேயுள்ள விகிதமானது, முன்னேறிய நாடுகளில் உள்ளதைவிடக் குறைவாக இருக்கும். பின்தங்கிய நாடுகளில் முன்னேறிய நாடுகளிலிருப்பதைவிட வருமான ஏற்றத் தாழ்வுகள் அதிகமாக இருக்குமேயாயின், இவற்றிற்கு மாறுபட்ட விளைவுகள் நேரும். எனவே, இவ் விவாதமானது வருமானங்களின் அடிப்படையில் அமையவேண்டுமேயன்றி, வருமானங்களை ஈட்டிக்கொண்டிருக்கின்ற நபர்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் அல்ல என்பது தெளிவாகும்.

மேலே தந்துள்ள விவாதமானது, வரி வீதங்களைப்பற்றிமட்டுமே விளக்குவதற்கென்று அமைக்கப்பட்ட ஒன்றாகும். எனினும், உரிய மாற்றங்களைச் செய்துகொண்டால் வருமான வரித் தள்ளுபடிகளின் அளவைத் தீர்மானிப்பதற்கும் இவ் விவாதத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். எனினும், வரி வீதத்தையும் தள்ளுபடிகளின் அளவையும், அந்தந்த நாட்டிலுள்ள வருமான மட்டங்கட்கு ஏற்ப, அமைக்க வேண்டுமேயன்றி, வேறு நாடுகளிலுள்ள வருமான மட்டங்கட்குப் பொருந்தக்கூடிய வரி வீதத்தையும் தள்ளுபடியையும் கைக்கொள்ள முனைவதைத் தவிர்க்கவேண்டும்.

கடந்த காலத்தில் பல பின்தங்கிய நாடுகள், முன்னேறியுள்ள நாடுகளில் அமலில் இருந்த வரி வீதங்களையும் தள்ளுபடி முறைகளையுமே பெரும்பாலும் கடைப்பிடித்தன. சில நாடுகள் அரசியல் காரணங்களை முன்னிட்டு இந்த அளவுக்குக்கூட ஏற்பாடுகள் செய்ய

வில்லை[1]. பின்தங்கிய நாடுகள், முன்னேறிய நாடுகளிலுள்ள வரி வீதங்களையும் தள்ளுபடி முறைகளையுமே கடைப்பிடித்துவந்தால், முன்னேறிய நாடுகளில் வரித் தொகைக்கும் வருமானத்திற்கும் இடையே என்ன விகிதம் உள்ளதோ, அதை அடைவது சாத்தியமில்லை. இதில் எள்ளளவேனும் ஐயமில்லை. ஆனால், முன்னேறிய நாடுகளில் எந்தெந்த வருமான அடுக்குகட்கு எந்தெந்த வீதத்தில் வரி விதிக்கப்படுகின்றதோ அதே முறையில் பின்தங்கிய நாடுகளிலும் வரி விதிக்க வேண்டுமா என்ற விஷயம் இதனினின்றும் வேறுபட்ட ஒன்ருகும். இதை ஒட்டி எழக்கூடிய இரண்டு பிரச்சினைகளை நாம் கவனிக்கவேண்டியுள்ளது. முதலாவதாக, பின்தங்கிய நாடுகளில் வருமானவரி செலுத்த வேண்டியவர்களின் எண்ணிக்கை பெரும் அளவில் இருப்பதால், வரி வசூலிப்பதை ஒட்டிப் பல நிருவாக ரீதியான பிரச்சினைகள் உருவாகலாம். இரண்டாவதாக, மக்களின் ஆர்வம் எவ்வாறு பாதிக்கப்படக்கூடும் என்பதையும் நாம் விவாதிக்க வேண்டியுள்ளது. வருமான வரிவசூல்பற்றி நாம் விவாதிக்கும் போது முதலாவது பிரச்சினையை ஆராய்வோம். எனவே, மக்களின் ஆர்வம் எவ்வாறு பாதிக்கப்படக்கூடும் என்ற பிரச்சினையை ஈண்டு ஆராய்வோம்.

வருமான வரி விதிப்பதால் நேரக்கூடிய வருமான விளைவு (income effect) எத்தன்மையானது, பதிலீட்டு விளைவு (substitution effect) எத்தன்மையானது, குறிப்பிட்ட வகுப்பினர் எவ்வாறு பாதிக்கப்படலாம், தனியார் எவ்வாறு பாதிக்கப்படலாம்— என்பவை குறித்துக் கோட்பாட்டு ரீதியாக அமைந்துள்ள பல விவாதங்களை யாவரும் நன்கு அறிவர். எனவே, அவற்றை இங்கு விளக்கவேண்டுவதில்லை. வேறு சில முக்கிய விஷயங்களைமட்டும் இங்குக் காண்போம். வேலை செய்வதற்கான மக்களின் ஆர்வமானது வருமான வரியால் எங்ஙனம் பாதிக்கப்படலாம் என்று ஆராயும்பொழுது, வருமான வரி விதிப்பதன் விளைவாக மக்கள் வேலை செய்வதில் ஈடுபட்டிருப்பதைவிட ஓய்வாக இருப்பதை எந்த அளவுக்கு விரும்பலாம் என்றுமட்டும் ஆராய்வது போதுமானதாகாது. வரி விதிப்பிற்கு உட்படாத வேலைகளைச் செய்வதில் மக்கள் ஈடுபட முனைவரா

[1] வருமான வரியினின்றும் விலக்கு அளிக்கப்பட்டுள்ள வருமானம், தேசிய வருமானம் ஆகியவற்றிற்கான தலா விகிதமானது, பல முன்னேறிய நாடுகளைவிடப் பல பின்தங்கிய நாடுகளிலேயே அதிகமாக இருந்தது என்று வெனிசூலாவைப் பற்றித் தாம் செய்துள்ள ஆராய்ச்சியில் பேராசிரியர் ஷுப் அவர்களும் அவருடன் பணிபுரிந்தோரும் கூறியுள்ளனர். C.S.Shoup et al., 'The Fiscal System of Venezuela' (Johns Hopkins, Baltimore, 1959), p. 93ஐப் பார்க்கவும். இதே விஷயத்தைப்பற்றிய புள்ளிவிவரங்களை மேலும் அதிகமாகத் தெரிந்துகொள்ள கீழே தந்துள்ள நூலைப் பார்க்கவும்.

'Economic Survey of Asia and the Far East, 1960' (UN, Bangkok, 1961) p. 94.

அல்லது வரிவிதிப்பிற்கு உட்படுத்தப்பட்டுள்ள தொழிலிலேயே நீடித்து இருப்பரா என்ற விஷயத்தையும் ஆராயவேண்டுவது அவசிய மாகும். நாட்டில் வருமான வரி நிருவாகம் எத்துணைச் சிறப்புடன் அமைந்திருந்தபோதிலும் சில அலுவல்களில் அமர்ந்திருப்போர் வருமான வரி கொடாமலேயே தப்பிவிடுகின்றனர் அல்லது தாம் எவ்வளவு வரி கொடுக்க வேண்டுமோ அதைவிடக் குறைவாகக் கொடுத்தனுப்பிவிடுகின்றனர். தொழிற்சாலைகளில் அதிக நேரம் வேலை செய்வதற்குப் பதிலாக ஓய்வு நேரத்தில் வேறு அலுவல்களில் (உதாரணமாக, தன்னுடைய வீட்டிற்கு வர்ணம் பூசும் அலுவலில்) மக்கள் ஈடுபடுவதற்கான வாய்ப்புகள் முன்னேறிய நாடுகளில் உள்ளன. மேலும், இந் நாடுகளில், பெண்டிர் வேறு அலுவல்களில் ஈடுபடாது, தம்முடைய வீட்டு வேலைகளைச் செய்வதில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளலாம். இதேபோல, பின்தங்கிய நாடுகளில், மார்க்கெட்டில் விற்பனை செய்யப்படுகின்ற பொருள்கள் வரிவிதிப் பிற்கு ஆளானால், வரிவிதிப்பிற்கு உள்ளாகாத ஜீவனப்பொருள்களை உற்பத்தி செய்வதில் மக்கள் ஈடுபடலாம்.[1] பின்தங்கிய நாடுகளில் வருமான வரி விதிக்கப்படுவதை ஒட்டி மக்கள் ஜீவன மட்டப் பொருளாதாரத்தையே நாடிச் செல்லக்கூடிய நிலை ஏற்படலாம் என் பதையும் ரொக்கத்தைப் பயன்படுத்தி வர்த்தக பேரங்கள் நடத்தக் கூடிய நிலையானது உருவாவது தடையுறலாம் என்பதையும் நாம் மறந்துவிடலாகாது. இந் நாடுகளில் ஒரு குறிப்பிட்ட அளவு வேலைக் குக் கொடுக்கப்படுகின்ற ஊதியம் ஓரளவு அதிகமாகும்பொழுது மக்கள் இதை எவ்வாறு வரவேற்கின்றனர் என்பதைப்பற்றி நாம் அதிகமாக அறிய முடியவில்லை. எனவே, கோட்பாட்டுரீதியாக இதற் கான விதி எதையும் வகுக்க இயலவில்லை. எனினும், மேலே நாம் குறிப்பிட்டுள்ள முறைப்படி பின் தங்கிய நாடுகளில் வருமானவரி விதிக்கப்பெற்றால் நாட்டில் விரும்பத்தகாத பலகேடுகள் விளையும் என் பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. அதாவது, வருமான வரியின்மூலம் கிடைக்கக்கூடிய மிகுதியான வருவாயைக்கொண்டு அரசாங்கம் செய்யக்கூடிய செலவால் நன்மைகள் விளையலாம் என்பது உண்மை யாக இருந்தாலும், நாட்டில் தனியார் துறை பாதிக்கப்படும் என்ப தில் கிஞ்சித்தேனும் சந்தேகமில்லை. மேலும், இம்முறை கடைப்பிடிக் கப்படுவதன் விளைவாக நாட்டில் கலகம் புரட்சி ஆகியவை தோன்றக் கூடும். (இவை சில நாடுகளில் தோன்றியுள்ளன என்பது உண்மை யாகும்.) இதனால், நாட்டின் உற்பத்தியும் பொருளாதார வளர்ச்சியும் பெரிதும் பாதிக்கப்படலாம். நாம் இங்குத் தெரிவித்துள்ள கருத்து

[1] எஞ்ஞான்றும் இவ்வாறு செய்யமுடியும் என்று கொள்வதற்கில்லை. உதார ணமாக, ஆண்கள் வியாபாரப் பயிர்களையும் (cash crops) பெண்கள் ஜீவனத் திற்கான பயிர்களையும் சாகுபடி செய்வதில் ஈடுபட்டால் நாம் மேலே கூறியிருப் பது சாத்தியமில்லை.

களை வருமான வரியானது மக்களின் சேமிப்பு ஆர்வத்தை எங்ஙனம் பாதிக்கக்கூடும் என்பதை விளக்குவதற்கு ஆதாரமாகவும் வைத்துக் கொள்ளலாம். எனினும், செலவீட்டு வரியைப்பற்றி விவாதிக்கும் பொழுது நாம் இவ் விஷயத்தை முழு அளவில் ஆராய்வோம்.

அடுத்து, வருமான வரியை எவ்வாறு சிறப்பான முறையில் வசூல் செய்யமுடியும் என்பது குறித்து விளக்குவோம். மேல்நாடுகள் கடைப்பிடித்து வருகின்ற, ஊதியம் ஈட்டும்போதே வருமான வரியை வசூல் செய்வது போன்ற முறைகளை இந் நாடுகளில் எல்லாத் தொழில்களிலும் கடைப்பிடிப்பது என்பது சாத்தியமானதன்று. ஒரு சில தொழில்களில்மட்டுமே இம் முறையைக் கடைப்பிடிக்க முடியும். பின்தங்கிய நாடுகளில், எந்தெந்த நாடுகளில் இம்முறை கடைப் பிடிக்கப்பட்டு வருகின்றதோ அங்கெல்லாம் வருமான வரி கொடுப் போரின் எண்ணிக்கையும் வருமான வரியினின்றும் கிடைத்து வருகின்ற வருவாயும் வியக்கத்தக்க அளவு அதிகமாகியுள்ளன. (உதாரணமாக, ஜமைக்கா நாட்டில் அண்மையில் இவ்வாறு நேர்ந்துள்ளது.) ஆனால், இந் நாடுகளில் விவசாயிகள் சுயேச்சை உற்பத்தியாளர்கள் ஆகியவர்களைப் பொறுத்தவரையில் இம்முறை யைக் கடைப்பிடிக்க முடியாது. எனவே, நாட்டில் ஒரு சாராருக்கு மட்டும் பொருந்தக்கூடியதாகவும் பிறருக்குப் பொருந்தாததாகவும் இருப்பதால் இம்முறையானது நேர்மைக் (equity) கொள்கைக் குப் புறம்பானது என்று கருத வேண்டும். இது நிற்க, வரிகொடாமல் தப்பிப்பதற்கான எளிதான வாய்ப்புகள் இந் நாடுகளில் அதிகமாக உள்ளன. வரிகொடாது தப்பிக்கும் நோக்கத்துடன் புதருக்குள்ளும் பாதுகாப்பில்லாத நாட்டின் எல்லைப்புறத்திலும் ஒளிந்துகொள்பவர் களை அரசாங்கம் என்ன செய்யமுடிகின்றது? வரி செலுத்துவோரின் ஒத்துழைப்பின் பேரிலேயே, பெரும்பாலான நாடுகளில்,வருமான வரி அதிகாரிகள் சிறந்த முறையில் வரியை வசூல் செய்துவர முடிகின்றது. இவ்வாறு வரி செலுத்துவோர் ஒத்துழைக்க முன்வராவிட்டால் அது வருந்தத்தக்கதேயாகும். எனினும், இந்த விஷயத்தைப் பொறுத்த வரையில் குறுங்காலத்தில் பெரிதாக மாற்றம் எதுவும் செய்வதென் பது சாத்தியமானதன்று. தற்போதுள்ள வரிவீதங்களின் அடிப்படை யில் தற்சமயம் பல நாடுகளிலுள்ள வருமான வரிமுறை நிருவகிக்கப் பட்டுவருகின்ற விதம் பெரிதும் குறைபாடு உடையதாகவே உள்ளது. வரி கொடாது தப்பிக்க முயல்வோரின்மீது வழக்குத் தொடருவது, இவர்களின் பெயரைப் பலரும் அறியும்வண்ணம் வெளியிடுவது ஆகிய முறைகளைக் கையாண்டால் இந் நாடுகளில் வருமான வரிமுறையைச் சிறந்த முறையில் நிருவகிக்க முடியும் என்பது உண்மைதான்.[1]

[1]வருமான வரி செலுத்துவோரின் எண்ணிக்கையைவிட மோட்டார் கார் கள் அதிகமாக உள்ளனவே என்று நாம் ஒரு நாட்டில் ஓர் அதிகாரியிடம் சுட்டிக்

ஆனுல், வரி கொடுக்காது தப்பிக்க முனைபவரை வருமான வரி அதிகாரிகள் கண்டுபிடித்து அவர்களின்மேல் நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்யும்பொழுது, அவர்களைத் தப்பவைக்கப் பலரும் பல வாருக முயற்சிக்கின்றனர். இவ்வாருன சூழ்நிலையில் ஆற்றல் குன்றிய அநுபவம் இல்லாத அதிகாரிகள் என்ன செய்யமுடியும்? மேலும், இவ்வாருன சூழ்நிலையில் நாம் மேலே கூறியுள்ளதுபோல வரிமுறையை மாற்றி அமைத்தால், வருமான வரி வசூலை ஒட்டி எழக் கூடிய பிரச்சினைகள் அதிகமாகுமேயன்றி குறைய வாய்ப்பில்லை.

இதுகாறும், பின்தங்கிய நாடுகளில் வருமான வரியினின்றும் கிடைத்து வருகின்ற வருவாய் மிகக் குறைவாக இருப்பதற்கான காரணங்கள் நான்கு என்று கண்டோம். முதலாவதாக, வருமானத் தின்கீழ் எவ்வெவற்றைச் சேர்ப்பது என்பது குறித்த விளக்கம் தருவதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன; இரண்டாவதாக, தனிப் பட்ட மனிதர்களின் வருமானத்தை மதிப்பீடு செய்வதை ஒட்டிப் பல பிரச்சினைகள் உள்ளன; மூன்ருவதாக, வரி வீதங்களையும் தள்ளு படிகளையும் நிர்ணயிப்பதில் பல சிரமங்கள் உள்ளன; நான்காவதாக வரி வசூல் செய்வதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. தனியார் வருமான வரியைப்பற்றிய நம்முடைய விளக்கத்தை முடிப்பதற்கு முன் இறுதியாக ஒன்றைமட்டும் குறிப்பிட விரும்புகிருேம். பெரும் பாலான மக்கள் வருமான வரி செலுத்திவரக்கூடிய நிலை அமெரிக்கா பிரிட்டன் போன்ற நாடுகளில் எளிதில் சிரமம் ஏதுமின்றி உருவாகி யது என்று கூறமுடியாது. உலகப் போர் நடந்துகொண்டிருந்த காலத்தில்தான் இவ்வாருன நிலை உருவாகியது. போர்க்காலத்தில் அமெரிக்கா பிரிட்டன் ஆகிய நாடுகளில் வருமான வரிக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்தனரோ, அதே அளவு முக்கியத்துவத்தைப் பின்தங்கிய நாடுகளிலுள்ள மக்களும் அவர்களின் அரசியல் பிரதிநிதி களும் கொடுத்தாலன்றி, வருமான வரிமுறையில் உடனடியான பெரும் மாற்றங்களை ஏற்படுத்த முடியாது; பெரும்பாலான மக்கள் வரி செலுத்திவரக்கூடிய நிலையை நாட்டில் தோற்றுவிக்க முடியாது.[2]

### செலவீட்டு வரி

தனியாரின் வருமானத்தில் சேமிப்புப்போக எஞ்சியுள்ள பகுதி யின்மீது விதிக்கப்படுகின்ற வரியே செலவீட்டு வரியாகும். வருமான

---

காட்டினேம். எமது கூற்று எவ்வாறு பொருத்தமுடையது என்பதை அந்த அதிகாரியால் புரிந்துகொள்ள முடியவில்லை!

[2] மத்திய அரசாங்கமானது வருமான வரியை விதித்து நிருவகிப்பதைவிட ஸ்தல ஸ்தாபனங்கள் இவ் வரியைத் திறம்பட நிருவகிக்க முடியும் என்று சிலர் கூறியுள்ளனர். உதாரணமாக, அண்மையில் உகாண்டாவில் இதுபோன்ற முறை பெரிதும் வெற்றி அளித்திருப்பதாக திருமதி ஹிக்ஸ் (U.K. Hicks, Development from Below-Oxford 1961, p. 340 ff.) கூறியுள்ளார்கள். எனினும், வளர்வீத வரு மான வரியின்மூலம் பெருமளவு வருவாய் ஈட்டுவதற்கு இவ்வாருன நிருவாக அமைப்பு ஏற்றதாக அமையக்கூடுமா என்பது ஐயப்பாட்டிற்குரிய ஒன்றேயாகும்.

வரி செலவீட்டு வரி ஆகிய வரிகள் விதிக்கப்படுகின்ற முறைகள் பெரும்பாலும் ஒரே மாதிரியானவையேயாகும். இவற்றுக்கிடையே முக்கியமாக ஒரே ஒரு வேறுபாடுமட்டும் உள்ளது—அதாவது, வருமானத்தின் அடிப்படையில் வருமான வரி விதிக்கப்படுகின்றது. ஆனல், செலவின் அடிப்படையில் செலவீட்டு வரி விதிக்கப்படு படுகின்றது. பல்கலைக் கழகங்களிலுள்ள பொருளாதாரப் புலவர் களின் பகற்கனவு என்று செலவீட்டு வரியைத் தள்ளிவிடமுடியாது. ஏனென்றில், இவ் வரியானது இந்தியாவிலும் இலங்கையிலும் அண்மைக் காலத்திலிருந்து விதிக்கப்பட்டுவருகின்றது. திரு. கால்டார்[1] அவர்கள் இந் நாடுகட்கென்று தயாரித்துள்ள அறிக்கை களின் அடிப்படையில், அதிக அளவு வருமானம் ஈட்டிக் கொண்டிருக்கக்கூடியவர்மீது இந் நாடுகளில் செலவீட்டு வரியானது விதிக்கப்பட்டுவருகின்றது. வருமான வரிமுறையை ஒட்டி எழுகின்ற பிரச்சினைகளே பெரும்பாலும் இவ் வரி முறையையும் ஒட்டி எழக் கூடியவை. எனவே, செலவீட்டு வரிமுறையைப்பற்றி அதிகமாக விளக்கவேண்டியிராது என்று எண்ணுகிறேம்.

செலவீட்டு வரியை வருமான வரிக்குப் பதிலாகவோ அல்லது வருமான வரியுடன் சேர்த்தோ விதிக்கலாம். இவ் வரிக்கு ஆதர வாக இரண்டு விவாதங்கள் உள்ளன. முதலாவதாக, வருமான வரியானது மக்களின் சேமிப்பை எந்த அளவுக்குப் பாதிக்கக் கூடுமோ, அந்த அளவுக்கு செலவீட்டு வரியானது, மக்களின் சேமிப்பைப் பாதிப்பதில்லை. இது பொதுவாக யாவரும் அறிந்த தோர் விஷயமாகும். வருமான வரியால் மக்களின் நுகர்வு சேமிப்பு ஆகிய இரண்டுமே பாதிக்கப்பெறுகின்றன. ஆனல், செலவீட்டு வரியால் மக்களின் நுகர்வுமட்டும் பாதிக்கப்படுகின்றது. எனவே, செலவீட்டு வரி விதிக்கப்பெறுவதால், மக்கள் அதிகமாக நுகர்வதை விட அதிகமாகச் சேமிப்பதில் நாட்டம் கொள்வர்; இது இயற்கையே யாகும். இவ் விவாதத்தைப் பின்தங்கிய நாடுகட்குப் பொருந்தக் கூடியவகையில் இவ்வாறு கூறலாம். பின்தங்கிய நாடுகளில் மக்களின் சேமிப்பை ஊக்குவிக்கவேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும். இந் நாடுகளிலுள்ள செல்வந்தர்கள் தம் நுகர்வைக் குறைத்துக் கொண்டு சேமிப்பைப் பெருக்கினல் இது சாத்தியமானதாகும். இதற்கு ஏற்ற சாதனம் செலவீட்டு வரியேயாகும். இரண்டாவது விவாதம் வருமாறு: இது ஒரு விநோதமான கூற்ருகும். செலவீட்டு வரிமுறை கடைப்பிடிக்கப்பட்டுவருகின்ற நாடுகளில் வரிசெலுத்து வோர் தம்மைப்பற்றிய அதிகமான செய்திகளை அறிவிக்கவேண்டி

[1] Indian Tax Reform, Ministry of Finance, India, 1956. Suggestions for a Comprehensive Reform of Direct Taxation, Sessional Paper IV—1960, Colombo, Ceylon.

யுள்ளது. இவ்வாறு இவர்கள் தரக்கூடிய அதிகமான செய்திகளின் துணைகொண்டு, இவர்கள் தரவேண்டிய செலவீட்டு வரியை மட்டுமன்றி வேறு வரிகளையும் தீர்மானிக்க முடியுமேயாயின், மக்கள் வரி கொடாது தப்ப முயலுவதைச் சிறந்த முறையில் தடுக்கமுடியும். வருமான வரி செலுத்துவோர் பூர்த்திசெய்து கொடுக்கின்ற நமூனுக்களின்மூலம் அவர்கள் எவ்வளவு வருமானத்தை மறைக்கின்றனர் என்று கண்டுகொள்ள முடியுமோ, அதைவிட, இம் முறையின்கீழ் இதுபோன்ற தவறுகளை மிக எளிதாக தீர்க்கமாகக் கண்டுகொள்ள முடியும் என்று செலவீட்டு வரியை ஆதரிப்போர் விவாதிக்கின்றனர்.

பின்தங்கிய நாடுகளில்[1] அதிக வருமானம் ஈட்டிக்கொண்டிருக்கக்கூடிய மக்களின்மீது செலவீட்டு வரி விதிக்கப்படவேண்டும் என்ற கூற்றிற்கு ஆதரவாக அமைந்துள்ள விவாதங்களை நாம் மேலே கண்டோம்.[2] இவை ஏற்றுக்கொள்ளத்தக்க விவாதங்கள்தாமா என்பதை இனி ஆராய்வோம். வருமான வரிக்குப் பதிலாக செலவீட்டு வரி விதிக்கப்பெற்ருல் ஒருவர் தம்முடைய வருமானத்தில் பெரும் பகுதியைச் சேமிப்பார் என்பது யாவரும் அறிந்த உண்மையாகும். ஏனெனில், வருமான வரிக்குப் பதிலாக செலவீட்டு வரி விதிப்பதால் பதிலீட்டு விளைவுகளை (substitution effects) முன்னிட்டு மக்களின் சேமிப்பு ஊக்குவிக்கப்பெறும். மேலும், வருமானப் பகிர்வில் நேரக்கூடிய மாற்றங்களும் சேமிப்பை ஊக்குவிக்கும். இவ்வாறன்றி, வருமான வரியோடு சேர்த்துச் செலவீட்டு வரி விதிக்கப்பெற்ருல் பதிலீட்டு விளைவுகள் ஆற்றல் குன்றி இருக்கும்; அதாவது, பதிலீட்டு விளைவு ஏதும் நேராது. இதற்கு மாருக வருமான விளைவு மக்களின் சேமிப்பைக் குறைக்கும். எனவே, பொதுச் சேமிப்பு எவ்வளவு அதிகரிக்குமோ அதிலிருந்து தனியார் சேமிப்பு எவ்வளவு குறையுமோ அதைக் கழித்துக் கொண்டால், மொத்தச் சேமிப்பு எவ்வளவு அதிகரித்துள்ளது என்பதை நாம் அறியமுடியும். ஒரே அளவு வருவாயைத் தரக்கூடிய வருமான வரி செலவீட்டு வரி ஆகியவற்றின் விளைவுகளை ஒன்ருேடொன்று ஒப்பிட்டுப்பார்க்க விரும்பினுல், இவ் விரண்டு வரிகளும் ஒரே அளவினதான வருமானத்தின்மீது விதிக்கப்படுகின்றது என்று நாம் வைத்துக்கொள்ளவேண்டும். செலவீட்டு வரி விதிக்கப்

[1] பின்தங்கிய நாடுகளில் பலரும் செலுத்தக்கூடிய வகையில் செலவீட்டு வரிமுறை உருவாக்கப்பட வேண்டும் என்று யாரும் இதுவரை கூறியுள்ளதாகத் தெரியவில்லை. எனவே, நாமும் இதற்கான சாத்தியக் கூறுகளை இங்கு ஆராயவில்லை.

[2] இவை தவிர, வேறு அடிப்படையிலும் (உதாரணமாக, நேர்மைக் கொள்கையின் அடிப்படையிலும்) வருமான வரியையும் செலவீட்டு வரியையும் ஒப்பிட்டு நோக்கலாம். எனினும், இவை பின்தங்கிய நாடுகளைவிட முன்னேறிய நாடுகட்கே பெரிதும் பொருந்தக்கூடியவை என்று தோன்றுகின்றது.

பட்டால், முன்பிருந்ததைவிடத் தற்சமயம் வருமானத்தின் பெரும் பகுதியை மக்கள் சேமிப்பர் என்பது உண்மையேயாயினும், செல வீட்டு வரியின் விளைவால் மக்களின் வேலைசெய்யும் ஆர்வமும் ஆபத்துகளைத் தாங்க முன்வரும் துணிவும் பாதிக்கப்பட்டு, மொத்த வருமானம் குறைந்தால், சேமிப்பின் சிறப்பு மட்டம் (absolute level of saving) முன்பு இருந்ததைவிட அதிகமாக இருக்கும் என்று கொள்வதற்கில்லை. ஆனால், நிரந்தரமாக எக் காலத்திலும் செலவீட்டு வரி விதிப்பதற்கு மாருக, சில குறிப்பிட்ட காலங்களில்மட்டும் (உதாரணமாக, போர்க் காலங்களிலும் ஐந்தாண்டிற்கான வளர்ச்சித் திட்டம் செயல்படுத்தப்படக்கூடிய காலத்திலும்) இவ் வரியானது விதிக்கப்பெற்ருல், இது சேமிப்புக்குப் பெரும் தூண்டுகோலாக அமையக்கூடும். எனினும், இதுபோன்ற விஷயங்கள் சிக்கலானவை என்று கருதி இவற்றைப்பற்றிய பூரண மான விளக்கத்தை இவ் வத்தியாயத்திற்கான பிற்சேர்க்கையில் தந்துள்ளோம்[1]. எனினும், ஒரே ஒரு விஷயத்தைமட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகிரும். பின்தங்கிய நாடுகளில் ஆடம்பரப் பொருட்களின் நுகர்விற்கென்று பெருமளவில் பணம் செலவளிக்கப் பட்டு வருகின்றது. எளியமுறையில் வரிச் சட்டம் ஒன்று இயற்றி இத்தகைய செலவுகளைத் தடுத்து மக்களின் சேமிப்பைப் பெருக்கி நாட்டின் மூலதன வளர்ச்சிக்கான பணத்தைத் திரட்டிவிடலாம் என்று எண்ணுவது தவருகும்.

செலவீட்டு வரி விதிக்கப்பெறுவதை ஒட்டி செல்வந்தரின் சேமிப்பு அதிகரிக்க நேருவதால் தோன்றக்கூடிய பிரச்சினை ஒன்றை இனி ஆராய்வோம். செல்வந்தரின் சேமிப்பு அதிகரிப்பதை ஒட்டி நாட்டில் தனிப்பட்ட மனிதர்களிடம் மூலதனம் குவிய (concentration) நேரலாம். இது விரும்பத்தக்கதுதானு என்பது சர்ச்சைக்குரிய விஷயமாகும். தனியாரின்மீது வளர்ந்துசெல் வீதத்தில் சொத்து வரி விதித்தால் இவ்வாறு மூலதனக் குவிவு (concentration of capital) நேருவதைத் தடுக்கமுடியும் என்று சிலர் கருதுகின்றனர். ஆனால், இக் கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. ஏனெனில், சொத்து வரியால் கேடு ஏதும் விளையாது என்று சொல்வதற்கில்லை. சொத்து வரி விதிப்பதால் மூலதனத்தினின்றும் கிடைத்துவரக்கூடிய நிகர வருமானம் குறையலாம்; இதன் விளைவாக சேமிப்பும் குறையலாம். எனவே, சொத்து வரி விதித்தாலும் விதிக்கப்படா

[1] இவ்வத்தியாயத்திற்கான பிற்சேர்க்கை II ஐப் பார்க்கவும். இப் பிற்சேர்க்கையில் வருமான வரி செலவீட்டு வரி ஆகியவை எவ்வாறு சேமிப்பைப் பாதிக்கக்கூடும் என்று ஒப்புநோக்கியுள்ளோம். உரிய மாற்றங்களைச் செய்து கொண்டால், இதே விவாதங்களின் அடிப்படையில் வருமான வரி, நுகர்வுப் பொருள்கள்மீது விதிக்கப்படுகின்ற மறைமுக வரி ஆகியவை எவ்வாறு சேமிப்பைப் பாதிக்கக்கூடும் என்பதையும் ஒப்பிட்டுப்பார்க்கமுடியும்.

விடினும் மக்களின் சேமிப்பும் நுகர்வும் ஒரே அளவினதாக இருக்கும் என்று கொள்வதற்கில்லை.

வரி நிருவாகத்தை ஒட்டி எழக்கூடிய பிரச்சினைகள் யாவற்றையும் ஆறும் அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். எனவே, இப்போதைக்கு, ஓரிரு விஷயங்களைமட்டும் ஈண்டுக் குறிப்பிடுவது போதுமானது என்று எண்ணுகிறோம். வருமான வரி விதிப்பதற்கு வருமானத்தைமட்டும் கணக்கிடுவது போதுமானதாகும்; ஆனால், செலவீட்டு வரி விதிப்பதற்கு வருமானத்தைமட்டுமன்றி சேமிப்பையும்[1] கணக்கிடவேண்டியுள்ளது. எனவே, வருமான வரியை நிருவகிப்பதைவிட செலவீட்டு வரியை நிருவகிப்பதே பெரிதும் சிரமமான காரியம் என்று எண்ணுவதற்கு இடமுள்ளது. இவ்வாறு எண்ணுவதில் தவறில்லை. ஏனெனில், 'இந்திய வரிமுறைச் சீர்திருத்தம்' என்ற தம்முடைய புத்தகத்தில் திரு. கால்டார் அவர்கள் குறிப்பிட்டுள்ள கருத்தை ஆராய்வதற்கு இது தூண்டுகோலாக அமைந்துள்ளது. வருமான வரிக்காகத் தற்சமயம் வருமானத்தைக் கணக்கிடும் முறை திருப்திகரமாக இல்லை என்றும், இன்னும் திருத்தமான முறையில் வருமானத்தைக் கணக்கிடவேண்டும் என்றும் ஆனால், இவ்வாறு செய்வதை ஒட்டி பெருமளவு நிருவாகச் செலவுகள் ஏற்படும் என்றும் கால்டார் கூறியுள்ளார். கால்டாரின் இக் கூற்றானது திருத்தமான வருமான வரிமுறை சிக்கல் நிறைந்ததாக இருக்கக்கூடும் என்ற கருத்தை உணர்த்துகின்றதேயன்றி, செலவீட்டு வரியை நிருவகிப்பதற்கான செலவுகள் மிகவும் அதிகமாக இருக்கக்கூடும் என்ற கருத்தை மறுப்பதுபோல அமைந்துள்ளது என்று கொள்வதற்கில்லை. வரி செலுத்துவோர் ஒவ்வொருவரும் தம்மைப்பற்றிய செய்திகள் யாவும் அடங்கிய பட்டியல் ஒன்றைச் சமர்ப்பித்தால் எளிதான நிருவாகம் சாத்தியமானதாகும் என்ற கருத்தானது சிறந்த விவாதத்தின் அடிப்படையில் அமைந்துள்ள நேர்த்தியான கருத்து என்பதில் ஐயமில்லை. ஆனால், நடைமுறையிலுள்ள இடர்ப்பாடுகளை நாம் சீர்தூக்கிப்பார்க்கவேண்டும். நீடித்த நுகர்வுப் பொருள்களுக்காகச் (durable consumer goods) செய்யப்பட்டுள்ள செலவை ஒரே ஆண்டில் கணித்துவிடாது ஐந்து ஆண்டுகட்கோ அல்லது பத்து ஆண்டுகட்கோ உரிய சராசரியின் அடிப்படையில் கணக்கிடவேண்டும் என்ற எளிய கருத்தைச் செயலாக்குவதில் பல வகையான இடர்ப்பாடுகள் நேர்ந்துவருகின்றன என்றால், மற்றவற்றைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ?

எனினும், செலவீட்டு வரிமுறையானது கைக்கொள்ளப்பட்டால் என்னென்ன நிருவாகச் சிரமங்கள் நேரக்கூடும் என்று

[1] உதாரணமாக, பந்தயக் குதிரைகளை வாங்கி வளர்த்து வருவதற்கென்று செய்யப்படுகின்ற செலவை, இந்தியச் சட்டத்தில் உள்ளதுபோல, சேமிப்பாகக் கருத வேண்டுமா என்பதைத் தீர்மானிக்க வேண்டும்.

நாம் மேலே தெரிவித்துள்ள கருத்துகள் யாவும் நாமே கற்பித்துக் கொண்ட எடுகோள்களின் அடிப்படையில் அமைந்துள்ளவையே யன்றி வரலாற்று உண்மைகளின் அடிப்படையில் அமைந்துள்ளவை என்று கூறமுடியாது. ஏனெனில், அண்மையில்தான் இலங்கையிலும் இந்தியாவிலும் இவ் வரிமுறை கைக்கொள்ளப்பட்டது. காலப் போக்கில் இம் முறையானது இந் நாடுகளில் வெற்றிபெறுகின்றதா இல்லையா என்று அறிந்தபின்தான் நாம் எதையும் திட்டவட்டமாகக் கோட்பாட்டு ரீதியாகச் சொல்லமுடியும்.

**கம்பெனி வரிமுறை**

பின்தங்கிய நாடுகளில் கம்பெனிகள்மீது வரி விதித்து பெரும் வருவாய் திரட்டமுடியும் என்ற கருத்துக்கு ஆதரவாகப் பல தெளிவான விவாதங்கள் உள்ளன. முதலாவதாக, கம்பெனிகள்மீது விதிக்கப்பெறுகின்ற வரியை யாதொருவிதமான சிரமமுமின்றி எளிதில் வசூலித்துவிடமுடியும். ஏனெனில், கம்பெனிகளைச் சுலபத்தில் கண்டுகொள்ளமுடியும்; இவை முறையாக வரவுசெலவுக் கணக்குகள் வைத்துள்ளன; தனிப்பட்ட நபர் தாம் குடியிருக்கும் இடத்தை அடுத்தடுத்து மாற்றியமைத்து வரிச் சுமையினின்றும் தப்பமுடிவதுபோலக் கம்பெனிகள் தப்பமுடியாது. நாம் இங்கு விளக்கியுள்ள விஷயங்கள் யாவும், வரி வசூலுக்கு ஏதுவான சூழ்நிலை எவ்வாறு அமைந்திருக்கவேண்டும் என்று அதிகாரிகள் கனவு கண்டிருப்பாரோ, அதைப் பெரிதும் ஒத்தவையே என்பதில் ஐயமில்லை. இரண்டாவதாக, கம்பெனிகட்குத் துன்பம் ஏதும் இன்றியே பெரும்பாலும் இவ் வரிகள் வசூல் செய்யப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட தொகையைத் தனிப்பட்ட நபர்களிடமிருந்தோ அல்லது பங்குதாரர்களிடமிருந்தோ நேரடியாக வரியாக வசூலிப்பதைவிடக் கம்பெனிகளிடமிருந்து வரியாக வசூலித்தால், நேரக்கூடிய வெளிப்படையான விளைவுகள் மிகக் குறைவானவையாகவே இருக்கக் கூடும். இங்கு 'விளைவுகள்' என்ற சொல் பொருளாதார விளைவுகளை மட்டுமன்றி அரசியல் விளைவுகளையும் குறிக்கின்றது. ஏனெனில், தனிப்பட்ட நபருக்கு நாட்டில் ஓட்டுரிமை உள்ளது.ஆனால், கம்பெனிகட்கு ஓட்டுரிமை இல்லை. இவ்வாறான சூழ்நிலையில் தனியார் வருமான வரியைப் பொறுத்தவரையில் அதிகாரிகள் அக்கறை ஏதுமின்றி இருப்பதும், குறைந்த வீதங்களை விதிப்பதும், ஆனால், கம்பெனிகளின் மீது மேல்நாடுகளில் அமலில் இருக்கக்கூடிய அளவு வரி வீதங்களை விதிப்பதும் ஆச்சரியப்படத்தக்கதே யன்று.

கம்பெனிகள்மீது வரி விதிப்பதால் மேலே கூறியுள்ளதுபோல நல்ல பலன் கிட்டும் என்பது உண்மையேயாயினும், கம்பெனி வரிகளைக் கையாளுவதற்கான வாய்ப்புகள், பின்தங்கிய நாடுகளில்,

மிகவும் குறைவானவையாகும். முதலாவதாக, பல பின்தங்கிய நாடுகளில் தேசிய வருமானத்தில் கம்பெனிகளின் வருமானம் மிகச் சிறிய பகுதியேயாகும். இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன— (1) இந் நாடுகளில் எந்தெந்தத் துறைகளில் கம்பெனிமுறை முக்கியத்துவம் பெற்றிருக்கின்றதோ (உதாரணமாக, கனரகத் தொழில்களில்) அந்தத் துறைகள் இந் நாடுகளிலுள்ள ஏனைய துறைகளைவிட முக்கியத்துவம் குன்றியவையாக விளங்குகின்றன. 2) மேலும், எந்த ஒரு குறிப்பிட்ட துறையிலும் கம்பெனிகளின் பங்கு மிகக் குறைவாகவே உள்ளது. (உதாரணமாக, வியாபாரத் துறையில் சிறிய வணிகர்களே மிகுதியாக உள்ளனர்; டிபார்ட்மென்ட் ஸ்டோர்கள் ஒருசிலவே உள்ளன.) இவற்றிற்கு விதிவிலக்காக எண்ணெய்வளமிக்க நாடுகள்[1] திகழ்ந்துவருகின்றபோதிலும், நாம் இங்கு வெளியிட்டுள்ள கருத்துகள் பின்தங்கிய நாடுகளைப் பொறுத்தவரையிலும் பொதுவாக உண்மையானவையேயாகும். இரண்டாவதாக, கம்பெனிகளின்மீது விதிக்கப்படுகின்ற வரி வீதங்களை அதிகமான அளவு உயர்த்துவதென்பது சாத்தியமான தொன்றன்று. குறுங்கால விளைவுகளில்மட்டும் கவனம் செலுத்தினுல், அதிகமான வீதத்தில் வரி விதிப்பதனுல் கம்பெனிகட்குத் துன்பம் ஏதும் நேராது என்று எளிதில் கூறிவிடலாம். ஆனுல், நெடுங்காலக் கண்ணேட்டத்தில் நோக்கும்பொழுது, இதனுல் பல கேடுகள் விளையக்கூடும் என்று தோன்றுகிறது. அதாவது, கம்பெனிகள்மீது அதிக வீதத்தில் வரி விதித்தால் ஏற்கெனவே நிறுவப்பட்டுள்ள கம்பெனிகள் ஆபத்துகளைப் பொருட்படுத்தாது முதலீடு செய்ய முன்வருவது தடைப்படலாம்.

கம்பெனிமீது அதிக வீதத்தில் விதிக்கப்படுகின்ற வரியானது பெரும்பாலும் இலாப ஈவுகளினின்றும் (dividends) செலுத்தப்படுவதில்லை, விநியோகிக்காது கம்பெனிகள் சேர்த்து வைத்திருக்கக் கூடிய இலாபங்களிலிருந்தே செலுத்தப்படுகின்றது என்று வாதிடுவோருக்கு நாம் தரும் பதில் இதுதான்—வரி விதிப்பதால், நாட்டின் உண்மையான செல்வ வளம் பெருகுகின்றது என்று எண்ணிவிடலாகாது; இதற்கு மாருக, தனியாரின் சேமிப்பு[2] பெரிதும் பாதிக்கப்படுகின்றது என்பதை நாம் உணரவேண்டும். உண்மையாக பல நாடு

[1] 1952–3-ல் கரிபியப் பிரதேசத்தில், கம்பெனிகளின் மொத்த இலாபங்கள் நாட்டின் மொத்த ஆக்கம் இவற்றிற்கிடையேயான விகிதமானது, வேறு நாடுகளைவிட, டிரினிடாடில் அதிகமாக இருந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும். (A. R. Prest, 'Fiscal Survey of the British Caribbean,' HMSO, 1957, p. 90.) அண்மைக்காலத்திற்கான புள்ளி விவரங்களும் இந்த உண்மையையே வலியுறுத்துகின்றன.

[2] ஆனுல், இதுபோன்ற தனியாரின் சேமிப்புகள் உள்நாட்டு முதலீட்டிற்குப் பயன்படுத்தப்படாது, வெளிநாடுகளில் பயன்படக்கூடும் என்பதையும் நாம் கணக்கிட்டுக்கொள்ள வேண்டும்.

களில் அண்மைக்காலத்தில் கம்பெனிகட்கு மிகச் சிறந்த சலுகைகள் அளிக்கப்பட்டுவருகின்றன. வரி விலக்கு, விரைவுபடுத்தப்பட்ட தேய்மானம் (accelerated depreciation) போன்ற சிறந்த சலுகைகளைக் கம்பெனிகள் பெற்றுவருகின்றன. இச் சலுகைகளைப்பற்றிய விரிவான விளக்கத்தை நான்காம் அத்தியாயத்தில் தந்துள்ளோம். எனவே, தற்சமயம் இவற்றைப்பற்றி ஏதும் கூறவேண்டுவதில்லை. சில கம்பெனிகளின்மீது மிகக் குறைந்த வீதத்தில் வரிவிதித்து வேறு சில கம்பெனிகள்மீது அதிகமான வீதத்தில் விரிவிதிப்பதானது நேர்மைக் கொள்கைக்குப் புறம்பானது என்பதைமட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகிறேம்.

கம்பெனிகள்மீது அதிக வரி விதிப்பதால் ஏற்கெனவே நிறுவப்பெற்றுள்ள கம்பெனிகள்மட்டும் பாதிக்கப்படும் என்று சொல்லிவிட முடியாது. புதிய கம்பெனிகள் நிறுவப்பெறுவதும் தடையுறலாம். எனவே, நாட்டில் கூட்டுப் பங்கு நிறுவனங்களின் (joint-stock enterprises) வளர்ச்சி தடைப்படலாம். இவை தவிர வேறு சில கேடுகளும் நேரக்கூடும். புதிய கம்பெனிகள் உருவாவதற்கு உரிய வாய்ப்புகள் குறைவாக இருந்தால், ஏற்கெனவே நிறுவப்பெற்றுள்ள கம்பெனிகள் போட்டி ஏதும் இன்றிச் செயலாற்றிக்கொண்டிருக்கும். எனவே, நாட்டில் சர்வாதீனம் (monopoly) ஆலிகாப்பொலி (oligopoly) போன்ற விரும்பத்தகாத முறைகள் வளர்ச்சியடைவதற்கு வாய்ப்பான சூழ்நிலை உருவாகலாம்.

புதிய முதலீடுகளைக் கம்பெனி வரியானது எவ்வாறு பாதிக்கக்கூடும் என்ற விஷயத்தைப் பொறுத்தவரையில் இன்னும் ஓர் அம்சத்தைமட்டும் நாம் இங்கு ஒரு சிறிது விவாதிக்கவேண்டியுள்ளது. அண்மையில் பல நாடுகள் இரட்டை வரி விதிப்புமுறை (double taxation) உடன்பாடுகளை ஏற்படுத்தியுள்ளன. இதனுல் ஒன்றிற்குமேற்பட்ட நாட்டில் நிறுவப்பெற்றுள்ள கம்பெனிகள் இரண்டுமுறை வரி விதிப்பிற்கு உள்ளாவது பெரும்பாலும் தவிர்க்கப்பட்டுள்ளது. பெரும் அளவில் வெளிநாடுகளில் முதலீடு செய்து வருகின்ற அமெரிக்கா பிரிட்டன்போன்ற நாடுகளில் கம்பெனி வரி வீதங்கள் அதிக அளவினவாகும். அண்மையில் இரட்டை வரி விதிப்பு உடன்பாடுகள் ஏற்பாடாகி இருப்பதனுல், பின்தங்கிய நாடுகள் இந்த அயல் நாட்டுக் கம்பெனிகளின் இலாபங்களின்மீது அதிக வீதத்தில் வரிவிதிக்க முடிகின்றது. இதனுல் கம்பெனிகளின் மொத்த வரிச்சுமை அதிகமாகக்கூடும் என்று தவருக எண்ணிவிடலாகாது. ஏனெனில், இரட்டை வரி விதிப்புமுறை உடன்பாட்டின் பிரகாரம், வெளிநாடுகளில் அதிக வரி விதிக்கப்பட்டால் தாய் நாட்டில் கம்பெனிகள்மீது சுமத்தப்படுகின்ற வரிச்சுமை இதற்கு

ஏற்பக் குறைக்கப்படுகின்றது. எனினும், இங்கு நாம் ஒரு முக்கிய மான விஷயத்தைக் கவனிக்கவேண்டியுள்ளது. இதுபோன்ற நிலை என்ஞான்றும் நீடிக்கும் என்று தப்புக் கணக்குப் போட்டுவிடக் கூடாது. பின்தங்கிய நாடுகளில் விதிக்கப்படுகின்ற கம்பெனி வரி வீதங்கள், அமெரிக்கா பிரிட்டன் ஆகிய நாடுகளில் விதிக்கப் படுகின்ற வரிவீதங்கட்கு இணையாகவோ அல்லது அதிகமாகவோ உயர்த்தப்பட்டால், இந் நிலை நீடிக்கும் என்று கொள்வதற்கில்லை. மேலும், பின்தங்கிய நாடுகளிலுள்ள வரிவீதங்கள், அமெரிக்கா பிரிட்டன் போன்ற நாடுகளிலுள்ளதைவிடக் குறைவாக இருந்த போதிலும், வெளிநாடுகளில் தேக்கிவைத்துள்ள இலாபங்கள் தாய் நாட்டில் வரிவிதிப்பிற்கு உள்ளாகாவிடில், இதுபோன்ற நிலை நீடிக்காது. எனவே, பின்தங்கிய நாடுகள் எந்தவிதமான வரை யறையுமின்றி கம்பெனி வரியை உயர்த்திக்கொண்டே போக முடியும் என்று சொல்வதற்கில்லை. ஏனெனில், பின்தங்கிய நாடுகள் வரிவீதத்தை அதிகமான அளவுக்கு உயர்த்திஞல் அயல்நாட்டு முதலீடு தடைப்படலாம். இவ்வாறு அயல் நாட்டுக் கம்பெனிகளின் மீது விதிக்கப்பெறுகின்ற வரிவீதம் வரையறைகட்கு உட்பட்டது என்பது உண்மையாஞல், உள்நாட்டுக் கம்பெனிகளின்மீது விதிக்கப் பெறுகின்ற வரிவீதமும் வரையறைகட்கு உட்பட்டதேயாகும் என்பதில் ஐயமில்லை.

கம்பெனி வரிகளைப்பற்றிய மற்றும் ஒரு விஷயத்தைமட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகிரேம். பின்தங்கிய நாடுகள் பலவற் றிலும் ஏற்றுமதிகளின் மதிப்பு ஏற்ற இறக்கங்கட்கு உட்பட்டவை என்று நாம் ஏற்கெனவே அத்தியாயம் ஒன்றில் விளக்கியுள்ளோம். குறிப்பிட்ட நிலையான வீதத்திலேயே கம்பெனிகளின்மீது வரி விதிக்கப்பெற்றுவருகின்றது என்று வைத்துக்கொண்டால், ஏற்று மதிகளின் மதிப்பு எந்த வீதத்தில் மாற்றமுறுகின்றதோ அந்த வீதத்திலோ அல்லது அதற்கு அதிகமான வீதத்திலோ கம்பெனி களின் இலாபம் மாற்றமுற்ருல், கம்பெனி வரியினின்றும் கிடைத்து வரக்கூடிய வருவாயானது, ஏற்றுமதிகளின் மதிப்பு எந்த வீதத்தில் ஏற்ற இறக்கத்திற்கு உள்ளாகுமோ, குறைந்தபட்சம் அந்த வீதத்தில் ஏற்ற இறக்கங்கட்கு உள்ளாக நேரிடும். பின்தங்கிய நாடுகளில் பொதுவாக வரிமுறையானது பெரிதும் நெகிழ்ச்சித் தன்மை உடையதாக இருக்கவேண்டுவது அவசியம் என்று நாம் ஐந்தாவது அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். எனினும், பேராசிரியர் ஷூப்[1] அவர்களும் அவருடன் பணியாற்றியவர்களும் சுட்டிக்காட்டியுள்ள ஒரு விஷயத்தை இங்குக் குறிப்பிடவேண்டுவது அவசியமாகும்.

[1] C. S. Shoup et al., 'The Fiscal System of Venezuela' (Johns Hopkins Baltimore, 1959) p. 355ஐப் பார்க்கவும்.

எண்ணெய் உற்பத்தியையே பெரிதும் சார்ந்துள்ள வெனிசூலா போன்ற நாட்டில், எண்ணெய்க் கம்பெனிகள் ஈட்டுகின்ற இலாப மானது நாட்டின் மொத்த ஆக்கத்தில் (அதாவது, வருமானத்தால் பெருகியது) இடம் பெறுகின்றது. ஆனால், இந் நாட்டின் தேசிய வருமானத்தில் (அதாவது, இந் நாட்டில் வசித்துவருவோரின் மொத்த வருமானத்தில்) கம்பெனிகளின் இலாபம் முழுவதும் இடம்பெறவில்லை; இந் நாட்டு அரசாங்கத்திற்கு இக் கம்பெனிகள் தம் இலாபத்தினின்றும் எவ்வளவு பணத்தை வரியாகச் செலுத்துகின்றனவோ அந்தப் பணம் மட்டும் தேசிய வருமானத்தில் இடம் பெறுகின்றது. (எஞ்சிய பகுதி அயல் நாட்டினரிடம் போய்ச் சேருகின்றது.) இவ்வாருன நிலையில், உலகச் சந்தையில் நிலவு கின்ற விலைவாசிகளில் மாற்றங்கள் நேர்வதை ஒட்டி, கம்பெனி களின் இலாபம் குறைந்தால், இந் நாட்டில் தேசிய வருமானமும் வரிகளின்மூலம் கிடைத்து வருகின்ற வருவாயும் ஒரே அளவில் குறையும். எனவே, இந் நாட்டில் வரிமுறையானது 100-க்கு 100 வருமானம்சார் நெகிழ்ச்சி உடையது என்று கூறலாம். எனினும், இதனுல் நாட்டிலுள்ள வேலை வாய்ப்புகள் விலைவாசிகள் ஆகியவை ஒருசிறிதும் பாதிக்கப்படமாட்டா. அரசாங்கத்துறை வருமானம் மட்டும் குறைவுற்று தனியார் துறையின் வருமானம் எவ்விதத்திலும் பாதிக்கப்படாததே இதற்கான காரணமாகும். எனினும், இதன் விளைவாக நாட்டிலுள்ள அயல்நாட்டுச் செலாவணிக் காப்பு இருப் புகள் பாதிக்கப்படலாம். மேலும், விலைவாசி மாற்றங்கள் ஏதும் நேராமல், உற்பத்தியின் அளவில் நேர்ந்துள்ள மாற்றங்களின் விளைவால் எண்ணெய்க் கம்பெனிகளின் இலாபங்கள் குறைந் திருந்தால், நாம் மேலே விளக்கியுள்ள வாதம் பொருந்தாது. எனினும், இவை யாவும் விதிவிலக்குகளேயாகும்; எனவே, நாம் மேலே குறிப்பிட்டுள்ள கருத்துப் பொதுவாக உண்மையானதே யாகும்.

### மூலதன வரிகள்

அடுத்து, மூலதனத்தின்மீது விதிக்கப்படுகின்ற பலவகையான வரிகள்குறித்து ஆராயவேண்டியுள்ளது. ஆண்டுதோறும் விதிக்கப் பெறுகின்ற வரிகள், குறிப்பிட்ட காலங்களில் (இறந்த பின் அல்லது நன்கொடை வழங்கும்போது) விதிக்கப்பெறுகின்ற வரிகள், ஒரே முறை (மூலதன லெவிகள்) விதிக்கப் பெறுகின்ற வரிகள், மூலதன மதிப்பு உயர்வின்மீது விதிக்கப் பெறுகின்ற வரிகள்—என்று மூலதன வரிகள் பலதரப்பட்டவையாகும். மூலதன வரிகள் என்ற தலைப்பு மிகவும் பரந்த ஒன்ருகும். அதிர்ஷ்டவசமாக நாம் இவ் விஷயம் குறித்து விரிவாக ஆராயவேண்டிய அவசியம் இங்கில்லை. மூலதன வரிகளின் முக்கிய கூருகிய நிலவரி முறையைப்பற்றி முழு அளவில்

விவாதிக்கப்பட்டுள்ள புத்தகம்[1] ஒன்று அண்மையில் பிரசுரிக்கப் பட்டுள்ளமையே இதற்கான காரணமாகும்.

பலகாலமாக ஏதோ ஒரு விதத்தில் எல்லா நாடுகளிலும் மூலதன வரிகள் விதிக்கப்பட்டுவந்துள்ளன; இவை எல்லா நாடுகளிலும் ஆதரவும் பெற்றுத் திகழுகின்றன. பல நாடுகளில் பல்வேறுபட்ட அடிப்படையில் விதிக்கப்படுகின்ற பலவகையான நிலவரிகட்கான பெரிய பட்டியல் ஒன்றை வால்ட் அவர்கள் தமது புத்தகத்தில் தந்துள்ளார்கள். வேறு சிலர்[2] 19ஆம் நூற்றுண்டில் இரண்டாவது பகுதியில் ஜப்பானில் நிலவரிமுறை பயன்படுத்தப்பட்டதைச் சுட்டிக்காட்டி அம் முறைக்கு ஆதரவு தெரிவித்துள்ளனர். வேறு சில அறிக்கைகள்,[3] நிலவரிக்கு ஆதரவு தெரிவித்து ஆணித்தரமாக விவாதித்துள்ளன. வேறு வரிகளைவிட, மூலதனத்தின்மீது விதிக்கப் பெறுகின்ற வரியானது, கோட்பாட்டுரீதியாக நோக்குங்கால், பல நன்மைகளை விளைவிக்கக்கூடியதாகும். வருமான வரியைவிட மூலதன வரியானது ஆபத்தைத் தாங்க எண்ணும் மக்களின் துணிவைக் குறைந்த அளவுக்கே பாதிக்கக்கூடியதாகும். நேர்மைக் கொள்கையின் அடிப்படையிலும் இவ் வரிமுறைக்கு ஆதரவாகப் பல விவாதங்கள் உள்ளன. மேலும், மூலதன மதிப்பு உயர்வின்மீது விதிக்கப் பெறுகின்ற வரிகள் (இவை நிலத்தின் மதிப்பு உயர்வின்மீதோ அல்லது வேறு சொத்துகளின் மதிப்பு உயர்வின்மீதோ விதிக்கப் படலாம்) ஏனைய நேர்முக வரிகள் மறைமுக வரிகள் ஆகியவற்றை விட மக்களின் வேலை செய்யும் ஆர்வத்தையும் சேமிக்க எண்ணும் நோக்கத்தையும் குறைந்த அளவிலேயே பாதிக்கக்கூடியவையாகும்.

இவ்வாறு பல்லாற்றானும் மூலதன வரிகள் நன்மைகள் பல உடையன என்பது மெய்யேயாயினும், பின்தங்கிய நாடுகளின் மொத்த வருவாயில் இவை சிறு பங்கே வகித்துவருகின்றன. நில வரிகளிலிருந்து கிடைத்துவருகின்ற வருவாய்க்கான விவரமான புள்ளி விவரங்களை வால்ட்[4] அவர்கள் தம்முடைய புத்தகத்தில் கொடுத்துள்ளார். பின்தங்கிய நாடுகளில் ஏனைய வரிகளைவிட

[1] Haskell P. Wald, 'Taxation of Agricultural Land in Underdeveloped Economies' (Harvard University Press, Cambridge, Mass., 1959.)

[2] R. Nurkse, 'Problems of Capital Formation in Underdeveloped Countries' (Blackwell, Oxford, 1953) ஐப் பார்க்கவும்.

[3] J. W. F. Rowe, 'The Economy of the Seychelles and its Future Development' and J. Downie, 'An Economic Policy for British Honduras' (Belize, British Honduras, 1959) ஆகிய புத்தகங்களைப் பார்க்கவும்.

[4] Haskell P. Wald, 'Taxation of Agricultural Land in Underdeveloped Economies' (Harvard University Press, Cambridge, 1959) p. 62ஐப் பார்க்கவும்.

மூலதன வரிகள் முக்கியத்துவம் குன்றியவையாக உள்ளன என்பதையும் சில ஆண்டுகட்கு முன்பு இருந்ததைவிடத் தற்போது இவ் வரிகளின் முக்கியத்துவம் பெரிதும் குறைந்துள்ளது என்றும் இந்தப் புள்ளி விவரங்கள் உணர்த்துகின்றன. வால்ட் அவர்கள் தந்துள்ள புள்ளி விவரங்கள் மூலதன வரிகள் முழுவதற்கும் பொருந்தக் கூடியவையல்ல என்பது உண்மையேயாயினும், இவ் வரிகள் பின் தங்கிய நாடுகளில் எவ்வாறுன முக்கியத்துவம் பெற்றுள்ளன என்பதை ஒருவாறு அறிந்துகொள்வதற்கு இப் புள்ளி விவரங்கள் உறுதுணையாக உள்ளன.

இவ்வாறு பின்தங்கிய நாடுகளில் மொத்த வருவாயில் மூலதன வரிகளினின்றும் கிடைத்து வருகின்ற வருவாயானது மிகக் குறைந்த பங்கே பெற்றிருப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக, பல பின்தங்கிய நாடுகளில், முன்னேறிய நாடுகளில் இருப்பதைவிட, மீண்டும் உற்பத்தி செய்துகொள்ளக்கூடிய நிலை முதற் பொருள்களுக்கும் (reproducible fixed capital) நிலத்திற்கும் இடையே உள்ள விகிதமானது மிகக் குறைவானதேயாகும். எனவே, இந் நாடுகளில் மூலதன வரிகள் பலவற்றுள்ளும் நிலவரிமட்டுமே முக்கியத்துவம்பெற்றுத் திகழுகின்றது. இரண்டாவதாக, நில வரிகளை விதிப்பதில் இந் நாடுகளில் பல கடினமான பிரச்சினைகள் உள்ளன. நில உடைமை (land ownership) முறையானது தெளிவாக அமைந்திருக்கவில்லை. சில ஆப்பிரிக்க நாடுகளில் தனிப்பட்ட நபர்கள் நிலத்தைச் சாகுபடி செய்யும் அதிகாரம் பெற்றிருக்கின்றனரேயன்றி நிலத்தை உடைமையாக்கிக்கொள்ளும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை.[1] வேறு சில நாடுகளில் நிலம் துண்டாடப்பட்டுப் பலரின் உடைமையாகத் திகழுகின்றது. ஒவ்வொருவருக்கும் ஒரு மரம் மட்டுமே சொந்தமாக இருக்கக்கூடிய அளவுக்கு இந் நாடுகளில் நிலம் துண்டாடப்பட்டுள்ளது. நாட்டிற்கு நாடு இந்தப் பிரச்சினையை ஒட்டியுள்ள சிக்கல்கள் வேறுபட்டு விளங்குகின்றன.[2] நில உடைமையாளர்கள் பலர் உள்ள நாட்டைவிடப் பெரிய எஸ்டேட்டுகள் உள்ள நாட்டில் நிலவரி விதிப்பது மிகவும் எளிதானதாகும். இந் நாடுகளிலுள்ள நில உடைமை முறையை ஒருவாறு வகைப்படுத்திக்கொண்டபோதிலும், வேறு பிரச்சினைகள் தோன்றுகின்றன. நிலத்தின் மதிப்பை எவ்வாறு கணக்கிடுவது என்பது இந் நாடுகளில் ஒரு பெரும் பிரச்சினையாக உள்ளது. மூலதன மதிப்பின் அடிப்படையிலா, ஆண்டிற்கான மொத்த

[1] D. T. Jack, 'Report on Economic Survey of Nyasaland,' 1958–59 (Federation of Rhodesia and Nyasaland, 1960) ஐப் பார்க்கவும்.

[2] இந்தியாவையும் ஆப்பிரிக்காவையும் ஒப்பிட்டு நோக்கியுள்ள விறுவிறுப்பான விளக்கத்தைக் கீழே தந்துள்ள புத்தகத்தில் காணலாம். Lord Hailey, 'An African Survey' (Oxford University Press, 1957 edition) p. 679.

மதிப்பின் அடிப்படையிலா, அல்லது வேறு எந்த அடிப்படையில்? என்ற வினா எழுகின்றது. நிலத்தை மதிப்பீடு செய்யும் பிரச்சினையில் ஈடுபடாது, செழிப்பான நிலமா அல்லது செழிப்பில்லாத நிலமா, உற்பத்தித் திறன் மிகுதியான நிலமா அல்லது உற்பத்தித் திறன் குறைவான நிலமா என்றெல்லாம் கணக்கிடாது, எல்லா நிலங்களின் மீதும் ஒரு குறிப்பிட்ட வீதத்தில் வரி விதிக்க எண்ணினால், நாட்டிலுள்ள செழிப்பு மிகவும் குறைவான நிலம் எவ்வளவு வரி செலுத்தமுடியுமோ அதையே வரியாக நிர்ணயிக்கவேண்டியது நேரிடும். எனவே, நிலவரியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் அதிகமாக இருக்கமுடியாது. மேலும், பின்தங்கிய நாடுகளில் நில வரி விதிப்பதில் நேரக்கூடிய பல இடர்ப்பாடுகள் காரணமாக, அடிக்கொருமுறை நில உடைமை, நிலத்தின் அளவு, நிலத்தின் மதிப்பு ஆகியவற்றைக் கணக்கிட்டுக் கொண்டிருக்க முடியாது. இந் நாடுகளில் பொதுவான விலைவாசி மட்டம் அதிகரித்துக்கொண்டே போவதால், அடிக்கொருமுறை நிலவரியின் அடிப்படையை மாற்றி மாற்றி அமைக்காவிட்டால், நிலவரியினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயின் உண்மையான மதிப்பானது காலப்போக்கில் குறையுமேயன்றி, கூடாது. இதனால் அதிக அளவு உற்பத்தி செய்யுமாறு விவசாயிகள் தூண்டப்படலாம் என்பது உண்மையே யாயினும், அரசாங்க வருவாயைப் பொறுத்தவரையில் நன்மை ஏதும் விளைய வாய்ப்பே இல்லை எனலாம்.

இன்னும் ஒரு விஷயத்தைமட்டும் இங்கு ஆராய்வோம். அதிகமான வீதத்தில் நிலவரி விதித்தால் நிலச் சொந்தக்காரர்கள் நிலத்தைச் சிறந்த முறையில் சாகுபடி செய்து உற்பத்தித்திறனை உயர்த்துவதில் ஈடுபடுவர் என்றும் இதனால் சமுதாயம் நன்மை யுடையமுடியும் என்றும் சிலர் கருதுகின்றனர்.[1] எனினும், எந்தச் சந்தர்ப்பத்திலும் இதுபோன்ற விளைவுகளே நேரக்கூடும் என்று தோன்றவில்லை. அதிகமான நிலவரி விதித்தால், பதிலீட்டு விளைவால், ஏனைய முதலீடுகள் கவர்ச்சிகரமானதாகவும் நிலத்தைச் சாகுபடி செய்வது கவர்ச்சியற்றதாகவும் தோன்றும்.[2] வருமான விளைவால் நிலச் சொந்தக்காரர்களின் நிலைமை முன்பிருந்ததைவிட மோசமாகிவிடக்கூடும்; எனவே, அவர்கள் நிலத்தைச் சிறந்த

[1] J. Downie, 'An Economic Policy for British Honduras' (Belize, British Honduras, 1959) ஐப் பார்க்கவும்.

[2] வரியானது நிலத்தில் செய்யப்பட்டிருக்கின்ற சீர்திருத்தங்களின்மீதும் விதிக்கப்பட்டுள்ளது. எனவே, பலதரப்பட்ட மதிப்புடைய நிலங்கட்கு ஏற்ற வகையில் பலவாறாக அமைந்துள்ளது என்று வைத்துக்கொண்டால், இது உண்மை யாகும். ஆனால், உண்மையான நிலை இதற்கு மாறுபாடாக இருந்தால் (உதாரண மாக, ஒரே வீதத்தில் எல்லா நிலங்களின்மீதும் நில வரி விதிக்கப்படுகின்றது என்று வைத்துக்கொண்டால்) வழக்கமாகக் கையாளப்படுகின்ற மூலதனக் கணிப்பு முறையில் வரியை மதிப்பிடவேண்டியிருக்கும்.

விதத்தில் சாகுபடி செய்வதில் ஆர்வம் உள்ளவராக மாறலாம். இவ் விவாதத்தை நாம் இத்துடன் முடித்துக்கொள்ள முடியாது; வேறு சில விஷயங்களையும் நாம் கணக்கிட்டுக்கொள்ளவேண்டியுள்ளது. நிலவரி வீத உயர்வால் வேறு எந்த வரிவீதம் குறைந்துள்ளது? எந்த வகையான அரசாங்கச் செலவு அதிகரித்துள்ளது? என்பனபோன்ற வினுக்களுக்கு விடை காண்பதோடு, இவற்ருல் நேரக்கூடிய வருமான விளைவுகள், நிலவரி உயர்வினுல் நேர்ந்துள்ள வருமான விளைவுகட்கு மாறுபாடாக அமையமுடியுமா? எந்த அளவிற்கு மாறுபாடாக அமைய முடியும்? என்பன போன்ற வற்றையும் கணக்கிட்டுக்கொள்ளவேண்டும்.

அடுத்து மூலதனச் சொத்துகளின் மதிப்பு உயர்வின்மீது விதிக்கப்பெறுகின்ற மூலதன வரிகுறித்து ஆராய்வோம். கோட்பாட்டு ரீதியாக நோக்குங்கால் இவ் வரி விதிப்பது பெரிதும் விரும்பத்தக்கது என்று எண்ணத் தோன்றுகின்றது. ஆனல், நடைமுறையில் இவ் வரியைச் செயல்படுத்துவதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. பிரிட்டனில் 1947ஆம் ஆண்டு நில மதிப்பு உயர்வின்மீது வரிவிதிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன; ஆனுல், 1953ஆம் ஆண்டு இவ் வரி கைவிடப்பட்டது. எனவே, பின்தங்கிய நாடு ஒன்றில் நாடு முழுவதற்கும் ஒரே அடிப்படையில் இவ் வரிமுறையை உருவாக்க முடியுமா என்பது ஐயப்பாட்டிற்கு உரிய ஒன்றேயாகும். எனினும், நாட்டின் சில பகுதிகளில் இவ் வரி விதிப்பதற்கான வாய்ப்புகள் இருக்கக்கூடும். இவ் வாய்ப்புகளைத் தவறவிடாது பயன்படுத்திக்கொள்ளவேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும் (உதாரணமாக, வெள்ள நிவாரணம் வடிநீர்த் திட்டம் ஆகியவை செயலாற்றப்பட்டுள்ள பகுதிகளில் இவ் வரியை விதிப்பதற்கான சாத்தியக் கூறுகளை ஆராயலாம்). இவ்வாறு செய்ய முனையாமல் நாடு முழுவதற்குமான பொதுவான ஏற்பாடுகளைச் செய்ய முனைவது தவருகும்.

இதுகாறும் இவ் வத்தியாயத்தில் நாம் விவாதித்த விஷயங்களின் அடிப்படைக் கருத்தைச் சுருக்கமாக இங்குக் காண்போம். பின்தங்கிய நாடுகள் குறுகிய காலத்தில் நேர்முக வரிகளினின்றும் பெருமளவிலான விளைவுகளை எதிர்பார்க்க முடியாது. வருமானம், செலவு, மூலதனம் ஆகியவற்றுள் எந்த அடிப்படையில் வரிவிதிக்க முயன்ருலும் பல பிரச்சினைகள்—கோட்பாட்டு ரீதியாக உள்ள பிரச்சினைமட்டுமன்றி நடைமுறையிலும் பல பிரச்சினைகள்—தோன்றுகின்றன. நேர்முக வரிகளைப் பொறுத்தவரையில் பின்தங்கிய நாடுகள் இரண்டுங்கெட்டான் நிலையில் உள்ளன என்றே சொல்லத் தோன்றுகிறது. நாட்டின் பெரும்பகுதியில் ஜீவனத்திற்

கென்றே பொருள்கள் உற்பத்தி செய்யப்படுவதால், முன்னேறிய நாடுகளில் இருப்பதைவிடப் பின்தங்கிய நாடுகளில் வருமான வரி விதிப்பதற்கான வாய்ப்புகள் மிகக் குறைவாகவே உள்ளன. முன்னேறிய நாடுகளில் உள்ளதுபோலப் பின்தங்கிய நாடுகளில் தனியார் துறையினரிடம் சொத்துகளும் பொறுப்புகளும் (liabilities) மிகுதியாக இல்லை என்பது உண்மையேயாயினும், பின்தங்கிய நாடுகளில் சொத்து உடைமை முறை பல சிக்கல்கள் நிறைந்ததாக உள்ளது. எனவே, வருமான வரி மூலதன வரி ஆகியவற்றுள் ஏதாவது ஒன்று, அதிகரித்துக்கொண்டே இருக்கின்ற அரசாங்கச் செலவுக்குப் போதுமான வருவாயை அளிக்கக்கூடிய சாதனமாக அமைய முடியவில்லை. பல நாடுகள்—குறிப்பாக ஆப்பிரிக்க நாடுகள்—பலவிதமான வரிகளை (சிறப்பாக பிரதேச வரிகளை) விதித்துவருகின்றன. இவ் வரிகள், தலா அடிப்படையிலோ (per capita basis) வருமானத்திற்கு ஏற்பவோ அல்லது அந்தஸ்துக்கு ஏற்பவோ விதிக்கப்பட்டுவருகின்றன.[1] இந்த வரிகளின் அடிப்படையில் காலப்போக்கில் நாடு முழுவதற்கும் பொதுவானதும் பலரும் செலுத்தக்கூடியதுமான வருமான வரிமுறை முகிழ்த்தெழக்கூடும் என்று தோன்றுகிறது. இந் நாடுகள், தாமதமாக, அண்மைக் காலந்தொட்டு வருமான வரிவிதிக்க ஆரம்பித்திருப்பது ஒரு வகையில் இந் நாடுகட்குப் பெரும் நன்மையாக அமைந்துள்ளது என்றே கூறவேண்டும். அதாவது, வருமான வரிச் சட்டங்களை உருவாக்குவதில் முன்னேறியுள்ள நாடுகள் ஆரம்ப காலத்தில் இழைத்துவந்த தவறுகளை இந் நாடுகள் தவிர்த்துக்கொள்ள முடிகின்றது.

## பிற்சேர்க்கை I

### ஜீவன மட்ட உற்பத்தியை மதிப்பிடவேண்டிய முறை[2]

பின்தங்கிய நாடுகளில் ஜீவன மட்ட உற்பத்தியை எவ்வாறு மதிப்பிடவேண்டும் என்பதை ஈண்டு ஆராய்வோம். உற்பத்தியின் அடிப்படையிலோ அல்லது செலவின் அடைப்படையிலோ மதிப்பீடு

[1] 1950—59-க்கு இடைப்பட்ட காலத்தில் இவ் வரிகள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதுபற்றிய விளக்கத்தை, U. K. Hicks, 'Development from Below' (Oxford, 1961) என்ற புத்தகத்தில் காணலாம். வரலாற்று அடிப்படையிலான விளக்கத்தை Lord Hailey, 'An African Survey' (Oxford University Press, 1957 edition) என்ற புத்தகத்தில் காணலாம்.

[2] இப் பிற்சேர்க்கையானது, A. R. Prest and I. G. Stewart, 'The National Income of Nigeria, 1950-51' (HMSO, London, 1953) pp. 12-15, என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டதாகும். நைஜீரியாவிற்குப் பொருந்தக்கூடிய வகையில் இவ் விவாதம், மேற்கூறிய புத்தகத்தில், விளக்கப்பட்டுள்ளது என்பது உண்மையேயாயினும், ஏனைய பின்தங்கிய நாடுகட்கும் இது பொருந்தக்கூடியதேயாகும்.

செய்ய முனைந்தால் உணவை உற்பத்தி செய்வதே விவசாயிகளின் தலையாய பணியாகுமேயன்றி உற்பத்தி செய்த பொருள்களை வேறு இடங்கட்கு எடுத்துச்செல்வது, பகிர்ந்தளிப்பது போன்றவை முக்கிய பணிகள் அல்ல என்று நாம் வைத்துக்கொள்ளவேண்டும். எனவே, இப் பொருள்களைப் பண்ணை விலையில் (ex-farm price) மதிப்பிட வேண்டும் என்று சொல்லத் தோன்றும். ஏனெனில், உணவு உற்பத்தியில் ஈடுபட்டிருக்கக்கூடிய உற்பத்திக் காரணிகளின் (factors of production) இழந்த வாய்ப்புக் கிரயமானது (opportunity cost), இக் காரணிகள் உணவு உற்பத்திக்கு அடுத்து கீழ்நிலையில் இருக்கக்கூடிய சிறந்த உபயோகத்தில் பயன்படுத்தப்பட்டால் எவ்வளவு ஊதியம் பெறுமோ, அந்த ஊதியத்தைவிட அதிகமாக இருக்கமுடியாது. எனவே, பண்ணை விலையில் கணக்கிடுவதானது ஜீவன உற்பத்திப் பொருள்களை மார்க்கெட்டில் விற்பதற்குச் சமமானது என்று கொள்ளலாம். இவ்வாறன்றி உற்பத்தி செய்யப் பட்ட பொருள்களின் பயன்பாட்டைக் (utility) கருத்தில் கொண்டு ஜீவன மட்ட உற்பத்தியாளர்களை நுகர்வோர் என்ற கண்ணேட்டத்தில் நோக்கினுல், மார்க்கெட்டில் தங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை விலை கொடுத்து வாங்குவதற்கு இவர்கள் எவ்வளவு வருமானம் ஈட்டவேண்டுமோ அதற்கு ஈடாக இவர்களுடைய வாழ்க்கைத் தரம் அமையும் என்று வைத்துக்கொள்ள வேண்டும். எனவே, நாம் உற்பத்தியைச் சில்லறை விலையின் அடிப்படையில் மதிப்பீடு செய்யவேண்டும் என்று சொல்லத் தோன்றுகிறது. இவ் விரண்டு முறைகளில் எந்த முறையைக் கையாளுவது உசிதமானது என்பதே அடுத்து நாம் ஆராயவேண்டுவதாகும்.

உற்பத்தி அல்லது செலவின் அடிப்படையில் நோக்கும்போது நாம் சில விஷயங்களைக் கவனிக்கவேண்டியுள்ளது. ஜீவனமட்ட விவசாயி தான் விளைவித்துள்ள உணவுப் பொருள்களை வேறு இடத்திற்கு எடுத்துச் செல்வதே இல்லை, பகிர்ந்தளிப்பதே இல்லை என்று சொல்ல முடியுமா என்ற வினுவிற்கு விடை காணவேண்டியுள்ளது. ஓரளவுக்கு இவ் விதமான பணிகளையும் அவர் செய்து வருகின்ருர் என்பதே விடையாகும். வட நைஜீரியாவில் ஓர் அறுவடை காலத்திற்கும் மற்ருேர் அறுவடை காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் குடும்பத்திற்குத் தேவைப்படக்கூடிய தானியத்தைக் கூம்பு வடிவமுடைய பெரிய தாழிகளில் விவசாயிகள் சேகரித்துவைத்துவரும் பழக்கம் உள்ளது. இதைப் பார்க்கும்போது விவசாயி, தானியத்தைத் திரட்டுதல் சேர்த்துவைத்தல் போன்ற பகிர்வை ஒட்டிய பணிகள் சிலவற்றையும் ஆற்றிவருகிருர் என்பது தெளிவாகும். நடந்தோ அல்லது வாகனங்களில்

சென்றோ விறகு சுள்ளி ஆகியவற்றைப் பொறுக்கி அவற்றை வீட்டிற்கு எடுத்துச் செல்வதிலும் அல்லது அண்மையி லுள்ள மார்க்கெட்டில் விற்பனை செய்வதற்கு எடுத்துச்செல்வதிலும் எவ்வளவு தூரம் போக்குவரத்து சாதனங்களைப் பயன்படுத்த வேண்டியதிருக்குமோ அந்த அளவுக்கு உணவுப் பொருள்களைத் தம்முடைய ஜீவனத்திற்கென்று உற்பத்தி செய்துவருகின்ற விவசாயிகளும் போக்குவரத்து சாதனங்களைப் பயன்படுத்த வேண்டியதிருக்கும். எனவே, உணவை உற்பத்தி செய்வதில் மட்டும் விவசாயி ஈடுபடவில்லை; உற்பத்தி செய்த பொருள்களை எடுத்துச்செல்வதற்குப் போக்குவரவு சாதனங்களையும் ஓரளவுக்குப் பயன்படுத்துகிறார். எனவே, போக்குவரவுசெலவு, பகிர்வை ஒட்டி ஆகக்கூடிய செலவு ஆகியவை அடங்காத மார்க்கெட் விலையில் விவசாயிகளின் ஜீவன மட்ட உணவு உற்பத்தியைக் கணக்கிடுவ தானது, குறைத்து மதிப்பீடு செய்வதை ஒக்கும்.

ஆனால், இப் பணிகளை விவசாயிகள் மிகமிகக் குறைந்த அளவே ஆற்றி வருகின்றார் என்று வைத்துக்கொண்டால், உணவுப் பொருள் களைப் பண்ணை விலையில் மதிப்பிடுவதே சரியான முறை என்று எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில், இப் பொருள்களைத் தம் நுகர்வுக்குப் பயன்படுத்தாவிடில், இவற்றை விற்பனை செய்வதே அடுத்த சிறந்த வழி என்று விவசாயிகள் எண்ணலாம். இவ்வாறு இப் பொருள்கள் விற்பனை செய்யப்படும்போது நடப்புப் பண்ணை விலையில் விவசாயிகள் இவற்றை விற்பர். (தங்களுடைய பண்ணை களில் வைத்துப் பொருள்களை விவசாயிகள் வியாபாரிகளிடம் விற்பனை செய்தால், போக்குவரவு பகிர்வு ஆகியவற்றை ஒட்டி நேரக்கூடிய செலவுகள் நீங்கலாக உள்ள மார்க்கெட் விலையிலேயே விற்க முடியும். இதற்கு மாறாக, பொருள்களை மார்க்கெட்டுக்கு எடுத்துச் சென்று அங்குத் தாமே அவற்றை விற்க முனைந்தால் சில்லரை விலையில் விற்க முடியும். ஆனால், இவ்வாறு செய்வதனால் பொருள்களை மார்க்கெட்டுக்கு எடுத்துச் செல்வதை ஒட்டி விவசாயிகட்குப் போக்குவரத்துச் செலவு போன்றவை ஏற்படும்.) பண்ணையிலுள்ள விவசாயிகள் நுகரக் கூடிய உணவுப் பொருள்களின் மதிப்பைக் கணக்கிடுவதற்கு மேல் நாடுகளில் இம் முறையே கடைப்பிடிக்கப்பட்டுவருகின்றது. மேலும், அரசாங்கமானது தான் உற்பத்தி செய்துவருகின்ற பொருள்களைச் செலவுகளின் அடிப்படையில் மதிப்பீடு செய்யும் முறையும் இம் முறையும் பெரிதும் ஒத்து இருக்கின்றன. எனவே, பின்தங்கிய நாடுகளில் ஜீவன மட்ட உற்பத்தியை மதிப்பிடுவதற்கும் இம் முறையையே ஏன் கையாளக்கூடாது என்ற வினா எழுகின்றது.

நாம் மேலே விளக்கியுள்ள கருத்தில் உள்ள இரண்டு கூறுகளை யும் தனித்தனியே ஆராய்ந்தால் இவ் வினவிற்கான விடையைக் கண்டுகொள்ள முடியும். உணவுப் பொருள்களை நுகர்வுக்குப் பயன் படுத்தாவிட்டால் அவற்றை விற்பனை செய்வதற்கே விவசாயிகள் முனைவர் என்று கூறுவதில் தவறு ஏதுமில்லை. ஆனால், இவ்வாறு விற்பனை செய்யும்போது நடப்புப் பண்ணை விலையில் விற்பனை செய்வர் என்று கூறுவது பொருந்தாததாகும். இது தவருன எடு கோளின் அடிப்படையில் அமைந்துள்ள ஒரு கருத்தாகும். அதாவது, தங்களுக்குமட்டுமே உற்பத்தி செய்தாலும் அல்லது தங்களுக் கென்றுமட்டும் உற்பத்தி செய்யாவிட்டாலும், விவசாயிகள் ஒரே அளவு உணவுப் பொருள்களையே உற்பத்தி செய்துவருவர் என்ற தவருன எடுகோளின் அடிப்படையில் அமைந்துள்ளதாகும் இக் கருத்து. மேற்கு ஆப்பிரிக்காவில் தற்சமயம் நிலவிவருகின்ற சூழ் நிலையில் இதுபோன்ற எடுகோள்கள் பொருந்தாதவையாகும். ஏனெனில், தமக்குமட்டும் என்று உற்பத்தி செய்யாது, விற்பனை செய்வதற்கும் விவசாயிகள் பொருள்களை உற்பத்தி செய்யக்கூடிய நிலையில், முன்பிருந்த அளவு விவசாயிகளே இப்போதும் விவசாயத் தில் ஈடுபடுவர் என்று கூற முடியாது. ஏற்கெனவே, இந் நாட்டின் கிராமப்புறங்களினின்றும் நகரங்களை நோக்கிப் பலர் சென்று கொண்டிருக்கின்றனர். இதுபோன்ற சூழ்நிலையில் தங்கள் உற்பத்தி முழுவதையும் விவசாயிகள் மார்க்கெட்டில் விற்பனைசெய்யும்போது நடப்புப் பண்ணை விலையிலேயே விற்பனை செய்யமுடிகின்றது என்று வைத்துக்கொண்டால், இவ் விலை மிகக் குறைவானது என்ற காரணத்தால் இவர்களின் ஊதியம் குறைய நேரும்.[1] எனவே, நகர்ப்புறங்களை நோக்கிச் செல்லவேண்டும் என்று பல விவசாயி களும் எண்ணத் தலைப்படுவர். எனவே, விவசாயத்தில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் அளிப்பானது நெகிழ்ச்சியற்றதென்று நாம் வைத்துக்கொண்டால், நடப்புப் பண்ணை விலையிலேயே உற்பத்தியை மதிப்பீடு செய்வதில் தவறேதும் இல்லை. ஆகவே, மதிப்பீடு செய்வதற்கு ஏற்ற உண்மையான பண்ணை விலை (பண்ணைகளைவிட்டுத் தொழிலாளர்கள் நகரங்களை நோக்கிச் செல்லக்கூடியதற்காகச் சில தள்ளுபடிகள் செய்துகொண்ட பின்னும்) எது என்பதைக் கூறுவதென்பது சாத்தியமானதொன்றன்று. தற்போதுள்ள நிலையில் நைஜீரியாவில் கிராமங்களிலிருந்து நகரங் கட்கு வந்திருப்போர் வேலையின்றி இருக்கக்கூடும். எனவே, இவர்கள் கிராமங்களில் நுகர்ந்துகொண்டிருந்ததைவிடக் குறைந்த அளவு உணவுப் பொருள்களையே தற்சமயம் நுகர்ந்துவருகின்றனர் என்று

[1] விவசாயி, தமக்குத்தாமே மார்க்கெட்டாக இருந்த சமயம், ஈட்டிக் கொண்டிருந்த வார ஊதியங்கள் (rental earnings) இப்பொழுது மறைந் தொழிந்திருக்கும் என்ற பொருளில் இதை உணர்ந்துகொள்ள வேண்டும்.

வைத்துக்கொண்டாலும், நடப்புப் பண்ணை விலையானது நடப்பு மார்க்கெட் விலையைவிடக் குறைவாக இருக்கவேண்டுமென்பதில்லை: இவ் விலையானது நடப்பு மார்க்கெட் விலையை, ஒட்டியோ அல்லது அதற்கு இணையாகவோ அமையமுடியும். உற்பத்தியின் மதிப்பை நடப்புப் பண்ணை விலையில் கணக்கிட முயலும்போது, நைஜீரியாவில், அளிப்பு தேவை ஆகியவற்றில் ஏற்படக்கூடிய மிகச் சிறிய மாற்றங்கள்கூட விலைகளைப் பெரிதும் பாதித்து வருகின்றன என்ற விஷயத்தை நாம் மறந்துவிடலாகாது. எனவே, இழந்த வாய்ப்புக் கிரயம் என்ற கருத்துச் சரியானதாகத் தோன்றினாலும், உற்பத்தியைப் பண்ணை முறையில் மதிப்பீடு செய்யவேண்டும் என்ற கூற்றுப் பொருந்தாததாகும். நடப்புப் பண்ணை விலையைவிட அதிகமான விலையில் உற்பத்தியை மதிப்பீடு செய்வதே பொருத்தமுடையது என்று கூறத் தோன்றுகிறது.

இங்கு நாம் மற்றொரு விஷயத்தையும் கவனிக்கவேண்டியுள்ளது. இவ் விஷயம் மானசீகமானது (abstract) என்றபோதிலும் இதை ஆராய்வது பயனுள்ளதேயாகும். நெடுந்தொலைவில் வெளிப் பிரதேசங்களுடன் தொடர்பு அதிகமில்லாத கிராமம் ஒன்றில் மக்கள் யாவரும் ஜீவனத்திற்கென்றே உணவு உற்பத்தி செய்துவருகின்றனர் என்று வைத்துக்கொள்வோம். இக் கிராமத்திலுள்ள மக்கள் தாம் உற்பத்தி செய்துவருகின்ற பொருள்களை அண்மையிலுள்ள மார்க்கெட்டில் விற்க முனைந்தால்கூட, இந்த மார்க்கெட்டில் நிலவக்கூடிய விலையைவிட இவர்கள் போக்குவரத்துக்கென்று அதிகமான பணத்தைச் செலவிடவேண்டியது இருக்கலாம். எனவே, இவர்களின் ஜீவன மட்ட உற்பத்தியை மார்க்கெட் விலையில் கணக்கிட்டால், இவர்கட்கு எதிர்மறை வருமானம் (negative income) கிடைத்து வருவதாக நாம் கருத வேண்டும். மக்கள் யாவரும் ஜீவனத்திற்கே உற்பத்தி செய்துகொண்டு எதிர்மறை வருமானம் பெற்று வரக்கூடிய கிராமம் கற்பனை உலகத்தில் இருக்கமுடியுமேயன்றி நடைமுறை உலகத்தில் இதுபோன்ற கிராமத்தைக் காணமுடியாது என்பது உண்மையேயாயினும், வேறு சில அலுவல்களைப் பொறுத்தவரையில் இதுபோன்ற நிலைகளை நாம் நடைமுறை உலகத்தில் காண இயலும். கிராமப் புறங்களில் கிணறுகளிலிருந்து இலவசமாகக் குடும்பத்திற்கென்று தண்ணீர் எடுத்துச் செல்வதை இந் நாடுகளில் காணலாம். இதுபோன்ற கிராமம் ஒன்றிலிருந்து, சில மைல் தொலைவிலுள்ள நகரத்தில் ஒரு குடம் தண்ணீர் $\frac{1}{2}$ பென்சுக்கு விற்பனையாகிறது என்றும், இந்த நகரத்திற்கு இக் கிராமத்திலிருந்து விற்பனை செய்வதற்கென்று தண்ணீரை எடுத்துச் சென்றால் ஒரு குடம் தண்ணீருக்கான போக்குவரவுச் செலவுமட்டும் 6 பென்சாக இருக்கும் என்றும் வைத்துக்கொள்வோம். இவ்வாறான நிலையில் இந்தக் கிராமத்தில்

கிணற்றிலிருந்து எடுக்கப்படுகின்ற ஒவ்வொரு குடம் தண்ணீருக்காகவும் தேசிய உற்பத்தியில் $5\frac{1}{2}$ பென்சைக் குறைக்கவேண்டும் என்று கூற முடியுமா? கூற முடியாது. ஜீவன மட்ட உற்பத்தியைப் பண்ணை விலையில் மதிப்பீடு செய்யாது வேறு முறையில் மதிப்பீடு செய்தால் விவசாயி தனக்கென்று பயன்படுத்தும் உணவுப்பொருள்களை அதிக விலையிலும் விற்பனைக்கென்று ஒதுக்கி வைத்திருக்கக் கூடிய உணவுப் பொருள்களைக் குறைந்த விலையிலும் மதிப்பிட வேண்டியிருக்கும் என்பது உண்மைதான். இருப்பினும், எதிர்மறை வருமானம்போன்ற அபத்தமான கருத்துகளைவிட இவ்வாருன முரண்பாடுகள் ஏற்றுக்கொள்ளத் தக்கனவே என்று சொல்லத் தோன்றுகிறது.

எனவே, ஜீவன மட்ட உற்பத்தியின் உண்மையான மதிப்பைக் கண்டுகொள்வதற்கு, இவ்வுற்பத்தியை நடப்புப் பண்ணை விலையை விடச் சிறிது அதிகமான விலையிலேயே மதிப்பிட வேண்டும் என்று நாம் முடிவு கட்டலாம். இந்த அதிகமான விலையை எந்த அடிப்படையில் தீர்மானிப்பது என்பதே அடுத்து நாம் ஆராய வேண்டிய விஷயமாகும். பயன்பாட்டின் அடிப்படையில் சில்லறை விலையில் இவ்வுற்பத்தியை மதிப்பிடுவது சிறந்த வழியாக இருக்கக் கூடுமா என்பது குறித்து இங்கு ஆராய்வோம். ஜீவன மட்ட உற்பத்தியாளருக்கும் ஏனைய உற்பத்தியாளருக்கும் இடையேயுள்ள வேறுபாடு இதுதான்—ஏனைய உற்பத்தியாளர் மார்க்கெட்டில் தமது பொருள்களை விற்பனை செய்துவருகின்றனர்; ஆனால், ஜீவன மட்ட உற்பத்தியாளருக்கு மார்க்கெட் தேவையில்லை. இவர் தமக்குத்தாமே மார்க்கெட்டாகத் திகழுகின்ருர். ஏனெனில், தாம் உற்பத்தி செய்துள்ள பொருளை வேறு இடங்கட்கு எடுத்துச் செல்லவேண்டிய அவசியம் ஏதும் இவருக்கு இல்லை. எனவே, போக்குவரவு பகிர்வு ஆகியவற்றை ஒட்டி எழக்கூடிய செலவு எதுவும் இவருக்குக் கிடையாது. ஆகவே, உணவு உற்பத்தியில் வேலைப் பிரிப்பு (division of labour) முறையைக் கையாண்டு, உணவு உற்பத்திக்கென்றே சிலரைச் சிறப்புத் தேர்ச்சி (specialisation) பெற்றுவருவதற்கான ஏற்பாடுகளைச் செய்தால், உணவுப் பொருள்களை எடுத்துச் செல்வதற்கும், விநியோகம் செய்வதற்கும் போக்குவரவு சாதனங்கட்கான தேவைகள் அதிகரிக்கக்கூடும்.

சமுதாயத்தில் இதுபோன்ற மாற்றங்கள் நேருவதால் ஏற்படக்கூடிய அதிகமான போக்குவரவுத் தேவைகளின் மதிப்பையும்—இவை சமுதாயத்தின் தேவைகளை முன்பு இருந்ததைவிட அதிகமாக நிறைவேற்றுவிடினும்—வழக்கமாக தேசிய வருமானத்தைக் கணக்கிடும்பொழுது மொத்த உற்பத்தியில் சேர்த்துக்கொள்கின்றனர்.

மார்க்கெட் செம்மையற்றிருப்பதனுல் பலமுறை கொடுக்கப்படுகின்ற கட்டணங்கட்கான போக்குவரவையும் மொத்த உற்பத்தியில் சேர்த்துக்கொள்வதை இதற்குச் சான்ருகக் கூறலாம். போக்குவரவுத் தேவைகள் இல்லாத நாட்டில், தேசிய வருமானத்தில் போக்குவரவைச் சேர்க்க முடியாத நிலையில், கடைப்பிடிக்கத்தக்க முறை என்ன என்ற வினு எழுகின்றது. போக்குவரவைக் கணக்கிடாது விட்டால், பரிவர்த்தனைப் பொருளாதார அமைப்பிலுள்ள மக்களின் க்ஷேமநலத்திற்கும் ஜீவன மட்டப் பொருளாதார அமைப்பிலுள்ள மக்களின் க்ஷேமநலத்திற்கும் இடையே உள்ள வேறுபாடுகளை நாம் அதிகமாக மதிப்பிடவேண்டியது நேரும். அல்லது ஒரே நாட்டில் ஜீவனமட்டப் பகுதியிலுள்ள மக்களின் க்ஷேமநலத்திற்கும் பரிவர்த்தனை மட்டப் பகுதியில் உள்ள மக்களின் க்ஷேமநலத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடுகளை நாம் அதிகமாக மதிப்பிட வேண்டியது நேரும். எனவே, நம்முன் இப்போது மூன்று விஷயங்கள் உள்ளன. இவற்றில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். முதலாவதாக, பரிவர்த்தனைப் பொருளாதார அமைப்புகளில் உற்பத்தியை மதிப்பிடுவதற்கென்று வழக்கமாகக் கையாளப்படுகின்ற முறையைக் கையாளாது, தேவையற்ற போக்குவரவு பகிர்வு ஆகியவற்றை விடுத்து, உற்பத்தியை மதிப்பிடலாம். ஆனுல், இம் முறை நடைமுறையில் சாத்தியமானதன்று. எனவே, எஞ்சியுள்ள இரண்டில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஜீவன மட்ட விவசாயிகளின் தேவைகள் நாட்டிலுள்ள ஏனைய நபர்களின் தேவைகளைவிட வேறுபட்டவையல்ல என்று கொண்டு, ஜீவன மட்ட உற்பத்தியின் மதிப்பைச் சில்லறை விலையில் கணக்கிடலாம். அல்லது ஜீவன மட்ட விவசாயிகளின் தேவைகள் நாட்டிலுள்ள ஏனைய நபர்களின் தேவைகளைவிடக் குறைவானவை என்று கொண்டு, ஜீவன மட்ட உற்பத்தியின் மதிப்பைச் சில்லறை விலைக்குக் குறைவான விலையில் மதிப்பிடலாம்.

பல காரணங்களை முன்னிட்டு, இந்த இரண்டு முறைகளில்—அதாவது, சில்லறை விலையில் மதிப்பிடும் முறை அல்லது சில்லறை விலையைவிடக் குறைவான விலையில் மதிப்பிடும் முறை ஆகிய இரண்டு முறைகளில்—முதலாவது முறையே சிறந்தது என்று தோன்றுகிறது. ஒரு பகுதி ஏனைய பகுதிகளைவிடப் பெரிதும் வேறுபடுகின்ற நைஜீரியா போன்ற நாடுகளில் தனிப்பட்ட மனிதர்களின் வருமானங்களைக் கூட்டிக் கணக்கிடுவதென்பது சிரமமான காரியம் என்பதில் ஐயமில்லை. எனவே, நாட்டின் பல்வேறு பகுதிகளிலுள்ள மக்களின் தேவையை ஒரு பொதுவான அடிப்படையில் கணக்கிடுவதே பயனுள்ளதாகும். நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் ஜீவன மட்ட உற்பத்தியின் பங்கும் பரிவர்த்தனைக்கான உற்பத்தியின்

பங்கும் ஏனைய பகுதிகளில் இருப்பதைவிட மாறுபட்டிருக்கின்ற நிலையில், இதுபோன்ற முறையைக் கையாளாவிட்டால், பல பிரதேசங்களின் வருமானங்களை ஒப்பிட்டு நோக்குவது பயனற்ற செயலாக முடியும். இதேபோல, நைஜீரியா பிரிட்டன் ஆகிய நாடுகட்கிடையே சீதோஷ்ண நிலை உடைத் தேவை ஆகியவற்றில் உள்ள வேறுபாடுகளைக் கணக்கிட்டுக்கொள்ளாது, இவ் விரண்டு நாடுகளின் வருமானங்களை ஒப்பிட்டுநோக்க முயலுவதும் தவருகும். இதுபோன்ற தவறுகளை அகற்றுமுகத்தான் அடிக்குறிப்பில் விளக்கம் தர முயலுவதைவிடப் புத்தகத்தின் முக்கிய பகுதியிலேயே விளக்கம் தருவதுதான் சிறப்பானதாகும்.

எனவே, நாம் இங்கு ஏழுப்பிய முக்கியப் பிரச்சினையைப்பற்றிக் கீழ்க்கண்டவாறு முடிவுகட்டலாம். நடப்புப் பண்ணைவிலையில் ஜீவன மட்ட உற்பத்தியை மதிப்பிட்டால், உற்பத்திக் காரணிகட்கான செலவுகளைத் திருப்திகரமான முறையில் கணக்கிட முடியாது. இதற்கு மாருக, சில்லறை விலைகளில் உற்பத்தியைக் கணக்கிடுவதனல், நாட்டின் பல்வேறு பகுதியிலுள்ள மக்களின் பல்வேறுவிதமான க்ஷேமநலங்களைச் சிறந்த முறையில் உணர்த்த முடியும். இவ் விவாதத்தை முடிவுக்குக் கொண்டுவருவதற்கு முன் புள்ளிவிவரம் பற்றிய குறிப்பு ஒன்றைக் கவனிக்கவேண்டியுள்ளது. பின்தங்கிய நாடுகளில் மொத்த உற்பத்தியில் எவ்வளவு பகுதி விற்பனை செய்வதற்கென்று மார்க்கெட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டது என்பதையும் மொத்த உற்பத்தியில் எவ்வளவு பகுதி மார்க்கெட்டில் வெற்றிகரமாக விற்பனை செய்யப்பட்டது என்பதையும் கண்டுபிடிப்பதற்கான வழி ஏதுமில்லை. ஏனெனில், மார்க்கெட்டிற்கு விற்பனை செய்வதற்கென்று எடுத்துச்செல்லப்படுகின்ற பொருள்களில் பெரும் பகுதி விற்பனை ஆகாமல் விற்பனையாளராலேயே அவருடைய நுகர்வுக்குப் பயன்படுத்தப்படுகின்றது. அல்லது பெரும் பகுதி விற்பனையாகாமல் பண்ணைகட்கே மீண்டும் எடுத்துச்செல்லப்படுகின்றது. மேலும், சில்லறை விலையிலிருந்து பண்ணை விலையைக் கணக்கிடுவதற்கு எவ் வெவற்றிற்காக எவ்வளவு தொகையைச் சில்லறை விலையிலிருந்து கழிக்கவேண்டும் என்ற விஷயத்தைப் பொறுத்தவரையில் நாடு முழுவதற்கும் பொருந்தக்கூடிய ஒரு பொதுவான முறை இருப்பதாகத் தெரியவில்லை.

இதுகாறும், ஜீவன மட்ட உற்பத்தியின் மதிப்பைச் சில்லறை விலையின் அடிப்படையில் கணக்கிடுவதா அல்லது பண்ணை விலையின் அடிப்படையில் கணக்கிடுவதா என்ற முக்கியப் பிரச்சினையை ஆராய்ந்தோம். இம் முக்கிய பிரச்சினையோடு தொடர்புடைய வேறு சில சிறிய விஷயங்களை இங்கு இனி ஆராய்வோம். முதலா

வதாக, மார்க்கெட் விலையுடன் போக்குவரவு செலவுகளையும் சேர்த்துக்கொண்டு, இந்த விலையில் ஜீவன மட்ட உற்பத்தியை மதிப்பிட வேண்டும்; இதுவே சரியான முறையாகும்; ஏனெனில், தாம் உற்பத்தி செய்வதை மார்க்கெட்டில் விற்பனை செய்யாது தம்முடைய ஜீவனத்திற்கென்று பயன்படுத்துவதால் இம் மக்களால் போக்குவரவுசெலவைச் சேமிக்க முடிகின்றது—என்று சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர். இது தவறான கருத்தாகும். நடப்புப் பண்ணைவிலையில் ஜீவன மட்ட உற்பத்தியின் மதிப்பைக் கணக்கிடுவது தவறு என்பதற்கு என்ன காரணம் கொடுத்துள்ளோமோ அதே காரணத்தை முன்னிட்டு இக் கருத்தும் தவறானது என்று கொள்ளவேண்டும். மார்க்கெட்டிலிருந்தும் தமக்குத் தேவையான பொருள்களை வாங்க வேண்டிய நிலை நேர்ந்தால், மக்கள் தாம் முன்பு ஜீவன உற்பத்தியை எந்த அளவுக்கு நம்பி இருந்தார்களோ, அதே அளவுக்குத் தற்போதும் நம்பி இருப்பர் என்று கூறுவது பொருந்தாததாகும். எனவே, இக் கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. இரண்டாவதாக, ஜீவனத்திற்கென்று பயன்படுத்தப்பட்டுவருகின்ற ஒரு குறிப்பிட்ட அளவு (குறிப்பிட்ட தரத்தைச் சேர்ந்த) பொருளைப் பண்ணையில் உற்பத்தி செய்யாது வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்தால் எவ்வளவு செலவாகுமோ (பொருள்களின் விலை, போக்குவரவுச் செலவு, விநியோகச் செலவு ஆகியவற்றையும் கணக்கிட்டுக் கொள்ளவேண்டும்) அந்தச் செலவே, இப் பொருளைப் பண்ணையில் உற்பத்தி செய்தால் ஆகக்கூடிய செலவு என்று கணக்கிட்டுக் கொள்ளவேண்டும் என்று வேறு சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர்.[1] இக் கருத்தானது, இழந்த வாய்ப்புக் கிரயத்தின் அடிப்படையில் உற்பத்தியின் மதிப்பைக் கணக்கிடவேண்டும் என்ற கருத்தின் மறுபிரதியேயாகும். நைஜீரிய நாட்டு மக்கள் தங்களுடைய நுகர்வுத் தேவைகட்குரிய பொருள்களைத் தாங்களே உற்பத்தி செய்யாது, ஏற்றுமதிக்கென்று பொருள்களை உற்பத்திசெய்து, ஏற்றுமதிகளின் மூலம் கிடைக்கக்கூடிய பணத்தைக் கொண்டு தமக்குத் தேவையான உணவுப் பொருள்களை உலக நாடுகளிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டும் என்று கூறுவதை இக் கருத்து ஒக்கும். இந்த ஏற்பாட்டின்கீழ் நைஜீரியா வேர்க்கடலையை ஏற்றுமதிக்கென்று உற்பத்திசெய்து உணவுப்பொருள்களை உலக நாடுகளிடமிருந்து வாங்க முயலுகின்றது என்று கொள்வோம். உணவு வேர்க்கடலை ஆகிய இரு பண்டங்கட்கிடையேயுள்ள வாணிப மாற்றத்தில் (terms of trade) நேரக்கூடிய மாறுதல்களை நாம் கணக்கிட்டுக் கொண்டோம் என்றும் கொள்வோம். இவ்வாறான நிலையில் ஒரு குறிப்பிட்ட மதிப்புள்ள ஜீவன மட்ட உணவுப் பொருளை உற்பத்தி

[1] H. S. Booker, 'Economica' (1948) p. 319 ஐப் பார்க்கவும்.

செய்வதற்கும் இதே மதிப்புள்ள வேர்க்கடலையை உற்பத்திசெய்வதற்கும் ஒரே அளவு மனித உழைப்பு மணிகள்தாம் (man-hours) தேவைப்படுமா? வேர்க்கடலை உற்பத்திக்கு உணவுப் பொருள் உற்பத்தியைவிட அதிக அளவு மனித உழைப்பு மணிகள் தேவைப்படுமா? அல்லது குறைந்த அளவு மனித உழைப்பு மணிகள் தேவைப்படுமா? என்பனபோன்ற வினுக்களுக்கு விடையிறுக்க வேண்டியதிருக்கும். இவ் வினுக்களுக்கு விடைகாணப் புள்ளிவிவரங்களின் துணையை நாடுவதென்பது சாத்தியமில்லை. வேர்க்கடலையைத் துறைமுகங்கட்கு எடுத்துச் செல்வதை ஒட்டி போக்குவரவுச் செலவும் வேறு செலவுகளும் நேரக்கூடும். இதேபோல, இறக்குமதி செய்யப்பட்ட உணவுப் பொருள்களை உள் நாட்டிற்குள் எடுத்துச்செல்வதை ஒட்டியும் இவ்வாருன செலவுகள் நேரக்கூடும். இவ்வாருன சூழ்நிலையில் குறுங்காலத்தில்(நம்முடைய விவாதத்திற்குப் பொருத்தமுடையது குறுங்காலமேயாகும்) ஜீவன மட்ட உணவு உற்பத்திக்கு எவ்வளவு மனித உழைப்பு மணிகள் செலவிடப்படுகின்றனவோ அவற்றைச் செலவிட்டு ஏற்றுமதிக்கென்று வேர்க்கடலையை உற்பத்திசெய்யும்பொழுது, இந்த அளவு மனித உழைப்பு மணிகட்கு ஈடான அளவு உணவுப்பொருள்களை வெளிநாடுகளிலிருந்து பெற முடியுமா என்பது ஐயப்பாட்டிற்குரிய ஒன்றேயாகும்.

மூன்ருவதாக, சில்லறை விலையின் அடிப்படையில் ஜீவனமட்ட உற்பத்தியைக் கணக்கிட்டால், எந்தச் சில்லறை விலையை நாம் தேர்ந்தெடுத்துக்கொள்வது என்ற பிரச்சினை எழுகிறது. இப் பிரச்சினைக்குத் தீர்வுகாண நாம் இரண்டு விஷயங்களைக் கவனிக்க வேண்டியுள்ளது. முதலாவதாக, வினைமுடிந்த பொருள்கள் (finished goods) அல்லது பதம்செய்யப்பட்ட பொருள்கள் ஆகியவற்றின் விலைகளை நாம் அறிய வேண்டும். இவற்றை அறிந்தால்தான் எவ்வளவு செலவுச் சிக்கனம் நேர்ந்துள்ளது என்பதை நாம் அறிய முடியும். மேலும், இவ்வாறு செய்தால்தான் முந்திய பகுதியில் குடும்பப் பணிகள் எந்த அடிப்படையில் மதிப்பிடப்படவேண்டும் என்று நாம் விளக்கியுள்ள கருத்துடன் பொருந்தக்கூடியதாக இருக்கும். இரண்டாவதாக, கிராமத்திற்கு அருகே பத்து மைல்களுக்குள் இருக்கக்கூடிய மார்க்கெட்டில் நிலவுகின்ற சில்லறை விலையைத் தேர்ந்தெடுத்துக்கொள்வதா அல்லது நூறு மைல்கட்கு அப்பால் பெரிய நகரத்திலுள்ள மார்க்கெட்டில் நிலவக்கூடிய சில்லறை விலையைத் தேர்ந்தெடுத்துக்கொள்வதா என்ற வினுவுக்கு விடையிறுக்கவேண்டும். தமக்குத் தேவையான பொருள்களைத் தாமே உற்பத்திசெய்துகொள்ளாது, விலைக்கு வாங்கக்கூடிய நிலையில், விவசாயிகள் எந்த மார்க்கெட்டிலிருந்து பொருள்களை விலைக்கு வாங்குவரோ அந்த மார்க்கெட்டில் நிலவக்கூடிய சில்லறை

விலையையே நாம் தேர்ந்தெடுத்துக்கொள்ளவேண்டும். எனவே, கிராமத்திற்கு அருகாமையில் பத்து மைல்களுக்குள் உள்ள மார்க்கெட்டில் நிலவக்கூடிய சில்லறை விலையையே நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும் என்பது தெளிவாகும்.

எனவே, ஜீவன மட்ட உற்பத்தியின் மதிப்பைச் சில்லறை விலையின் அடிப்படையில்தான் நாம் கணக்கிடவேண்டும். இதற்கு ஆதரவாகக் கோட்பாட்டு ரீதியாகவும் நடைமுறையை ஒட்டியும் நாம் பல கருத்துகள் தெரிவித்தோம். மேலும், சில்லறை விலையின் அடிப்படையில் ஜீவன மட்ட உற்பத்தியின் மதிப்பைக் கணக்கிட முயலும்போது, அண்மையிலுள்ள மார்க்கெட்டில் நிலவிவருகின்ற சில்லறை விலையையே நாம் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும்.[1]

## பிற்சேர்க்கை II

### செலவீட்டு வரியும் சேமிப்பும்[2]

('The Economic Journal' என்ற சஞ்சிகையில் செப்டெம்பர் 1959-ல் பிரசுரமானது.)

திரு. கால்டார் அவர்கள் தமது 'செலவீட்டு வரி'[3] என்ற புத்தகத்தை வெளியிட்ட நாள்தொட்டு தனியாரின் வருமானத்தைவிடச் செலவை வரிவிதிப்பிற்கு உள்ளாக்குவது எத்துணைச் சிறப்புடைத்து என்ற விஷயம் குறித்துப் பலரும் தங்கள் கருத்தைத் தெரிவித்துள்ளனர். இப் புத்தகத்தைப் பலரும் பல சஞ்சிகைகளில்[4] விமர்சனம் செய்துள்ளனர். இது தவிர, இவ் வரி சம்பந்தமான சில குறிப்பிடத்தக்க விஷயங்களைப்பற்றியும் தனித்தனியே பலர் பல கட்டுரைகள்

[1] நாம் மேலே பிற்சேர்க்கையில் கொடுத்துள்ள விவாதங்களைத் திரு. ஓலஃப்லின் (C.O'Loughlin 'The Pattern of the Fiji Economy,' Suva, Fiji, 1956, p. 12.) மறுத்துரைத்துள்ளார். விவசாயி தான் உற்பத்தி செய்துள்ள பொருளை நுகர்விற்குப் பயன்படுத்துவதில் தேர்வுக்கு (choice) இடமே இல்லை என்றும் ரொக்கம் கொடுத்துப் பொருள்களை விலக்கு வாங்குவதில் தேர்வுக்கு இடமுள்ளது என்றும் கூறி நம் விவாதங்களை மறுத்துரைத்துள்ளார். இவர் சில விஷயங்களைக் கவனிக்கத் தவறிவிட்டார் என்று எண்ணுகிறோம். ஜீவனத்திற்காக எந்த அளவுக்கு உற்பத்தி செய்வது, ரொக்கத்திற்கு விற்பனை செய்வதற்காக எந்த அளவுக்கு உற்பத்தி செய்வது என்பதைத் தீர்மானிப்பதில் தேர்வுக்கு இடம் உள்ளது. மேலும், ஜீவனப் பொருள்கள் பலவற்றில் எவ்வெப் பொருள்களை உற்பத்தி செய்வது? அவை ஒவ்வொன்றிற்கும் எவ்வளவு காலத்தையும் ஆற்றலையும் செலவிடுவது என்பதைத் தீர்மானிப்பதிலும் தேர்வுக்கு இடம் உள்ளது.

[2] சர் டென்னிஸ் ராபர்ட்சன், மில்டன் பிரைட்மேன், ஏ. டி. ராய் ஆகியோருடன் இந்த விஷயம் குறித்து நாம் நடத்திய விவாதத்தால் பெரிதும் பயனடைந்தோம் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேம்.

[3] An Expenditure Tax, Allen and Unwin, London, 1955.

[4] e. g. R. A. Musgrave in 'American Economic Review,' March 1957; I. M. D. Little in 'Economic Journal,' March 1956; A. R. Prest in 'Lloyd's Bank Review,' October 1956.

எழுதியுள்ளனர்.[1] வரலாற்று அடிப்படையில் நோக்கும்பொழுது, செலவீட்டு வரியின் மையக் கருத்து யாது என்பது குறித்து இங்கு நாம் விவாதிக்கத் தீர்மானித்துள்ளோம். அதாவது, வருமான வரிக்குப் பதிலாகச் செவீட்டு வரி விதிக்கப்பெற்ருல் தனியாரின் சேமிப்பு எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பது குறித்து ஈண்டு ஆராயத் தீர்மானித்துள்ளோம்.

இங்கு நம் ஆராய்ச்சிக்கு ஏற்ற வகையில் சில எடுகோள்களை அமைத்துக்கொள்வோம். ஒரு குறிப்பிட்ட மனிதர் $O$ என்ற ஆண்டில் ஒரே ஒரு தடவையில் ஒரு குறிப்பிட்ட பணத்தைச் சேமிக்கின்ருர் என்று வைத்துக்கொள்வோம். இச் சேமிப்பிற்கான வட்டி ரொக்கமாக வழங்கப்படுகின்றது என்றும், ஆண்டுதோறும் இந்த வட்டியானது 100% என்ற (ஆண்டிற்கான மொத்த) வீதத்தில் வழங்கப்படுகின்றது என்றும், இவ்வாறு வட்டியினின்றும் ஒவ்வோர் ஆண்டும் கிடைக்கக்கூடிய வருமானமானது அந்தந்த ஆண்டிலேயே செலவிடப்படுகின்றது என்றும் வைத்துக்கொள்வோம். மேலும், $n$ ஆண்டுகள் முடிவடைந்ததும் அசல் தொகையானது (principal) நுகர்வுப்பொருள்களை விலைக்கு வாங்குவதற்காகச் செலவிடப்படுகின்றது என்றும் வைத்துக்கொள்வோம்.

100 $x$% என்ற வீதத்தில் விதிக்கப்பெறுகின்ற வீதாசார வருமான வரியின்கீழ் (proportional income-tax), $O$ என்ற ஆண்டில், £ 1 என்ற வருமானத்தில், எதையும் சேமிக்காவிட்டால் £ $x$ என்ற அளவு தொகையை வரியாகச் செலுத்தவேண்டியிருக்கும் என்று பேராசிரியர் பிகு கணக்கிட்டுக் காட்டியுள்ளார்.[2] இவ் வருமானத்தை நுகர்விற்கென்று $n$ ஆண்டுவரைப் பயன்படுத்தவில்லை என்று வைத்துக்கொண்டால், இவ் வருமானத்தின்மீது செலுத்தவேண்டிய மொத்த வரியின் தற்கால மதிப்பு £ $\left[ x + x(1-x) \left\{ 1 - \frac{1}{(1+r)^n} \right\} \right]$ ஆக இருக்கும். இதை வேறு ஒரு விதமாகவும் கூறலாம். நுகர்வுக்கென்று செலவிடப்படுகின்ற நிகரத் தொகையையும் சேமித்து வைக்கப்படுகின்ற நிகரத் தொகையையும் நாம் கணக்கிட்டுக் கொண்டால், £ 1 என்ற தொகையைத் தற்சமயம் சேமித்தால் தற்காலத்தில் £ $x \left( 1 - \frac{1}{(1+r)^n} \right)$ என்ற[3] மதிப்புள்ள தொகையை எதிர்

[1] e. g. E. Cary Brown, 'Mr. Kaldor on Taxation and Risk-Bearing' 'Review of Economic Studies,' October 1957.

[2] 'A Study in Public Finance' (London, 3rd Edition, Macmillan) Chapter X ஐப் பார்க்கவும்.

[3] வருமான வரியைப் பொறுத்தவரையில் பொருத்தமான கழிவு வீதம் நிகர இலாப வீதமாக இருக்கமுடியுமே தவிர மொத்த வீதமாக இருக்கமுடியாது.

காலத்தில் வரிசையாகச் செலுத்த வேண்டியதிருக்கும். ஆனால், £1 என்ற தொகையைத் தற்சமயம் நுகர்வுக்கென்று பயன்படுத்தினால் எதிர்காலத்தில் இந்தத் தொகைக்கு எவ்விதமான வரியும் செலுத்த வேண்டியிராது.

செலவின்மீது விதிக்கப்பெறுகின்ற வரிவீதமானது வருமான வரிவீதத்திற்குச் சமமானது என்று வைத்துக்கொண்டால், செலவீட்டு வரியானது $100e\%$ என்ற வீதத்தில் விதிக்கப்பெற்றுவரும். இந்நிலையில் $e = \frac{x}{1-x}$ ஆக இருக்கும். இதனால், $O$ ஆண்டில் நுகர்வுக்கென்று செலவிடப்படுகின்ற £ 1 என்ற தொகையின்மீது £ $e$ என்ற தொகை வரியாக வரிக்கப்பெறும். $O$ ஆண்டில் சேமிக்கப்பெற்று $n$ ஆண்டில் செலவிடப்பட்ட £ 1 என்ற தொகையின்மீது £$\left[\frac{e}{(1+r)n} + e\left(1 - \frac{1}{(1+r)n}\right)\right]$ என்ற தற்கால மதிப்பு உடைய தொகையை எதிர்காலத்தில் வரியாகச் செலுத்தவேண்டியிருக்கும். அதாவது, எதிர்காலத்தில் £ $e$ என்ற தொகையை வரியாகச் செலுத்தவேண்டியிருக்கும். எனவே, £ 1 என்ற தொகை சேமிக்கப்பட்டாலும் அல்லது செலவிடப்பட்டாலும் ஒரே தொகையை (தற்காலத்தில் மதிப்பீடு செய்யப்பட்ட தொகையை) வரியாகச் செலுத்தவேண்டியுள்ளது. $O$ ஆண்டில் செலவிடப்பட்ட தொகையின் அளவு ஏதாக இருப்பினும் அல்லது $n$ ஆண்டிற்குள் சேமிக்கப்பட்ட தொகையின் அளவு ஏதாக இருப்பினும், செலவீட்டு வரியைப் பொறுத்தவரையில், வரித் தொகைக்கும் (தற்கால மதிப்பாகும்) வருமானத்திற்கும் இடையேயுள்ள விகிதம் ஒரே மாதிரியாகவே இருக்கும்.

எனவே, வருமானவரி விதத்திற்கு இணையான வரிவீதத்தை உடைய செலவீட்டு வரியை வருமானவரிக்குப் பதில் விதித்தால், சேமிப்பு அதிகரிக்கும் என்பது தெளிவாகும். குறிப்பிட்ட நடைமுறை நுகர்விற்கு எவ்வளவு செலவிட வேண்டியிருக்குமோ அதைவிட எதிர்கால நுகர்வுக்குக் (இது $x$, $r$, $n$ ஆகியவற்றைப் பொறுத்தது) குறைவாகவே செலவிட வேண்டியதிருக்கும் என்பதே இதற்கான

அதாவது, $100r\ (1-x)\%$ ஆக இருக்க முடியுமே தவிர $100\%r$ ஆக இருக்க முடியாது என்று சிலர் விவாதிக்கலாம். இவ்வாறே கணக்கிட்டால், தாற்காலிகமாக நுகர்வுக்கு என்று பயன்படுத்தப்பெறாத £ 1 என்ற வருமானத்தின்மீது செலுத்த வேண்டிய வரியின் தற்கால மதிப்பானது £$\left[x + x\left\{1 - \frac{1}{(1+r(1-x))n}\right\}\right]$ ஆக இருக்கும், இவ்வாறு நாம் திருத்திக் கணக்கிட்டுக்கொண்டபோதிலும் நம்முடைய பொதுவான விவாதம் எவ்விதத்திலும் பாதிக்கப்படாது. அவசியம் நேரும்பொழுது இத் திருத்தத்தையும் நாம் கணக்கிட்டுக்கொள்வோம்.

காரணமாகும். எனவே, செலவீட்டு வரியால் சேமிப்பு எந்த அளவுக்கு அதிகரிக்கக்கூடும் என்பது, எதிர்கால நுகர்விற்கான செலவு எந்த அளவுக்குக் குறைக்கப்படும் என்பதையும் மக்கள் இம் மாற்றங்களை எவ்வாறு ஏற்றுக்கொள்கின்றனர் என்பதையும் பொறுத்த ஒன்ருகும்.[1]

எதிர்கால வரிவீதங்களைப்பற்றிய உறுதியற்ற நிலை ஏற்படாத வரைக்கும் இதுபோன்ற விளைவுகளே ஏற்படும். வருமானவரி வீதங்கள் எதிர்காலத்தில் அதிகரித்தால், முதலீட்டுக்கென்று பயன் படக்கூடிய வருமானத்தின்மீது முன்பிருந்ததைவிட அதிக வரி விதிப்பதை இது ஒக்கும். செலவீட்டு வரிவீதங்கள் எதிர்காலத்தில் அதிகரித்தால், முதலீட்டுக்கென்று ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள வருமானத்தின்மீது முன்பு இருந்ததைவிட அதிகவரி விதிப்பதையும் *n* ஆண்டில் செலவிடப்படுகின்ற அசல் தொகையின்மீது முன்பு இருந்ததைவிட அதிக வரி விதிப்பதையும் இது ஒக்கும். *O* ஆண்டில் இருப்பதைவிட எதிர்காலத்தில் நேரக்கூடிய வரிவீத உயர்வு தாழ்வு ஆகியவற்றிற்கு ஒரேமாதிரியான நிகழுமை (probability) வழங்கலாமே என்று சொல்லத் தோன்றலாம். இவ்வாறு செய்வதனல் இந்த விஷயத்திற்குத் தீர்வு கண்டுவிடலாம் என்று கொள்வதற்கில்லை. ஏனெனில், செலவீட்டு வரியானது எதிர்காலத்தில் சேமிப்பை ஊக்குவிக்கக்கூடியது என்பது உண்மையே யாயினும், எதிர்காலத்தில் ஆபத்துகள் (risks) நேரக்கூடும் என்று கோட்பாடு உரைப்பதையும் நாம் மறந்துவிடலாகாது. எனவே, எதிர்காலத்தில் நேரக்கூடிய வரிவீத மாற்றங்களால், சேமிப்பானது, எந்த அளவுக்கு அதிகரிக்கக்கூடும் என்று கணக்கிடும்போது, ஆபத்துகட்கு ஈடுசெய்யும் வகையில், ஒரு குறிப்பிட்ட தொகையைச் சேமிப்பிலிருந்து கழித்துக்கொள்ளவேண்டும். இவ்வாறு கழித்துக்கொள்ளவேண்டிய தொகை எவ்வளவாக இருக்க வேண்டும்? இவ்வாறு கழிப்பதால் எந்த அளவுக்குச் சேமிப்புக் குறையலாம்? என்ற விஷயங்களைப் பற்றி நாம் உறுதியாக ஏதும் கூற முடியாது. இவற்றை அனுமானித்தே அறிந்துகொள்ளவேண்டும்.

ஒரே விதத்தில் விதிக்கப்பெறுகின்ற வருமானவரி செலவீட்டு வரி ஆகியவற்றை நாம் இதுகாறும் ஒப்புநோக்கினேம். இதற்கு மாருக $e = \frac{x}{1-x}$ க்குச் சமம் என்று கொண்டால், சேமிப்பானது நேர் நிலையினதாக (positive) இருக்கும்பட்சத்தில் (சமுதாயப் முழு

1. வட்டி வீதங்களைப் பொறுத்தவரையில், சேமிப்பிற்கான அளிப்புக் கோடானது (supply curve), இடது பக்கமிருந்து வலது பக்கம் சரிந்து செல்லக் கூடிய நிலையை இங்கு நாம் கணக்கிட்டுக்கொள்ளவில்லை.

வதற்கும் சாதாரணமாக சேமிப்பானது இவ்வாறே இருக்கும்), செலவீட்டு வரியினின்றும் அரசாங்கத்திற்குக் கிடைக்கக்கூடிய வருவாயானது வருமான வரியினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயைவிடக் குறைவாகவே இருக்கும். இவ்வாறன்றி இரண்டு வரிகளினின்றும் ஒரே அளவு வருவாய்[1] கிடைப்பதற்கான ஏற்பாடு செய்ய விரும்பினால் செலவீட்டு வரியின் வீதத்தை $100e'\%$ ஆக மாற்றி அமைக்கவேண்டும். இவ்வாறு செய்தால் $e' = \frac{x}{c(1-x)}$ ஆக இருக்கும். இதில் $c$ யானது, செலவீட்டு வரியைப் பொறுத்த வரையில், தனியார் வருமானத்தில் நுகர்விற்கென்று செலவிடப்படுகின்ற பகுதியைக் குறிக்கின்றது. (வருமான வரியைப் பொறுத்த வரையில் $c$ யானது, வரி செலுத்தியபின் எஞ்சியிருக்கக்கூடிய வருமானத்தைக் குறிக்கின்றது.) இப்பொழுதும் £ 1 என்ற தொகையைச் சேமிக்கக்கூடிய நபரும் செலவிடக்கூடிய நபரும் ஒரே அளவில் செலவீட்டு வரியே கொடுக்கவேண்டியிருக்கும். இத் தொகை முன்பு இருந்ததுபோல £$e$ ஆக இருக்காது; ஆனால், £$e'$ ஆக இருக்கும். $O$ ஆண்டில் $e$ நிலையைவிட $e'$ நிலையிலேயே அரசாங்கம் அதிகமான வருவாயைச் செலவீட்டு வரியின்மூலம் ஈட்டமுடியும். எனவே, $e$ நிலையைவிட $e'$ நிலையில் தனியார் துறையினரிடம், வரிசெலுத்தியதுபோக எஞ்சி இருக்கக்கூடிய வருவாய் மிகக் குறைவானதாக இருக்கும். எனவே, $e$ நிலையைவிட $e'$ நிலையில் நுகர்வும் சேமிப்பும் குறைவாக இருக்கக்கூடும். எனினும், $e'$ நிலையில், $x$ நிலையில் இருக்கக்கூடியதைவிட, சேமிப்பானது அதிகமாகவே இருக்கும்.

இங்கு நாம் மற்றும் ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டியுள்ளது. வருமானத்தில் $100x\%$ என்று அமைந்திருந்த வரித் தொகையானது செலவில் $100e'\%$ என்று மாறி அமைவதனால், தனியாரின் சேமிப்பு எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பதானது $x, c, r, n$ ஆகியவற்றையும் தனிப்பட்ட நபர் இம் மாற்றங்களை எவ்வாறு

[1] வருமானவரி செலவீட்டுவரி ஆகியவற்றிலிருந்து ஒரே அளவினதான வருவாய் கிடைக்கவேண்டும் என்பது அவசியமில்லை; ஏனெனில், செலவீட்டு வரியால் தனியார் சேமிப்பு அதிகரிப்பதானது, அரசாங்கத்தின் உபரி வருவாய் குறைவாக அமையக்கூடியதை ஈடுகட்டிவிடும், அல்லது அரசாங்கத்திற்கு அதிக அளவு பற்றாக் குறை நேருவதை ஈடுகட்டிவிடும். இதனால் இரண்டு நிலைகளிலும் வேலை வாய்ப்பு தேசிய வருமானம் ஆகியவை ஒரே அளவினதாக அமைந்திருக்கும்—என்று சிலர் விவாதித்துள்ளனர். இது போன்றதோர் நிலையில், வருமானவரி செலவீட்டுவரி ஆகியவற்றால் சேமிப்பு எவ்வாறு பாதிக்கப்படலாம் என்று நாம் ஒப்புநோக்கிக் கொண்டிருக்கிறோம் என்று கூறுவது பொருந்தாது. இதற்கு மாறாக, வருமான வரி செலவீட்டுவரி ஆகியவை மட்டுமன்றி, அரசாங்க வருவாயில் சிறிது உபரி மட்டுமே கிடைப்பதாலோ அல்லது பெரிதும் பற்றாக்குறை நேர்வதாலோ நாட்டில் ஏற்படக்கூடிய பண அளிப்பு மாற்றங்களும், சேமிப்பை எவ்வாறு பாதிக்கக்கூடும் என்று நாம் ஆராய்ந்து கொண்டிருக்கிறோம் என்று கூறுவதே பொருத்தமுடையதாகும்.

ஏற்றுக்கொள்கிருர் என்பதையும் பொருத்ததாகும். தனிப்பட்ட நபரை விடுத்து சமுதாயத்தின்மீது நம் கண்ணேட்டத்தைச் செலுத்தினுல் வேறு சில விஷயங்களையும் நாம் கணக்கிட்டுக் கொள்ளவேண்டுவது அவசியமாகும். வரிக்கான அடிப்படை மாறி இருப்பதனுல், மக்களுடைய சராசரிச் சேமிப்பு, வருமானம் ஆகிய வற்றிற்கிடையேயுள்ள விகிதமானது அதிகமாக இருக்கக்கூடிய நபர்களைப் பொறுத்தவரையில், வரி கட்டியது போக எஞ்சியிருக்கக் கூடிய வருமானமானது முன்பு இருந்ததைவிட அதிகமாக இருக்கும்; ஆனுல், இவ் விகிதம் குறைவாக இருக்கக்கூடிய நபர்களைப் பொறுத்தவரையில், வரிசெலுத்தியதுபோக எஞ்சியிருக்கக் கூடிய வருமானமானது முன்பிருந்ததைவிடக் குறைவாக இருக்கும்.[1] இவ் விகிதம் அதிகமாக உள்ள நபர்கள் அதிகமான இறுதி நிலைச் சேமிப்பு நாட்டம் (marginal propensity to save) உடையவர் என்றும், இந்த விகிதம் குறைவாக உள்ள நபர்கள் குறைவான இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் உடையவர் என்றும் நாம் முடிவு கட்டிவிட முடியாது. ஏனெனில், உண்மை நிலை இதற்கு மாறுபட்டதாக இருக்கக்கூடும்.[2] எனவே, வரி மாற்றத்தால் சேமிப்பு எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பதை ஆராயும்பொழுது, ஏற்கெனவே நேர்ந்திருக்கக்கூடிய பதிலீட்டு விளைவுகளோடு இங்கு நாம் விளக்கியுள்ள வருமான விளைவுகளையும் சேர்த்து மதிப்பிட்டுப் பார்க்கவேண்டும்.

அடுத்து, நமது விவாதத்தில் சிறு மாற்றம் ஒன்றைச் செய்து நேரக்கூடிய விளைவுகளை ஆராய வேண்டியுள்ளது. வரி மாற்றத்தால் ஒரு குறிப்பிட்ட வருமானத்தினின்றும் செலுத்தப்படுகின்ற வரித்தொகை, செய்யப்படுகின்ற செலவு, சேமிப்பு ஆகியவை எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பதிலேயே நாம் இதுகாறும் கவனத்தைச் செலுத்தியிருந்தோம். வரி மாற்றத்தால் எக் காரணத்தை முன்னிட்டேனும் வருமானமும் பாதிக்கப்படலாமா என்பதை இனி நாம் ஆராய்வோம்.

இதற்காக, வரிமாற்றத்தால் மக்களின் வேலைசெய்யும் ஆர்வம் எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பதை நாம் முதற்கண் ஆராய வேண்டும். ஓய்வாக இருப்பது வேலையில் ஈடுபடுவது ஆகிய இரண்டில் எது ஒருவரை அதிகமாகக் கவரக்கூடும் என்பதானது, நடப்பு நுகர்வுக்கு எவ்வளவு செலவிடவேண்டியுள்ளது என்பதைப்

1. $x$ நிலையிலிருந்து $e$ நிலைக்கு மாறுவதற்கும் இது பொருந்தக்கூடியதாகும். எனினும், இவ்வாறு நேருவதைவிட $x$ நிலையிலிருந்து $e'$ நிலைக்கு மாற்றம் நேர்ந்தால் பெரிதும் விளைவுகள் நேரக்கூடும்.

2. A. Henderson, 'Direct v. Indirect Taxation,' Economic Journal, December 1948 ஐப் பார்க்கவும்.

பொறுத்ததாகும். நடப்பு நுகர்விற்கான செலவில், வருமான வரியின் (வருமானவரியின் பங்கு, வருமானத்தில் $100x\%$ ஆக இருக்கும்) பங்கைவிட செலவீட்டு வரியின் (செலவில் $100e'\%$ ஆக இருக்கும்) பங்கானது அதிகமாக இருக்கக்கூடுமாதலால், செலவீட்டு வரியின்கீழ் தனிப்பட்ட நபர் ஒருவர் முன்பு இருந்ததைவிடக் குறைவாகவே வேலை செய்வதில் உற்சாகத்துடன் ஈடுபடலாம். நம்முடைய இந்த முடிவானது, வருமானவரி செலுத்தியபின் எஞ்சியிருக்கக்கூடிய வருமானத்தில் நுகர்விற்கென்று செலவிடப்படுகின்ற பகுதியை உணர்த்துகின்ற $c$ ஐப் பொறுத்ததாகும். இது நிற்க. ஓய்வாக இருப்பது வேலையில் ஈடுபடுவது ஆகிய இரண்டில் எது ஒருவரை அதிகமாகக் கவரக்கூடும் என்பதானது, எதிர்கால நுகர்வுக்கு எவ்வளவு செலவிடவேண்டும் என்பதைப் பொறுத்தது என்று வைத்துக்கொண்டால் வேறு சில விஷயங்களையும் நாம் கவனிக்கவேண்டும். வருமானவரியைப் பொறுத்த வரையில், $n$ ஆண்டுகட்கான சேமிப்பு ஒரு குறிப்பிட்ட அளவினது என்று வைத்துக் கொண்டால், £ 1 தொகை மதிப்புள்ள நுகரப்படாத வருமானத்தின்மீது செலுத்தவேண்டிய வரியின் தற்கால மதிப்பு $£\left[x+x(1-x)\left\{1-\frac{1}{(1+r)^n}\right\}\right]$ ஆக இருக்கும். செலவீட்டு வரியைப் பொறுத்தவரையில் £ 1 தொகை மதிப்புள்ள சேமிப்பின்மீது செலுத்த வேண்டிய வரியின் தற்கால மதிப்பு $£\,e' = £\left(\frac{x}{c\,(1-x)}\right)$ ஆக இருக்கும். செலவீட்டு வரிமுறையைவிட வருமான வரிமுறையில் (அல்லது வருமான வரி முறையைவிட செலவீட்டுவரி முறையில்), இறுதிநிலையில், எதிர்கால நுகர்வைவிட ஓய்வே மக்களைக் கவரக்கூடியதாக இருக்கும் என்றோ அல்லது ஓய்வைவிட எதிர்கால நுகர்வே மக்களைக் கவரக்கூடியதாக இருக்கும் என்றோ உறுதியாக நாம் ஏதும் கூறமுடியாது. இது $c$, $r$, $n$, $x$ ஆகியவற்றைப் பொறுத்ததாகும். எனினும், செலவீட்டுவரியைப் பொறுத்தவரையில், எதிர்கால நுகர்வு நடப்பு நுகர்வு ஆகியவற்றைவிட, ஓய்வே மக்களைப் பெரிதும் கவரக்கூடியது என்று அநுபவவாயிலாக அமைந்துள்ள மதிப்பீடுகள் உணர்த்துகின்றன.[1] செலவீட்டு வரியில், ஒரு விநோதம் என்னவென்றால், இவ் வரியானது மக்களின் சேமிப்பு ஆர்வத்தை

[1] உதாரணமாக, $x = 0.5$, $r = 0.05$, $n = 1$ என்றும் வைத்துக் கொண்டால், வருமான வரியைப் பொறுத்த வரையில் நுகரப்படாத வருமானத்தில் இறுதி நிலைப் பவுனின் (£) மீது விதிக்கப்படுகின்ற வரியின் தற்கால மதிப்பு £ 0.512 ஆகும். $c = 0.9$ என்று வைத்துக் கொண்டால் செலவீட்டு வரியின்கீழ் இந்த வரியானது £ 0.526 ஆகும். இவ்வாறன்றி $n = 10$ என்றும் $r$, $n$, $c$ ஆகியவற்றின் மதிப்புகள் மாறவில்லை என்றும் வைத்துக்கொண்டால், செலவீட்டு வரியே சிறந்தது என்று சொல்லத் தோன்றும் (செலவீட்டு வரியின்கீழ் வரியானது £ 0.526; ஆனால் வருமான வரியின்கீழ் £ 0.597 ஆகும்).

வெற்றிகரமாகத் தூண்டும்பட்சத்தில், இவ் வரியினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயானது வருமானவரியின்மூலம் கிடைத்துவருகின்ற வருவாய்க்கு இணையாக அமைதல் வேண்டும் என்று கருதினுல், இவ் வரிவீதம் அதிகமாக இருப்பதுடன் நடப்புக் காலச் செலவுக்கும் எதிர்காலச் செலவுக்கும் தேவையான பணத்தை ஈட்டுமுகத்தான் வேலை செய்வதில் ஈடுபட்டிருக்கக்கூடிய மக்களின் ஆர்வத்திற்குத் தடையாகவும் அமைதல்வேண்டும்.

வருமானவரியின்மூலம் கிடைத்துவருகின்ற வருவாய்க்கு இணையாக வருவாய் கிடைக்கக்கூடிய விதத்தில் செலவீட்டுவரியை விதித்தால், பொதுவாக, தராதர விலைகள் (relative prices) மாற்றமுறுகின்றன; இதன்விளைவாக இறுதிநிலையில் நடப்பு நுகர்வு எதிர்கால நுகர்வு ஆகியவற்றைவிட ஓய்வே மக்களைப் பெரிதும் கவரக்கூடியதாக இருக்கும். நாம் மேலே எழுப்பியுள்ள பிரச்சினைக்கு இது பொதுவான முறையில் அமைந்துள்ள விடையாகும். இதற்கான முடிவான விடையைக் காண விரும்பினுல் ஓய்வு, நடப்பு நுகர்வு, எதிர்கால நுகர்வு ஆகியவற்றிற்கிடையே, தேவையைப் பொறுத்தவரையில், இருக்கக்கூடிய நிரப்புப்பாட்டு (complementarity) உறவுகள் எத் தன்மையன என்பதையும், இவ் வுறவுகள் பலவற்றுள் ஒன்று மற்றென்றினைவிட எவ்வளவு முக்கியத்துவம் உடையது என்பதையும் நாம் தீர்மானிக்க வேண்டும். உதாரணமாக, ஓய்வுக்கும் எதிர்கால நுகர்வுக்கும் இடையே, தேவையைப் பொறுத்தவரையில் நிரப்புப்பாட்டுத் தொடர்பு உள்ளது என்றும், ஆனுல் ஓய்வுக்கும் நடப்பு நுகர்வுக்கும் இடையே பதிலீட்டுத் தொடர்பு உள்ளது என்றும் வைத்துக்கொண்டால், வேலையில் ஈடுபட்டுள்ள மக்களின் ஆர்வம் குன்றும். இவ்வாறன்றி ஓய்வுக்கும் எதிர்கால நுகர்வுக்கும் இடையே பதிலீட்டுத் தொடர்பு (substitutability) உள்ளது என்றும், ஆனுல் ஓய்வுக்கும் நடப்பு நுகர்வுக்கும் இடையே நிரப்புப்பாட்டுத் தொடர்பு உள்ளது என்றும் வைத்துக்கொண்டால், வேலையில் ஈடுபட்டுள்ள மக்களின் ஆர்வம் ஒருவேளை (உறுதியாகக் கூறுவதற்கில்லை) ஊக்குவிக்கப்படலாம். எனவே, பொதுவாக வேலை செய்வதில் காட்டக்கூடிய மக்களின் ஆர்வம், ஊக்கப்படுவதைவிட குன்றும் என்றே முடிவுகட்ட வேண்டியுள்ளது.

இந்த விஷயம் பெரிதும் முக்கியத்துவம் உடையதாகும். செலவீட்டுவரியின்கீழ் வரி செலுத்தியபின் எஞ்சி இருக்கின்ற தனியாரின்

---

நிகர இலாபத்தையே கழிவு வீதமாகக் கணக்கிட்டுக் கொண்டால், முதலில் நாம் விளக்கியுள்ள விஷயத்தில் எந்தவிதமான மாற்றத்தையும் செய்ய வேண்டியிராது; ஆனுல், இரண்டாவதாக விளக்கியுள்ள விஷயத்தில் ஒருசிறிது மாற்றங்கள் செய்ய வேண்டியிருக்கும். அதாவது, முன்பு இருந்ததைவிட இப்பொழுது செலவீட்டு வரி மிகவும் சிறந்தது என்று சொல்லத் தோன்றும்.

வருமானத்தில் சேமிப்பின் பங்கு பெரும் பங்கே என்பதில் சந்தேகமில்லை. எனினும், செலவீட்டு வரியினுல் தனியாரின் வருமானம் பெருமளவு குறையலாம். எனவே, வருமானவரியைவிட செலவீட்டு வரியின்கீழ் தனிப்பட்ட நபரின் சிறப்பு அளவு சேமிப்பானது (absolute amount of saving) குறைவாக இருக்கக்கூடும்.

வருமான வரிமுறை செலவீட்டு வரிமுறை ஆகியவற்றின்கீழ் ஆபத்துகளைத் தாங்க முன்வரும் மக்களின் துணிவு எவ்வாறு வெவ்வேறு விதத்தில் பாதிக்கப்படலாம் என்பதுகுறித்து நாம் மேலே கொடுத்துள்ளவைபோலப் பல விவாதங்கள் உள்ளன. ஆபத்துஇல்லாத தொழில்களைவிட ஆபத்துகள் உள்ள தொழில்களில் முதலீட்டை ஊக்குவிக்க எண்ணினுல், இதற்கு ஏற்ற முறையில் வரிகள் வேறுபட்டிருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை. இக்கருத்தின் அடிப்படையில் நோக்கும்பொழுது, 100% என்ற விதத்தில் செலவின்மீது வரி விதிப்பதானது, வருமான வரியைவிட, நடப்புக்கால நுகர்வை, அதிகமாகப் பாதிக்கும் என்பதை அறிய வருவோம். மேலும், இதைவிட அதிகமான அளவில், செலவீட்டு வரியின்கீழ், எதிர்கால நுகர்வு பாதிக்கப்படும் என்பதையும் அறிய வருவோம். எனினும், வேறு வழிகளில் கிடைக்கக்கூடிய வருமானத்தைக்கொண்டு நஷ்டங்களை ஈடுகட்டிக் கொள்ளலாம் என்றதோர் ஏற்பாடு இருப்பதால், ஆபத்துகளைத் தாங்க முன்வரும் மக்களின் ஆர்வத்தைத் தூண்டக்கூடிய வகையில், மொத்தத் தொகையை வரியாக விதிக்கும் முறை, வருமான வரிமுறை, செலவீட்டு வரிமுறை ஆகியவை ஒரே மாதிரியாக அமைந்துள்ளவை என்றே கொள்ளவேண்டும். எனவே, செலவீட்டு வரியினுல், ஆபத்துகளைத் தாங்க முன்வரும் மக்களின் ஆர்வமும் இதன் விளைவாக மொத்த வருமானமும் பெருமளவு பாதிக்கப்படும் என்று கருதுவதற்கு இடமில்லை.[1]

இறுதியாக ஒரு சிறு விஷயத்தை மட்டும் குறிப்பிட விரும்புகிறேம். செலவீட்டு வரியினுல் நிருவாகச் செலவு பெருமளவு அதிகரிக்கக்கூடும். இதனுல் தேசிய வருமானம் குறையலாம். எனவே, தனியார் சேமிப்பும் தனியார் செலவும் குறைவுறலாம்.

ஒரே தடவையில் செய்யப்பட்டு $n$ ஆண்டுகள்வரை நீடிக்கக்கூடிய சேமிப்பானது செலவீட்டு வரியால் எங்ஙனம் பாதிக்கப்படுகின்றது என்ற பொதுவான நிலையைப்பற்றிய முக்கியமான விவாதங்களை ஆராய்வதில் நாம் இதுகாறும் ஈடுபட்டிருந்தோம்.

[1] E. Cary Brown. 'Mr. Kaldor on Taxation and Risk-bearing' 'Review of Economic Studies,' October, 1957. N. Kaldor, 'Risk-bearing and Income Taxation', Review of Economic Studies, June 1958.

இது தவிர, வேறு சாத்தியமான நிலைகளில் மேலே கூறியுள்ள விவாதங்களில் என்னென்ன மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டும் என்பதுகுறித்து இனி ஆராய்வோம்.

முதலாவதாக, 1ஆவது ஆண்டிலிருந்து $n$ ஆண்டு முடிய உள்ள காலத்தில் வட்டியின்மூலம் கிடைக்கக்கூடிய வருமானம் செலவளிக்கப்படாமல் சேமிக்கப்படுகின்றது என்று வைத்துக் கொள்வோம். இந் நிலையில், வருமான வரியைப் பொறுத்த வரையில், செலவு சேமிப்பு ஆகியவற்றின்மீது முன்பு சுமத்தப்பட்ட வரிச் சுமையே இப்போதும் சுமத்தப்பெறும். செலவீட்டு வரியைப் பொறுத்தவரையில், £ 1 என்ற தொகையை இப்பொழுதே நுகர்வுக்கு என்று பயன்படுத்தினல், செலுத்தவேண்டிய வரியின் மதிப்பு £$e'$ ஆக இருக்கும். இதற்கு மாருக, £ 1 என்ற தொகையை இப்பொழுது சேமித்து $n$ ஆண்டில் (ஈட்டப்பட்டுள்ள வட்டியுடன் சேர்த்து) செல விட்டால் செலுத்தவேண்டிய வரியின் தற்கால மதிப்பானது £ $e' \frac{(1+r)^n}{(1+r)^n}$ = £ $e'$ ஆக இருக்கும். எனவே, செலவீட்டு வரியைப் பொறுத்தவரையில் இந் நிலையில் நாம் முன்பு கண்ட முடிவுகளில் மாற்றங்கள் ஏதும் செய்யவேண்டுவதில்லை.

இரண்டாவதாக, ஒரு தடவை சேமிக்கப்பட்ட பணமானது என்றென்றும் சேமிப்பாகவே வைத்திருக்கப்படுகின்றது என்றும், ஆனல் இச் சேமிப்பினின்றும் கிடைத்துவரக்கூடிய வருமானம் செலவிடப்பட்டு வருகின்றது என்றும் வைத்துக்கொள்வோம். £ 1 என்ற வருமானத்தில் ஒருசிறிதேனும் சேமிக்கப்படாவிட்டால் £ $x$ மதிப்புள்ள வருமானவரி செலுத்த வேண்டியதிருக்கும். £ 1 என்ற வருமானத்தில் ஒருசிறிதேனும் நுகர்வுக்குப் பயன்படுத்தப்பட வில்லை என்ருல், செலுத்தவேண்டிய வரியின் தற்கால மதிப்பு £ $[x + x(1 - x)]$ ஆக இருக்கும். செலவீட்டு வரியைப் பொறுத்தவரையில், £ 1 என்ற தொகையை சேமித்தாலும் அல்லது செலவழித்தாலும், முன்பு இருந்ததைப்போலவே, செலுத்த வேண்டிய வரியின் மதிப்பு £ $e'$ ஆக இருக்கும். நாம் மேலே விரிவாகக் கண்ட முக்கிய நிலையில் நேர்ந்ததைவிட, இந் நிலையில், வரிமுறை மாற்றத்தால், மக்கள் நுகர்வுக்குக் குறைவாகச் செலவிட்டு, அதிகமான பணத்தைச் சேமிக்கவே எண்ணுவர். வேலை செய்ய எண்ணும் மக்களின் ஆர்வத்தைப் பொறுத்த வரையில், நடப்புப் பண்டங்கட்கான செலவுகள் குறித்து மக்கள் எவ்வாறு எண்ணமிடக்கூடும் என்று நாம் மேலே கூறியுள்ளவை யாவும் இங்கும் பொருந்தக்கூடியவையாகும். எனினும், செலவீட்டு

[1] Pigou, 'A Study in Public Finance' (London, 3rd Edition, Macmillan).

வரியின்கீழ் வருமான வரியைவிட, செலவிடப்படாத வருமானத்தின் மீது விதிக்கப்படுகின்ற வரிவீதமானது குறைவாக இருக்கக்கூடும். எனவே, செலவீட்டு வரியின்கீழ், வேலை செய்ய எண்ணும் மக்களின் ஆர்வம் குன்றி சேமிப்பானது பாதிக்கக்கூடிய நிலை பெரிதும் ஏற்படாது.[1]

மூன்றுவதாக, ஒரு முறை சேமிக்கப்பட்ட பணம் என்றும் சேமிப்பாக இருப்பதோடு, இச் சேமிப்பு ஈட்டக்கூடிய வருமானமும் —வட்டி வருமானமும்—என்றென்றுப் சேமிக்கப்படுகின்றது என்று வைத்துக்கொள்வோம். இந் நிலையில், வருமான வரிச் சுமையானது நாம் முந்திய பத்தியில் கூறியுள்ள விதத்திலேயே அமையும். செல வீட்டுவரியைப் பொறுத்தவரையில், £ 1 தொகை மதிப்புள்ள நடப்பு நுகர்வில் வரியின் மதிப்பு £ $e'$ ஆக இருக்கும்; £ 1 தொகை மதிப் புள்ள சேமிப்பின்மீது வரியே விதிக்கமுடியாது. இதுகாறும் நாம் விளக்கியுள்ள பல நிலைகளினும் இந் நிலையே செலவீட்டு வரிக்குப் பெரிதும் ஆதரவாக அமைந்துள்ளதாகும். நுகர்வுக்குப் பதில் சேமிப்பு ஊக்குவிக்கப்படுவது, வேலை செய்ய எண்ணும் மக்களின் ஆர்வத்தைத் தூண்டுவது ஆகிய விஷயங்களைப் பொறுத்தவரையில் மேலே நாம் விளக்கியுள்ள பல நிலைகளினும், இந் நிலையே சிறப் புடையது என்பது தெளிவாகும்.

மேலே நாம் விவாதித்துள்ள விஷயங்களோடு தொடர்புடைய ஒருசில விஷயங்களை இங்குக் குறிப்பிட விரும்புகிறோம். நிரந்தர மாக விதிக்கப்படுகின்ற செலவீட்டு வரியைவிட, தற்காலிகமாக (உதாரணமாக, போர் ஒன்று முடியும்வரை) விதிக்கப்படுகின்ற செலவீட்டு வரியானது, சேமிப்பைப் பெரிதும் ஊக்குவிக்கும். செல வீட்டு வரியானது எவ்வளவு காலம் விதிக்கப்படுகின்றதோ அதை விட அதிகமான காலத்திற்குப் பணப் சேமிப்பாக வைக்கப் பட்டுள்ளது என்றும் இச் சேமிப்பினின்றுப் கிடைத்துவரக்கூடிய வருமானப் அவ்வப்போது செலவளிக்கப்பட்டுவிடுகின்றது என்றும் வைத்துக்கொண்டால், வருமான வரியைப் பொறுத்தவரையில், வருமானத்தில் நுகர்விற்குச் செலவிடப்படுகின்ற £ 1 என்ற தொகை யின்மீது செலுத்தவேண்டிய வரியின் தற்கால மதிப்பானது, முன்பு இருந்ததைப் போலவே, £ $x$ ஆக இருக்கும்; £1 தொகை மதிப்புள்ள

[1] இது $\frac{e'}{1+e'}$, ஐ $x(2-x)$ என்பதுடன் ஒப்புநோக்குவதைப் பொறுத்த தாகும். செலவீட்டு வரியின்கீழ், சேமிப்பானது விருப்பத்தக்கதன்று என்று மக்கள் எண்ணத் தலைப்படுவதற்கு $\frac{(1-x)}{(2-x)} > e$ என்ற நிலை ஏற்படவேண்டும். ஆனால், இது அநுபவ சாத்தியமானதன்று.

சேமிக்கப்பட்ட வருமானத்தின்மீது செலுத்தவேண்டிய வரியின் தற்கால மதிப்பானது £$\left[ x+x\ (1-x) \left\{ 1-\frac{1}{(1+r)^n} \right\} \right]$ ஆக இருக்கும். செலவீட்டு வரியைப் பொறுத்தவரையில், £ 1 தொகை செலவின் மீது செலுத்தவேண்டிய வரியின் மதிப்பு £ $e'$ ஆக இருக்கும். செலவீட்டுவரியானது அமலில் இருக்கக்கூடிய காலம் முடிய, சேமிக்கப்பட்ட பணமானது செலவளிக்கப்படாது இருக்குமாகையால், £ 1 தொகை சேமிப்பின்மீது செலுத்தவேண்டிய வரியின் தற்கால மதிப்பு £ $e' \left\{ 1-\frac{1}{(1+r)^n} \right\}$ ஆக இருக்கும். எனவே, நிரந்தரமான செலவீட்டு வரியைவிட, தற்காலிகமான செலவீட்டு வரியே சேமிப்புப் பெருகுவதற்குப் பெரிதும் உறுதுணையாக அமையக்கூடியதாகும்.

வளர்வீத செலவீட்டு வரிமுறை விதாசார செலவீட்டு வரிமுறையினின்றும் எவ்வாறு வேறுபட்டு விளங்கக்கூடும் என்பதுகுறித்து நாம் இதுகாறும் ஏதும் கூறவில்லை. எனினும், இவ் இருமுறைகளில் எம்முறை கடைப்பிடிக்கப்பட்டாலும், நாம் மேலே விளக்கியுள்ள விவாதங்கள் யாவும் பொருந்தக் கூடியவையேயாகும்; அடிப்படையான வேறுபாடுகள் ஏதும் தோன்று. தங்களுடைய வருமானம் அதிகமாக இருக்கக்கூடிய காலங்களில் (உதாரணமாக, இளமைக் காலத்தில்) சேமிக்கின்ற மக்கள், இவ்வாறு தாங்கள் சேமித்ததைத் தங்களுடைய வருமானம் குறைவாக இருக்கக்கூடிய காலங்களில் (உதாரணமாக, முதுமைக் காலத்தில்) செலவிடும்போது, தற்போது இருப்பதைவிட வரிவீதங்கள் மிகக் குறைவானவையாகவே இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். இதுபோன்ற சூழ்நிலையில், செலவீட்டு வரியினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயானது ஒரே அளவினதாக அமைந்திருக்க வேண்டும் என்று அரசாங்கமானது கருதினுல், செலவீட்டு வரிவீதங்களை நாட்டின் பொதுவான சேமிப்போடு இணைத்துப் பார்ப்பதைவிட, பலவாருன வருமானங்களை ஈட்டிக்கொண்டிருக்கக்கூடிய மக்களின் பலதரப்பட்ட சேமிப்பு வீதத்தோடு தொடர்பு உடையவைகளாக உருவாக்க வேண்டும். இவ்வாறு செலவீட்டு வரிவீதங்கள் அமைக்கப்பெற்ருல், நாட்டில் பல்வேறு வருமான நிலையிலுள்ள மக்களின்மீது வரிச்சுமை எவ்வாறு பகிர்ந்தளிக்கப்படுமோ அதற்கு ஏற்ப, பல்வேறு மக்களின் ஆபத்துகளைத் தாங்க முன்வரும் துணிவும், வேலை செய்ய எண்ணும் ஆர்வமும் பல்வேறு விதமாக பாதிக்கப்படும்.

கோட்பாட்டின் அடிப்படையில் இறுதியாக ஒரே ஒரு விஷயத்தைமட்டும் நாம் இங்குக் கவனிக்கவேண்டியுள்ளது. வருமான வரியைப் பொறுத்தவரையில், எவ்வெவற்றை வருமானமாகக் கருத

வேண்டும், எவ்வெவற்றை வருமானமாகக் கருதக் கூடாது என்ற ஆராய்ச்சியில் நாம் இதுவரை இறங்கவில்லை. இதேபோல செல வீட்டுவரியைப் பொறுத்தவரையில், எவ்வெவற்றைச் செலவுகளாகக் கருதவேண்டும், எவ்வெவற்றைச் சேமிப்பாகக் கருதவேண்டும் என்று நாம் இதுவரை தீர்மானிக்கவில்லை. இவற்றைத் தீர்மானிப்பது எளிய செயலல்ல. முடிவின்றி பல பிரச்சினைகள் ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றிக்கொண்டே இருக்கக்கூடும். நாம் இங்கு தந்துள்ள இரண்டு உதாரணங்கள் இதைத் தெற்றென விளக்கும். முதலீட்டு ஆதாயத்தை (capital gains) வருமானம் என்று கணக்கிட வில்லை என்று வைத்துக்கொள்வோம். வருமானவரி விதிப்பிற்கு உள்ளாகாத இது போன்ற வருமானங்களை எதிர்த்துத் தற்சமயம் மக்கள் சேமிக்க முன்வருவரா? என்ற விஞவிற்கு எளிதில் விடை கண்டுவிட முடியாது. ஏனெனில், செலவீட்டுவரியைப் பொறுத்த வரையில், இவ்வாருன சேமிப்புகள் செலவிடப்படுகின்ற காலங் களில் வட்டிவீதங்கள் வீழ்ச்சியுற்றிருந்தால், இதன்விளைவாகப் பெருமளவு பணம் செலவீட்டு வரி விதிப்பிற்கு உள்ளாகும். எனவே, மேலே நாம் கூறிய நோக்கத்துடன் மக்கள் சேமிக்க முற்பட்டால் செலவீட்டு வரியைப் பொறுத்தவரையில் அது ஆபத்தாக முடியலாம். ஆனல், வருமான வரிமுறையில் இது போன்ற ஆபத்துகள் ஏதும் இல்லை. இது நிற்க, கல்வி பயிற்சி ஆகியவற்றிற்காகச் செல விடப்படுகின்ற பணத்தைச் செலவீட்டு வரியானது வரிவிதிப்பிற்கு உட்படுத்துகின்றதென்றும், ஆனல் வீடு கட்டுவதற்குச் செலவிடும் பணத்தைச் சேமிப்பாகக் கணக்கிட்டுக்கொள்கின்றது என்றும் வைத்துக்கொண்டால், இதன் விளைவாக மொத்த சேமிப்பில் மாற்றம் நேரும் என்று கூறுவதைவிட, நாட்டில் வீடுகள் கட்டு வதற்கு அதிகப் பணமும், கல்வி பயிற்சி இவற்றிற்காக மிகக் குறை வான பணமும் செலவளிக்கப்படும் என்று கூறுவதே பொருத்த முடையதாகும்.

பிரிட்டனில் சேமிப்பை ஊக்குவிப்பதற்கு உறுதுணையாக அமை யக்கூடிய செலவீட்டுவரி விதிப்பதற்கான சாத்தியக்கூறுகளை ஆரா யும்பொழுது, இந் நாட்டில் செல்வந்தர்கள் தற்சமயம் கடந்த காலச் சேமிப்புகளை எந்த அளவுக்குப் பயன்படுத்தி வருகின்றனர் என்பதை முதற்கண் நாம் ஆராய வேண்டும். பிரிட்டனில் தற்போதுள்ள வருமான வரிமுறையானது பல வகைகளில் (சுய தொழில்களில் அமர்ந்துள்ளவர்கட்கான பென்ஷன் முறை, ஆயுள் இன்சூரன்ஸ், வரிவிலக்கு அளிக்கப்பெற்றுள்ள சேமிப்புப் பத்திரங்கள், வட்டி ஈட்டக்கூடிய நெடுங்காலப் பத்திரங்கள் போன்ற வகைகளில்) சேமிப்பை ஊக்குவித்து வருகின்றது. முன்பு சேமித்த பணத்தைச் செலவிடும்போது செலவீட்டு வரியானது இதற்கு இடையூருக—

சிறப்பாகச் செல்வந்தர்கட்கு இடையூருக—இருப்பது போன்ற குறைபாடு இந்த வருமான வரிமுறையில் கிடையாது. பிரிட்டனில் செல்வந்தர்களின் சேமிப்பு எவ்வாறு அமைந்துள்ளது என்பது குறித்து ஆராய்ந்துள்ள ஒரே ஒரு 'மாதிரி சர்வேயைப்' (sample survey) பற்றியே நாம் அறிவோம். (முதியோர் நீங்கலாக) செல்வந்தர்கள் முன்பு சேமித்த பணத்தைத் தற்சமயம் செலவளித்து வருகின்றனர் என்ற கருத்துக்கு இந்த சர்வேயில் சான்று ஏதும் கிடையாது.

இரண்டாவதாக, எந்த நோக்கத்திற்காக மக்கள் சேமிப்பதில் நாட்டம்கொள்கின்றனர் என்பதை நாம் அறிய வேண்டும். குறுங் காலத்திற்காகச் சேமிக்காது சேர்ந்த பணத்தை என்றென்றும் மக்கள் நிரந்தரமாக சேமிப்பாக வைத்திருந்தால் செலவீட்டு வரியானது விரும்பத்தக்கதே என்று நாம் ஏற்கெனவே கண்டோம். அமெரிக்காவில்[1], தம்முடைய வாரிசுகட்குத் தருவதற்காகச் சேமிக்க வேண்டும் என்ற எண்ணமுடைய மக்கள் ஒரு சிலரே என்றும், எதிர்பாராத நெருக்கடிகளைச் சமாளிப்பது, குறிப்பிட்ட நோக்கங்களை (உதாரணமாக, குழந்தைகட்குக் கல்வி வசதிகள் செய்வதற்கென்று) நிறைவேற்றுவதற்காகச் சேமிப்பது என்பன போன்ற காரணங்களை முன்னிட்டுச் சேமிப்பவர்களே பெரும் அளவில் உள்ளனர் என்றும் அறியவருகிறோம். இதே காரணங்கள் பிரிட்டிஷ் மக்களைப் பொறுத்தவரையில் பொருந்தாதவைகளாக இருக்கலாம். எனினும், இது போன்ற விஷயங்களை நன்கு ஆய்ந்து சீரிய முடிவுக்கு வருவதற்கு முன்னல், வருமானவரிக்குப் பதிலாக செலவீட்டுவரியை விதித்தால் சேமிப்பு எந்த அளவுக்கு அதிகரிக்கக் கூடும் என்பது குறித்து, நாம் எதுவும் கூறமுனைவது விரும்பத்தக்கதன்று.

[1] Klein, Straw and Vandome, 'Saving and Finances of the Upper Income Classes', 'Bulletin of the Oxford University Institute of Statistics, November, 1956.

[2] G. Katona, 'Attitude towards Saving and Borrowing', 'Consumer Instalment Credit' (National Bureau of Economic Research and Federal Reserve Board, 1957), Pt. II, Vol. I. Also, 'Consumer Optimism Weakening, Foundation for Research in Human Behaviour' (Ann Arbor, Michigan, July, 1957).

# 3. மறைமுக வரிகளின் பங்கு

அரசாங்கச் செலவினங்கள் நீண்ட காலத்தில் பெருகிச்செல்லும் தன்மையன என்று ஏற்கெனவே கண்டோம். இவ்வாறு பெருகிவரும் அரசாங்கச் செலவினங்கட்கு நிதி திரட்டும் பணியில் மறைமுக வரியின் (indirect taxation) பங்கு யாது, மறைமுக வரியின்மூலம் நிதி திரட்டுவது எந்த அளவுக்கு சாத்தியமானது, எந்த அளவுக்கு அது உகந்தது என்பவற்றை ஆராய்வதே இந்த அத்தியாயத்தில் நமது குறிக்கோளாகும். அயல் நாட்டு வாணிகத்தின் (foreign trade) மீது விதிக்கப்படுகின்ற இறக்குமதி வரி (import duty) ஏற்றுமதி வரி (export duty) ஆகியவைகுறித்து முதற்கண் விவாதிப்போம். அதை யடுத்து இவற்றோடு தொடர்புடையதும் மேற்கு ஆப்பிரிக்கா மற்றும் பல நாடுகளிலும் இரண்டாம் உலகப் போருக்குப்பின் பெரிதும் கையாளப்பட்டு வருவதுமான விற்பனை நிறுவனங்கள் (Marketing Boards) குறித்து விவரிப்போம். இறுதியில் செய்பொருள் வரி (excise tax) விற்பனை வரி (sales tax) பொதுப்பயன் தொழில்கள் (public utilities) ஆகியவற்றின் பங்கு யாது என்றும் ஆராய்வோம்.

### இறக்குமதி வரிகள் (Import Duties)

பின்தங்கிய நாடுகளின் நிதிவரவு இனங்களில் இறக்குமதி வரி பெரும் பங்கு விகித்து வருகின்றது. ஐ.நா. சபை பிரசுரித்துள்ள புள்ளி விவரங்களை[1] மேற்போக்காக நோக்கினாலேயே இவ்வுண்மை நன்கு புலனாகும். 1959ஆம் ஆண்டிற்கான கானா (Ghana) நாட்டின் மத்திய அரசாங்கத்தின் மொத்த வருவாயில் (revenue) இறக்குமதி வரியின் பங்கு 25 சதவீதமாகும். இலங்கை (Ceylon) நாட்டில் இது 30 சதவீதமாகும். ஆனால், பொருளாதாரத் துறையில் முன்னேறி யுள்ள பல நாடுகளில் இது 10 சதவீதத்திற்கும் குறைந்த அளவே யாகும். (உதாரணமாக, அமெரிக்காவில் இது 1 சதவீதமும் —ஆஸ்திரேலியாவில் 6 சதவீதமுமாகும்.) இவ்வாறு பின்தங்கிய

[1] 1959ஆம் ஆண்டிற்கான 'UN Statistical Yearbook' ஐ நோக்கவும்.

நாடுகளில் இறக்குமதி வரி பெரிதும் முக்கியத்துவம் வகித்துவருவதற்குப் பல காரணங்கள் உள்ளன. இந்த நாடுகளின் வரலாற்று ஏடுகளைப் புரட்டிப் பார்த்தால், இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் மூலமே இந் நாடுகளில் பணப் பொருளாதார அமைப்பு (cash economy) உருவாகியது என்பது புலனாகும். வரலாற்று அடிப்படையில் அமைந்துள்ள இக் காரணம் தவிர தற்கால நிகழ்ச்சிகள் கொண்டுப் இறக்குமதி வரி பெற்றுள்ள முக்கியத்துவத்தை நாம் விளக்குதல் இயலும். பின்தங்கிய நாடுகளில் பெரும்பாலும் (ஒரே ரீதியாக இவ்வாறு அமைந்துள்ளது என்று கூறுவதற்கில்லை) இறக்குமதிகள் தேசிய வருமானத்தில் (national income) பெரும் பங்கு வகித்துவருகின்றன. எனவே, இறக்குமதிகளின்மீது வரி விதிப்பது நியாயமானதேயாகும் என்று தோன்றுகிறது. இறக்குமதிகள்மீது விதிக்கப்பெறும் வரிச் சுமையை சில சமயங்களில் அயல் நாட்டு உற்பத்தியாளரே தாங்கிக்கொள்கின்றனர்; உள்நாட்டு மக்கள் அவற்றால் பாதிக்கப்படுவதில்லை. எனவே, இறக்குமதி வரி விதிப்பது நியாயமானதேயாகும் என்று கூறப்படுகின்றது. இதுகாறும் கூறிய காரணங்கள் யாவற்றினும் முக்கியக் காரணம் ஒன்றும் உளது. அது, இறக்குமதி வரி வசூல் நிருவாகம்பற்றி[1] அமைந்ததோர் காரணமாகும். அஃது வருமாறு: இறக்குமதிப் பொருள்கள் யாவும் பெருங் கப்பல்களிலேயே வந்து இறங்குகின்றன; பின்தங்கிய நாடுகளில் துறைமுகங்களின் எண்ணிக்கை மிகக் குறைவானதேயாகும். எனவே, வந்து இறக்குமதியாகக்கூடிய பொருள்களை எளிதில் கண்டுகொள்ள முடியும்; அவற்றை மறைத்தற்கு இயலாது. இங்ஙனம் இறக்குமதி வரியை நிருவகிப்பது மிக எளிய செயலாக அமைகின்றது. வளர்ச்சியுறுத நாடுகளில் இறக்குமதி வரிகள் பொதுவாக சிறந்த பயனுள்ளவையாகத் திகழவல்லன என்பது சில நிபுணர்களின் திடமான நம்பிக்கையாகும். இந் நாடுகள் இது போன்ற வரிகளையே பெரிதும் சார்ந்திருக்கவேண்டும் என்பதும் அன்னாருடைய கருத்தாகும்.

எனினும், எந்தச் சந்தர்ப்பத்திலும் இறக்குமதி வரிகளை உயர்த்துவது சுலபமான காரியம் என்று கூறுவதற்கில்லை. இறக்குமதி வரி விதிப்பையே ஒட்டி உருவாகக்கூடிய சில இடர்ப்பாடுகள் உள்ளன. உலக நாடுகள் தங்களுக்கிடையே ஏற்படுத்தியுள்ள 'வர்த்தக சுங்க பொது ஒப்பந்தத்தின்' (GATT) விளைவாக நேரக்கூடிய சிக்கல்கள் குறித்து நாம் ஈண்டு விவாதிக்க விரும்பவில்லை. இருப்பினும்,

[1] உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு ஒருசில இறக்குமதிப் பொருள்கள்மீதுமட்டிலும் இறக்குமதிவரி விதிக்கப்படலாம். ஆனால், இதுபோன்ற இறக்குமதி வரிக் கொள்கை பெரிதும் வெற்றியளிக்கும் பட்சத்தில் கிடைக்கக்கூடிய வருவாய் குறைந்த அளவினதாக உள்ளது என்பதை நாம் அறிய வேண்டும். எனவே, இவைகுறித்து மேலே நாம் விவாதிக்கவில்லை.

தன்னிச்சைப்படி ஒரு நாடு சுங்கவரி (tariff) வீதங்களைக் கூட்டுவதோ அல்லது குறைப்பதோ பெரும்பாலும் சாத்தியமில்லை என்பதைமட்டும் நாம் குறிப்பிட விரும்புகிறோம். இது நிற்க. எளிதான நிருவாக நோக்கம்குறித்து பெரும்பான்மையான நாடுகள் தங்களது சுங்கவரி அமைப்பைக் குறித்த வீத வரிகளைச் (specific duties) சார்ந்த ஒன்றாக அமைத்துள்ளனவேயன்றி பெறுமான விகித வரிகளைச் (ad valorem duties) சார்ந்த ஒன்றாக அமைக்க வில்லை. இவ்வாறான அமைப்பில் சில இடர்ப்பாடுகள் உள்ளன. பொருள்களின் விலை மாற்றமுறுவதற்கு ஒப்ப வரி வீதங்களையும் மாற்றவேண்டியுள்ளது. இதற்காகச் சட்டங்களையும் அவ்வப்போது திருத்தி அமைக்கவேண்டியுள்ளது. வரி கொடாது தப்பிக்க மக்கள் பெரிதும் முயலுவது இம் முறையிலுள்ள மற்றொரு கேடாகும். கடந்த காலத்தில் சாராயம், பட்டு போன்ற பொருள்களின்மீது பிரிட்டனில் அபரிமித இறக்குமதி வரிகள் விதிக்கப்பட்டன. இவற்றின் விளைவாக அங்கே இப் பொருள்களில் கள்ளக் கடத்தல் வியாபாரம் மிகவும் பெருகி இருந்தது. இது கடந்த காலத்துக் கதையாகும். தற்காலத் திலும் இதுபோன்ற கள்ளக் கடத்தல்கள் பெரிதும் நிகழ்ந்து வருகின்றன. பேராசிரியர் டிரஸ்[1] (Professor Tress) அவர்கள் ஏடனில் (Aden) புகையிலைமீது விதிக்கப்படுகின்ற இறக்குமதி வரி எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றது என்பதுகுறித்துக் கூறியுள்ளது உற்றுநோக்கத்தக்கதாகும். ஏடனில் புகையிலைக்கான இறக்குமதி வரியின் உச்ச வரம்பை நிர்ணயிக்கும்பொழுது கள்ளக் கடத்தல் செய்வதற்கு இடம்கொடாத வகையில் அது நிர்ணயிக்கப்படு கின்றது என்று பேராசிரியர் டிரஸ் குறிப்பிட்டுள்ளார். கள்ளக் கடத்தலின் விளைவாக அரசாங்கம் ஓர் ஆண்டில் 5 மில்லியன் பவுனி லிருந்து 10 மில்லியன் பவுன்வரை[2] வரக்கூடிய வருவாயை இழந்து வருவதாக 1960 ஆம் ஆண்டிற்கான பட்ஜெட் (budget) அறிக்கை யில் நைஜீரியக் (Nigeria) கூட்டாட்சியின் நிதி அமைச்சர் கூறியிருப் பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.

பொருளாதார ரீதியாக நோக்குங்கால் இறக்குமதி வரிகளையே பெரிதும் சார்ந்திருப்பது உசிதமானதன்று என்றே தோன்றுகிறது. பலவிதமான ஆட்சேபங்கள் கூறப்பட்டுள்ளன. முதலாவது ஆட் சேபத்தை இப்பொழுது காண்போம். வளர்ச்சியுறாத நாடுகள் தமது வரிக் கொள்கையின்மூலம் இருபெரும் நோக்கங்களை அடைய முயலுகின்றன. ஆனால், இறக்குமதி வரி விதிக்கப்படுவதன் விளைவாக இவ்விரு நோக்கங்கட்குமிடையே பிணக்கு நேர வாய்ப்

1. R. C. Tress அவர்கள் எழுதியுள்ள, 'Report on Finances of Aden Colony, (Aden, April 1960) என்ற அறிக்கையை நோக்கவும்.
2. West Africa (London, 16 April, 1960) ஐ நோக்கவும்.

புள்ளது. (நெடுங்காலத்தில் கிடைக்கக்கூடிய வருவாயைக் கருத்தில்கொண்டு) எந்தெந்தப் பொருள்களின் 'வருமானம்சார் தேவை நெகிழ்ச்சி' (income elasticity of demand) அதிகமாக உள்ளதோ அவற்றின்மீது வரிவிதிப்பது நலம் என்பது ஒரு நோக்கமாகும். மார்க்கெட் பொருளாதாரம் (market-economy) உருவாவதற்கு உறுதுணையாக உற்பத்தியாளர்களை ஊக்குவிக்க வேண்டும்; இதற்கு ஏற்ப இறக்குமதி வரி விதிக்கப்படுவது நலம் என்பது இரண்டாவது நோக்கமாகும். தம்மிடமுள்ள குறைந்த அளவு ரொக்கத்தைக் கொண்டு உற்பத்தியாளர்கள் விலை கொடுத்து வாங்கக்கூடிய நுகர்வுப் பொருள்களின் (consumer goods) மீது அதிக வரி விதிக்கக் கூடாது என்பதே இவ்விரண்டாவது நோக்கத்தின் உட்பொருளாகும். இறக்குமதி வரியைப் பொறுத்தமட்டிலுமன்றி ஏனைய மறைமுக வரிகளைப் பொறுத்தவரையிலுங்கூட (உதாரணமாக, ஏற்றுமதி வரிகள்) இந் நோக்கம் பொருந்தக்கூடிய ஒன்ருகும். இதற்கான காரணம் வருமாறு: மார்க்கெட் பொருளாதார அமைப்பு உருவாகத் தூண்டுகோலாக அமையக்கூடிய பொருள்கள் பெரும்பாலும் உள்நாட்டில் உற்பத்தி செய்யப்படுவதில்லை; வெளி நாடுகளினின்றே இறக்குமதி செய்யப்படுகின்றன. குறிப்பாகப் பின்தங்கிய நாடுகள் வளர்ச்சியுற்றுவரக்கூடிய ஆரம்ப காலத்தைப் பொறுத்தவரையில் இது பெரிதும் உண்மையாகும். இது நிற்க. 'வருமானம்சார் தேவை நெகழ்ச்சி (income elasticity of demand) அதிகமாக உள்ள பொருள்களின்மீது மட்டிலும் இறக்குமதி வரி விதிப்பதும் உகந்ததாகத் தோன்றவில்லை. ஏனெனில், மக்களின் வருமானம் (income) குறையக்கூடிய காலங்களில் வருமானம் எந்த விகிதத்தில் குறையுமோ அதைவிட அதிகமான விகிதத்தில் வருவாய் (revenue) குறையலாம். ஏற்றுமதி வரி குறித்து விவாதிக்கும்போது மீண்டும் இக் கருத்தை ஆராய்வோம். 'வருமானம்சார் தேவை நெகிழ்ச்சி' (income elasticity of demand) மிகவும் குறைவாகவுள்ள பொருள்களின்மீது பெரிதும் இறக்குமதி வரி விதிப்பதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. நாட்டிலுள்ள பல்வேறு வகுப்பினர் ஈட்டக்கூடிய வருமானத்தில் ஏற்றத்தாழ்வுகள் இருத்தலாகாது என்னும் கருத்துடையோர் குறிப்பாக இதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். முதற் கருவிப் பொருள்கள் (capital goods) கச்சாப் பொருள்கள் (raw materials) ஆகியவற்றைப் பொறுத்தமட்டிலும் உள்நாட்டுத் தொழில்களை ஊக்குவிக்குமுகத்தான் அரசாங்கம் இப் பொருள்களின் மீது இறக்குமதி வரி விதிப்பதில்லை.

இறக்குமதி வரி விதங்களை அரசாங்கம் அடிக்கொருமுறை மாற்றுவது உகந்ததன்று. ஏனெனில், அரசாங்கம் இறக்குமதி வரியை உயர்த்தக்கூடிய காலங்களில் இதன் நிமித்தம் நாட்டில்

நிலவக்கூடிய சில்லறை விலைகள் அதிகமாகலாம். விலைவாசிகளின் உயர்வை ஒட்டி மக்கள் ஊதிய உயர்வு கேட்க முனையலாம். இவ்வாறு நேரக்கூடிய ஊதிய உயர்வு பணவீக்க (inflation) நிலையை நாட்டில் தோற்றுவிக்கும். ஊதிய உயர்வை ஒட்டி பணவீக்க நிலை உருவான பின்பு விலைவாசிகள் குறைய நேர்ந்தாலும் பணவீக்க நிலையின் விளைவுகளை முற்றிலும் அகற்றிவிட முடியாது. இறக்குமதி வரி வீதங்களில் அடிக்கொருமுறை நேரக்கூடிய மாற்றங்களால் இறக்குமதியாளரும் மற்றும் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களை இருப்பாக வைத்திருப்போரும் பாதிக்கப்படலாம். வரி வீத மாற்றங்களினால் இவர்களிடம் இருப்பாக உள்ள சரக்குகளின் மதிப்பு ஏற்றத்தாழ்வுற நேர்வதே இவர்கள் பாதிக்கப்படுவதற்குரிய முக்கிய காரணமாகும். இத்தகைய விளைவு இவர்களைப் பெரிதும் பாதிக்கக்கூடியதன்று என்பது உண்மையேயாயினும் இதனால் இவர்கட்கு சில அசௌகரியங்கள் நேரக்கூடும் என்பதை மறுத்தற்கியலாது. எனவே, இவர்கள் இதுபோன்ற காலங்களில் தங்களது குறைகளை அரசினருக்கு வன்மையான முறையில் எடுத்துரைக்க வேண்டியது நேரிடும்.

### ஏற்றுமதி வரிகள் (Export Taxes)

ஏற்றுமதிப் பொருள்களின்மீது[1] வரி விதிக்கும் பழக்கம் அண்மைக்காலத்தில்தான்[2] தோன்றியது என்று சொல்வதற்கில்லை. எனினும், இரண்டாம் உலகப் போருக்குப் பிற்பட்ட காலத்தில்தான் உலக நாடுகள் பலவும் பெருமளவில் ஏற்றுமதி வரிகளை விதிக்கத் துவங்கியுள்ளன. லத்தீன் அமெரிக்க நாடுகளில் (Latin American countries) 'பல நாணய மாற்று வீதங்கள்' (multiple exchange rates) பழக்கத்தில் இருந்துவருகின்றன. இம் முறையானது, புலனாகும் (visible) ஏற்றுமதி இறக்குமதி மற்றும் புலனாகா (invisible) ஏற்றுமதி இறக்குமதி ஆகியவற்றின்மீது ஒரே வீதத்தில் விதிக்கப்பெறாது பல வீதங்களில் விதிக்கப்படுகின்ற வரிமுறைக்கு ஒப்பானது என்று கூறலாம். லத்தீன் அமெரிக்க நாடுகள் தவிர வேறு பல நாடுகளிலும் ஏற்றுமதிப் பொருள்கள்மீது வரி விதிக்கப்பெறுகின்றன. இவ் வரியின்மூலம் இந் நாடுகள் பெருமளவு வருவாயும் பெற்று வருகின்றன. உதாரணமாக, 1959ஆம் ஆண்டிற்கான மலேயாவின்

1. கனிப்பொருள்கள் (minerals) போன்ற பொருள்களின்மீது விதிக்கப்படுகின்ற ராயல்டி (rayalty) குறித்து இந் நூலில் விளக்கம் தரவில்லை. ஏற்றுமதி வரி பற்றிய விளக்கங்கள் யாவும் ராயல்டிக்கும் பொருந்தும் என்பது குறிப்பிடத்தக்கது.

2. இலங்கையில் 1803 ஆம் ஆண்டுமுதல் 1854 ஆம் ஆண்டு முடிய ஏற்றுமதி வரி விதிக்கப்பட்டது.

மொத்த வருவாயில் ஏற்றுமதி வரிகளின்மூலம் கிட்டிய வருவாய் 25 சதவீதமாகும். கானு நாட்டில் இது 38 சதவீதமும் இலங்கையில் 27 சதவீதமும் ஆகும்.[1] இரண்டாம் உலகப் போருக்கு முன்பு ஏற்றுமதி வரி எங்கும் பெருமளவில் பழக்கத்தில் இருந்ததில்லை என்று நாம் நினைவுகூரும்போது இது வியக்கத்தக்க சாதனை என்றே சொல்லவேண்டும். பல அடிப்படைகளில் ஏற்றுமதி வரி விதிக்கப் பெறுகின்றது. குறிப்பிட்ட அளவு பொருளுக்குக் குறிப்பிட்ட தொகை வரி என்ற முறையில் சில நாடுகளில் இவ் வரி விதிக்கப்படுகின்றது. (உதாரணமாக, ஒரு டன் அளவுள்ள பொருளுக்கு x பவுன் வரித் தொகை தரவேண்டும் என்ற முறை கடைப்பிடிக்கப்படுகின்றது.) வேறு சில நாடுகளில் (உதாரணமாக மலேயாவில்) ஒரே விதத்தி லன்றி மாறிச் செல்லக்கூடிய விதத்தில் ஏற்றுமதி வரி விதிக்கப்பட்டு வருகின்றது; இந் நாடுகளில் பொருள்களின் விலை உயர உயர ஏற்றுமதி வரிவீதமும் அதற்கு ஏற்ப உயர்ந்து உயர்ந்து செல்லக் கூடியதாக அமைந்துள்ளது.

ஏற்றுமதிப் பொருள்களின்மீது விதிக்கப்படுகின்ற வரிக்கு ஆதரவாகப் பல கருத்துகள் வெளியிடப்பட்டுள்ளன. நிருவகிப் பதற்குச் சுலபமானது ஏற்றுமதி வரியே யாகும், இறக்குமதி வரி அன்று என்பது ஒரு கருத்தாகும். இறக்குமதி செய்யப்படுகின்ற பொருள்கள் ஒன்றோ இரண்டோ அல்ல, பலவாய் உள்ளன. இவை பல தரத்தனவாயும் உள்ளன. ஆனல், ஏற்றுமதிப் பொருள்களின் எண்ணிக்கை மிகப் பல என்று கூறுவதற்கில்லை. உதாரணமாக, கானு நாடு எண்ணிறந்த பொருள்களை இறக்குமதி செய்து வருகின்றது. ஆனல், கானு நாட்டின் முக்கியமான ஏற்றுமதிப் பொருள் ஒன்றே ஒன்றுதான்—அதுதான் கோகோ (cocoa) ஆகும். எனவே, இறக்குமதிப் பொருள்கள்மீது வரி விதித்து நிருவகித்து வருவதைவிட ஏற்றுமதிப் பொருள்களின்மீது வரி விதித்து நிருவகித்து வருவது கானு நாட்டைத் பொறுத்தவரையில் சுலப மான ஒன்று என்று கூறிவிடலாம். பொருளாதார அடிப்படையிலும் ஏற்றுமதி வரிக்கு ஆதரவு திரட்டமுடியும். பொருள்களை ஏற்றுமதி செய்கின்ற ஒரு நாடு அப் பொருள்களில் உலகச் சந்தையில் சர்வா தீனம் (monopoly) பெற்றுத் திகழுமேயாயின் ஏற்றுமதி வரிச்சுமை முழுவதையுமோ அல்லது பெரும் பகுதியையோ மொத்த விற்பனை பெரிதும் பாதிக்கப்படாத வகையில், அந்நிய நாட்டினர்மீது யாதொரு சிரமமுமின்றி எளிதில் சுமத்திவிட முடியும். எனினும், மிகச் சில நாடுகளே இவ்வாறு பல பொருள்களில் சர்வாதீனம் பெற்று விளங்குகின்றன என்பதை அறியவேண்டும். மேலும், தற்

1. 1959 ஆம் ஆண்டிற்கான 'U.N. Statistical Yearbook' ஐப் பார்க்கவும்.

போதைய நிலையே இதுவாயின், நெடுங்காலத்தில்—உலகச் சந்தையில் போட்டி பெரிதும் வளர வாய்ப்பு உள்ள காலத்தில்—நிலைமை எவ்வாருக இருக்கக்கூடும் என்பது கூருமலேயே விளங்கும். இது நிற்க, உற்பத்தியாளர்களின்மீது விதிக்கப்பெறுகின்ற வருமான வரியைவிட ஏற்றுமதி வரியே சாலச் சிறந்தது என்பது மற்ருெரு கருத்தாகும். வருமான வரியின்கீழ் உற்பத்தியாளர்கள் யாவரும் தங்கள் இலாபத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட விகிதத்தை வரியாகக் கொடுக்கின்றனர். ஆனல், ஏற்றுமதி வரியானது உற்பத்தியாளர் எத்தன்மையராயினும்—அவர் இறுதி நிலையினராயினும் அன்றி அதற்கு உட்பட்ட நிலையினராயினும்—குறிப்பிட்ட அளவு ஏற்றுமதிப் பொருளின்மீது ஒரு குறிப்பிட்ட வீதத்தில் விதிக்கப்பெறுகின்றது. எனவே, ஏற்றுமதி வரியே வருமான வரியைக் காட்டிலும் நன்மை பல பயக்கத்தக்கது என்று கூறப்படுகின்றது. ஏற்றுமதி வரி விதித்தபின் உற்பத்தியாளர் விதிக்கக்கூடிய நிகர விலை குறைந்தால் மற்றும் அவர்கள் ஈட்டக்கூடிய இலாபமும் குறைந்தால் நாம் மேலே விளக்கியுள்ள கருத்து வலிமையானதுதான் என்று கூறி விடலாம். ஆனல், பொதுப்படையாக இக் கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதுதானு என்பது ஐயப்பாட்டிற்குரிய ஒன்றேயாகும். ஏற்றுமதிப் பொருள்கள்மீது வரிவிதிப்பதற்கு ஆதரவாகவுள்ள மற்றுமொரு கருத்தைக் காண்போம். ஏற்றுமதி செய்யப்படுகின்ற பொருள்களின் அளவு உயருவதை ஒட்டியும் ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் உயருவதை ஒட்டியும் ஏற்றுமதியாளரின் வருமானம் அதிகரிக்குமேயாயின் அந்த மிகுதியான வருமானத்தை எதிர்பாராமல் வரக்கூடிய இலாபங்களாகவே (windfall gains) கருத வேண்டும். இதுபோன்ற சூழ்நிலையில் ஏற்றுமதிப் பொருள்களின் மீது வரி விதிப்பது மிகவும் விரும்பத்தக்கதாகும். இவ்வாறு ஏற்றுமதியாளர்கள் இலாபம் ஈட்டுவதானது அவர்களுடைய பொருள்களின் அளிப்பு நிலையில் (supply) ஏற்படக்கூடிய மாற்றங்களை ஒட்டியோ (பருவகால மாற்றத்தை ஒட்டியோ அல்லது உற்பத்தியாளர்களின் முயற்சி முனைப்பு ஆகியவற்றின் விளைவாகவோ அளிப்பு நிலையில் மாற்றங்கள் நேரக்கூடும்) அல்லது தேவை நிலையில் (demand) ஏற்படக்கூடிய மாற்றங்களை ஒட்டியோ நேரலாம். எனினும், அளிப்பு நிலை மாற்றங்களைவிட, தேவை நிலை மாற்றத்தை ஒட்டி ஏற்றுமதியாளர்கள் எதிர்பாராமல் வரக்கூடிய இலாபம் ஈட்டுவரேயாயின் இங்கு நாம் விளக்கியுள்ள விவாதம் மிகவும் ஏற்புடைத்தாகும். ஆனல், தேவை நிலையில் நேரக்கூடிய மாற்றங்கள் குறுங்காலத்தில் நிலவக்கூடியவை என்பதையும் நெடுங்காலத்தில் நீடித்திருக்கக்கூடியவை அல்ல என்பதையும் நாம் உணர வேண்டும்.

ஏற்றுமதிப் பொருள்களின்மீது வரி விதிப்பது முறையாகாது என்பதற்கும் ஆதரவாகப் பல விவாதங்கள் உள்ளன. ஏற்றுமதிவரி எல்லாப் பொருள்களின்மீதும் விதிக்கப்படுவதில்லை; எனவே, இவ் வரியானது (அந்நிய நாட்டின்மீது ஏற்றுமதி வரிச்சுமை சாத்தப்படுகின்ற சந்தர்ப்பங்களைத் தவிர ஏனைய சந்தர்ப்பங்களில்) வரி விதிக்கப்பட்ட பொருள்கள் வரி விதிக்கப்படாத பொருள்கள் என்ற வேறுபாட்டை ஏற்படுத்தி, வரி விதிக்கப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்வோருக்குப் பாதகமாகவும், வரி விதிக்கப்படாத பொருள்களை உற்பத்தி செய்வோருக்குச் சாதகமாகவும் அமையக்கூடியதாகும். இதன் விளைவாக நாட்டில் செல்வ வளங்கள் பயன்படுத்தப்படும் முறையில் மூவகையான மாற்றங்கள் நேரலாம். முதற்கண், அயல் நாடுகட்கு ஏற்றுமதி செய்வதால் நேரக்கூடிய வரிச்சுமையை தவிர்ப்பதற்காக அப் பொருள்களை உள்நாட்டிலேயே விற்பனை செய்ய முயலலாம்; அல்லது தவருன வழிகளைக் கையாண்டு வரிச் சுமையினின்றும் தப்பித்து அயல்நாடுகட்கு ஏற்றுமதி செய்ய முயலலாம். இரண்டாவதாக, அயல்நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்ற பொருள்கள் எவற்றின்மீதாவது வரி விதிக்கப்பெற்றிருந்தால் அப் பொருள்களை உற்பத்தி செய்வதற்காகச் செல்வ வளங்களைப் பயன்படுத்தலாம். மூன்ருவதாக, வெளிநாடுகட்கு ஏற்றுமதியாகும் எல்லாப் பொருள்களின்மீதும் வரி விதிக்கப்படும்பட்சத்தில் உற்பத்தியாளர்கள் உள்நாட்டில் தேவை மிகுந்துள்ள வேறு பொருள்களைத் தயாரிக்கும் முயற்சியில் தலைப்படலாம். இதன் விளைவாக ஜீவன மட்டப் பொருளாதாரத்தின் (subsistence sector of the economy) பரப்பு விரிய நேரலாம். இவ் விஷயங்கள் குறித்து அண்மைக்காலத்தில்[1] பல அறிஞர்கள் விரிவாக விவாதித்துள்ளனர். எனவே, இவற்றை நாம் இங்கு விரிவாக ஆராயவேண்டுவதில்லை. இருப்பினும், ஏற்றுமதி வரி உற்பத்தியாளரின் முனைப்பைப் பாதிக்கக்கூடிய ஒன்ருகலின் வருவாய் கருதி இவ் வரியையே பெரிதும் சார்ந்திருப்பது விரும்பத்தக்கதன்று என்று குறிப்பிட விரும்புகிரேம். இவை தவிர, ஏற்றுமதி வரி நேர்மையின் (equity) பாற்பட்டதன்று என்றும் இதற்கு எதிராக விவாதிக்கப்படுகின்றது. பெருமளவு வருமான உயர்வு பெற்றுள்ள மக்களின்மீது அதிக வரிவிதிப்பது குறுங்காலத்தில் (short run) தவறன்று என்பது உண்மைதான். எனினும், என்றென்றும் பிறரைவிட இவர்களே அதிக வரிச்சுமையைத் தாங்க வேண்டும் என்று கூறுவதில் நியாயமில்லை. வேறு

[1] உதாரணமாக, சில புத்தகங்களை இங்கு குறிப்பிடலாம். அவை வருமாறு—
(1) P. T. Bauer and B. S. Yamey—'The Economics of Underdeveloped Countries'' (Nisbet and Cambridge University Press, 1957), Chap. XIII.
(2) R. Nurkse—'Trade Fluctuations and Buffer Policies of Low Income Countries' Kyklos, 1958.

வகையாகவும் இதைக் கூறலாம். கடந்த காலத்தில் சில குறிப்பிட்ட பொருள்களை உற்பத்தி செய்துவந்தவர்கள்மீது, பிறர்மீது விதிக்கப் பட்டதைவிட அதிகமான வரி விதிக்கப்பட்டமைக்கு சில அடிப் படைக் காரணங்கள் இருந்தன. உதாரணமாக, பெரும்பான்மை யான பின்தங்கிய நாடுகளில் ஏனையோர்மீது விதிக்கப்பட்ட வரியைக் காட்டிலும் அதிகமான வரி விவசாயிகளின்மீது விதிக்கப் பட்டன. இதற்கான காரணத்தைக் கற்பிக்க முன்வருவோர் இவ் வாறு வாதிடலாம்: 'விவசாயிகளின்மீது வருமான வரியை விதித்து அதைச் செம்மையாகச் செயலாற்ற இயலவில்லை. எனவே, வருமான வரிக்கு ஈடாக ஏற்றுமதி வரி விதிக்கப்படுகிறது. இது நியாயமானதே யாகும்.' இங்கு நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான குறிப்பு ஒன்றுளது. நாட்டின் மொத்த உற்பத்தியின்மீதா ஏற்றுமதி வரி விதிக்கப்படுகின்றது? இல்லையே. உள்நாட்டில் விற்பனைசெய்யப் படாத உற்பத்தியின்மீது மட்டும்தானே இவ் வரி விதிக்கப்பெறு கின்றது. எனவே, வருமான வரிக்குப் பதிலாக ஏற்றுமதி வரி விதிப் பதால் ஒருசில உற்பத்தியாளர்மட்டுமே வரி விதிப்பிற்கு ஆளாவர். ஏனையோர் இவ் வரிச்சுமையை ஏற்பதில்லை. எனவே, ஏற்றுமதி வரி யானது வருமான வரிக்குச் சிறந்ததோர் பதில் வரியாக அமைய முடியாது என்பதையும் ஏற்றுமதி வரியானது ஓரளவுக்குமட்டிலுமே வருமானவரிக்குப் பதில்வரியாக அமையமுடியும் என்பதையும் உணர வேண்டும்.

எதிர்பாராமல் வரக்கூடிய இலாபங்கள் (windfall gains) கிடைக்கக்கூடிய காலங்களில் ஏற்றுமதி வரி நிமித்தம் உற்பத்தி யாளர்கள் பெருந்தொகையை வரியாகச் செலுத்தவேண்டிவரும். இதன் விளைவாக இவர்களின் நுகர்வு (consumption) பாதிக்கப் படுவதைவிட சேமிப்பு—அதாவது, தனியார் சேமிப்பு (private saving)—ஓரளவுக்குப் பாதிக்கப்படலாம்.[1] தனியார் சேமிப்பை ஊக்குவிப்பது உகந்ததா அன்றி பொதுச் சேமிப்பை (public saving) ஊக்குவிப்பது சிறந்ததா என்று இங்கு நாம் ஆராய முற்பட்டால் பல அடிப்படை வினாக்கள் எழும்; அவற்றை விவாதித்து விடை யிறுப்பது இந்தப் புத்தகத்தின் நோக்கத்திற்குப் புறம்பானதாகும். எனவே, அவற்றை விவாதிக்காமல் விடுகிறோம். எனினும், பின் தங்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை துரிதப்படுத்து முகத்தான் தனியார் சேமிப்பை ஊக்குவிக்க வேண்டுவது இன்றி

1. நைஜீரியாவில் கோகோ (cocoa) உற்பத்தி செய்யும் விவசாயிகளின் இறுதிநிலை சேமிப்பு நாட்டம் (marginal propensity to save) அதிகமானது என்று சிறந்த உதாரணங்கள் காட்டி கீழே தந்துள்ள புத்தகத்தில் விளக்கப் பெற்றிருக்கின்றது—**Galletti, Baldwin and Dina 'Nigerrian Cocoa Farmers' (Oxford University Press, Oxford, 1956), pp. 461—2.**

யமையாததுதான் என்று கருதினுல் ஏற்றுமதி வரியின்மூலம் பெரு மளவு வருவாய் திரட்ட முயலுவது சரியான முறையன்று என்றே தோன்றுகிறது.

ஏற்றுமதிப் பொருள்களின் மொத்த அளவு, விலை ஆகிய வற்றில் நேரக்கூடிய ஏற்றத் தாழ்வுகளை ஒட்டி ஏற்றுமதி வரியின் மூலம் கிடைக்கக்கூடிய வருவாயும் ஏற்றத்தாழ்வுறும். ஏற்றுமதிப் பொருள்களின் மொத்த அளவு, விலை ஆகியவை எந்த அளவு ஏற்றத்தாழ்வுகட்கு உள்ளாகின்றனவோ அதைவிட அதிகமாகவே ஏற்றுமதி வரியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் ஏற்றத்தாழ்வு கட்கு உள்ளாகலாம். பின்தங்கிய நாடுகளின் ஏற்றுமதிகள் நிலைத்த தன்மை உடையன அல்ல என்பதுகுறித்து ஏற்கெனவே கண்டோம். எனவே, ஏற்றுமதி வரியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாயும் நிலை யான ஒன்ருக இருக்க முடியாது; ஆண்டிற்கு ஆண்டு மாறி மாறியே அமையக்கூடியதாகும்.[1] அரசாங்கத்தின் மொத்த வருவாயில் ஏற்றுமதி வரிகளின் மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் சுமார் மூன்றில் ஒரு பங்கு என்று நாம் அறியும்போது, அரசாங்கத் தின் மொத்த வருவாய் பெருமளவு ஏற்ற இறக்கங்கட்கு உள்ளாக நேரும் என்பது நாம் கூருமலேயே விளங்கும். இவ் வாருன மாற்றங்கள் விரும்பத்தக்கவையே. உள்நாட்டில் விலை, வருமானம் ஆகியவற்றில் நேரக்கூடிய ஏற்றஇறக்கங்கட்கு ஈடுகட்ட மிகவும் உகந்தவை—என்று வாணிபச் சூழலைக் (trade cycle) கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் கெயின்ஸ் (Keynes) போன்ருேர் வலியுறுத்தி வருகின்ற வரிக்கொள்கையின் (fiscal policy) அடிப் படையில் கூறத் தோன்றலாம். எனினும், அரசாங்க நிதி வசூல் என்ற கோணத்திலிருந்து நோக்குங்கால் ஏற்றுமதி வரியினுல் விளை யக்கூடிய மாபெரும் ஏற்றத்தாழ்வுகள் விரும்பத்தக்கவை அல்ல என்றே எண்ணத் தோன்றுகிறது. இவை குறித்து மீண்டும் அத்தி யாயம் ஐந்தில் காண்போம்.

**விற்பனை நிறுவனங்கள்** (Marketing Boards)

இரண்டாவது உலகப்போர் நடைபெற்றுக்கொண்டிருந்த காலத்திலும் அதற்குப் பின்பும் பல நாடுகள் விற்பனை நிறுவனங்களை ஸ்தாபித்துள்ளன. இவை முழு அளவிலான அரசாங்க ஸ்தாபனங் கள் அல்ல; ஓரளவுக்கே அதிகாரபூர்வமானவை. ஏற்றுமதிப் பொருள்கள் சிலவற்றில் இவை சட்டபூர்வமான சர்வாதீனம்

1. உதாரணமாக, இலங்கையில் 1953 ஆம் ஆண்டிற்கும் 1956 ஆம் ஆண்டிற் கும் இடைப்பட்ட காலத்தில் ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பு 11 சதவிதம் குறைவுற்றது; ஆனுல், ஏற்றுமதி வரிகளின்மூலம் கிடைத்துவந்த வருவாய் 19 சதவிதம் குறைந்தது.

(statutory monopoly) பெற்றுத் திகழுகின்றன. உற்பத்திப் பொருள் களின் விலைகளை நிர்ணயிப்பது, உலகச் சந்தையில் நிலவக்கூடிய விலைகட்கும் உள்நாட்டில் நிலவக்கூடிய விலைகட்கும் இடையே தோன்றக்கூடிய வேறுபாடுகளை ஒட்டி சரக்குகளை இருப்பாகச் சேர்த்து வைத்திருப்பது, சேர்த்து வைக்கப்பட்ட இருப்புச் சரக்கு களைப் பயன்படுத்தி உற்பத்திப் பொருள்களின் விலையைத் தூண்டி விடுவது—ஆகிய பணிகளை இந் நிறுவனங்கள் ஆற்றிவருகின்றன. பிரிட்டனுக்குச் சொந்தமான நான்கு மேற்கு ஆப்பிரிக்க நாடுகள் (கானு, நைஜீரியா, சியரே லியோன் மற்றும் கேம்பியா) இந் நிறு வனங்களை ஸ்தாபித்துள்ளன. கிழக்கு ஆப்பிரிக்கா, மத்திய ஆப்பிரிக்கா (உதாரணமாக, உகாண்டாவும் நயாசாலந்தும்) ஆகிய பிரதேசங்களிலும் மற்றும் பல்வேறு நாடுகளிலும் இந் நிறு வனங்கள் ஸ்தாபிக்கப்பட்டுள்ளன.

விற்பனை நிறுவனங்களின் நிதி நடவடிக்கைகள் அரசாங்க வரவு செலவுக் கணக்குகளில் இடம் வகிப்பதில்லை. எனவே, அரசாங்க பொதுநிதியின்கீழ் இந் நிறுவனங்களின் நடவடிக்கைகளைத் தொகுத் துரைப்பது பொருந்தாது என்று வாதிட இடமுள்ளது. எனினும், இந் நிறுவனங்கட்கும் அரசாங்கத்திற்கும் இடையே நெருங்கிய நிருவாகத் தொடர்புகள் உள்ளன என்பதையும் இந் நிறுவனங்கள் தம் இச்சைப்படி செயலாற்றும் சுதந்திரம் பெரிதும் அற்றவை என் பதையும் நாம் அறிய வேண்டும். மற்றும் நெடுங்காலமாக இந் நிறு வனங்கட்கும் ஏற்றுமதி வரிகட்கும் இடையே நெருங்கிய தொடர்பு உள்ளது. விற்பனை நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டதை ஒட்டியே சில நாடுகளில் ஏற்றுமதி வரி விதிக்கும் முறை உருவாகியது என்று கூடச் சொல்லலாம். மேலும், இந் நிறுவனங்கள் ஈட்டக்கூடிய உபரித் (surplus) தொகைக்கும் ஏற்றுமதி வரிகட்கும் இடையே பொருளா தார அடிப்படையில் மிக நெருங்கிய தொடர்பு உள்ளது. எனவே, விற்பனை நிறுவனங்கள்குறித்து ஒருசிறிது விவாதிப்பது பொருத்த மானதேயாகும்.

ஏற்றுமதி வரிகட்கு ஆதரவாக உள்ள விவாதங்களில் பல விற்பனை நிறுவனங்கட்கும் பொருந்தக்கூடியவையேயாகும். உற் பத்தியாளர்களின் விலையைவிட அயல் நாடுகளில் அதிகமான விலைக்கு இந் நிறுவனங்கள் பொருள்களை விற்றுவருகின்றன; நிரு வாக ரீதியாகப் பார்க்கும்போது இது மிகவும் எளிதான செயலே யாகும் என்றும், உள்நாட்டில் விலைவாசிகள் வருமானங்கள் ஆகிய வற்றில் நேரக்கூடிய மாற்றங்களைக் கட்டுப்படுத்துவதற்கு விற்பனை நிறுவனங்கள் ஓர் உகந்த சாதனம் என்றும், எதிர்பாராமல் வரக் கூடிய இலாபங்களின் (windfall gains) மீது அதிகமான வரியைச்

சுமத்துவது நியாயமானதேயாகும் என்றும் விற்பனை நிறுவனங்களின் நடவடிக்கைகட்கு ஆதரவாகப் பல விவாதங்கள் தரப்படுகின்றன. எனினும், பொருளாதாரத் திறன் (efficiency) நேர்மை (equity) என்ற கோணங்களினின்றும் நோக்குங்கால் நாம் இங்கு குறித்துள்ள விவாதங்கள் பெரும் வரையறைகட்கு உட்பட்டவையேயாகும் என்பது உண்மை.

சில சமயங்களில் விற்பனை நிறுவனங்களின் நடவடிக்கைகளால் ஏற்படக்கூடிய விளைவுகள், ஏற்றுமதி வரி விதிப்பதால் ஏற்படக்கூடிய விளைவுகளினின்றும் வேறுபட்டுத் திகழலாம். உதாரணமாக, ஒரே ரகத்தைச் சேர்ந்த கோகோ (cocoa), பனை இன எண்ணெய் (palm oil) ஆகிய பொருள்களின்மீது, குறிப்பிட்ட அளவு பொருள்மீது குறிப்பிட்ட வீதத்தில் ஏற்றுமதி வரி விதிக்கப்பெறுகின்றது. இதனால் நேரக்கூடிய விளைவுகள் சிக்கல் ஏதுமற்றவையாகும். ஆனால், வியாபார நிறுவனங்களின் நடவடிக்கைகளால் ஏற்படக்கூடிய விளைவுகளும் இத்தன்மையன என்று பொதுவாகக் கூறுவதற்கில்லை. விற்பனை நிறுவனங்களின் நடவடிக்கைகள் நாட்டில் எந்த அளவுக்குப் பரவியுள்ளன என்பதைப் பொறுத்தே அவற்றினால் ஏற்படக்கூடிய விளைவுகள் அமைகின்றன. உதாரணமாக, துறைமுகத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ள பொருள்களை விற்பனை நிறுவனம் விலை கொடுத்து வாங்குவதை ஒட்டி, நேரக்கூடிய விளைவுகள்—அதாவது, உற்பத்தியாளர்களின்மீது நேரக்கூடிய விளைவுகள்—ஏற்றுமதி வரி விதிப்பதால் உற்பத்தியாளர்கள் எவ்வாறு பாதிக்கப்படுவரோ அவற்றைப் பெரும்பாலும் ஒத்தே இருக்கும். ஆனால், துறைமுகத்தைச் சார்ந்துள்ள உள்நாட்டுப் பிரதேசங்களில் பொருள்களின் விலைகளை நிர்ணயித்து அவற்றை விற்பனை நிறுவனங்கள் வாங்கும் பட்சத்தில் உற்பத்தி முறை, உற்பத்தி அமைப்பு, உற்பத்தி இலக்கு ஆகியவற்றில் நேரக்கூடிய மாற்றங்கள் முற்றிலும் வேறுபட்டவையாகவே இருக்கும். இவ் விஷயத்தைப் பேராசிரியர் பாயர்[1] (Professor Bauer) தீர்க்கமாக ஆராய்ந்துள்ளார். எனவே, இங்கு விரிவான விளக்கம் தேவையில்லை. ஏற்றுமதி வரிகளால் நேரக்கூடிய விளைவுகளும் விற்பனை நிறுவனங்களின் நடவடிக்கைகளால் ஏற்படக்கூடிய விளைவுகளும் பல்லாற்றானும் வேறுபடலாம் என்பதைச் சுட்டிக்காட்டவே இங்கு இவ் விஷயத்தை ஓரளவுக்கு விவாதித்தோம்.

விற்பனை நிறுவனங்களின் நடவடிக்கைகட்கான காரண விளக்கம் மிகவும் இன்றியமையாததோர் விஷயமாகும். இவ் விஷயம்

[1]P. T. Bauer எழுதியுள்ள 'West African Trade' (Cambridge University Press, Cambridge, 1954), Part 5ஐப் பார்க்கவும்.

குறித்து அண்மைக்காலத்தில் பெருமளவு எழுதப்பட்டுள்ளன. இங்கு நாம் இவ் விஷயத்தின் ஒருசில அம்சங்களை மட்டும் ஆராய் வோம். நெடுங்காலத்திலும் (long period) பெருமளவு தொகையை உபரியாக விற்பனை நிறுவனங்கள் ஈட்டிக்கொண்டிருப்பது நியாய மானதுதானு? என்பதே நாம் விவாதிக்க வேண்டிய முக்கிய வினுவா கும். 'நெடுங்காலம்' என்ற சொற்றொடர் திட்டவட்டமான பொருளை உணர்த்தக்கூடியதன்று என்பதும் இச் சொற்றொடரைப் பல பொருள்படப் பயன்படுத்த முடியும் என்பதும் உண்மைதான். இருப் பினும், விவாதத்தைத் தொடங்கி வைப்பதற்காக இச் சொற்றொடரை ஆளுவது தவறன்று என்று தோன்றுகிறது. ஆண்டுதோறும் உபரித் தொகையை ஈட்டியவண்ணமிருப்பின் விற்பனை நிறுவனங்கள் எங்ஙனம் ஏற்றுமதி வரிகளைவிட வேறுபட்டவையாக இருக்க முடியும்? இரண்டிற்கும் வேறுபாடு இல்லாதொழியும் என்றே கொள்ளவேண்டும். நிலையான ஏற்றுமதி வரித் திட்டம் நாட்டில் என்ன பங்கு பெற்றுத் திகழுமோ அதே பங்கினையே விற்பனை நிறு வனங்கள் ஈட்டக்கூடிய உபரித் தொகையும் பெற்றுத் திகழும் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. ஆனல், அரசாங்கத்தின் நேரடிக் கட்டுப்பாட்டிற்கு உட்படாத ஒரு ஸ்தாபனமே விற்பனை நிறுவனம் என்பதையும் இதனுடைய நிதி நடவடிக்கைகள் அரசாங்க வரவுசெலவுக் கணக்குகளில் அங்கம் பெறவில்லை என்பதையும் நினைவுகூர்தல் மிக அவசியமாகும். உற்பத்தியாளர்களின் நன்மைக் காகவே விற்பனை நிறுவனங்கள் ஸ்தாபிக்கப்பட்டவை என்று சிலர் வாதிட முனையலாம். இவர்கள் கூற்று உண்மையேயாயின் விற்பனை நிறுவனம் உற்பத்தியாளர்களின் தர்மகர்த்தாவாகத் (trustee) திகழ வேண்டுமல்லவா? இவ்வாறே திகழுகின்றது என்று வைத்துக் கொண்டால் தற்காலிகமாக ஏதாவது ஒரு குறிப்பிட்ட ஆண்டில் உபரித் தொகை—அதாவது, நியாயமாக உற்பத்தியாளருக்குச் சேர வேண்டிய பணத்தை உபரித் தொகை என்ற பெயரில்—ஈட்டுவதில் தவறில்லை. ஆனல், என்ஞான்றும் உபரித்தொகை ஈட்ட முற்படின் அது எங்ஙனம் உற்பத்தியாளரின் தர்மகர்த்தாவாகத் திகழமுடியும்? என்ஞான்றும் விற்பனை நிறுவனம் உபரித் தொகை ஈட்டிக்கொண் டிருப்பது தவறில்லை என்று வாதிடுவோருக்கு நாம் ஒன்று கூற விரும்புகிறேம்—இவ்வாறு இவர்கள் கூறுவதானது தன்னுடைய வரி விதிக்கும் உரிமையை ஏனையோருக்கும் அரசாங்கம் பங்கிட்டுக் கொடுப்பதில் தவறு ஒன்றும் இல்லை என்று கூறுவதை ஒக்கும். கொள்கை அடிப்படையில் இக் கருத்தை ஏற்றுக்கொள்ளவே முடி யாது. அரசாங்கத்தின் நேரடிக் கட்டுப்பாட்டின்கீழும் வராது, வரி விதிக்கும் உரிமையும் ஒரு நிறுவனம் பெற்றுத் திகழ்வதென்பது முறைகேடானதாகும். ஒரு நிறுவனம் வரி விதிக்கக்கூடிய உரிமை கள் பெற்றுத் திகழுமேயாயின் அது கட்டாயம் அரசாங்கத்தின் ஓர்

அங்கமாக விளங்க வேண்டும்; இவ்வாறன்றி அரசாங்கத்தின் நேரடிக் கட்டுப்பாட்டின்கீழ் அந் நிறுவனம் இயங்கி வருவது உசித மானதன்று என்று கருதினுல், அது யாருடைய நலன் கருதி நிறுவப் பெற்றிருக்கின்றதோ அன்னுர்மீது—அதாவது, உற்பத்தியாளர் களின்மீது—வரி விதித்துக்கொண்டிருக்கக்கூடிய நிரந்தர ஸ்தாபன மாகத் திகழக்கூடாது.

மேலே நாம் விளக்கம் தந்துள்ள வாதம் உண்மையேயாயின்—அது உண்மையானதுதான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை—அதைச் சார்ந்து எழக்கூடிய மற்றெரு விஷயத்தை நாம் இங்கு விவாதிக்க வேண்டியுள்ளது. விற்பனை நிறுவனம் திரட்டி வைத் திருக்கக்கூடிய உபரித்தொகையை உற்பத்தியாளர்கள் மீது விதிக்கப்பெற்ற வரித்தொகை என்று கொள்வதில் தவறு ஏதுமில்லை. எனினும், சுலபமாக இவ்வாறு உற்பத்தியாளருக்கு—அதாவது விற்பனை நிறுவனம் கையாளக்கூடிய பொருள்களைத் தயாரிக்கும் உற்பத்தியாளருக்கு—நேரக்கூடிய வரிச் சுமையை ஒரு குறிப்பிட்ட காலத்தில் தீர்மானித்துவிட முடியாது. ஏனெனில், விற்பனை நிறுவனம் திரட்டிவைத்திருக்கக்கூடிய காப்பு நிதியின் (Reserve Fund) மதிப்பு என்றும் ஒரே படித்தாக இருக்கும் என்று கொள்வதற் கில்லை—அவை மூலதன இழப்புக்கோ (capital loss) அல்லது மூலதன இலாபங்களுக்கோ (capital gains) உள்ளாகலாம். மேலும், தன்னுடைய நிருவாகச் செலவு உற்பத்தியாளரின் நலம் கருதித் தான் செய்யக்கூடிய செலவு ஆகியவை தவிர, விற்பனை நிறுவன மானது தன்னிடமுள்ள பணத்தை வேறு பல காரியங்கட்காகவும் செலவிடலாம். உதாரணமாக, பல்கலைக் கழகங்கட்கு மான்யங் களாகவோ அல்லது தொழில் வளர்ச்சியை ஊக்குவிக்குமுகத்தான் தொழில்கட்கு மான்யங்களாகவோ செலவிடலாம். இவை நற் காரியங்கட்காகச் செய்யப்படுகின்ற செலவினங்கள்தாம் என்பதை மறுக்கவில்லை. எனினும், இவ்வாறுன செலவினங்கள் உற்பத்தி யாளர்களின்மேல்—அதாவது, விற்பனை நிறுவனங்கள் கையாளும் பொருள்களைத் தயாரிக்கும் உற்பத்தியாளர்களின்மேல்—சுமத்தப் படுகின்ற வரிச் சுமையேயாகும் என்பதை உணரவேண்டும். இவ் வாறுன செலவுகள் செய்வதில் விற்பனை நிறுவனம் ஈடுபடுமே யாயின் அதை உற்பத்தியாளர்களின் தர்மகர்த்தா என்று அழைப்பது சிறிதும் பொருந்தாததாகும்.

விற்பனை நிறுவனங்கள் தன்னுட்சி உரிமையுள்ள (autonomous) ஸ்தாபனங்களாகத் திகழவேண்டுமேயாயின், அவை என்றென்றும் வரி விதித்துக்கொண்டிருக்கக்கூடிய சாதனங்களாகத் திகழக் கூடாது என்ற பொதுவான கொள்கையை விளக்குவது எளிது;

ஆனல், நடைமுறையில் கடைப்பிடிப்பதென்பது அவ்வளவு எளிதானதொன்றன்று. ஏனெனில், விற்பனை நிறுவனங்கள் இலாபம் ஈட்டியுள்ள ஆண்டுகள் நஷ்டம் அடைந்துள்ள ஆண்டுகள் ஆகியவற்றைத் தனித்தனியே உறுதிப்பாடு செய்வதில் நடைமுறையில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. மேலும், உற்பத்தியாளர்கட்கு அளிக்கப்படுகின்ற விலையானது மார்க்கெட் விலையை விடக் குறைவானதாக இருக்கவேண்டுமா அல்லது அதிகமானதாக இருக்கவேண்டுமா என்பவற்றைத் தீர்மானிப்பதிலும் சில இடர்ப்பாடுகள் உள்ளன. இதுபோன்ற விஷயங்களில் குறையற்ற நிறைவு சாத்தியமில்லை என்பது உண்மையேயாயினும், நேரக்கூடிய குறைகள் பல படித்தரங்களை உடையனவாய் அமைந்துள்ளன.

கீழே தந்துள்ள சியரே லியோன் (Sierra Leone) நாட்டிற்கான அட்டவணை இதை நன்கு விளக்குகிறது:

| ஆண்டு | விற்பனை நிறுவனத்தின் வியாபார இலாபம் (+) அல்லது நஷ்டம் (—) (£ 000) |
|---|---|
| 1949 | + 516 |
| 1950 | + 831 |
| 1951 | + 1,525 |
| 1952 | + 403 |
| 1953 | + 107 |
| 1954 | + 104 |
| 1955 | — 121 |
| 1956 | — 181 |
| 1957 | — 55 |
| 1958 | + 247 |
| 1959 | + 836 |
| 1960 | + 275 |

மூலம்: (1) D. T. Jack, 'Economic Survey of Sierra Leone' (Government Printer, Sierra Leone, 1958)
(2) Sierra Leone Produce Marketing Board, 'Annual Report.'

**1950**-லிருந்து **1959**முடிய உள்ள காலத்தின் ஆரம்பப் பகுதியில் விற்பனை நிறுவனம் ஈட்டிய[1] உபரித் தொகையானது ஆண்டிற்கு ஆண்டு அதிகமாகிச் சென்றது என்பதை மேலே கொடுத்துள்ள அட்டவணையின்மூலம் அறியலாம். (**1951** ஆம் ஆண்டிற்கான

[1] விற்பனை நிறுவனத்தின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பொருள்களின்மீது ஏற்றுமதி வரியும் விதிக்கப்பெற்றது என்பதை அறிந்துகொள்க.

புள்ளிவிவரத்தை உற்றுநோக்கும்போது அவ் வாண்டில் தேசிய வருமானம் 30 மில்லியன் பவுன்களேயும்விடக் குறைவானது என்பதையும் அரசாங்கத்தின் மொத்த வருவாய் 4 மில்லியன் பவுன்களேயும்விடக் குறைவானது என்பதையும் கருத்தில் கொள்க.) ஆனுல், அண்மைக் காலத்தில் விற்பனே நிறுவனம் முன்பிருந்ததை விட நெகிழ்ச்சியான கொள்கையைக் கடைப்பிடித்து வந்துள்ளது என்பதையும் அட்டவணே புலப்படுத்துகிறது. சியரே லியோன் நாட்டிலுள்ள விற்பனே நிறுவனத்தைப் பொறுத்தமட்டிலுமன்றி ஏனைய பின்தங்கிய நாடுகளிலுள்ள விற்பனே நிறுவனங்களேப் பொறுத்தமட்டிலும்கூட இது உண்மையேயாகும். இது நிற்க. குறிப்பிடத்தக்க ஓர் விஷயத்தை இங்கு நாம் கூற விரும்புகிரும். சியரே லியோனில் 1950-லிருந்து 1959-க்கு இடைப்பட்ட காலத்தில் ஒரே ஒரு பொருளின் உற்பத்திமட்டுமே எதிர்பார்த்த அளவுக்கோ அல்லது எதிர்பார்த்த அளவினேவிட அதிகமாகவோ பெருகியது. அப் பொருள் காப்பி ஆகும். விற்பனே நிறுவனத்தின் ஆட்சிக்கு அக் காலத்தில் காப்பி உட்பட்ட பொருளன்று என்று நாம் குறிப்பிட்டால் வியப்புத் தோன்ருமல் இருக்கமுடியாது. காரண காரியத் தொடர்பு ஏற்படுத்தி எந்தப் பிரச்சினேயையும் அணுகும்போது பல தரப்பட்ட, மாற்றமுறக்கூடிய காரணிகள் (variables) இயங்கிக் கொண்டிருக்கக்கூடும் என்பதையும், எனவே எந்த இரண்டு பொருள்கட்கும் இடையே உறுதியான காரண காரியத் தொடர்பினேச் சுலபமாக ஏற்படுத்திவிடமுடியாது என்பதையும் உணர வேண்டும். விற்பனே நிறுவனங்கள் கெடுபிடியான கொள்கைகளே அநுசரிக்கவேண்டும் என்று ஆணித்தரமான நம்பிக்கை உடையோர் மேலே நாம் குறிப்பிட்ட விஷயத்தை—அதாவது, சியரே லியோன் நாட்டில் விற்பனே நிறுவனத்தின் ஆட்சியின்கீழ் வராத காப்பியின் உற்பத்தி பெருகியதை—விளக்க முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிருேம்.

### செய்பொருள் வரிகள் (Excise Taxes)

செய்பொருள்கள், சாராயம், புகையிலே ஆகிய பல பொருள்களின்மீது வழிவழியாகச் செய்பொருள் வரி விதிக்கப்பட்டு வருகின்றது. பின்தங்கிய நாடுகளில் செய்பொருள் வரியின்மூலம் அரசாங்கத்திற்குத் தற்சமயம் பெரும் வருவாய் கிடைத்து வருகின்றது என்று கொள்வதற்கில்லே. ஏனெனில், பெரும்பான்மையான நாடுகளில் செய்பொருள்களின் உள்நாட்டு உற்பத்தி மிகக் குறைந்த அளவினதாகவே உள்ளது. இத் தன்மைத்தான பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கும் முயற்சியில் பல நாடுகள் ஈடுபட்டுள்ளன. இப் பொருள்களின் உள்நாட்டு உற்பத்தியை

ஊக்குவிப்பதே அரசாங்கத்தின் கொள்கையாக இருக்கும்பட்சத்தில் உள்நாட்டில் தயாரிக்கப்படுகின்ற பொருள்கட்கு பெரும்பாலும் வரி விலக்கு அளிக்கப்படலாம்; இந் நாடுகள் இறக்குமதி செய்யக்கூடிய செய்பொருள்களின்மீதுமட்டிலும் இவ் வரி விதிக்கப்பெறலாம். இது நிற்க. இந் நாடுகளில் தயாரிக்கப்படுகின்ற செய்பொருள்கள் ஒரு சிலவே என்பது உண்மையேயாயினும் இச் சில பொருள்களின் உற்பத்தி அளவு குறைவானது என்று கொள்வதற்கில்லை. பல சிறு தொழிற்சாலைகள் இப் பொருள்களை உற்பத்தி செய்துவருகின்றன. இவ்வாருன பல சிறு தொழிற்சாலைகளின்மீது செய்பொருள் வரியை விதித்து வசூல் செய்து நிருவகிக்கும் வகையில் அரசாங்கத்திற்குப் பெரும் செலவுகள் நேரலாம். இதற்கு உதாரணமாக இந் நாடுகளில் தயாரிக்கப்படுகின்ற சாராயத்தைக்—குறிப்பாக மேற்கு இந்தியத் தீவுகளில் தயாரிக்கப்படுகின்ற வெல்லச் சாராயம் (rum) போன்றவற்றை—கூறலாம். இந் நாடுகளில் அதிக அளவு செய்பொருள் வரி விதிப்பது நியாயமானதேயாகும் என்று கொள்கை அளவில் கருதமுடியும். எனினும், இதனுல் வரிகொடாது அரசாங்கத்தை ஏமாற்றும் முயற்சிகள் இந் நாடுகளில் பெருக நேரலாம். ஆனுல், இவ்வாருன கேடுகளைத் தடுக்கவே முடியாது என்று கூறுவது பொருந்தவே பொருந்தாது.

தற்சமயம் செய்பொருள் வரியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் பின்தங்கிய நாடுகளில் ஒரு சிறு அளவினதேயாகும். எனினும், நெடுங் காலத்திலும் நிலைமை இவ்வாறே நீடித்துவிடாதவாறு பார்த்துக்கொள்ளவேண்டும். பொருளாதார முன்னேற்றத்திற்கு ஏற்ப, குறிப்பாக உள்நாட்டில் உற்பத்தியாகக்கூடிய சாராயம் புகையிலை போன்ற பொருள்களின்மீது விதிக்கப்பெறுகின்ற செய்பொருள் வரிகள்மூலம் அதிகமான வருவாய் கிடைப்பதற்கான ஏற்பாடுகளைத் தவருமல் செய்யவேண்டும். இவ்வாறு இவற்றின்மூலம் கிடைக்கக்கூடிய வரித் தொகையைப் பெருக்கமுனைவதால் இப் பொருள்களை உற்பத்தி செய்யும் மக்களின் ஆர்வம் குன்றிவிட நேரலாம் என்று அஞ்சவேண்டுவதில்லை. நன்கு வளர்ச்சியுற்றுள்ள நாடுகளின் வரலாற்று ஏடுகளை நாம் புரட்டிப் பார்ப்போமேயானுல் இவ் வுண்மை புலனுகும்.

**விற்பனை வரிகள் (Sales Taxes)**

பெரும்பான்மையான நாடுகளில் நிலையான வருவாய் தரக்கூடிய சாதனமாக விற்பனை வரிகள் விளங்குகின்றன. இவை மொத்த விற்பனையின்மீதோ அல்லது சில்லறை விற்பனையின்மீதோ விதிக்கப்பெறுகின்றன. உதாரணமாக, பிரிட்டனில் பல பொருள்களின் மொத்த விற்பனையின்மீது விதிக்கப்பெறுகின்ற கொள்முதல்

வரியானது (purchase tax) ஓராண்டில் சுமார் 500 மில்லியன் பவுன் பெருமானமுள்ள வருவாயை ஈட்டித்தருகின்றது. இது மறைமுக வரிகளின்மூலம் கிடைக்கக்கூடிய மொத்த வருவாயில் 20 சதவீதமாகவும், மத்திய அரசாங்கத்தின் மொத்த வருவாயில் 8 சதவீதமாகவும் உள்ளது.

சில்லறை விற்பனையின்மீது விதிக்கப்பெறுகின்ற விற்பனை வரி முறையில் பல குறைபாடுகள்—கடத்தற்கு அரிய குறைபாடுகள்—உள்ளன. பிரிட்டனில்கூட கொள்முதல் வரியை (purchase tax) சில்லறை விற்பனையின்மீது விதிப்பதென்பது இன்றும் சாத்தியமில்லை என்றே கருதப்படுகின்றது. பெருமளவு சில்லறை விற்பனை நிலையங்கள் இருப்பதும் (பிரிட்டனில் 6,00,000 சில்லறை விற்பனை நிலையங்களும் 60,000 மொத்த விற்பனை நிலையங்களும் உள்ளன என்று மதிப்பிட்டுள்ளனர்) சில்லறை விற்பனையாளர்கள் தங்களுடைய கணக்குகளை ஒழுங்காக வைத்திருக்கக்கூடிய ஆற்றல் அற்றிருப்பதும் இதற்கான காரணங்களாகும். பிரிட்டன் போன்ற நாட்டிலேயே நிலைமை இவ்வாருயின், வளர்ச்சியுருத நாடுகளில் இது போன்ற இடர்ப்பாடுகள் எந்த அளவுக்கு இருக்கக்கூடும் என்பது கூருமலேயே விளங்கும். பின்தங்கிய நாடுகளில் நிலவிவருகின்ற சில்லறை விற்பனைமுறை பெரும்பாலும் சிக்கல்நிறைந்த ஒன்ருகவே உள்ளது. சில்லறை விற்பனையில் இந் நாடுகளில் பல படித்தரங்கள் உள்ளன. மேலும், பெரும்பான்மையான மக்கள் சில்லறை விற்பனையில் ஈடுபட்டுள்ளனர். மூலதனப் பற்ருக்குறையினுலும் ஏனைய செல்வ வளங்கள் அருகியுள்ளமையாலும் இந் நாடுகளின் பொருளாதார அமைப்பில் வேறு பகுதிகளில் வேலை வாய்ப்புகள் அருகி இருப்பதால் சில்லறை வியாபாரத்தில் பெரும்பான்மையோர் ஈடுபட்டிருக்கின்றனர். கல்வியறிவு இன்மை விற்பனைக் கணக்குகளைச் செம்மையாக வைத்திருக்கக்கூடிய ஆற்றலின்மை போன்ற குறைபாடுகள் ஒருபுறம் இருக்க, இவ்வாறு சில்லறை வியாபாரிகளின் எண்ணிக்கை பெரிதும் அதிகமாக இருப்பது பெருங் குறையாக உள்ளது. இதனுல் நாடு முழுவதிலும் ஒரே சீராக விற்பனை வரியை விதிப்பது சாத்தியமில்லை என்று எண்ணத் தோன்றுகிறது. எனவே, நாட்டில் சில குறிப்பிட்ட பகுதிகளில் மட்டுமே விற்பனை வரி விதிக்கப்படவேண்டும் என்றும் கூறத் தோன்றுகின்றது. ஆனுல், இவ்வாறு நாட்டில் சில குறிப்பிட்ட பகுதிகளில்மட்டும் (உதாரணமாக, பெரிய நகரங்களில் அல்லது பெரிய வியாபார நிலையங்களின்மீது) விற்பனை வரி விதிப்பதானது ஒரு சாரார்மீது மட்டிலும் வரிச்சுமையைச் சுமத்துவதாக முடியும். இவை தவிர, பொருள்களை விற்பனைசெய்கின்ற அலகுகளும் (units) மிகச் சிறியனவாக உள்ளன. உதாரணமாக, வாசனைப் பொருள்கள்

விற்பனை செய்யப்பட்டு வருகின்ற அலகு துளிகளாகவும் (Drops) சிகரெட்டுகள் விற்பனை செய்யப்பட்டு வருகின்ற அலகு ஒரு சிகரெட்டாகவோ அல்லது பாதி சிகரெட்டாகவோ உள்ளது.[1] இம்மாதிரியான சிறிய அலகுகளின் அடிப்படையில் சில்லறை வியாபாரம் நடைபெற்று வருகின்ற நாடுகளில் சில்லறை விற்பனையின்மீது வரி விதிக்க முயலுவது எவ்வளவு சிரமமானதாக இருக்கக்கூடும் என்பது கூறாமலேயே விளங்கும். இந் நாடுகளில் இவை தவிர வேறு சில பிரச்சினைகளும் உள்ளன. பின்தங்கிய நாடுகளில் ஜீவன மட்டப் பொருளாதாரமும் (Subsistence Economy) பண்டமாற்றுப் பொருளாதாரமும் (Barter Economy) பெரும் இடம் வகித்துவருகின்றன. (முக்கியமாக உணவுப் பண்டங்களைப் பொறுத்தவரையிலும் மற்றும் விறகு சேகரித்தல், தண்ணீர் இறைத்தல், துணி நெய்தல், குடிசை கட்டுதல் ஆகிய அலுவல்களைப் பொறுத்தவரையிலும் இவற்றைக் காணலாம்.) இவற்றை எல்லாம் நோக்கும்போது இந் நாடுகளில் சில்லறை விற்பனையின்மீது வரிவிதித்து அதை ஆற்றலுடன் செயலாற்றக்கூடிய வாய்ப்பு மிகமிகக் குறைவானதேயாகும் என்று எண்ணத் தோன்றுகிறது.

மொத்த விற்பனையின்மீது விதிக்கப்படுகின்ற வரி முறையானது அப்பழுக்கற்றது என்று கூறுவதற்கில்லை. கோட்பாட்டு அளவில் (theoretically) நோக்குங்கால் சில்லறை விற்பனையின்மீது விதிக்கப் பெறுகின்ற வரிமுறையைவிட மொத்த விற்பனையின்மீது விதிக்கப் படுகின்ற வரிமுறை தாழ்வுற்றது என்றே தோன்றுகிறது. மொத்த விற்பனை வரிமுறையில், மொத்த வியாபாரியிடம் இருந்து பொருள்களை வாங்கும் சில்லறை வியாபாரிகள் எல்லோரும் ஒரு குறிப்பிட்ட அளவு பொருளுக்கு ஒரே தொகையை வரியாகச் செலுத்துகின்றனர். அதாவது, இப் முறையின்கீழ் ஆற்றலுடன் சில்லறை வியாபாரம் நடத்திக்கொண்டு பெரும் இலாபம் ஈட்டக்கூடிய சில்லறை வியாபாரியும் பெரிதும் இலாபம் ஈட்ட இயலாத ஆற்றல் குறைவாகவுள்ள சில்லறை வியாபாரியும் ஒரே மாதிரியாக விற்பனை வரி செலுத்தவேண்டியுள்ளது. எனவே, மொத்த விற்பனை வரிமுறை சில்லறை வியாபாரிகளின் வியாபாரத் திறனுக்கு எவ்வித மதிப்பீடும் கொடுப்பதில்லை என்பது நன்கு புலனாகும். இதுமட்டுமன்றி, மொத்த விற்பனை வரி முறையால், வியாபாரிகளிடமுள்ள கையிருப்புச் சரக்கு விகிதத்தில் நேரக்கூடிய வேறுபாடுகளை ஒட்டி பொருள்களின் தராதர விலைகள் (Relative Prices) பெரிதும் பாதிக்கப்

[1] P. T. Bauer எழுதியுள்ள 'West African Trade' (Cambridge University Press, Cambridge, 1954) என்ற நூலைப் பார்க்கவும்.

பெறலாம்.[1] இது தவிர, மொத்த விற்பனைவரி வீதங்கள் மாற்றமுறுங்கால் சில்லறை வியாபாரிகள் பெரிதும் பாதிக்கப்படலாம். மொத்த வியாபாரிகளிடம் விற்பனை வரி கொடுத்து வாங்கி சில்லறை வியாபாரிகள் கையிருப்பாக வைத்திருக்கக்கூடிய சரக்குகளின் மதிப்பு வரிவீத மாற்றங்களால் உயர நேருவதும் அல்லது குறைய நேருவதுமே இதற்கான காரணமாகும். உற்பத்தியாளரிடமிருந்து நேரடியாகவே சில்லறை வியாபாரி பொருள்களை வாங்கியிருப்பாரே

[1] எடுத்துக்காட்டு ஒன்று காண்போம். A B என்ற இரு சில்லறை வியாபாரிகள் 10 ஷில்லிங் மொத்த விலையில் தத்தம் பொருள்களை வாங்குகின்றனர் என்று வைத்துக்கொள்வோம். A ஆனவர் மொத்த விலையைவிட 100 சதவீதம் அதிகமாக சில்லறை விலையைக் குறிப்பதாகவும் B ஆனவர் 50 சதவீதம் அதிகமாகக் குறிப்பதாகவும் வைத்துக்கொண்டால், A குறிக்கக்கூடிய சில்லறை விலை 20 ஷில்லிங்காகவும் B குறிக்கக்கூடிய சில்லறை விலை 15 ஷில்லிங்காகவும் இருக்கும். அதாவது, மொத்த விலையைவிட 10 ஷில்லிங் அதிகமாக A-யும் 5 ஷில்லிங் அதிகமாக B-யும் சில்லறை விலைகளைக் குறிப்பர். இவ் விரண்டு விலைகட்கும் இடையே உள்ள விகிதம் 20 : 15. அதாவது, 4 : 3 ஆக இருக்கும். இதுகாறும் விற்பனை வரி விதிப்பதுகுறித்து நாம் ஏதும் கூறவில்லை. A B ஆகிய இருவரும் மொத்த வியாபாரியிடமிருந்து பொருள்களை வாங்குமுன்பே 50 சதவீத மொத்த விற்பனை வரி விதிக்கப்பெறுவதாக வைத்துக்கொள்வோம். இதன் விளைவாக A B ஆகிய இருவரும் இப்போது தங்கள் பொருள்கட்கு 15 ஷில்லிங் மொத்த விலை கொடுக்கவேண்டியிருக்கும். இவ்வாறன மொத்த விலை உயர்வுக்குப்பின் முன்போலவே A மொத்த விலையைவிட 100 சதவீதம் அதிகமாகச் சில்லறை விலையைக் குறிக்கிறூர் என்றும், B 50 சதவீதம் அதிகமாகக் குறிக்கிறூர் என்றும் வைத்துக்கொண்டால் A-ன் சில்லறை விலை 30 ஷில்லிங்காகவும் B-ன் விலை 22½ ஷில்லிங்காகவும் இருக்கும். இவ் விரண்டு விலைகட்கும் இடையே உள்ள விகிதம் 30 : 22½. அதாவது 4 : 3 ஆகும். எனவே, மொத்த வரி விதிக்குமுன்பும் விதித்தபின்பும் இருவரும் நிர்ணயிக்கக்கூடிய சில்லறை விலைகள் ஒரே விகிதத்தில் உள்ளன என்பது புலனுகும். இவ்வாறன்றி வழிவழி வந்த வழக்கத்தின் காரணமாகவோ அல்லது வியாபார உடன்பாடுகள் காரணமாகவோ முன்பு எந்த அளவு மொத்த விலையைவிட சில்லறை விலையை உயர்த்தினுர்களோ அந்த அளவு (இது சதவீத உயர்வு அன்று, மொத்த அளவு உயர்வாகும். அதாவது, 100% 50% உயர்வல்ல: 10 ஷில்லிங் 5 ஷில்லிங் உயர்வாகும்) வரி விதிக்கப்பெற்றபின் A-யும் B-யும் சில்லறை விலையை உயர்த்துகின்றனர் என்று வைத்துக்கொண்டால் A-ன் சில்லறை விலை 25 ஷில்லிங்காகவும் B-ன் விலை 20 ஷில்லிங்காகவும் இருக்கும். இவ்வாறு செய்வதால் A B ஆகிய இருவரின் விலைகட்கு இடையேயுள்ள விகிதம் வரி விதிப்பதற்குமுன்பு இருந்ததைவிட மாறி அமைந்துள்ளது என்பதை அறிய வேண்டும். வரி விதிப்பதற்குமுன்பு இருந்த விகிதம் 20 : 15. அதாவது 4 : 3 ஆகும். வரி விதித்தபின் ஏற்பட்டுள்ள விகிதம் 25 : 20. அதாவது 5 : 4 ஆகும். இவ்வாறு மொத்த விற்பனை வரி முறையால் தராதர விலைகளில் (relative prices) நேரக்கூடிய மாற்றங்கள் சில்லறை விற்பனை வரி முறையில் ஏற்படாது. மொத்த விலையைவிட 'எத்தனை ஷில்லிங் அதிகமாக' சில்லறை விலையை வியாபாரிகள் உயர்த்துகின்றனரோ 'அந்த அதிகமான ஷில்லிங்குகளும்' சில்லறை விற்பனை வரி முறையில் வரி விதிப்பிற்கு உள்ளாவதே இதற்கான காரணமாகும். A. R. Prest, 'The Future of Purchase Tax' (Hobart Paper No. 8, Institute of Economic Affairs, London, 1961) p. 24 ஐப் பார்க்கவும்.

யாயின், இதுபோன்ற வரிவீத மாற்றங்களால், அவருக்குச் சொல்லொணுச் சிக்கல்கள் நேரும். மேலும், திட்டவட்டமான மொத்த விற்பனை விலை மார்க்கெட்டில் நிலவாத பட்சத்தில், இதுபோன்ற வரிவீத மாற்றங்களால், சில்லறை வியாபாரிகட்குப் பெரிதும் அசௌகரியங்கள் நேரும் என்பதுவும் திண்ணமாகும்.[1]

இருப்பினும், மொத்த விற்பனைவரிமுறையானது நடைமுறையில் கடைப்பிடிப்பதற்கு மிகவும் எளிதானது என்பதை மறுத்தற்கு இயலாது. பெருங்கொண்ட விற்பனை உடைய வியாபாரிகளை மட்டும் மொத்த வியாபாரிகள் என்று கணக்கிட்டு அவர்கள்மீது மட்டும் விற்பனைவரி விதிக்கப்படுமேயாயின் இம் முறை பின்தங்கிய நாடுகளில் மிகவும் அநுகூலம் நிறைந்ததாக விளங்கும். இதன் விளைவாக, நாடு முழுவதும் மொத்த வியாபாரிகட்கும் நுகர்வோர்கட்கும் இடையே உள்ள பல சில்லறை வியாபாரிகள் தாங்கள் விற்பனைசெய்துவரக்கூடிய பொருள்கட்கு ஏற்கெனவே விற்பனை வரி செலுத்தியிருப்பர். எனவே, வருமான வரிக்கு உட்படாத குறைந்த வருவாயுள்ள மக்களும் நாட்டுக்கு ஓரளவுக்கு[2] வரி செலுத்திக் கொண்டிருப்பர். வெனிசுலா நாட்டில் எந்த அடிப்படையில் விற்பனை வரி விதிப்பது உகந்தது என்பது குறித்து ஆராய்ந்த பேராசிரியர் ஷூப்பும் (Professor Shoup) அவருடன் பணிபுரிந்தோரும் அந் நாட்டில் உடனடியாக விற்பனை வரி விதிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வது விரும்பத் தக்கதன்று என்று கருதியபோதிலும் ஏனைய அடிப்படைகளைவிட மொத்த விற்பனை அடிப்படையில் வரிவிதிப்பது உகந்தது என்று தங்கள் முடிவைக் கூறியுள்ளனர்.[3] இக் கருத்தையே நாமும் இங்கு வலியுறுத்த விரும்புகிறேம். தற்சமயம் இந் நாடுகளில் சில்லறை விற்பனை வரி முறையை நாடு முழுவதும் கடைப்பிடிப்பதென்பது சாத்தியமானதன்று. மொத்த விற்பனை வரி கூட இந் நாடுகளில் பெரும்பாலும் இறக்குமதிப் பொருள்களின்மீது விதிக்கப்படுகின்ற துணைவரியாகவே திகழுகின்றது. எனினும், காலப் போக்கில் இந் நிலை மாற்றமுறும்—இந் நாடுகளின் அரசாங்க வருவாயில் மொத்த விற்பனை வரியானது பெரும் பங்கு பெறும்—என்று நாம் எதிர்பார்க்கலாம்.

[1] A. R. Prest, 'The Future of Purchase Tax' (Hobart Paper No. 8, Institute of Economic Affairs, London, 1961) ஐப் பார்க்கவும்.

[2] ஓரளவுக்கு என்று நாம் குறிப்பிட்டுள்ளது மிகப் பொருத்தமே. எங்ஙனம் சில்லறை விற்பனை வரியினின்றும் ஜீவன உற்பத்திப் (subsistence output) பொருள்கள் தப்பமுடியுமோ அதேபோல மொத்த விற்பனை வரியினின்றும் ஜீவன உற்பத்திப் பொருள்கள் தப்பிவிடக்கூடும்.

[3] P. T. Bauer, 'West African Trade' (Cambridge University Press, Cambridge, 1954) Chapter XI ஐப் பார்க்கவும்.

**பொதுப்பயன் தொழில்கள் (Public Utilities)**

பொதுப் பயன் தொழில்களால் தயாரிக்கப்படுகின்ற பொருள்கட்கான விலைகளை எவ்வாறு நிர்ணயிக்க வேண்டும்—என்பது குறித்து அண்மைக் காலத்தில் பலர் விளக்கமாக விவாதித்துள்ளனர். எனவே, அவற்றை இங்கு விரிவாக விவாதிக்க வேண்டியது அவசியமில்லை. எனினும், ஒருசில அம்சங்களைமட்டும் இங்குக் காண்போம். குறுங்காலத்தில் இறுதி நிலைச் செலவும் (marginal cost) விலையும் (price) ஒன்றுக்கொன்று சமமாக அமையக்கூடிய வகையில் உற்பத்தியானது நிர்ணயிக்கப்படவேண்டும் என்பது பொருளியலின் ஒப்பமுடிந்த முடிபாகும். இறுதிநிலைச் செலவினை விட விலையானது ஒரு தொழிலில் அதிகமாக இருக்குமேயாயின், ஏனைய தொழில்களில் அமர்த்தப்பட்டிருக்கக்கூடிய உற்பத்திக் காரணிகள் (Factors of Production) இத் தொழிலை நாடிவரும். இதேபோல, இறுதிநிலைச் செலவினைவிட விலையானது குறைவாக இருக்குமாயின் இத் தொழிலில் அமர்ந்திருக்கக்கூடிய உற்பத்திக் காரணிகள் ஏனைய தொழில்களை நாடிச் செல்ல முனையும். உற்பத்தியானது நிலையான செலவு விதிக்கோ (Law of Constant Cost) அல்லது வளர்ந்துசெல் செலவு விதிக்கோ (Law of Increasing Cost) கட்டுப்பட்டிருந்தால் இறுதி நிலைச் செலவுமட்டுமன்றி சராசரிச் செலவும் (average cost) விலைக்குச் சமமாக அமையும். ஆனால், உற்பத்தியானது குறைந்துசெல் செலவு விதிக்கு (Law of Diminishing Cost) கட்டுப்பட்டிருக்குமேயாயின் சராசரிச் செலவானது இறுதிநிலைச் செலவைவிட அதிகமாகவே இருக்கும். எனவே, விலையானது இறுதி நிலைச் செலவுக்குச் சமமாக அமைய முடியுமே தவிர சராசரிச் செலவுக்குச் சமமாக அமையாது; அதாவது, விலையானது சராசரிச் செலவைவிடக் குறைவாகவே இருக்கும். இதனால், இருதலைக்கொள்ளி எறும்பின் நிலைபோன்ற ஒரு நிலை உருவாகியுள்ளது; இது பலரையும் குழப்பத்தில் ஆழ்த்தியுள்ளது. அஃது வருமாறு: குறுங்காலத்தில் (short run) விலையானது இறுதி நிலைச் செலவைவிட அதிகமாக இருக்குமேயாயின், உற்பத்தியானது எந்த அளவினதாக இருக்க வேண்டுமோ அதைவிடக் குறைவாகவே இருக்கும். ஆனால், நெடுங்காலத்தில் (long run) விலையானது சராசரிச் செலவைவிடக் குறைவாக இருக்குமேயாயின், அந்தத் தொழிலில் செய்துள்ள முதலீட்டைக் குறைக்கவேண்டியிருக்கும். இவ்வாறான இக்கட்டான நிலையினின்றும் எவ்வாறு மீள்வது என்பதுகுறித்து யாரும் இதுவரை திருப்திகரமான பதில் தரவில்லை. பொருளாதார ரீதியாக இப் பிரச்சினைக்குத் தீர்வுகாணுதல் இயலாது. அரசியல் ரீதியாக இப் பிரச்சினையைத் தீர்த்துவைக்க முனைவதே சாலச் சிறந்தது

என்று மஸ்க்ரேவ்[1] (Musgrave) முடிவுகட்டியிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறான இடர்ப்பாடுகளை எண்ணி நாம் தளர்ந்துவிட வேண்டுவதில்லை. அரசாங்கத் துறையைச் சார்ந்த சில தொழில்கள் (உதாரணமாக, விளைவு பறித் தொழில்கள்—extractive industries கார் நிற்பதற்கென செய்யப்படுகின்ற பொது வசதிகள்) வளர்ந்து செல் செலவு விதிக்குக் கட்டுப்பட்டவையேயாகும். மேலும், வர்த்தக முறையில் மக்கட்குச் சேவை செய்யும் பணியில் ஈடுபட்டிருக்கக்கூடிய பொதுத்துறைத் தொழில்கள் தாம் ஆற்றும் சேவைக்கு ஏற்பக் கட்டணங்கள் (charges) விதிக்க வேண்டும். தாம் ஆற்றக்கூடிய சேவையின் அளவைப் பொறுத்தும் சேவை ஆற்றுவதை ஒட்டி நேரக்கூடிய செலவினங்களைக் கருத்தில் கொண்டும், பொதுத்துறைத் தொழில்கள் இக் கட்டணங்களை நிர்ணயிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். இக் கருத்து சர்வசாதாரணமானதாகத் தோன்றலாம். எனவேதான்போலும் இதன் சிறப்பைப்பற்றி யாரும் விவாதித்ததாகவும் ஏற்றுக்கொள்ள முன் வந்ததாகவும் தெரியவில்லை. எனினும், நாம் ஒன்று கூற விரும்புகிறோம். பொருளாதாரக் கோட்பாடுகளிலேயே (Economic Theory) பெரிதும் கவனம் செலுத்தி அவை பொதுப்பயன் தொழில்களின் விலையை நிர்ணயிப்பதற்கு எந்த அளவுக்கு உதவியாக இருக்கமுடியும் என்று விவாதித்துக் காலத்தை விரயமாக்குவதை விட நாம் இங்குக் குறிப்பிட்டுள்ள பொதுவான கொள்கையைத் தீர்க்கமாக உணர்ந்து உறுதியாகக் கைக்கொண்டால் நலமே அளிக்கும் என்பதில் ஐயமில்லை.

பின்தங்கிய நாடுகளில் பொதுப் பயன் தொழில்களின் செலவுகளும் (இவை இறுதிநிலைச் செலவுகள் என்று கொண்டாலும் சரி அல்லது சராசரிச் செலவுகள் என்று கொண்டாலும் சரி) விலைகளும் சமமாக அமைவதில்லை என்பதை விளக்குமுகத்தான் பல உதாரணங்கள் தரமுடியும். எனினும், விரிவு அஞ்சி இரண்டு உதாரணங்களை மட்டுமே இங்குத் தந்துள்ளோம். பெரிதும் வேறுபாடுகள் உடைய இரு நாடுகளிலிருந்து எடுக்கப்பட்டவையே இவ் உதாரணங்களாகும். கரிபிய பிரதேசத்தில் ஒரு நாட்டில் சில ஆண்டுகட்கு முன்பு நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியே முதலாவது உதாரணமாக அமைகிறது. அந்நாட்டில், அரசாங்கம் நிருவகித்து வந்த தண்ணீர் விநியோகத் திட்டத்திற்கு ஆகிக்கொண்டிருந்த

[1] R. A. Musgrave, 'The Theory of Public Finance' (McGraw— Hill, New York, 1959) p. 130 ஐப் பார்க்கவும்.

செலவானது நுகர்வோரிடமிருந்து வசூலிக்கப்பட்ட கட்டணத் தொகையைக்காட்டிலும் பன்னிரெண்டு மடங்கு அதிகமாக இருந்ததை நாம் அங்குள்ள கஜானு அதிகாரிகள் சிலரிடம் சுட்டிக் காட்டினேம். 'உஷ்ணப் பிரதேசமான எமது நாட்டில் தண்ணீர் விநியோகம் ஒரு சமூக சேவையாகக் கருதப்படுகின்றது' என்று ஓர் அதிகாரி பதிலுரைத்தார். 'பிரிட்டன் ஒரு குளிர் பிரதேசம். தேசியமயமாக்கப்பட்டுள்ள தொழில்களும் அங்கு உள்ளன. இருப்பினும், அங்கு எரிபொருள்களை (fuel) இலவசமாகவோ அல்லது மிகக் குறைந்த விலைக்கோ அரசாங்கம் விநியோகம் செய்ய முன்வரவில்லையே?' என்பது அடுத்து நாம் எழுப்பிய வினவாகும். 'உண்மைதான். ஆனல், எம்முடைய நாடு வறிய நாடு என்பதைத் தாங்கள் உணரவேண்டும்' என்று அதற்கு அந்த அதிகாரி விடையிறுத்தார். 'வறிய நாடு என்கிறீர்கள். ஒப்புக்கொள்கிறேன். ஆகவேதான் நான் மேலே கூறியபடி நஷ்டத்திற்கு உள்ளாகி தண்ணீர் விநியோகம் செய்ய அரசாங்கம் முன்வரக் கூடாது,' என்று நாம் உடனே பதிலிறுத்தோம். அத்துடன் உரையாடலும் முற்றுப்பெற்றது. நயாஸாலாந்து (Nyasaland) குறித்து வெளியாகியுள்ள அறிக்கை[1] ஒன்றிலிருந்து எடுக்கப்பட்டுள்ள பகுதி இரண்டாவது உதாரணமாக அமைகிறது. அந்த அறிக்கையில் கண்டுள்ள முடிவு வருமாறு: 'உள்நாட்டுத் தண்ணீர் விநியோகத்தைச் சேவையாகக் (service) கருதவேண்டும். எனவே, இதற்காக ஆகக்கூடிய செலவுகளை ஈடுகட்ட நுகர்வோரிடமிருந்து கட்டணம் வசூலிக்கவேண்டும். இவ்வாறு செய்யாமல் கிராமப் புறங்களில் தனிப்பட்ட நுகர்வோரின் நலன் கருதி சாதனங்களை அமைத்து இலவசமாகத் தண்ணீர் விநியோகம் செய்துவருவது விரும்பத்தக்கதன்று.' நயாஸாலாந்தில் தண்ணீர் விநியோகத்திற்காக ஆகக்கூடிய செலவினங்கள் யாவை, இச் செலவினங்களைச் சரிக்கட்ட வருவாய் வரும் மார்க்கங்கள் யாவை என்பதுகுறித்து நடத்தப்பட்ட சர்வேயை ஆதாரமாகக் கொண்டு மேலே நாம் குறித்துள்ள முடிவு எழுதப்பட்டுள்ளது. இங்கு நாம் கண்ட உதாரணங்கள் இரண்டும் தண்ணீர் விநியோகத்தைக் குறித்து அமைந்துள்ளன. இவை தவிர, விமான தளங்கள்[2], கப்பல் தளங்கள், மின்சாரம் ஆகிய பல பொதுப்பயன் தொழில்களினின்றும் எண்ணற்ற உதாரணங்களைக் கூறிக்கொண்டே போகலாம்.

[1] D. T, Jack. 'Report on Economic Survey of Nyasaland' *1958—59* (Federation of Rhodesia and Nyasaland) ஐப் பார்க்கவும்.

[2] வெனிசூலா நாட்டைப்பற்றித் தாங்கள் செய்துள்ள ஆராய்ச்சியில் பேராசிரியர் ஷூப்பும் அவருடன் பணிபுரிந்தோரும் குறிப்பாக இவ் விஷயத்தையே விவாதித்துள்ளனர். C. S. Shoup et al., 'The Fiscal System of Venezuela' (John Hopkins, Baltimore, 1959) pp. 425–6 ஐப் பார்க்கவும்.

பொதுப்பயன் தொழில்களின் பொருள்கட்கான விலை நிர்ணயத்தைப் பொறுத்தவரையில் பொருளாதாரக் கோட்பாடும் நடைமுறையும் ஒன்றுக்கொன்று மாறுபாடாகவே உள்ளன என்பது நாம் இதுகாறும் கூறியவற்றினின்றும் புலனாகும். இப் பிரச்சினையை எவ்வாறு தீர்த்துவைப்பது? என்ற வினா எழுவது இயற்கையே. சில வழிமுறைகளை ஈண்டு ஆராய்வோம். வர்த்தக முறையில் அமைந்துள்ள பொதுப் பயன் தொழில்களின் நடவடிக்கைகள் அரசாங்க நடவடிக்கைகளின்கீழ் நேரடியாக வாராதிருக்குமாறு செய்ய வேண்டும். அதாவது, அரசாங்கக் கணக்குகளினின்றும் இத் தொழில்களின் கணக்குகள் வேறுபட்டவையாக இருக்கவேண்டும். இவ்வாறு செய்தால் நேரடியாகவோ அன்றி மறைமுகமாகவோ அரசாங்கம் இத் தொழில்கட்கு மான்யம் வழங்குவது மிகவும் அருகி விடும். இரண்டாவதாக, பொதுப் பயன் தொழில்கள் வர்த்தக முறையில் இயங்கி வருவதற்கு ஏதுவான ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும். இத் தொழில்கள் தங்கள் கணக்குகளையும் வர்த்தக முறையிலேயே நிருவகித்துவரவேண்டும். இவை முடிந்தமட்டும் வரவுசெலவுக் கணக்கை சமப்படுத்த முயலவேண்டும். ஆரம்ப காலத்தில் செலவினங்களின்கீழ் வட்டியையும் தேய்மானத்தையும் (depreciation) கணக்கிட்டுக்கொள்ளுமாறு அனுமதிக்கப் படவேண்டும். பொதுப்பயன் தொழில்களில் பெரும்பாலானவை சர்வாதீனம் பெற்றுத் திகழக்கூடியவை. எனவே, தேய்மானச் செலவினை முதலீட்டின் உண்மையான செலவின் அடிப்படையில் கணக்கிடுவதைவிட ஈடுசெய் செலவின் (replacement cost) அடிப் படையில் கணக்கிடுமாறு ஏற்பாடு செய்யவேண்டும்.[1] மூன்றாவதாக, சாத்தியப்பட்டால் ஸ்தலஸ்தாபன நிறுவனங்களே இத் தொழில்களை ஏற்று நடத்திவருவதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டும். இவ்வித ஏற்பாட்டிலும், அரசாங்கத்திடமிருந்து அடிக்கொருமுறை மான்யம் பெற்று வாழவேண்டிய நிலை நேர்ந்துவிடாது பார்த்துக் கொள்ளவேண்டியது அவசியமாகும். இத் தொழில்கள் யாவும் ஒரு மத்திய அமைப்பின் கட்டுப்பாட்டின்கீழ் இயங்கிவருவதைவிட ஸ்தலஸ்தாபனங்களின் கட்டுப்பாட்டின்கீழ் இயங்கி வருமேயாயின், ஸ்தலஸ்தாபனங்களின் பொறுப்புணர்ச்சி விரும்பத்தக்க வகையில் மிகும்.[2] மிகச் சிறிய நாடுகளில் இம்முறை நடை

[1] மார்க்கெட்டில் போட்டி நிலவுமேயாயின் இயந்திர சாதனங்கள் ஏனைய சாதனங்கள் ஆகியவற்றின் விலைஉயர்வை ஒட்டி உற்பத்திப்பொருள்களின் விலையும் உயரும். ஆனால், இதுபோன்ற நிலை அரசாங்கத் தொழில் துறையைப் பொறுத்தமட்டிலும் நேராது. ஏனெனில், தொடர்ந்து நஷ்டமுற்றுக்கொண்டே இருந்தபோதிலும் அரசாங்கத் தொழில்கள் தொடர்ந்து செயலாற்றிக்கொண்டே இருக்கும்.

[2] U.K. Hicks, 'Development from Below' (Oxford, 1961) Chapter 13ஐப் பார்க்கவும்.

முறைக்கு ஒத்துவராது என்பது உண்மைதான். ஆனல், பின்தங்கிய பெரிய நாடுகள் பல உள்ளன; இந் நாடுகளில் இம் முறையை எளிதில் கடைப்பிடித்துவர முடியும்.

மேலே நாம் தந்துள்ள ஆலோசனைகளை எளிதில் செயல்படுத்தி விடமுடியும் என்று கூறமாட்டோம். பல்வேறு இடர்பாடுகள் நேரக் கூடும். அரசாங்கத்தின் வர்த்தக நடவடிக்கைகள் இன்னின் னவை, நிருவாக நடவடிக்கைகள் இன்னின்னவை என்று எந்த அடிப்படையில் பாகுபாடு செய்வது? வர்த்தகமுறையில் பொதுப் பயன் தொழில்கள் செயலாற்றத் துவங்கினல் அவை விதிக்கக்கூடிய விலைகள் ஏழை மக்கட்குச் சுமையாகவும் செல்வந்தர்க்கு நலமாகவு மன்றே அமையும்? என்பனபோன்ற வினக்கட்கு விடையிறுக்க வேண்டியிருக்கும். சில நாடுகளில் அரசியல் அடிப்படையில் பெருஞ் சிக்கல்கள் தோன்றினலும் தோன்றலாம். எனினும், குறிப் பிட்ட ஒருசில மக்களுக்கே பயன்தரக்கூடிய அரசாங்கத்தின் நடவடிக்கைகள், அரசாங்கத்தின் பொதுவான நடவடிக்கைகளி னின்றும் வேறுபடுத்தப்பட்டு, பயனுறும் மக்கள்மீது வர்த்தக முறை யில் கட்டணங்கள் விதிக்கப்படவேண்டும்[1] என்ற கொள்கையை இந் நாடுகள் ஏற்றுக்கொள்ளாத வரையில் இவற்றின் நிதி அமைப்பு பழுதுபட்டதாகவே அமைந்திருக்கும். இவ்வாருன பாகுபாடு செய்யாவிடில் நேரக்கூடிய கேடுகள் யாவை என்று அறிய ஆவலோடு உள்ளவர்கள் வேறு எங்கும் நோக்க வேண்டுவதில்லை. பிரிட்டனை நோக்கினல் போதுமானதாகும். ஒவ்வோர் ஆண்டும் அங்கு தேசியமயமாக்கப்பட்டுள்ள தொழில்கள் நஷ்டமுற்றே வருகின்றன. இதைவிடப் பெரிய ஆடம்பரம் வேறு ஏதாவது இருக்கமுடியுமா?

[1] இவ்வாறன்றி குறிப்பிட்ட வகுப்பினருக்கு அரசாங்கம் உதவி அளிக்க முன் வரும்போது, ஆகக்கூடிய செலவுகளை ஏற்றுக்கொள்ளக்கூடிய வசதியற்றவர்களாக அவர்கள் இருக்க நேரிடலாம். இதுபோன்ற சூழ்நிலையில் இம்மாதிரியான அரசாங் கத்தின் உதவி நடவடிக்கைகளை அரசாங்கத்தின் பொது நடவடிக்கைகளினின்றும் வேறுபடுத்தக் கூடாது. இதுகுறித்த விளக்கத்தை ஆரும் அத்தியாயத்தில் காணலாம்.

# 4. மானியங்கள், ஊக்கக்கொடைகள் மற்றும் தள்ளுபடிகள்

வளர்ச்சியுருத நாடுகளில் பல்வேறு வரிகளின் பங்கு யாது? அவற்றின் சிறப்புகள் யாவை? என்பதுகுறித்து முந்திய இரண்டு அத்தியாயங்களில் விளக்கம் கண்டோம். சில இடங்களில் இவை குறித்து மேலெழுந்தவாரியாக விளக்கம் தர நேர்ந்தது என்பது உண்மையேயாயினும் இவற்றிற்கான சாத்தியக் கூறுகளை முழு அளவில் விளக்கியுள்ளோம். இவ் அத்தியாயத்தில் மானியங்கள் (grants) தள்ளுபடிகள் (allowances) ஆகியவைகுறித்து விவாதிப்போம். இவை ஓரளவுக்கு அரசாங்கச் செலவுக் கொள்கையையும் ஓரளவுக்கு அரசாங்க வருவாய்க் கொள்கையையும் சார்ந்தவையாதலின் மிகப்பரந்த அளவில் இவைகுறித்து விளக்கம் தரவேண்டியுள்ளது. எனவே, இவைபற்றிய எல்லா விஷயங்களையும் தீர்க்கமாக விவாதிக்க முடியாது; பொறுக்கினாற்போல ஒருசில விவாதங்களில் மட்டும் ஈடுபடுவதே சாலும் என்று எண்ணுகிறோம். முதற்கண் தனிப்பட்ட மனிதர்களைப் பாதிக்கக்கூடிய சில ஏற்பாடுகளைப்பற்றி விவாதிப்போம். இதன்கீழ் குடும்பங்கட்குத் தரப்படுகின்ற வருமான வரித் தள்ளுபடிகள் (income tax allowances for families) எத்தன்மைத்தாய் இருத்தல் அவசியம் என்பதுகுறித்தும் அதை அடுத்து சமூகப் பாதுகாப்புத் திட்டத்திற்குத் (social security) தனிப்பட்ட நபர்கள் அளிக்கக்கூடிய வரித் தொகையும் செலுத்தினங்களும் (payments) எவ்வாறு அமைதல் வேண்டும் என்றும் விவாதிப்போம். இவற்றை விவாதித்தபின் கம்பெனிகட்கு அரசாங்கம் கொடுத்துவருகின்ற சலுகைகள்பற்றி விவாதிப்போம். இதன்கீழ் வரிவஜா, விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடி (accelerated depreciation), காப்புச் சுங்கவரி (protective tariff) ஆகியவை விவாதிக்கப்பெறும். எமக்குத் தோன்றிய முறையில் நாம் மேற்குறித்துள்ள தலைப்புகளைத் தெரிந்தெடுத்துள்ளோம். வேறுமுறையில் வேறு

தலைப்புகளைத் தேர்ந்தெடுத்து விவாதிப்பதில் தவறொன்றும் இல்லை என்பது நாம் கூறுமலேயே விளங்கும். எனினும், நாம் தெரிந்தெடுத்துள்ள தலைப்புகள் பல நாடுகளைப் பொறுத்தவரையில் முக்கியத்துவமும் தொடர்பும் உடையவை என்பதைக் குறிப்பிட விரும்புகிறோம்.

இவ் அத்தியாயம் முழுவதும் இரண்டு பொதுவான கருத்துகளை நாம் மனத்தில் கொண்டிருக்கவேண்டியது அவசியமாகும். முதலாவது கருத்து மிக எளிதான ஒன்றாகும். வரித் தள்ளுபடிகள், ஊக்கக் கொடைகள் ஆகியவை குறைக்கப்பட்டால் அவை புதிய வரிகளை விதிப்பதற்கும் வரி விகிதங்களை உயர்த்துவதற்கும் சமமானவை என்று கொள்ளவேண்டும். எனவே, இவற்றையும், வரிகளின்மூலம் வருவாயைப் பெருக்குவதற்காக அரசாங்கம் தீட்டக்கூடிய பல திட்டங்களுள் ஒன்றாகவே கருதவேண்டும். இரண்டாவதாக, தனிப்பட்ட நபர்கட்கும் கம்பெனிகட்கும் வரித் தள்ளுபடிகள் அளிக்கப்படும்போது ஒரு குறிப்பிட்ட முறையைவிடப் பிறிதொரு முறை சிறந்ததாகத் தோன்றலாம். இதுபோன்ற சூழ்நிலைகளில் பிறிதொரு முறை எந்த அளவுக்குச் சிறந்தது என்று ஆராயவேண்டியது அவசியமாகும். நாம் இங்கு விளக்கியுள்ள இரண்டு கருத்துகளில் முதலாவது கருத்துமட்டும் சில இடங்களில் மிகவும் பொருத்தமுடையதாகவும் வேறு சில இடங்களில் இரண்டாவது கருத்துமட்டும் மிகவும் பொருத்தமுடையதாகவும் தோன்றலாம். அவ்வப்போது ஆங்காங்கே எக் கருத்து பொருத்தமுடையது என்று நாம் குறிப்பிட முயலுவோம். எனினும், இவ் வத்தியாயம் முழுவதும் நாம் மேலே விளக்கியுள்ள இரண்டு கருத்துகளையும் மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும்.

**குடும்பங்களுக்கான வருமானவரித் தள்ளுபடிகள்**

குடும்பங்களின்மீது விதிக்கப்படுகின்ற வருமான வரிமுறைக்கும் தனிப்பட்ட நபர்கள் அல்லது குழந்தையில்லாத் தம்பதிகள் ஆகியோர்மீது விதிக்கப்படுகின்ற வருமான வரிமுறைக்கும் இடையேயுள்ள வேறுபாடுகளை நேர்மைக் கொள்கையின் (equity principle) அடிப்படையில் தெளிவாக விளக்கமுடியுமா? என்ற வினாவுக்கு விடை காண முயலுவோம். இதை ஒட்டி நாம் இரண்டு நிலைகளைக் கற்பனை செய்து பார்க்கலாம். முதலாவது நிலை வருமாறு. குழந்தை வேண்டுமா? அல்லது நீடித்த நுகர்வுப்பொருள் வேண்டுமா? என்பதுகுறித்து முடிவுகட்ட வேண்டியவர்கள் பெற்றோர்களேயாவர். அவ்வாறாயின், குழந்தையே வேண்டும் என்று தீர்மானிக்கும் தம்பதிகட்குக் குழந்தை வேண்டாம், நீடித்த நுகர்வுப் பொருளே (durable consumer goods) வேண்டுமென்று தீர்மானிக்கக்

கூடிய தம்பதிகளைவிட, அதிகமான வரித் தள்ளுபடிகள் வழங்குவது நியாயம்தானா? என்ற வினா எழுகின்றது. நியாயமன்று என்றே பதிலிறுக்க வேண்டியுள்ளது. இரண்டாவது நிலை வருமாறு. வரி விதிப்பதற்காகக் குடும்பத்திலுள்ள அனைவரையும் ஒருங்கே குடும்பம் என்ற கூட்டு மொத்தத்தின்கீழ் எடுத்துக்கொள்ளாது, ஒவ்வொருவரையும் தனித்தனியே எடுத்துக்கொள்ளவேண்டும். உதாரணமாக, மூன்று அங்கத்தினர்களுள்ள குடும்பம் ஒன்றில் மூவரும் சமமான அளவு வருவாய் ஈட்டுகின்றனர் என்று வைத்துக்கொண்டால், இம்முறையின்கீழ் இக் குடும்பமானது, மூன்று தனி நபர்களும் தனித்தனியே எவ்வளவு வரிகட்ட வேண்டியிருக்குமோ அதன் கூட்டு மொத்தத் தொகையை வரியாகச் செலுத்தவேண்டியிருக்கும். இம்முறையின்கீழ் குழந்தைகளை வயதுவந்தோருடன் எந்த அடிப்படையில் ஒப்பிட்டு நோக்குவது? என்ற ஐயம் எழலாம். (உதாரணமாக, வயது அதிகமாக உள்ள குழந்தைகளையும் வயது குறைவாக உள்ள குழந்தைகளையும் ஒன்றாகவே மதிக்கவேண்டுமா? என்பதுபோன்ற வினாக்கள் எழலாம்.) எனினும், நாம் இங்கே விளக்கியுள்ள இரண்டு கருத்துகளும் குடும்பங்களின்மீது விதிக்கப்பெறுகின்ற வளர்வீத வரிமுறைபற்றி (progressive taxation) கற்பனை செய்து பார்க்கக் கூடிய பெருமளவு வேறுபட்ட இரண்டு நிலைகளைக் குறிக்கின்றன என்பதை உணரவேண்டும்.[1]

மேலே நாம் கற்பித்துப்பார்த்த இரண்டு நிலைகளும் நேர்மைக் கொள்கையின் அடிப்படையில் ஏற்கத்தக்கவையா? என்ற வினாவுக்கு இனி விடைகாண முயலுவோம். முதற்கண் பிரச்சினையைச் சிறிது எளிதாக்கிக்கொள்வோம். அதாவது, குடும்பத்திலுள்ள குழந்தைகள் தங்கட்கு என்று வருமானம் ஏதும் உடையவர்கள் அல்லர் என்று கொள்வோம். இவ்வாறாயின், மேலே விளக்கப்பட்ட முதல்நிலை (அதாவது, குழந்தைகட்கென்று எவ்விதமான வரித் தள்ளுபடியும் கொடுக்கலாகாது என்பது) ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. இது குறித்து மற்றவர்களின் கருத்து யாதாக இருப்பினும், குழந்தைகட்கென்று எவ்வித வரித் தள்ளுபடியும் தராவிடில் அது குழந்தைகட்கு அநீதி செய்வதாகவே முடியும் என்பதே எம்முடைய திடமான நம்பிக்கையாகும். குழந்தைகளையுடைய தம்பதிகள் குழந்தைகள் இல்லாத தம்பதிகள் ஆகிய இரு சாரரும் ஒருங்கே நடத்தப்பட்டால் அநீதி நேர்வதுபோல குழந்தைகட்கு எவ்வித வரித் தள்ளுபடியும்

[1] ஆனால், வீதாசார வரிமுறையின் கீழ் (proportional tax system) ஒரு குடும்ப அங்கத்தினர்களின் வருமானத்தின்மீது தனித்தனியே வரிவிதித்தாலும் அல்லது குடும்பத்தின் மொத்த வருமானத்தின்மீது வரிவிதித்தாலும் நேரக்கூடிய விளைவு ஒன்றாகவே இருக்கும்.

தராவிடில் அநீதி நேரும். குழந்தைகள் என் செய்வர்? புவியில் பிறக்க விரும்புவதும் விரும்பாததும் அவர்கள் கையிலா இருக்கின்றது? நாம் மேலே விளக்கிய இரண்டாவது நிலையும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகத் தோன்றவில்லை. தனி நபர்களையும் குழந்தையில்லாத் தம்பதிகளையும் ஒப்பிட்டு நோக்குங்கால் சில விவாதங்களின் அடிப்படையில் (உதாரணமாக, ஒரே அளவு வருமானமுள்ள தம்பதிகள், ஒன்றாக வசித்துவரக்கூடிய இரு தனிநபர்கள் ஆகிய இரு சாராரிடையே தம்பதிகள் தனிநபர்களைவிட அதிக வரி செலுத்தவேண்டும் என்று கூற முடியாது) இரண்டாவது நிலை ஓரளவுக்கு ஏற்றுக்கொள்ளத்தக்கது என்று சொல்லத்தோன்றலாம். இருப்பினும், குழந்தைகள் உள்ள குடும்பங்களை எவ்வாறு நடத்துவது? குழந்தைகளை யாருடன் ஒப்பிட்டு நோக்குவது? என்ற ஐயப்பாடுகள் எழுவது நியாயமானதேயாகும். குடும்பத்தினின்றும் குழந்தைகள் வேறுபட்டவர்கள் அல்லர் என்ற எளிய உண்மையை உணர்ந்தால் குடும்பத்தினின்றும் குழந்தைகளை வேறுபடுத்தி நோக்கக்கூடிய வரிமுறை செயற்கையான ஒன்றேயாகும் என்று முடிவுகட்டலாம்.

எனவே, குழந்தைகட்கென்று ஏதாவது வரித் தள்ளுபடி வழங்க வேண்டும் என்பது நேர்மைக் கொள்கையின் அடிப்படையில் நன்கு புலனாகும். எனினும், எந்த அடிப்படையில் தமக்கென்று வருமானம் ஏதுமில்லாக் குழந்தைகட்கான வரித்தள்ளுபடிகளை நிர்ணயிப்பது என்பதை நாம் விவரமாக அறிய முடியவில்லை. இது நிற்க, தமக்கென்று வருமானம் உடைய குழந்தைகட்கு எந்த முறையில் தள்ளுபடிகள் வழங்குவது? இவர்களைக் குடும்பத்தின் அங்கத்தினராகக் கருதுவதா அல்லது குடும்பத்தினின்றும் வேறுபட்டவர் என்று கருதுவதா? என்பனபோன்ற வினக்கள் எழுகின்றன. இவர்களையும் குடும்பத்தின் அங்கத்தினராகக் கருதவேண்டுமேயன்றி வேறுபடுத்தி மதிப்பிடலாகாது. உழைப்பிலா வருமானம் (unearned income) பெற்றுக்கொண்டிருக்கக்கூடிய குழந்தைகளை எவ்வாறு கருதுவது? என்று அடுத்து ஒரு வின எழுகிறது. இந்தக் குழந்தைகளையும் குடும்பத்தின் அங்கத்தவராக மதித்து அவரது வருமானத்தையும் குடும்ப வருமானத்தோடு சேர்த்துக் கணக்கிடவேண்டும். ஆனால், இவர்கள் குழந்தைப் பிராயத்தைக் கடந்து விவேக அறிவுள்ள பிராயத்தினராகத் திகழ்ந்து தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளும் பட்சத்தில் அவர்களைத் தனி நபர்களாகக் கணக்கிடலாம். 'விவேக அறிவுள்ள பிராயம்' என்ற சொற்றொடர் தெளிவான பொருளை உணர்த்தக்கூடியதன்று என்பது உண்மைதான்; அதாவது, வெவ்வேறு நாடுகளில் ஒரே காலத்தில் இச் சொற்றொடர் பல பொருள்பட பயன்படுத்தப்படலாம். எனினும், நம்முடைய

விவாதத்திற்கு இச் சொற்றொடரின் ஆட்சியே போதுமானதாகும் என்பதையும் மாறுபட்ட பொருள்களை நாம் விளக்க வேண்டுவதில்லை என்பதையும் அறியவேண்டும்.

குழந்தைகட்கு வரித்தள்ளுபடி அளிப்பதுகுறித்து நாம் மேலே எழுப்பியுள்ள வினாக்களை நேர்மைக் கொள்கையின் அடிப்படையில் தெளிவாக விளக்க இயலாது என்று கருதினால் நாடு கடைப்பிடித்து வரக்கூடிய பொதுவான பொருளாதாரக் கொள்கை மற்றும் சமுதாயக் கொள்கை ஆகியவற்றின் அடிப்படையில் தீர்வுகாண முயலுவதே அறிவுடைய செயலாகும். வளர்ச்சியுறாத நாடுகளைப் பொறுத்தவரையில் நாம் இவற்றை விவாதிக்கப் புகுந்தால் ஜனத்தொகைக் கொள்கையையும் (population policy) விவாதிக்க வேண்டியது நேரிடும். அவ்வாறு விவாதிக்கும்போது நிதிக்கொள்கையால் பிறப்பு விகிதங்கள் (birth rates) எவ்வாறு பாதிக்கப் படலாம் என்பதுகுறித்தும் விவாதிக்கவேண்டி நேரிடும். இதை ஒட்டி கருத்து வேறுபாடுகள் பல தோன்றும். எனினும், நிதிக் கொள்கையால் பிறப்பு விகிதங்கள் பாதிக்கப்படுவதே இல்லை என்று நிரூபணம் செய்யாதவரை, இதுகுறித்து நாம் விவாதிப்பதில் தவறொன்றுமில்லை. நிதிக் கொள்கையைவிட கருப்பத் தடைப் (birth control) பிரசாரம் போன்ற நேரடியான நடவடிக்கைகள் பிறப்பு விகிதங்களை ஆற்றலுடன் கட்டுப்படுத்தவல்லன என்பதை நாம் மறுக்கவில்லை. எனினும், நிதிக் கொள்கையின் விளைவானது கருப்பத் தடைப் பிரசாரத்தின் விளைவுக்கு மாறுபாடாக அமைந்து விடக்கூடாது என்பதையும் கண்காணித்துக் கொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகும்.

வளர்ச்சியுறாத நாடுகளில் ஜனத்தொகை வளர்ச்சியால் நேரக் கூடிய விளைவுகள்குறித்து ஏற்கெனவே முதலாவது அத்தியாயத்தில் விளக்கம் தந்துள்ளோம். எனவே, அவை யாவற்றையும் மீண்டும் ஈண்டு விளக்கவேண்டுவதில்லை. எனினும், இந் நாடுகளில் ஜனத்தொகை வளர்ச்சி வீதமானது தற்போதைய வீதத்தைவிடக் குறைவாக இருக்குமேயாயின், பொருளாதார வளர்ச்சியானது மேலும் விரைவுடன் பெருகும் என்ற கருத்தைமட்டும் மீண்டும் குறிப்பிட விரும்புகிறோம். எனவே, ஜனத்தொகையைக் கட்டுப்படுத்த எண்ணினால் குழந்தைகட்காகத் தாராளமான அளவு வரித் தள்ளுபடிகள் வழங்கலாகாது, ஓரளவே வழங்கவேண்டும் என்று முடிவு கட்டத் தோன்றுகிறது. அதாவது, எல்லாக் குடும்பங்கட்கும் ஒரே மாதிரியான குடும்பத் தள்ளுபடிகட்கு ஏற்பாடு செய்யாது, குடும்பங்களிலுள்ள மொத்த நபர்களின் எண்ணிக்கை வேறுபடுவதற்கு ஏற்பத் தள்ளுபடியும் வேறுபடுமாறு செய்து அதிக

அளவு பிறப்பு வீதம் உள்ள குடும்பங்கட்கு மிகக் குறைந்த அளவு வரித் தள்ளுபடி கிடைக்குமாறு ஏற்பாடு செய்யவேண்டும். இக் கருத்தைப் பொதுவான கொள்கையாக ஏற்றுச் செயலாற்ற இயலாது என்பது உண்மைதான் என்ருலும் பின்தங்கிய நாடுகளில் இக் கருத்தினை ஓர் அடிப்படைக் கருத்தாக ஏற்றுக்கொள்வதில் தவறென்றும் இல்லை.

இதுகாறும் நம்முடைய விளக்கம் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்திருந்தது. இனி நடைமுறை உலகத்தில் நிலைமை எவ்வாறு அமைந்துள்ளது என்று காண்போம். பிரிட்டனிலுள்ள வருமான வரி முறையின்கீழ் குழந்தைகட்கான தள்ளுபடிகள் எவ்வாறு வழங்கப்படுகின்றனவோ, அவ்வாறே பிரிட்டனின் ஆட்சிக்குக்கீழ் இருந்துவருகின்ற நாடுகளிலும் முன்பு பிரிட்டனின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த நாடுகளிலும் தள்ளுபடிகள் வழங்கப்பட்டுவருகின்றன. அதாவது, குழந்தைகளின் வருமானத்தை பெற்ருேர்களின் வருமானத்தோடு சேர்த்துக்கொள்கின்றனர். பின் இவ் வருமானத்திலிருந்து வரி விலக்கு அளிக்கப்பட்டுள்ள மொத்தத் தொகை கழிக்கப்படுகின்றது. எஞ்சியுள்ள வருமானத்தின்மீது வரி செலுத்த வேண்டியுள்ளது. பிரிட்டனில் கையாளப்படுகின்ற முறையினின்றும் ஃபிரான்ஸ் நாட்டில் கையாளப்படுகின்ற முறை வேறுபட்டு விளங்குகிறது. ஃபிரான்ஸ் நாட்டு வருமான வரிமுறையை ஈவு முறை (Quotient System)[1] என்று கூறலாம். இனி ஃபிரான்ஸ் நாட்டிலுள்ள முறையை பிரிட்டனிலுள்ள முறையோடு ஒப்பிட்டு நோக்குவோம். குறைந்த வருமானம் ஈட்டிக்கொண்டிருக்கக்கூடிய குடும்பங்களை இரு முறைகளும் பெரும்பாலும் ஒரே மாதிரியாகவே நடத்துகின்றன. எனினும், குறைந்த வருமானமுள்ள குடும்பங்களை, ஃபிரான்ஸ் நாட்டு முறையானது பிரிட்டன் நாட்டு முறையைவிட, ஓரளவுக்கு சாதகமாகவே நடத்துகின்றது. அதிக வருமானம் ஈட்டக்கூடிய குடும்பங்கட்கு, ஃபிரான்ஸ் நாட்டு முறையானது பிரிட்டனிலுள்ள முறையைவிடப், பெருமளவு சாதகமாக அமைந்துள்ளது. எனவே, ஜனத்தொகை கட்டுப்பாடு கருதி குறைந்த வருமானமுள்ளவர்கட்கு அதிக சலுகைகள் கொடுக்கக்கூடாது என்று கருதினுல் பிரிட்டிஷ் முறையைக் கைக்கொள்வதைவிட ஃபிரான்ஸ் முறையைக்

[1] ஈவு முறையை ஓர் உதாரணத்தின்மூலம் விளக்குவோம். குடும்பத்தில் நான்கு பேர், வயதுவந்தோர் உள்ளனர் என்று வைத்துக்கொள்வோம் (வயது வந்தோரில் குழந்தை சரிபாதி என்று கணக்கிடப்படுகின்றது). இக் குடும்ப வருமானத்தில், ஒவ்வொருவரும் நான்கில் ஒரு பங்கு வருமானத்தை ஈட்டிக்கொண்டிருக்கக்கூடிய நான்கு தனி நபர்கள் மொத்தம் எவ்வளவு தொகையை வரியாகச் செலுத்திக் கொண்டிருப்பரோ அந்தத் தொகையை இக் குடும்பம் வரியாகச் செலுத்திக்கொண்டிருக்கும்.

கைக்கொள்வதே சிறந்தது என்று எண்ணத் தோன்றுகிறது. எனினும், நிதிக் கொள்கையால் ஜனத்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்ற கருத்து ஒரு விநோதமான கருத்தாகும். இது குறித்து நாம் ஏற்கெனவே விளக்கம் தந்துள்ளோம். மேலும், பிரிட்டிஷ் முறையைவிட ஃபிரான்ஸ் முறையே குறைந்த வருமானமுடைய குடும்பங்கட்குச் சாதகமாய் அமையக்கூடியது என்பதையும் மறந்து விடலாகாது. ஆதலால், ஃபிரான்ஸ் நாட்டு முறையைப் புகுத்துவதனல் பயன் விளையும் என்று கருதுவதற்கில்லை.

இனி, பிரிட்டனில் குழந்தைகட்கு வரித் தள்ளுபடிகள் கொடுக்கும் முறையையும் வளர்ச்சிபெருத நாடுகளில் அநுசரிக்கப்படுகின்ற முறையையும் ஒப்பிட்டு நோக்குவோம். பிரிட்டனில் குழந்தையில்லாத் தம்பதிகள் இருவருக்குக் கொடுக்கப்படுகின்ற வரித் தள்ளுபடிகள் 100 என்று வைத்துக்கொண்டால் இரண்டு பெரியவர்கள் இரண்டு சிறுவர்கள் உள்ள குடும்பத்திற்கு அளிக்கப்படுகின்ற வரித் தள்ளுபடியின் அளவு சுமார் 194 ஆகும். பார்பேடாஸ் (Barbados) மற்றும் பிரிட்டிஷ் கயானு ஆகிய நாடுகளில், இதே அடிப்படையில் நோக்குங்கால், குடும்பத்திற்கு அளிக்கப்படுகின்ற வரித் தள்ளுபடியின் அளவு சுமார் 150 ஆகும். இவ்விரு நாடுகட்கும் தனித்தனியே துல்லிதமாகப் புள்ளி விவரம் கண்டுபிடிக்க விரும்பினல் குழந்தைகளுடைய வயது வேறுபாடுகளைக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டியது அவசியமாகும். வெவ்வேறு நாடுகளில் ஒரு குறிப்பிட்ட வருமானத்திற்குக் கிடைக்கக்கூடிய வரித் தள்ளுபடியானது அந்தந்த நாடுகளிலுள்ள வருமானவரி அமைப்பைப் பொறுத்தது என்பதையும் நாம் உணரவேண்டியது அவசியமாகும். எனினும், நாம் மேலே தந்துள்ள உதாரணங்கள் உணர்த்தக்கூடிய உண்மையானது கவனிக்கத் தக்கதாகும். அதாவது, ஜனத்தொகைப் பெருக்கம் மிகுதியாகவுள்ள இரண்டு சிறிய நாடுகள் வழங்கக்கூடிய வரித் தள்ளுபடி முறையானது பிரிட்டனில் நிலவி வருகின்ற முறையுடன் தொடர்புடையதாக இருப்பதே பொதுவாகச் சிறப்புடையதாகும். அதாவது, நாம் மேலே கொடுத்துள்ள விகிதமானது பிரிட்டனில் உள்ள விகிதத்தைவிடக் குறைவாக இருக்கலாம்; ஆனல், இவ்விகிதமானது பிரிட்டனில் உள்ள விகிதத்தைவிட அதிகமாக இருந்தால் அது குறைபாடு உடைய முறையாகவே இருக்க முடியும்.

எனினும், அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுக்கப்பட்ட உதாரணங்கட்குப் பெரிதும் முக்கியத்துவம் கொடுத்து எந்த

[1] அண்மையில் இலங்கையில் குடும்பங்களுக்குத் தாராளமாகத் தள்ளுபடிகள் வழங்கப்பெற்றுள்ளன. குழந்தைகளுக்குத் தள்ளுபடி கொடுப்பதற்கு 1960 ஆம் ஆண்டுமுதல் ஈவுமுறை கையாளப்பட்டு வருகிறது. எனினும், இதனல் மக்கள் யாரேனும் பாதிக்கப்பட்டதாகத் (சாதகமாகவோ அன்றி பாதகமாகவோ) தெரியவில்லை.

நாட்டிலும் எவ்வித மாற்றமும் தேவையில்லை என்ற அவசர முடிவுக்கு வந்துவிடக் கூடாது. மொரீஷஸ் நாட்டு நிலையைத் தீர்க்கமாக ஆராய்ந்த பேராசிரியர் மீட்,[1] ஜனக் கட்டுப்பாடு செய்ய வேண்டியதன் நிமித்தம், மூன்று குழந்தைகட்குமேல் வரித் தள்ளுபடி அளிக்கக் கூடாது என்று குறிப்பிட்டுள்ளார். இது ஏனைய நாடுகளிலுள்ள வருமான அதிகாரிகளும் கவனமாகச் சிந்திக்க வேண்டியதோர் கருத்தாகும். இதுதவிர மணமான பெண்டிர் ஈட்டக்கூடிய வருமானத்திற்குத் தாராளமான வரிச் சலுகைகள் தருவதற்கான ஏற்பாடுகள் செய்யலாம். இத்தகையோர்மீது விதிக்கக்கூடிய சரியான வருமான வரிமுறை எது என்பது குறித்துத் தீர்க்கமாக ஈண்டு விவாதிப்பது எமது நோக்கமன்று. எனினும், ஜனத்தொகைக் கட்டுப்பாட்டைப் பொறுத்தவரையிலும் இவ்வாறு செய்வதானது சாதகமாக அமையக்கூடியதா அல்லது பாதகமாக அமையக்கூடியதா என்று (பொருளாதாரத் தூண்டுகோலியாக அமையக்கூடியதா இல்லையா என்றும்) தீர்க்கமாக ஆராயலாம்; இதை எளிதில் புறக்கணித்துவிடலாகாது.

பின்தங்கிய நாடுகளில் தனியார்மீது விதிக்கப்படுகின்ற வருமான வரி செலுத்துவோரின் எண்ணிக்கை மிகக் குறைவானதேயாகும்; எனவே, நாம் மேலே விவாதித்துள்ளதுபோன்ற விஷயங்களைப் பெரிதுபடுத்துவது அநாவசியமாகும் என்று சிலர் வாதாடுகின்றனர். இவ் வாதம் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. தற்சமயம் வருமான வரி கொடுப்போரின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருக்கலாம். ஆனல், வருங்காலத்தில் பலரும் வருமான வரி கொடுக்கக்கூடிய நிலை உருவாகலாம். எனவே, அந்நிலை உருவாகுமுன்பே வருமான வரிபற்றிய எல்லாவித ஏற்பாடுகளையும் இப்பொழுதே செய்துவைப்பதில் கேடு ஏதும் இல்லை. இவ்வாறே நாடுகள் சிலவும் கருதுகின்றன. மேலும், நாட்டில் உரிமைக் கும்பல் (vested interest) தோன்ருமல் தடுப்பது சுலபமானது. ஆனல், தோன்றியபின் அதைக் களைந்தெறிய முடியாது என்பதையும் நாம் உணரவேண்டும். மற்றும் ஒரு கருத்தையும் ஈண்டு விளக்கவேண்டியது அவசியம் என்று தோன்றுகிறது. பல குழந்தைகளை உடைய குடும்பங்கட்குப் பெரிதும் நலமளிக்கும் வகையில் வருமான வரிமுறை அமைந்திருந்தபோதிலும் இதன் மூலம் இவர்கள் பெறக்கூடிய நலங்கட்கு ஈடாக இவர்கள் மறைமுக வரிகள் செலுத்துமாறு ஓர் ஏற்பாட்டினைக் கொள்கையளவில் உருவாக்கமுடியும். உதாரணமாக, அதிகக் குழந்தைகள் உள்ள குடும்பங்கள் பிறரைவிட அதிகமாக மறைமுக வரி செலுத்த

[1] J. E. Meade et al., 'The Economic and Social Structure of Mauritius' (Methuen, London, 1961).

வேண்டியுள்ள ஒரு நிலையைத் தோற்றுவிக்கலாம். எனினும், இத்தகைய முறையை நடைமுறையில் செயலாற்ற முடியுமா என்பது ஐயப்பாட்டிற்குரிய ஒன்றேயாகும். இருப்பினும், அடிப் படைக் கருத்து இதுதான்—குழந்தைகளை உடைய குடும்பங்கள் பொதுவாக எந்த அளவு வரி விதிப்பிற்கு ஆளாகின்றன என்பதை அறிவதற்கு நேர்முக வரிகளின் அமைப்பைமட்டிலும் தெரிந் திருப்பது போதுமானதாகாது; மறைமுக வரிகளின் அமைப்பும் தெரிந்திருக்கவேண்டும்.

இறுதியாக நாம் கவனிக்க வேண்டிய குறிப்பு ஒன்றுளது. குழந்தைகளை உடைய குடும்பங்கட்குத் தாராளமான வருமான வரித் தள்ளுபடி வழங்கினுல் அக் குடும்பத்திலுள்ள குழந்தைகள் திறன்மிக்கோராக வளர்ந்து எதிர்காலத்தில் வேலை ஆற்றல் மிக்கவராக விளங்கலாம்; இதனுல் நாட்டின் உற்பத்தித் திறன் (productivity) பெரிதும் பயனுள்ள வகையில் உயரலாம். இது உண்மையாயின், இரு வகையான பொருளாதார நோக்கங்கட்கு இடையே பிணக்கு நேர வாய்ப்புள்ளது. ஜனத்தொகை உயர்வைக் கட்டுப்படுத்துமுகத்தான் குடும்பங்கட்குப் பெரிதும் வரித் தள்ளுபடிகள் வழங்கக்கூடாது என்ற நோக்கமும் ஏற்கெனவே வசித்துவருகின்ற மக்களைத் திறன் உள்ளவராகச் செய்வதற்குப் பெரிதும் வரித் தள்ளுபடிகள் வழங்கவேண்டும் என்ற நோக்கமும் ஒன்றுக்கொன்று முரணுனவையாகும். அந்தந்த நாடு களில் நிலவக்கூடிய சூழ்நிலைக்கு ஏற்பதான் இந்தச் சிக்கலைத் தீர்த்துக்கொள்ள முடியும். அவ்வாறு தீர்க்க முயலும்போது, குறைந்த வருமானம் ஈட்டும் மக்கள் எந்த அளவுக்கு வருமான வரி விதிப்பிற்கு ஆளாகின்றனர்? தாராளமாக வழங்கப்படுகின்ற வரித் தள்ளுபடிகட்கும் ஓரளவே வழங்கப்படுகின்ற வரித் தள்ளுபடி கட்கும் இடையே உள்ள வேறுபாடானது பிறப்பு வீதத்தைக் கட்டுப்படுத்துவதோடு உற்பத்தித்திறனுக்குச் சாதகமாக அமையக் கூடிய ஒன்ரு? இவை தவிர வேறு மாற்றுக் கொள்கைகள் எவையேனும் உள்ளனவா? என்பனபோன்ற பல வினுக்கட்கு விடையிறுக்க வேண்டிவரும்.

## சமூகப் பாதுகாப்பு வரிகளும் பயன்களும்

இத் தலைப்பின்கீழ் இங்கு நாம் இரண்டு விஷயங்களை விவாதிக்க வேண்டியுள்ளது. பின்தங்கிய நாடுகளில் பொதுவாக சமூகப் பாதுகாப்பு (Social Security) அமைப்பு ஏற்படுத்தப்படவேண்டிய தற்கான காரணங்கள்குறித்து முதற்கண் விவாதிப்போம். அடுத்து, சமூகப் பாதுகாப்புமுறையைச் செயல்படுத்துவதற்கு ஆகக்கூடிய

செலவினங்கட்கான தொகையை எவ்வாறு வசூலிப்பது என்பது குறித்தும் இதனுல் விளையக்கூடிய பயன்கள் எவ்வாருக இருக்க வேண்டும் என்பதுகுறித்தும் விவாதிப்போம். பின்தங்கிய நாடுகளில் சமூகப் பாதுகாப்புமுறை உருவாக்கப்படவேண்டியதன் அவசியம் குறித்துப் பல்வேறு அடிப்படையில் பல விவாதங்கள் உள்ளன. முதலாவதாக, புராதனப் பழக்கவழக்கங்களை உடைய சமுதாயங்களில் ஆதரவற்ற வயோதிகர்களையும் பலவீனமானவர்களையும் அவர்களுடைய உறவினர்களே, சமூகக் கட்டுப்பாடுகட்கு உட்பட்டு, கண்காணித்துவரும் பழக்கம் உள்ளது. முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் அரசாங்கமே இதற்கான விரிவான ஏற்பாடுகளைச் செய்துள்ளது; அதாவது, அரசாங்கமே சமூகப் பாதுகாப்பிற்கான வரிகளை விதித்துவருகின்றது; மற்றும் இம் முறையின்கீழ் உதவிகள் புரிந்துவருகின்றது. இவ்வாறு புராதனப் பழக்கவழக்கங்கள் உடைய சமுதாயங்களிலும் முன்னேற்றமடைந்துள்ள சமுதாயங்களிலும் சமூகப் பாதுகாப்புமுறை உருவாகி இருப்பதுபோல இவற்றிற்கு இடைப்பட்ட நிலையில் உள்ள—பின்தங்கிய நாடுகளில்—இதுபோன்றதோர் முறையை உருவாக்க முயலுவதே நியாயமானதாகும். குறுகிய அளவிலாவது இம் முறையை உருவாக்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டியது அவசியமேயாகும். இரண்டாவதாக, சமூகப் பாதுகாப்புப் பணிகளில் சிலவற்றை மார்க்கெட்டில் வேறு சில நிறுவனங்கள் புரிந்து வருகின்றன. மக்களின் வருமானம் உயர உயர இவற்றிற்கான தேவையும் உயர்ந்துகொண்டே செல்கின்றது என்பது உண்மையாகும். இவ்வாருன மக்களின் தேவையை அரசாங்கம் உணர்ந்து இப் பணிகளை ஆற்ற முன்வருவதோடு நாட்டின் வருமானம் அதிகமாவதை ஒட்டி இப் பணிகட்காக அதிகமான பணத்தைச் செலவிடவும் முன்வரவேண்டும். மூன்ருவதாக, பேராசிரியர் மீட்[1] கூறியுள்ள விவாதத்தைக் காண்போம். சமூகப் பாதுகாப்பு ஏற்பாடுகளினுல் சமநிலைக்கு (equilibrium) அதிகமாகத் தொழிலாளர்கள் ஊதியம் பெற்றுவரக்கூடிய நாடுகளில் ஊதிய விதங்களைக் குறைக்கமுடியும் (அல்லது ஊதிய உயர்வு விகிதத்தையாவது குறைக்கமுடியும்). இறுதியாக, நியாய வாதம் ஒன்று உள்ளது. மக்களை மக்களாக நடத்தவேண்டுவது அவசியமாகும்; அவ்வாறு நடத்துவதற்கு சமூகப் பாதுகாப்புமுறை மிகவும் இன்றியமையாத ஒன்ருகும்.

[1] J. E. Meade அவர்கள் 'Economic Journal' (September 1961) இதழில் வெளியிட்டுள்ள 'Mauritius: a case study in Malthusian Economy' என்ற கட்டுரையைப் பார்க்கவும்.

சமூகப் பாதுகாப்பு முறைக்கு எதிராகவும் சில விவாதங்கள் உள்ளன. முதலாவதாக, சமூகப் பாதுகாப்பு முறையானது உருவாக்கப்படுவதை ஒட்டி தனியார் துறையை (private sector) விடப் பொதுத்துறையின் (public sector) முக்கியத்துவம் உயர நேரிடும். இது விரும்பத்தக்கதுதானு என்பதை ஆராய வேண்டியது அவசியமாகும். உதாரணமாக, சமூகப் பாதுகாப்பிற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்குத் தனியார் சேமிப்பை (private saving) ஊக்குவிப்பது விரும்பத்தக்கதா அல்லது பொது சேமிப்பை (public saving) ஊக்குவிப்பது விரும்பத்தக்கதா என்ற வினவுக்கு விடையிறுக்கவேண்டி இருக்கும். இரண்டாவதாக, அரசாங்கத்தின் ஏனைய செலவினங்களே அதிகமாக உள்ளன. இவற்றிற்காக அரசாங்கம் பெரிதும் முயன்று வரிகளை விதித்து நிதி சேர்க்கவேண்டியுள்ளது. இவ்வாருன நிலையில் சமூகப் பாதுகாப்புக்கு ஆகக்கூடிய செலவினங்கட்காக அரசாங்கம் மக்கள்மீதான வரிச்சுமையை மேலும் உயர்த்துவதென்பது சாத்தியமில்லை. மூன்ருவதாக, வேலையில்லாதோருக்கு அளிக்கப்படுகின்ற நஷ்ட ஈடு போன்ற வற்ருல் ஊதிய வீதங்கள் உயர நேரலாமேயொழிய குறைய நேரும் என்று கூறுவது பொருந்தாததாகும். இறுதியாக பின்தங்கிய நாடுகளில், நாட்டிலுள்ள மக்கள் யாவரும் பயனுறக்கூடிய வகையில் சமூகப் பாதுகாப்பு முறையை உருவாக்க முடியாது. நிருவாக சம்பந்தமாக நேரக்கூடிய இடர்ப்பாடுகளே இதற்கான காரணமாகும். இவ்வாருன சூழ்நிலையில் குறிப்பிட்ட ஒருசிலருக்குமட்டும் இவ் வசதிகளை அளிக்கலாம் என்று சிலர் வாதாடலாம். ஆனுல், இது நடைமுறையில் சாத்தியமானதன்று என்பதோடு நியாயமானதன்று என்பதையும் நாம் அறியவேண்டும்.

சமூகப் பாதுகாப்பு முறைக்கு ஆதரவாகவும் எதிராகவும் இவ்வாறு அமைந்துள்ள பல விவாதங்களும் மிகக் கவர்ச்சியானவை என்பதில் ஐயமில்லை. இதுபோன்ற வாதங்களை மேலும் விரிவாக விவாதிப்பது இங்கு உசிதமானதன்று என்று கருதி ஒரு விஷயத்தை மட்டிலும் குறிப்பிட விரும்புகிருேம். சமூகப் பாதுகாப்பு முறையை நாம் விரும்பினுலும் அல்லது விரும்பாவிடினும், இவற்றிற்கான மக்களின் தேவை பெருகியுள்ளது என்பதையும், அரசாங்கமே பல வகைப்பட்ட சமூகப் பாதுகாப்பு சேவைகட்கான ஏற்பாடுகளைச் செய்ய முன்வரவேண்டும் என்று உலகெங்கும் ஒருமித்த கருத்து உருவாகிவருகின்றது என்பதையும், சமூகப் பாதுகாப்புச் சேவைகளை ஏற்பாடு செய்வதற்கு ஆதரவாகவே பல அரசியல்வாதிகள் உள்ளனர் என்பதையும் நாம் மறந்துவிடலாகாது. இந்தப் பொதுவான அடிப்படையில் இரண்டாவது விஷயத்தை—அதாவது, சமூகப் பாதுகாப்பு முறையை ஒட்டி ஏற்படக்கூடிய செலவினங்களை

ஈடுகட்ட எவ்வாறு வரிகள் விதிக்கப்பெறவேண்டும்? மற்றும் சமூகப் பாதுகாப்பு முறையினுல் எத்தன்மைத்தான பயன்கள் விளையுமாறு செய்யவேண்டும்? என்ற விஷயத்தை—நாம் விவாதிக்க முயலுவோம். சமூகப் பாதுகாப்பு முறையை உருவாக்குவதால் நேரக்கூடிய வருமானப் பகிர்வு (income distribution) மாற்றங்களை ஓரளவுக்கு இவ் விஷயம் சார்ந்ததாகும். ஆனுல், வருமானப் பகிர்வைப் பொறுத்தவரையில் பெரிதும் கருத்துவேறுபாடுகட்கு இடம் உள்ளது. எனினும், வருமானப் பகிர்வுதவிர வேறு பல அமிசங்களையும் நாம் கவனிக்கவேண்டியுள்ளது என்பதை மறந்துவிடலாகாது. இது நிற்க. சமூகப் பாதுகாப்பு முறையினுல் விளையக்கூடிய பயன்கள் பல்வேறு வகையினவாக அமைய முடியும். வேலையில்லாத காலங்களிலும் உடல்நலமில்லாத காலங்களிலும் தொழிலாளர்கட்கு ரொக்கமாக உதவித்தொகை வழங்கப்படலாம். வயோதிகர்கட்கும் சிறுவர்கட்கும் இவ்வாறே ரொக்கமாக உதவித்தொகை வழங்கப்பெறலாம். மேலும், குறைந்த செலவில் மக்கள் மருத்துவ உதவி பெறுவதற்கான ஏற்பாடுகள் செய்யலாம். இவை தவிர குறைந்த விலையில் மக்களுக்கு உணவுப் பொருள்களை விநியோகம் செய்வதற்கான ஏற்பாடுகள் செய்யலாம். எனினும், ஒரு நாட்டிலுள்ளதுபோன்ற நிலை பிறிதொரு நாட்டில் அமைந்திருப்பதில்லை; எனவே, இவ்வாருன பயன்கள் எல்லா நாட்டிலும் ஒரேமாதிரியாக அமையக்கூடியன என்று பொதுவாக எண்ணிவிடக்கூடாது. இருப்பினும், ஓரிரு விஷயங்களை நாம் இங்குக் குறிப்பிட விரும்புகிருேம். முதலாவதாக, குழந்தைகட்காக வருமான வரித் தள்ளுபடி அளிக்கவேண்டும் என்று நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ள வாதங்களை ஏற்றுக்கொண்டால், வரையறைகட்டு உட்படாத வகையில், குடும்பங்கட்குச் சமூகப் பாதுகாப்பு முறையின்கீழ் எல்லா நலன்களும் கிட்டுமாறு செய்யவேண்டும் என்ற கருத்தை ஏற்றுக்கொள்ள முடியாது.[1] இரண்டாவதாக, பின்தங்கிய நாடுகளில் வேலை தேடி அலைவோர், வேலையில்லாமல் இருப்போர், உடல்நலமின்மையால் வேலைக்குச் செல்லாது இருப்போர் ஆகியவர்களின் எண்ணிக்கையை உறுதிப்படுத்துவது எளிதான செயலன்று. இதுபோன்ற நிலையில் நாடு முழுவதற்குமான சமூகப் பாதுகாப்பு ஏற்பாடானது நடைமுறையில் சாத்தியமானதன்று என்றே தோன்று

[1] அண்மையில் மொரீஷஸ் நாட்டிற்காகப் பல்வேறு பயன்களை உள்ளடக்கியுள்ள சமூகப் பாதுகாப்பு ஏற்பாடு ஒன்றை பேராசிரியர் டிட்மஸ் பிரஸ்தாபித்துள்ளார். மூன்று குழந்தைகட்கு மிகாது உள்ள குடும்பங்கட்கு ஏற்ற முறையில் இவருடைய பரிந்துரைகள் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. R. M. Titmuss and B. Abel smith, 'Social Policies and Population Growth in Mauritius', Methuen, London, 1961 ஐப் பார்க்கவும்.

கின்றது. எனவே, சமூகப் பாதுகாப்பு முறையால் ஒருசிலரே (உதாரணமாக, ஊதியம் பெறுவோர் மட்டும் அல்லது நகரங்களில் வசிக்கக்கூடியவர்கள்மட்டும்) பயன்பெறுமாறு செய்வதைத்தவிர வேறு வழியில்லை என்று தோன்றுகிறது. ஆனால், இவ்வாறு செய்தால் வறிய நிலையிலுள்ள மக்களுக்கு ஏதும் பயன் கிட்டாமல் போகலாம். சீர்தூக்கிப் பார்க்குங்கால், மக்களுக்கு ஒரு குறைந்த அளவு வாழ்க்கைத்தரம் கிடைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முயலுவது மிகவும் சிறந்ததாகும். இக் குறிக்கோளை அடைவதற்காக மக்களின் அடிப்படைத் தேவைகளான உணவுப்பொருள்களையும் மற்றும் மருத்துவ உதவிகளையும் குறைந்த செலவில் அவர்கள் பெறுமாறு ஏற்பாடுகள் செய்யவேண்டும். இவ்வாறு செய்தால் குறைந்த அளவு ஊதியம் ஈட்டிக்கொண்டு வறிய நிலையில் இருக்கக்கூடிய பலரும் பயனுறுவர். மேலும், மக்களின் வாழ்க்கைச் செலவை (cost of living) தீர்மானிக்கக்கூடிய பல முக்கியமான பொருள்களை இவ்வாறு குறைந்தவிலையில் அரசாங்கம் விநியோகம் செய்ய முன்வந்தால் மக்கள் ஊதிய உயர்வு கேட்கக்கூடிய வாய்ப்புகள் அருகிவிடும். இவ்வாறு அரசாங்கம் முக்கியமான பொருள்களின் விலையைக் கட்டுப்படுத்தி அவற்றைக் குறைந்த விலையில் மக்களுக்கு விநியோகம் செய்ய முன்வந்தால் நுகர்வோரின் தேர்வுச் சுயேச்சை (freedom of choice) தடைப்படும் என்று வாதிடலாம்; எனினும், இப் பிரச்சினையை இங்கு விரிக்காது மேலே செல்வோம்.[1]

சமூகப் பாதுகாப்பு முறையினால் நேரக்கூடிய செலவினங்களை ஈடுகட்டுவதற்கு எவ்வாறான வரிகள் விதிக்கப்படவேண்டும் என்று அடுத்து ஆராய்வோம். முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் 'சமூகப்பாதுகாப்பு நிதிகள்' என்று தனியாக நிதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. வேலை அளிப்போர் (employer) மீதாவது அல்லது வேலைசெய்வோர் (employee) மீதாவது அல்லது இருவரின்மீதும் இவ்வரிகள் விதிக்கப்படுகின்றன. இவ்வாறான வரிகளால் கிடைக்கக்கூடிய பணம் சமூகப் பாதுகாப்பு நிதியின் ஒரு பகுதியாகவோ அல்லது முழுப் பகுதியாகவோ அமைகிறது. இவ் வரியானது ஒரு குறிப்பிட்ட மொத்தத் தொகையாக இருக்கலாம். அல்லது ஒரு குறிப்பிட்ட உச்ச அளவுவரை வருமானங்களின்மீது ஒரு குறிப்பிட்ட வீதத்தில் விதிக்கப்படலாம். உதாரணமாக, (வயது வேறுபாடு பால் வேறுபாடு ஆகியவற்றிற்கேற்ப மாறுபட்டு) பிரிட்டனில் வழிவழியாக வேலை அளிப்போர்மீதும் வேலை செய்வோர்மீதும் ஒரு குறிப்பிட்ட மொத்தத் தொகை வரியாக விதிக்கப்பட்டு வருகின்றது;

[1] இவற்றின் விளைவால் ஜனத்தொகை உயர்வு எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பதையும் விழிப்புடன் ஆராய வேண்டியது அவசியமாகும்.

வேலை செய்வோரின் ஊதியம் எந்த அளவாக இருப்பினும் ஒரே மாதிரியான மொத்தத் தொகை எல்லாரிடமுமிருந்து வசூலிக்கப்படுகின்றது. ஆனால், அமெரிக்காவில் ஒரு குறிப்பிட்ட உச்ச அளவு வரை வருமானங்களின்மீது ஒரு குறிப்பிட்ட வீதத்தில் இவ் வரியானது வேலை அளிப்போர்மீதும் வேலை செய்வோர்மீதும் விதிக்கப்பட்டு வருகின்றது. அண்மையில் இங்கு நாம் விளக்கியுள்ள இரண்டு வரிமுறைகளும் கலந்த ஒரு முறையினை பிரிட்டன் உருவாக்கிச் செயலாற்றிவருகின்றது. இம் முறையின்கீழ் அடிப்படை வரி எல்லாருக்கும் ஒன்ருகவே அமைந்துள்ளது; ஆனால், துணை வரியானது வருமான அளவைப் பொறுத்து வேறுபட்ட வீதங்களில் அமைந்துள்ளது.

பின்தங்கிய நாடுகளில் நாம் மேலே விளக்கியுள்ள இரண்டு வகையான வரிகளையும் விதிப்பதற்கான சாத்தியக் கூறுகள் யாவை என்பதுகுறித்து அடுத்து ஆராய்வோம். குறிப்பிட்ட அளவு தொழிலாளர்களை வேலையில் அமர்த்தியிருக்கும் வேலையளிப்போரும் மற்றும் குறிப்பிட்ட அளவு மொத்தத் தொகையைத் தொழிலாளர்கட்கு ஊதியமாக அளித்துவரக்கூடிய வேலையளிப்போரும் சமூகப் காதுகாப்பு முறைக்கான வரிகளைச் செலுத்தவேண்டும் என்று வரையறை செய்யப்பட்டால் இதன் விளைவாக வேலையளிப்போர், ஓரளவுக்கு உழைப்பைக் குறைக்கும் (labour—saving) முதல் செறிவான (capital intensive) முறைகளைக் கையாள முயலுவர் என்பது திண்ணம். பின்தங்கிய நாடுகளில் கையாளக்கூடிய பொருத்தமான உற்பத்திமுறை யாது? என்பதுகுறித்து அண்மையில் பலர் விவாதித்துள்ளனர். எனவே, இதுகுறித்து நாம் ஏதும் கூற விரும்பவில்லை. எனினும், பின்தங்கிய நாடுகளில் தொழிலாளர்களின் எண்ணிக்கை பெருமளவில் உள்ளதாலும் மூலதனப் பற்றுக்குறை உள்ளதாலும் மேலே நாம் விளக்கியுள்ள வரிமுறைகளை விதிப்பது அவ்வளவு உகந்ததன்று என்று பொதுவாக எண்ணத் தோன்றுகிறது. மேலும், குறிப்பிட்ட மொத்தத் தொகையை வரியாக விதிப்பதானது, வருமான உயர்வுக்கு ஏற்ப வரியின் வீதம் உயர்ந்து செல்லக்கூடிய வரிமுறையைவிட, பெரிதும் கேடு விளைவிக்கக்கூடியது என்று சிலர் வாதாடுகின்றனர். வருமான உயர்வுக்கேற்ப வரியின் வீதம் உயர்ந்து செல்லுமேயாயின் திறன் உடைத் தொழிலாளரை (skilled labour) வேலையில் அமர்த்துவதைவிட திறம்பெருத் தொழிலாளரையே (unskilled labour) பெரும் அளவில் தொழிற்சாலைகள் வேலையில் அமர்த்த முனையலாம். திறன் உடைத் தொழிலாளரைவிடத் திறம்பெருத் தொழிலாளரே பின்தங்கிய நாடுகளில் அதிகமாக இருக்கக்கூடும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இனி வேலை செய்வோர்மீது விதிக்கத்தக்க வரிமுறை குறித்து ஆராய்வோம். பொதுவாக, வருமான உயர்வுக்கு ஏற்ப, வரியின் வீதம் உயர்ந்து செல்லக்கூடிய முறையைவிடக் குறிப்பிட்ட மொத்தத் தொகையை வரியாக விதிப்பதே தொழிலாளர்களின் ஆர்வத்திற்குப் பெரிதும் இடையூருக இருக்காது என்று கூறலாம். எனினும், பின்தங்கிய நாடுகளில் இன்று நிலவுகின்ற சூழ்நிலையில்—அதாவது, வேலை செய்யும் தகுதி உள்ளோரில் பெரும்பான்மையோர் பிறரைச் சாராமல் உற்பத்தியில் ஈடுபட்டுக்கொண்டும் சிறுபான்மையோரே தொழிற்சாலைகளிலும் ஏனைய நிறுவனங்களிலும் வேலை செய்வோராக அமர்ந்திருக்கின்ற நிலையில்—இவ்விரு முறைகளில் எம்முறை கைக்கொள்ளப்பட்டாலும் நேரக்கூடிய விளைவுகள் பெரும்பாலும் ஒன்ருகவே இருக்கும். அதாவது, பிறரைச் சாராமல் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளவர் தமது தொழிலை விடுத்து தொழிற்சாலைகளில் வேலையில் அமரக்கூடிய நிலை உருவாகுவதற்கு மேற்கூறிய இரு வகை வரிமுறைகளும் தடையாகவே அமையும் என்பதில் ஐயமில்லை.

இவ்வாருன சூழ்நிலையில் சமூகப் பாதுகாப்பிற்கான நிதி திரட்டும் பணிக்கு பிரிட்டிஷ் முறையோ அல்லது அமெரிக்க முறையோ ஏற்றதன்று என்றே முடிவுகட்டத் தோன்றுகிறது. நாட்டின் பொதுவான வரிமுறையின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாயின் துணையின்றி, அதனினின்றும் தனித்துள்ள ஒரு முறையின் மூலம், நாம் சமூகப் பாதுகாப்பிற்காக வரி செலுத்தி வருகிறோம். என்று மக்கள் உணருவது கொள்கையளவில் மிகவும் விரும்பத்தக்கதுதான். எனினும், வேலையிலுள்ள தொழிலாளர்கட்கு வேலையில்லாத காலத்தில் நஷ்ட ஈடு கொடுப்பதே முறையானது. அதுபோலவே வேலையை விட்டு ஓய்வு பெறும் காலத்தில் அன்னருக்கு ஓய்வு ஊதியம் தரவேண்டும் என்றெல்லாம் நாம் வாதாடாது வறிய மக்களின் துயரினைப் போக்கும் வகையில் சமூகப் பாதுகாப்பானது அமைந்திருக்க வேண்டும் என்று கருதினல் நாம் மேலே கூறியுள்ளதுபோல சமூகப் பாதுகாப்பிற்கான வரி முறை நாட்டின் பொதுவான வரிமுறையினின்றும் தனித்து இருக்கவேண்டியதில்லை. முதற்செறிவுத் தொழில்களை ஊக்குவிப்பதுபோன்ற கேடுகளை விளைவிக்கக்கூடிய வரிமுறையைவிட—அதாவது, வேலையளிப்போர் வேலை செய்வோர் ஆகியோர்மீது விதிக்கப்படுகின்ற வரிமுறையைவிட—நாட்டில் பொதுவாக விதிக்கப்படுகின்ற வரிகளினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயைப் பயன்படுத்துவதே உகந்ததாகும். எனினும், இம் முறையையே கைக்கொள்ளும் பட்சத்தில் நாட்டில் விதிக்கப்படுகின்ற பல வரிகளில் ஓரிரு வரிகளின்மூலம் கிடைக்கக்

கூடிய வருவாயை சமூகப் பாதுகாப்பிற்கு என்று ஒதுக்கிவிடுவது விரும்பத்தக்கதன்று. இதுகுறித்து மீண்டும் ஆரும் அத்தியாயத்தில் காண்போம்.

**தொழில்கட்கு அரசாங்கம் அளிக்கக்கூடிய உதவிகள்**

தொழில்கட்கு அரசாங்கம் பலவகைகளில் உதவ முடியும். முதலீடுகளை (ஊக்கக் கொடைகள் வழங்குவதன்மூலமாகவோ அல்லது விசேஷ தேய்மானத் தள்ளுபடி வசதிகள்மூலமாகவோ) ஊக்குவித்தல், குறிப்பிட்ட காலத்திற்கு வருமான வரிவஜா செய்தல், உற்பத்தியின் அடிப்படையில் (அல்லது உள்ளிடுகையின் - input - அடிப்படையில்) ஊக்கக்கொடை (subsidies) வழங்குதல், காப்புச் சுங்கத் தீர்வைகள் (protective tariffs) விதித்தல் போன்ற பல வழிகளிலும் அரசாங்கம் தொழில்கட்கு உதவ முடியும். இம்முறைகள் யாவும் பல்வேறு காலத்தில் பல நாடுகளில் அநுசரிக்கப்பட்டவையே யாகும். இந் நாடுகள் இவற்றுள் ஏதேனும் ஒரு முறையைமட்டிலும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் அநுசரித்தன என்று கொள்வதற்கில்லை; ஒன்றுக்கு மேற்பட்ட முறைகளை ஒரே காலத்தில் இவை கையாண்டுள்ளன. இம் முறைகளைப்பற்றிப் பொதுவாக யாவரும் அறிவர். எனவே, இம் முறைகள் குறிப்பிட்ட நாடுகளில் எவ்வாருன பயனை விளைவிக்கக்கூடும் என்பதுபற்றி ஈண்டு விவாதிக்காமலேயே மேலே செல்கிருேம். இதற்குப் பதிலாக, ஒவ்வொரு முறையையும் விவாதிப்பதற்கான காரணங்கள் ஆங்காங்கே விளக்கப்படும். அதன் பின் இம் முறைகளை ஒன்ருேடொன்று ஒப்பிட்டு நோக்கி இவற்றின் தராதரச் சிறப்புகளை விளக்குவோம்.

தொழில்களில் முதலீடு பெருகுவதை ஊக்குவிக்குமுகத்தான் சாதாரணமாக இரண்டு வழிகள் கையாளப்படுகின்றன. விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடிகள் (accelerated depreciation) முதலீட்டிற்கான ஊக்கக்கொடை (investment subsidy) ஆகியவையே அந்த இரண்டு வழிகளாகும். இவற்றுள் விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடியானது, மூலதனச் செலவுகளைக் குறுகிய காலத்திலேயே, உதாரணமாக ஐந்து ஆண்டுகளிலேயே,[1] தேய்மானச் செலவுகளாகக் கழித்துக்கொள்ளுமாறு தொழில்கட்கு அநுமதி தருவதேயாகும். சில நாடுகளில் குறுகிய காலத்தில் தேய்மானச் செலவுகளைக் கணக்கிட அநுமதி கொடுப்பதோடு வழக்கமான சேதாரத் தள்ளுபடிகளும் (wear and tear

[1] உதாரணமாக, ஜமைக்காவில் மூலதனச் செலவுகளை ஐந்து ஆண்டுகளிலேயே தேய்மானச் செலவுகளாகக் கழித்துக்கொள்ளச் சட்டம் அநுமதிக்கின்றது. மூலதனச் செலவு நேர்ந்த ஆண்டிலிருந்து எட்டு ஆண்டுகட்குள் இவ்வாறு ஐந்து ஆண்டுகள் கழித்துக்கொள்ள முடியும்.

allowances) வழங்கப்படுகின்றன. விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடிகளோடு சேதாரத் தள்ளுபடிகளையும் விவாதிக்கத் தொடங்கினால் நாம் முதலீட்டிற்கான ஊக்கக்கொடையை விவாதிக்கவேண்டியிருக்கும். ஆனால், இவ்விரண்டு முறைகளையும் தனித் தனியே விவாதிப்பது மிக வசதியானது என்று கருதி அவ்வாறே செய்துள்ளோம்.

விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடி முறையினால் கம்பெனி ஒன்று நிகழ்காலத்தில் செலுத்த வேண்டிய வரித் தொகையின் ஒரு பகுதியை நிகழ்காலத்திலல்லாது எதிர்காலத்தில் செலுத்த வேண்டிவரும். இது அக் கம்பெனிக்கு ஆதாயகரமானதேயாகும். தள்ளிப்போடப்பட்டுள்ள வரித்தொகைக்குக் கூட்டு வட்டி போட்டுக் கணக்கிட்டால் எவ்வளவு மதிப்பு கிட்டுமோ அதுவே கம்பெனி பெறக்கூடிய பயனாகும். ஒரு குறிப்பிட்ட கம்பெனிக்கு இம் முறையினால் எவ்வளவு பயன் கிடைக்கக்கூடும் என்று துல்லிதமாக அறியவேண்டுமாயின் மூன்று விஷயங்களைக் கணக்கிடவேண்டும். எதிர்காலத்திற்குத் தள்ளிப்போடப்பட்டுள்ள வரித் தொகை, வரித் தொகை தள்ளிப்போடப்பட்டுள்ள காலம், உரிய வட்டி வீதம் ஆகியவையே அந்த மூன்று விஷயங்களாகும். கம்பெனியினுடைய மூலதன வளர்ச்சி வீதத்தைப் பொறுத்து வரித்தொகை தள்ளிப்போடப்படக்கூடிய காலம் அமையும். (அதாவது, அந்தக் கம்பெனியானது அடுத்தடுத்து புதிய முதலீடுகள் செய்யுமேயாயின் இதன் விளைவாக வரிச் சலுகை தரப்படும் காலம் அதிகமாகிக்கொண்டே போகும்.) மேலும், 'உரிய வட்டி வீதம்' கம்பெனிக்குக் கம்பெனி மாறுபடலாம். எனவே, விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடி முறையால் கிடைக்கக்கூடிய பயன்களைக் கணக்கிடுவதென்பது எளிதானதொன்றன்று; சிக்கல் நிறைந்த ஒன்றேயாகும். இது நிற்க. செலுத்தவேண்டிய வரித் தொகையை நிகழ்காலத்தினின்றும் எதிர்காலத்திற்குத் தள்ளிப்போடுவதால் இருவகையில் கம்பெனியானது பயன் அடையலாம். முதலாவதாக, கம்பெனியிடமுள்ள ரொக்கநிலைச் சொத்துகள் (liquid assets) அதிகரிக்கும்; எனவே, கம்பெனியானது தனது நடவடிக்கைகளை விஸ்தரிப்பது சாத்தியமாகும். இரண்டாவதாக, முதலீட்டை ஒட்டி ஏற்படக்கூடிய ஆபத்துகள் (risks) குறைய நேரிடும். இவ்விரண்டு பயன்களில் இரண்டாவது பயனே மிகவும் முக்கியமானதாகும். ஆபத்துகளைத் தாங்குவதற்குக் கம்பெனிகள் எவ்வாறு ஊக்குவிக்கப்படவேண்டும் என்று மஸ்க்ரேவ்[1]

[1] R. A. Musgrave, 'The Theory of Public Finance' pp.343-4ஐப் பார்க்கவும்.

அவர்கள் ஓரளவுக்கு விரிவாகத் தமது புத்தகத்தில் விளக்கியுள்ளார். எனவே, அவற்றை ஈண்டு விரிவாக விளக்க முயலாமல் முக்கியமான கருத்துகளைமட்டும் ஆராய்வோம். முதற்கண் ஒரு கம்பெனிக்கு வழங்கப்பட்டுள்ள தேய்மானத் தள்ளுபடி 100 சதவீதம் என்று வைத்துக்கொள்வோம். (அதாவது, முதலாவது ஆண்டிலேயே இக் கம்பெனியின் மூலதனச் செலவு முழுவதையும் தேய்மானச் செலவாகக் கழித்துக்கொள்ள அநுமதி வழங்கப்படுகின்றது.) இவ்வாருன நிலை, வரி ஏதும் இக் கம்பெனியின்மீது விதிக்கப்பெருததை ஒக்கும். சாதாரணமாக வருமானவரி முறைகளில் ஆபத்து நிறைந்துள்ள தொழில்கள் பாரபட்சமாக நடத்தப்படுகின்றன. நாம் மேலே கூறியதுபோல ஓராண்டிலேயே 100 சதவீதத் தேய்மானத் தள்ளுபடி அநுமதிக்கப்பட்டால், இவ்வாறு கம்பெனிகள் பாரபட்சமாக நடத்தப்படுவதற்கு ஏதும் இடம் இல்லாது போய்விடும். கம்பெனிக்கு 100 சதவீதத் தேய்மானத் தள்ளுபடி வழங்கப்படாது அதற்குக் குறைவான தேய்மானத் தள்ளுபடியே வழங்கப்பட்டால், வருமான வரிமுறையால் கம்பெனியானது பாரபட்சமாக நடத்தப்படுவதற்கு வாய்ப்பே இல்லாது போய்விடும் என்று கொள்வதற்கில்லை; ஓரளவு வாய்ப்பு இருக்கும். எனினும், கம்பெனிக்கு ஏற்படக்கூடிய நஷ்டங்களை ஏனைய இலாபங்கட்கு ஈடாகச் சரிக்கட்ட அநுமதி வழங்கப்பட்டால், வருமான வரி முறையால் கம்பெனியானது பாரபட்சமாக நடத்தப்படுவதற்கு ஏதும் இடம் இல்லாமல் போய்விடும். இவ்வாறே இவ் விஷயத்தை நீட்டிக்கொண்டேபோனுல் நாம் இதனை விவாதிப்பதிலேயே ஆழ்ந்துவிடலாம். எனவே, இத்துடன் இதை நிறுத்தி அடிப்படைக் கருத்தை மட்டும் கூறி மேற்செல்வோம். அதாவது, விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடிமுறையால் முதலீட்டை ஒட்டி ஏற்படக்கூடிய ஆபத்துகள் ஓரளவுக்குக் குறையும் என்பது திண்ணம்.

அடுத்து, முதலீட்டிற்கான ஊக்கக் கொடை (investment subsidy) இன்னதென்று காண்போம். சாதாரணமாகக் கம்பெனிகட்குச் சேதாரத் தள்ளுபடிகள் (wear and tear allowances) வழங்கப்படுகின்றன. இவற்றுடன் மூலதனச் செலவின் ஒரு பகுதி ஊக்கக்கொடையாக வழங்கப்படும் முறையே முதலீட்டிற்கான ஊக்கக்கொடை முறையாகும். விரைவுசெய்யப்பட்ட தேய்மானத் தள்ளுபடி முறையுடன் ஒப்பிட்டு நோக்கினுல் ஊக்கக் கொடை முறையினுல் நேரக்கூடிய விளைவுகள் ஓரளவுக்கு வேறுபட்டவை என்று அறியவருவோம். இரண்டு கம்பெனிகட்கு முதலாண்டிலேயே சேதாரத் தள்ளுபடி வழங்கப்படுகின்றதென்றும் முதல்

கம்பெனிக்கு 20 சதவீதம் ஊக்கக்கொடை வழங்கப்படுகின்றது என்றும், இரண்டாவது கம்பெனிக்கு 20 சதவீதம் தேய்மானத் தள்ளுபடி வழங்கப்படுகின்றது என்றும் வைத்துக்கொண்டால், இரண்டு கம்பெனிகளின் ரொக்கத் தன்மையிலும் முதலீடு செய்யக் கூடிய ஆற்றலிலும் நேரக்கூடிய விளைவுகளில் கிஞ்சித்தேனும் வேறுபாடு இருக்கமுடியாது. ஏனெனில், இத் தள்ளுபடிச் சலுகைகள், முதலீடு செய்யப்பட்ட நாளிலிருந்து இரண்டு கம்பெனிகட்கும் வழங்கப்படக்கூடிய ஒரேவகையான வரிச் சலுகையை ஒக்கும். எனினும், கம்பெனிகள் ஆபத்துகளைத் தாங்குவதற்குத் தூண்டுகோலாக அமையக்கூடிய வகையில் இவ்விரு முறைகளும் வேறுபட்டே விளங்குகின்றன. ஏனெனில், விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடிமுறையில் சேதாரத் தள்ளுபடி 100 சதவீதத்திற்கு அதிகமாக இருக்கமுடியாது; ஆனால், ஊக்கக் கொடை முறையில் சேதாரத் தள்ளுபடியானது 100 சதவீதத்திற்கும் அதிகமாக இருக்க முடியும். எனவே, ஒரு கம்பெனி ஆரம்பிக்கப்பட்ட முதலாவது ஆண்டிற்குப் பின் அடுத்து வரக்கூடிய ஆண்டுகளில் ஊக்கக்கொடை முறை பெரிதும் பயனுள்ளதாக இருக்கும். இதனால் இவ் இருமுறைகளிலும் தேய்மானத் தள்ளுபடி முறையைவிட ஊக்கக் கொடை முறையே, கம்பெனிகள் ஆபத்துகளைத் தாங்குவதற்குப் பெரிதும் தூண்டுகோலாக அமையக்கூடியது என்பது தெளிவாகும். இவ் இரண்டு முறைகட்குமிடையே உள்ள வேறுபாடுகள் மிகவும் சுருக்கமாக விளக்கப்பெற்றிருக்கின்றன என்பது மெய்யேயாயினும், இரண்டு முறைகட்குமிடையே உள்ள முக்கியமான வேறுபாடுகளை உணர்த்த இவ் விளக்கமே போதுமானதாகும்.

புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள தொழில்களை ஊக்குவிக்குமுகத்தான் குறிப்பிட்ட காலத்திற்கு, பெரும்பாலும் ஐந்து ஆண்டுகட்கு, இவற்றிற்கு வரிவஜா அளிப்பது மற்றும் ஓர் முறையாகும். உதாரணமாக, இந்திய வருமான வரிச் சட்டத்தில் செக்ஷன் 15c–ன் பிரகாரம் புதிதாக நிறுவப்பெறுகின்ற தொழில்கட்கு, அத் தொழில்கள் உற்பத்தி செய்யத் துவங்குகின்ற முதலாவது ஆண்டிலும் அடுத்து தொடர்ந்து நான்கு ஆண்டுகட்கும், வரி விதிப்பிலிருந்து ஓரளவுக்கு விலக்கு அளிக்கப்பெறுகின்றது. இதனினின்றும் சிறிது வேறுபட்டமுறை ஏனைய நாடுகளில் கடைப்பிடிக்கப்படுகின்றது. இந் நாடுகளில் புதிய கம்பெனிகள் நிறுவப்பட்ட முதல் எட்டு ஆண்டுகளில் கம்பெனிகளே தேர்ந்தெடுக்கக்கூடிய ஐந்து ஆண்டு

1 ஏதாவது ஒரு தள்ளுபடியை ஒரு கம்பெனியானது சில காரணங்களை முன்னிட்டு சிறிது காலம் கழித்தே பெற முடியும் என்று வைத்துக்கொண்டால் சில வேறுபாடுகள் தோன்றும்.

கட்கு வரிவிலக்கு அளிக்கப் பெறுகின்றது. அல்லது (நைஜீரியாவில் உள்ளதுபோல) வரிவிதிக்கக்கூடிய அளவுக்குக் கம்பெனிகள் இலாபங்களை ஈட்ட ஆரம்பிக்கக்கூடிய நாள்தொட்டு ஐந்து ஆண்டு கட்கு வரி விலக்கு அளிக்கப்பெறுகின்றது. இந் நாடுகளில் இந்தியா வில் உள்ளதைப்போன்று ஓரளவுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக் காமல் முழுவதும் விலக்கு அளிக்கப்பெறுகின்றது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடிமுறை ஊக்கக் கொடைமுறை ஆகியவற்றைப்போலவே வரிவஜா முறையும் தொழில் களை ஊக்குவிக்கக்கூடியது. தன்னுடைய ஆரம்ப காலத்தில் கம்பெனி ஒன்று ஏதாவது இலாபங்களை ஈட்டுமேயாயின், வரிவஜா தராதிருந்தால் இருக்கக்கூடியதைவிட, வரிவஜா தருவதால் அதனுடைய ரொக்கத் தன்மையானது அதிகமாக இருக்கும். வரி வஜா முறையினல் இலாபங்களின்மீது விதிக்கக்கூடிய உண்மையான வரி வீதம் குறைவாக இருக்கக்கூடுமாதலால் புதிய முதலீடுகளி லுள்ள ஆபத்தை இவ் வரிவஜாமுறை குறைக்கும் என்று கருத இடமுள்ளது. உண்மையிலேயே இம் முறையானது, இலாபங்களின் மீது விதிக்கப்படுகின்ற வரிவீதம் நிரந்தரமாக (தாற்காலிகமாக நீக்கப்பட்டிருப்பதற்கு மாருக) குறைக்கப்பட்டுள்ளதற்குச் சம மாகும் என்று கொள்வதில் தவறில்லை. இவ்வாறு தேய்மானத் தள்ளுபடிமுறை, ஊக்கக்கொடைமுறை, வரிவஜாமுறை ஆகிய வற்றின் விளைவாகக் கம்பெனிகள் பொதுவாக ஒரேமாதிரியாக ஊக்கப்படும் என்பது உண்மையேயாயினும், பல அமிசங்களையும் ஒப்பிட்டு நோக்குங்கால், இவை ஒன்றுக்கொன்று பெரிதும் வேறு பட்டவை என்பது புலனுகும். தேய்மானத் தள்ளுபடி முறையிலும் ஊக்கக்கொடை முறையிலும் சலுகைகளானவை, நிலைமுதற்பொருள் களில் (fixed capital) செய்யப்படுகின்ற முதலீட்டு வீதத்தைப் பொறுத்தே அமைகின்றன. ஆனல், வரிவஜா முறையில் சலுகைகள் இலாப மட்டத்தைப் (level of profit) பொறுத்து அமைகின்றன. இவ் வேறுபாடுகளை விளக்கமாக விரைவில் இவ் அத்தியாயத்திலேயே காண்போம்.

புதிய தொழில்கட்கு வரிச் சலுகை அளிக்குமுகத்தான் கையாளப்பட்டு வருகின்ற பல முறைகளுள் நாம் மேலே விளக்கிய முறைகள் ஒருசில முறைகளாகும். இவற்றினின்றும் முற்றிலும் வேறுபட்டுள்ள பிறிதொரு முறையும் உள்ளது. தொழில் களை ஊக்குவிக்குமுகத்தான் மறைமுக வரிகளை விதிப்பதும் தொழில்கட்கு மானியம் வழங்குவதுமே இம் முறையாகும். இம் முறை பலவாறு கையாளப்படுகின்றது. முதலாவதாக, கச்சாப்

பொருள்கள், மூலதனப் பொருள்கள் ஆகியவற்றிற்கு இறக்குமதி வரியினின்றும் விலக்கு அளிக்கப்படுகின்றது. இரண்டாவதாக, சில குறிப்பிட்ட இறக்குமதிப் பொருள்களின்மீதுமட்டும் காப்புச் சுங்கத் தீர்வை விதிக்கப்படுகின்றது. மூன்ருவதாக, மொத்த விற் பனையின் அடிப்படையில் கம்பெனிகட்கு மானியங்கள் வழங்கப்படு கின்றன. இம் மூன்றுவகைச் சலுகைகளின் பொதுவான நோக்க மானது, சலுகைபெறும் பொருள்களின் உள்நாட்டு நுகர்வை ஊக்கு விப்பதேயாகும். முதலாவது சலுகை மூன்ருவது சலுகை ஆகிய வற்றின் விளைவாக சலுகை பெறும் பொருள்களின் வெளிநாட்டு விற்பனையும் அதிகரிக்கலாம். இம் முறைகளைப் பல நாடுகளும் பல் வேறு விதத்தில் கையாண்டு வருகின்றன; எனவே, இவற்றை விரி வாக விளக்காது மேலே செல்வோம்.

இனி இங்கு விளக்கப்பட்டுள்ள பல முறைகளையும் ஒன்ருே டொன்று ஒப்புநோக்கி இவற்றின் தராதரச் சிறப்புகளை அறிய முயலுவோம். இவற்றினிடையே முக்கியமான சிக்கல்கள் நிறைந்த பல வேறுபாடுகள் உள்ளன. இவ் வேறுபாடுகளை ஆராயப் புகுமுன் கரிபியப் பிரதேசத்தில் பிரிட்டனுக்குச் சொந்த மான ஒரு நாட்டில் அண்மையில் வெளியிடப்பட்டுள்ள கருத்து ஒன்றினை ஆராய்வோம். வரிவஜா முறையைவிட சுங்கத் தீர்வை முறையே இந் நாட்டைப் பொறுத்தவரையில் சிறந்தது; ஏனெனில், வரிவஜா முறையால் அரசாங்க வருவாய் குறைகின்றது. ஆனல், சுங்கத் தீர்வை முறையால் அரசாங்க வருவாய் அதிகமாகின்றது—என்பதே அக் கருத்தாகும். இக் கருத்து முழு அளவில் அமைந் துள்ள ஒன்று என்று கொள்வதற்கில்லை. ஏனெனில், இரண்டு வித மான வரிமுறைகளின் தராதரங்களை மதிப்பிடும்போது அவை இரண்டையும் சமநிலையில் நிறுத்தி ஒப்பிடுவதே சிறந்ததாகும். உதாரணமாக, நாம் இரண்டு வரிகளை ஒன்ருேடொன்று ஒப்பிட்டு நோக்குங்கால், அவை இரண்டினின்றும் கிடைக்கக்கூடிய வருவாய் ஒரே அளவினது என்று வைத்துக்கொள்ள வேண்டும். இதேபோல ஒரு குறிப்பிட்ட வரியின்மூலம் அதிக வருவாய் திரட்ட முயலுவதால் நேரக்கூடிய விளைவுகளைப்பற்றி நாம் விவாதிக்கப் புகின், இதனல் நேரக்கூடிய மிகுதியான செலவினங்களையும் நாம் தவருமல் கணக் கிட்டுக் கொள்ளவேண்டியது அவசியமாகும். இந்த அடிப்படையில் நாம் மேலே கண்ட கருத்தை நோக்குங்கால், சுங்கவரி விதிப்பதால் வாணிப மாற்று வீதமானது (terms of trade) வரி விதிக்கும் நாட் டிற்குச் சாதகமான முறையில் அமைந்தாலன்றி இதனல் பயன் ஏதும் விளைவதற்கு வாய்ப்பு இல்லை. இதை இந்த அளவில் நிறுத்திக் கொண்டு இவ் விவாதத்தின் அடிப்படைப் பிரச்சினையை ஓர்

உதாரணத்தின்மூலம் அணுக முயலுவோம். ஒரு நாட்டிலுள்ள இரண்டு தொழில்கள் Aயும் Bயும் என்றும், இந் நாட்டில் கடைப் பிடிக்கப்படுகின்ற இரண்டு விதமான கொள்கைகள், கொள்கை 1 கொள்கை 2 என்றும் வைத்துக்கொள்வோம். தலைவரியின் (poll-tax) மூலம் வசூலிக்கப்பட்ட தொகையை Aயாகிய தொழிலுக்கு மானியமாக வழங்குவதே கொள்கை 1 ஆகும். இதே அளவு தொகையை Bயாகிய தொழில் தயாரித்துள்ள பொருள்களின்மீது வரியாக விதித்து அதை ஒவ்வோரு தொழிற்சாலைக்கும் தலைக்கு இவ் வளவு என்ற ரீதியில் மொத்தத் தொகையாக மானியம் வழங்குவதே கொள்கை 2 ஆகும். இவ் இரு கொள்கைகளில் எதைக் கடைப் பிடித்தாலும் நாட்டிலுள்ள செல்வ வளமானது வெவ்வேறு தொழில் களில் பயன்படுத்தப்படும் அளவு ஒரேவிதமாகவே அமையும். எனினும், இவ்விரு கொள்கைகளிலும் முதலாவது கொள்கையானது உள்நாட்டில் தொழில்கட்கு அளிக்கப்படுகின்ற வரிவஜா முறையை யும், இரண்டாவது கொள்கையானது இறக்குமதிப் பொருள்களின் மீது விதிக்கப்படுகின்ற சுங்கத் தீர்வையையும் பெரிதும் ஒத்திருக் கின்றன என்பதை நாம் அறியவேண்டும். இங்கு நாம் விளக்கி யுள்ள விஷயம் சாதாரணமானது என்பதில் ஐயமில்லை; எனினும், இவ் விஷயம்குறித்துத் தவருன எண்ணங்கள் சில தொடர்ந்து வருவ தால் இவ் விஷயத்தைத் தெளிவுபடுத்தும் வகையில் மேலே நாம் சிறிது விளக்கம் தந்தோம்.

இனி தேய்மானத் தள்ளுபடிமுறை ஊக்கக்கொடைமுறை ஆகியவற்றினல் நேரக்கூடிய விளைவுகளோடு வரிவஜா முறை யினல் நேரக்கூடிய விளைவுகளை ஒப்பு நோக்குவோம். தேய்மானத் தள்ளுபடிமுறையிலும் ஊக்கக் கொடைமுறையிலும் கம்பெனிகள் நிலைமுதற் பொருள்களில் (fixed capital) செய்துள்ள முதலீட்டிற்கு ஏற்ப வரிச் சலுகை அளிக்கப்படுகின்றது. ஆனல், வரிவஜா முறையில் கம்பெனிகள் ஈட்டக்கூடிய இலாபங்கட்கு ஏற்ப வரிச் சலுகை அளிக்கப்படுகிறது. இலாப விகிதமும் நாணய மதிப் பீடும் ஒரே மாதிரியாக அமைந்துள்ள இரு கம்பெனிகள் ஒரு குறிப் பிட்ட ஆண்டில் ஒரேமாதிரியான மூலதனப் பொருள்களை வாங்கு கின்றன என்றும், இவ்விரு கம்பெனிகட்கும் தேய்மானத் தள்ளுபடி முறையின்கீழ் சலுகைகள் வழங்கப்படுகின்றன என்றும் வைத்துக் கொள்வோம். இதனல் இவ்விரு கம்பெனிகட்கும் கிடைக்கக் கூடிய வரிச் சலுகை ஒரே மாதிரியாகவே இருக்கும்; அதாவது, இவ் இரு கம்பெனிகளும் நிகழ்காலத்தில் செலுத்தவேண்டாது எதிர் காலத்திற்குத் தள்ளிப்போட்டிருக்கக்கூடிய வரித் தொகையின் மதிப்பு ஒன்ருகவே இருக்கும். இவ்வாறன்றி இவ் இரு கம்பெனி கட்கும் வரிவஜா முறையின்கீழ் சலுகைகள் வழங்கப்படுகின்றன

என்று கொண்டால் எந்தக் கம்பெனியானது அதிக இலாபம் ஈட்டுமோ அந்தக் கம்பெனியே இம் முறையினுல் அதிகமான சலுகைகள் பெறமுடியும். இரண்டு கம்பெனிகளும் ஈட்டிக்கொண்டிருக்கக்கூடிய இலாபம் ஒரே அளவினதாக இருந்தபோதிலும் சில சந்தர்ப்பங்களில் இவை பெற்றுக்கொண்டிருக்கக்கூடிய சலுகைகள் வேறுபட்டிருக்கலாம். உதாரணமாக, நடைமுறை முதலுக்கும் (working capital) நிலைமுதற் பொருள்கட்கும் இடையே உள்ள விகிதம் இரு கம்பெனிகட்கு இடையே வேறுபட்டால் இதுபோன்ற நிலை ஏற்படும். நடைமுறை முதலுக்கும் நிலைமுதற் பொருள்கட்கும் இடையே உள்ள விகிதமானது இவ் இரு கம்பெனிகளில் எந்தக் கம்பெனியில் அதிகமாக இருக்குமோ அக் கம்பெனிக்கே வரிவஜா முறையினுல் அதிக சலுகைகள் கிடைக்கும்.

தேய்மானத் தள்ளுபடிமுறை ஊக்கக் கொடைமுறை ஆகியவற்றை ஒட்டி நேரக்கூடியதும் வரிவஜாமுறையில் நேர இயலாததுமான விளைவு ஒன்றினைக் காண்போம். தேய்மானத் தள்ளுபடி முறையும் ஊக்கக்கொடைமுறையும் மூலதனச் செறிவுள்ள உற்பத்தி முறைகளை ஊக்குவிக்கக்கூடியவை. இம் முறைகளின்கீழ் அளிக்கப்படுகின்ற சலுகைகளின் விளைவாகக் கம்பெனிகளின் மூலதனச் செலவுகள் குறைவதால் முதலாட்சி உற்பத்தி முறையும் (capitalistic method of production) மூலதனச் செறிவுள்ள தொழில்களும் ஆக்கம் பெறலாம். பின்தங்கிய நாடுகளில் மூலதன வளங்களை விட உழைப்பாளிகளின் எண்ணிக்கையே அதிகமாக உள்ளது. எனவே, தேய்மானத் தள்ளுபடி முறை ஊக்கக் கொடைமுறை ஆகியவற்றின் விளைவால் மூலதனச் செறிவுள்ள தொழில்கள் பெருக நேர்ந்தால் இது நாட்டிலுள்ள வேலை வாய்ப்புகளையும் (employment) உற்பத்தி அளவுகளையும் பெரிதும் பாதிக்கும் என்பதில் ஐயமில்லை.[1] அண்மையில் மொரிஷஸ் நாட்டில் ஆய்வு நடத்திய மீட் அவர்கள் இவ்வாறுன விளைவுகள் கருதியே ஊக்கக்கொடை முறையை (விரைவுபடுத்தப்பட்ட தேய்மானத் தள்ளுபடி முறையை அன்று) அந் நாட்டில் ரத்து செய்யவேண்டும் என்று பரிந்துரைத்துள்ளார்.[2]

மற்றுமொரு வகையிலும் முதலீட்டின் அடிப்படையில் வழங்கப்படுகின்ற வரிச் சலுகைகள் இலாபத்தின் அடிப்படையில் வழங்கப்

[1] A. R. Prest, 'Fiscal Survey of the British Caribbean,' (HMSO, 1957)' pp. 27-8ஐப் பார்க்கவும்.

[2] J.E. Meade et al., 'The Economic and Social Structure of Mauritius' (Methuen, London, 1961).

படுகின்ற வரிச் சலுகைகளைவிடச் சிறந்தவையாகும். முதலீட்டின் அடிப்படையில் வழங்கப்படுகின்ற வரிச்சலுகைகள் முதலீடு செய்யப் படுகின்ற வீதத்தைப் பொறுத்தவையாகும். இலாபத்தின் அடிப் படையில் வழங்கப்படுகின்ற வரிச் சலுகைகள் இலாப மட்டத்தைப் பொறுத்தவையாகும். இவ் இரு அடிப்படைகளும்—அதாவது, முதலீட்டு அடிப்படையும் லாப அடிப்படையும்—நாட்டின் வருமான மட்டத்தைப் பொறுத்து ஏற்றத்தாழ்வுகட்கு உட்படக் கூடியவையாகும். இவ் இரண்டினுள் முதலீடு செய்யப்படுகின்ற வீதத்தை அரசாங்கமானது கட்டுப்படுத்த முடிவதுபோல முதலீட்டை அரசாங்கம் பலவாறு ஒழுங்குபடுத்த முடியும். உதாரணமாக, லைசென்ஸ் வழங்கும் முறையின்கீழ் பலவகையில் அரசாங்கமானது முதலீட்டைக் கட்டுப்படுத்த முடியும். இலாப மட்டத்தை அரசாங்கத்தால் கட்டுப்படுத்த முடியாது. எனவே, இவ்விரண்டினுள் முதலீடு செய்யப்படுகின்ற வீதத்தைப்போல இலாப மட்டமானது நிதி அமைச்சின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டது என்று கொள்வதற்கில்லை. இதுபோன்ற விஷயங்கள் பட்ஜெட் முறையின் கீழ் விவாதிக்கப்படவேண்டியவை. எனினும், தேய்மானத் தள்ளுபடி முறை ஊக்கக்கொடை முறை ஆகியவற்றினின்றும் வரிவஜா முறையை வேறுபடுத்திக் காட்டுவதற்காக இதையும் இங்கு விவாதிக்கவேண்டிய அவசியம் நேர்ந்தது. பட்ஜெட் முறைபற்றிய விளக்கத்தை ஆறும் அத்தியாயத்தில் காணலாம்.

ஊக்கக்கொடை முறையினின்றும் தேய்மானத் தள்ளுபடி முறை சிறிது வேறுபாடு உடையதாகும். நீண்ட ஆயுளை உடைய, மூலதனப் பொருள்களை பயன்படுத்தக்கூடிய நிறுவனங்களில் ஊக்கக் கொடைமுறையின்மூலம் கிடைக்கக்கூடிய சலுகைகளைவிட தேய்மானத் தள்ளுபடி முறையின்மூலம் கிடைக்கக்கூடிய சலுகைகள் அதிகமானவையேயாகும். எதிர்காலத்திற்குத் தள்ளிப்போடப் பட்டுள்ள வரியை, நீண்ட ஆயுளை உடைய மூலதனப் பொருள்களை உடைய கம்பெனியானது குறைந்த ஆயுளை உடைய மூலதனப் பொருள்களை உடைய கம்பெனியைவிட, காலம் கடந்து செலுத்த வேண்டியிருப்பதே இதற்கான காரணமாகும். ஆனுல், ஊக்கக் கொடை முறையைப் பொறுத்தவரையில் இவ்வளவு எளிதில் விடையிறுத்துவிட முடியாது. சில சிக்கல்கள் உள்ளன. எனினும், ஊக்கக்கொடைமுறை ஒருதலைச் சார்புடையதாக—அதாவது, நீண்ட ஆயுளை உடைய மூலதனப் பொருள்கட்குச் சாதகமாகவும் குறைந்த ஆயுளை உடைய மூலதனப் பொருள்கட்குப் பாதகமாகவும் அல்லது இதற்கு மாறுபாடாகவும்—அமையக்கூடியது என்று சொல்லிவிட முடியாது. எனவே, சராசரி ஆயுளை உடைய மூலதனப் பொருள் கட்கு தேய்மானத் தள்ளுபடி முறையின் கீழும் ஊக்கக்கொடை முறை

யின் கீழும் ஒரே மாதிரியான வரிச்சலுகைகள் வழங்கப்படுகின்றன என்று கொண்டால், சராசரியைவிட அதிகமான ஆயுளை உடைய மூலதனப் பொருள்களைவிட, சராசரியைவிடக் குறைந்த ஆயுளை உடைய மூலதனப் பொருள்கட்கு, ஊக்கக்கொடைமுறையின்கீழ் அதிகமான நன்மைகளே விளையும் என்பது உண்மையாகும்.

கச்சாப்பொருள்களுக்கு இறக்குமதி வரி விலக்கு அளித்தல் இறக்குமதிப் பொருள்களின்மீது வரி விதித்தல் போன்ற பல முறைகளைப்பற்றி பொருளாதாரக் கோட்பாட்டின் அடிப்படையில் அதிகம் கூறுவதற்கு ஒன்றுமில்லை. நாட்டிலுள்ள செல்வ வளங்களைப் பயன் படுத்தக்கூடிய முறையைத் தான் விரும்பியவண்ணம் மாற்றி அமைக்க அரசாங்கத்தால் இயலும்; இப் பணியை ஆற்றுதற்கு நேர்முக வரிகள், மறைமுக வரிகள், மானியங்கள், ஊக்கக் கொடைகள் ஆகியவை எந்த அளவுக்கு உறுதுணையாக இருக்கமுடியும் என்ற அடிப்படையில் இம் முறைகட்கு—அதாவது, நேர்முக வரிகள், மறைமுக வரிகள், மானியங்கள், ஊக்கக் கொடைகள் ஆகியவற்றிற்கு—ஆதரவாகத் தரப்பட்டுள்ள வாதங்களை ஆராயவேண்டும். எனவே, மார்க்கெட்டில் விற்பனை செய்யப்படுகின்ற உள்நாட்டுப் பொருள்கள் அயல் நாட்டுப் பொருள்கள் ஆகியவற்றின் தராதர விலைகளில் நேரக்கூடிய மாற்றங்களின் விளைவாக இப் பொருள்களின் தேவை (demand), அளிப்பு (supply) ஆகியவற்றில் நேரக்கூடிய நெகிழ்ச்சி (elasticity) மாற்றங்களே, இம் முறைகளை ஒட்டி எழக்கூடிய பொருளாதாரப் பிரச்சினைகளாகும். எவ்வெப் பொருள்கட்கு ஆதரவு தரவேண்டும், எவ்வளவு காலம் அவற்றிற்கு நேரடியாகவோ அன்றி மறைமுகமாகவோ ஆதரவு கொடுக்கவேண்டும் என்பவையே இம் முறைகளை ஒட்டி எழக்கூடிய நிருவாகப் பிரச்சினைகளாகும். தேய்மானத் தள்ளுபடி முறை, ஊக்கக்கொடைமுறை, வரிவஜா முறை ஆகியவற்றை ஒட்டி எழக்கூடிய நிருவாகப் பிரச்சினைகட்கும் இவற்றிற்கும் பெரிதும் வேறுபாடுகள் இல்லை என்பது நன்கு புலனாகும். இறுதியாக நாம் ஒன்றை வலியுறுத்த விரும்புகிறோம். தேய்மானத் தள்ளுபடிமுறை ஆகியவற்றால் இலாபம் ஈட்டிக்கொண்டிருக்கக் கூடிய கம்பெனிகள்மட்டுமே உடனடியாகப் பயனுறுகின்றன. ஆனால், இறக்குமதி வரிவிலக்கு அளித்தல் போன்ற முறைகள் நஷ்ட முற்றுக் கொண்டிருக்கக்கூடிய கம்பெனிகள் தங்கள் நஷ்டத்தைக் குறைத்துக்கொள்வதற்கு உறுதுணையாக இருக்கக்கூடியவை.

மற்றும் ஓர் விஷயத்தை நாம் விவாதிக்கவேண்டியுள்ளது. ஒரு நாட்டில் நிறுவப்பெற்றுள்ள அயல்நாட்டுக் கம்பெனிகட்கு அந் நாட்டு அரசாங்கம் வழங்கக்கூடிய வருமானவரிச் சலுகைகள் இலாப

வரிச் சலுகைகள் ஆகியவை இரட்டை வரிவிதிப்பு முறையால் (double taxation) பயனற்றுப்போக நேரலாம். உதாரணமாக, கம்பெனிச் சொந்தக்காரர்களின் தாய்நாட்டில் கம்பெனியின்மீது விதிக்கப்படுகின்ற வரி 50 சதவீதம் என்றும் கம்பெனி நிறுவப்பட்டுள்ள வளர்ச்சியுருத நாட்டில் இவ்வீதம் 25 சதவீதமாகக் குறைக்கப்படுகின்றது என்றும் வைத்துக்கொண்டால் இதனுல் தாய்நாட்டில் வரிகளின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் அதிகமாவதும் வளர்ச்சியுருத நாட்டின் வருவாய் குறைவதுமே நேரக்கூடிய விளைவுகளாகும்; கம்பெனிக்குச் சாதகமான பயன் ஏதும் ஏற்படக்கூடும் என்று கருதுவதற்கில்லை. இவ்வாறே கம்பெனி நிறுவப்பட்டுள்ள நாட்டில் கம்பெனிக்குத் தாராளமான முறையில் தேய்மானத் தள்ளுபடிகள் வழங்கப்பட்டபோதிலும் தாய்நாட்டில் இக் கம்பெனிக்குச் சிறப்பாகத் தேய்மானத் தள்ளுபடிகள் வழங்கப்படாது வழக்கமான தள்ளுபடிகள் மட்டும் அளிக்கப்பட்டு வரிவிதிக்கப்பெற்ருல் இதனுல் கம்பெனி பெறக்கூடிய பயன் ஏதும் இல்லை எனலாம். எனினும், சில சந்தர்ப்பங்களில் வரிச் சலுகைகள் அயல் நாட்டுக்கம்பெனிகட்குச் சாதகமாக அமையமுடியும். பிரிட்டனில் 1957ஆம் ஆண்டு கடைப்பிடிக்கப்பட்ட முறை இவ்வாறு சாதகமாக அமைந்துள்ள முறையாகும். இம் முறையின்கீழ், அயல்நாடுகளில் வர்த்தகக் கார்ப்பரேஷன்களை அமைப்பதற்கான அனுமதி பிரிட்டிஷ் நாட்டிலுள்ள நிறுவனங்கட்கு அளிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு நிறுவப்படுகின்ற கார்ப்பரேஷன்களால் ஈட்டப்பட்டு பங்குதாரர்கட்குப் பகிர்ந்தளிக்கப்படாத இலாபங்கட்குப் பிரிட்டன் வரிவிலக்கு அளித்துவருகிறது. அண்மையில் இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையே கையெழுத்தாகியுள்ள இரட்டை வரிவிதிப்பு முறை உடன்படிக்கையை[1] மற்ருேர் உதாரணமாகக் கூறலாம். இந்த உடன்படிக்கையின்கீழ் இந்தியாவில் நிறுவப்பெற்றுள்ள அமெரிக்கக் கம்பெனிகட்கு இந்திய அரசாங்கம் ஏதாவது விசேஷ சலுகைகள் வழங்கினுல் அவற்றிற்கு ஈடாக அமெரிக்க அரசாங்கம் அக்கம்பெனிகட்கு அமெரிக்காவில் வரிவிலக்கு அளிக்கவேண்டும்.[2] இத்தகைய

[1] இவ் உடன்படிக்கையானது இன்னும் அங்கீகாரம் பெறவில்லை.

[2] பிரிட்டனிலும் இதுபோன்ற சலுகைகட்கு, 1961ஆம் ஆண்டிற்கான நிதிச் சட்டத்தின்கீழ், ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இதன்கீழ் முதன்முதல் பாகிஸ்தானும் பிரிட்டனும் 1961ஆம் ஆண்டு ஓர் இரட்டை வரி விதிப்பு உடன்படிக்கையில் கையெழுத்திட்டுள்ளன.

1958ஆம் ஆண்டு இந்தியாவும் ஸ்வீடனும் கையெழுத்திட்டுள்ள இரட்டை வரி விதிப்பு உடன்படிக்கையானது இதைவிட ஒருபடி முன்னேறியது என்று கூறலாம். இவ் உடன்படிக்கையின் கீழ் கம்பெனிகளின் இலாப ஈவுகள் (dividends), வட்டி, ராயல்டிகள் (royalties) ஆகியவைமீது ஸ்வீடன் மட்டுமே வரிவிதிக்க முடியும்.

அயல்நாட்டுக் கம்பெனிகளைப் பொறுத்தவரையில், வரிவஜா முறை தேய்மானத் தள்ளுபடி முறை ஆகியவற்றின்கீழ் சலுகைகள் அளிப்பதைவிட மானியங்கள் வழங்குவது இறக்குமதிப் பொருள்களின்மீது வரிவிதிப்பது ஆகிய முறைகளே பெரிதும் பயனுள்ளவையாக இருக்கக்கூடும். ஏனெனில், அயல்நாட்டுக் கம்பெனிக்கு மானியம் வழங்கப்படுவதை ஒட்டி அதனுடைய மொத்த இலாபம் (gross profit)—அதாவது, வரி கொடுப்பதற்கு முன்பே கணக்கிடப்பட்டுள்ள இலாபத் தொகை— அதிகரிக்கும். எனவே, வரிவிதிக்கப்படுவதை ஒட்டி (வரிவீதத்தைச் சார்ந்து) இவ்வாறு அதிகரித்துள்ள மொத்த இலாபத்தில் ஒரு பகுதியை மட்டுமே இக் கம்பெனி இழக்கவேண்டியிருக்கும். ஆனால், இதே கம்பெனிக்கு மானியம் வழங்கப்படாது தேய்மானத் தள்ளுபடிகள் தாராளமாக வழங்கப்பட்டால் இக்கம்பெனியானது மொத்த இலாபம் முழுவதையும் இழக்க நேரிடும்.

நாம் இதுகாறும் விவாதித்த சர்ச்சைக்குரிய விஷயங்கள் குறித்து இறுதியாக ஓரிரண்டு கருத்துகளைக் குறிப்பிட விரும்புகிறோம். நாம் மேலே விளக்கியுள்ள சலுகைகள் நாட்டுப் பொருளாதாரத்தின் சில பகுதிகளைமட்டிலும் பாரபட்சமாக நடத்தவேண்டியது—அதாவது, சில பகுதிகட்குமட்டும் விசேஷ சலுகைகள் அளிக்கவேண்டியது— மிக அவசியமாகும். உற்பத்தித் தொழில்களின் [illegible] விக்க வேண்டும் என்பதே இதன் அடிப்படை [illegible]. ஆனால், இவ் விஷயத்தைப் பொறுத்தவரையில் [illegible] மிஞ்சியே காரியங்கள் நடந்துவிடுகின்றன. [illegible] கட்கு மானியங்கள் வழங்கப்படு [illegible] விவசாயப் பொருள்கள்மீது வரியும் விதிக்கப் பெறுகின்றது. இவ்வாறு செய்வது விரும்பத்தக்கதுதானா என்பது சர்ச்சைக்குரிய விஷயமேயாகும். மற்றும் ஒரு விஷயத்தையும் நாம் கவனிக்க வேண்டும். வரிச்சலுகைகள் சிலசமயம் பெரிய நிறுவனங்களைவிடச் சிறிய நிறுவனங்கட்கே பெரிதும் உதவியாக இருக்கக்கூடும். இந் நாடுகளில் நிறுவப்பட்டுள்ள அயல்நாட்டுக் கம்பெனிகட்கு அளிக்கப்படக்கூடிய விசேஷ சலுகைகளால் இவ்வாறான நிலை நேரலாம். தேய்மானத் தள்ளுபடி முறையை ஒட்டியும் இவ்வாறான நிலை தோன்றக்கூடும். இம் முறையின்கீழ் வழங்கப்படுகின்ற சலுகையானது அந்தந்த நிறுவனங்கட்குப் பொருந்தக்கூடிய வட்டி வீதத்தைச் சார்ந்ததாகும். இவ் வட்டிவீதமானது பெரிய நிறுவனங்களைக்காட்டிலும் சிறிய நிறுவனங்களில் அதிகமானதாக உள்ளது. இதன் விளைவாகச் சிறிய நிறுவனங்களே பெரிதும் பயனுறுவது விரும்பத்தக்கதுதானா என்பதுவும் ஆலோசனைக்கு உரிய விஷயமாகும்.

சில ஆண்டுகட்கு முன்பு எம்மால்[1] முதன்முதலாக வெளியிடப்பட்டதும் அண்மையில் மீட் அவர்கள் தம் அறிக்கையில் (சிறிது யோசனையுடன்) ஆதரித்துள்ளதுமான[2] ஒரு கருத்தைமட்டும் கூறிவிட்டு இவ் அத்தியாயத்தை முடிக்க விரும்புகிறேம். நிறுவனங்கட்கு ஊக்கக்கொடைகள் வழங்கும்போது அவை வேலையில் அமர்த்தியுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கையின் அடிப்படையிலோ அல்லது அத் தொழிலாளர்களை வேலையில் அமர்த்தியிருப்பதால் நேரக்கூடிய செலவுகளின் அடிப்படையிலோதான் அவற்றிற்கு ஊக்கக்கொடைகள் அளிக்கவேண்டும். இதுவே சரியான கொள்கையாகும். இவ்வாறு செய்தால் உழைப்பு அழுத்தமான (labour intensive) முறைகளே தொழிற்சாலைகளில் பெரிதும் பயன்படுத்தப் பெறும். மேலும் உழைப்பு அழுத்தமான தொழில்களே ஊக்குவிக்கப் பெறும். வேறு எந்தத் திட்டத்தின்கீழும் உதவி அளிக்கப்படுவதைப் போல இந்தத் திட்டத்தின்கீழும் முழு அளவிலான உதவி வழங்க எளிதில் ஏற்பாடுகள் செய்யமுடியும். எனினும், இத் திட்டத்தைச் செயலாற்றுவதை ஒட்டிக் கொள்கை அளவிலும் நிருவாக ரீதியிலும் சில இடர்ப்பாடுகள் நேரலாம். உதாரணமாக, இந் நாடுகளில் தற்சமயம் உள்ளதுபோல எஞ்ஞான்றும் தொழிலாளர்களின் எண்ணிக்கை பெருமளவினதாகவே இருக்கும் என்று கொள்வதற்கில்லை. இருப்பினும், நாம் மேலே விவாதித்த பல முறைகளையும்விட இத் திட்டமானது கொள்கை அளவில் பெரிதும் ஏற்றுக்கொள்ளத் தக்கது என்பதில் எவ்வளவேனும் ஐயமில்லை. மேலும், சமூகப் பாதுகாப்புத் திட்டத்திற்கு ஆதரவாக ஆரம்பத்தில் இவ் அத்தியாயத்தில் விவாதிக்கப்பட்டுள்ள கருத்துகளோடு இத் திட்டம் ஒத்து நடைபோடவல்லது என்பதும் உண்மையேயாகும்.

[1] A. R. Prest, 'Fiscal Survey of the British Caribbean' [HMSO, 1957], 102 ஆம் பார்க்கவும்.

[2] J. E. Meade et al., 'The Economic and Social Structure of Mauritius' (Methuen, London, 1961).

# 5. கடன் கொள்கை

பின்தங்கிய நாடுகளில் வரிமுறையானது எவ்விதமான வரையறைகட்கு உட்பட்டது என்பதைக் கடந்த சில அத்தியாயங்களில் கண்டோம். இந் நாடுகளில் அரசாங்கச் செலவுகள் உயர்ந்து கொண்டே செல்லக்கூடியவை என்றும், எனவே இதற்கு ஏற்ற முறையில் வரிமுறையானது வருமானம்சார் நெகிழ்ச்சி உடையதாக இருக்கவேண்டும் என்றும் கண்டோம். எனினும், பலவிதமான வரிகளையும் தனித்தனியே சீர்தூக்கி நோக்குங்கால் அவற்றை விதிப்பதை ஒட்டிப் பல இடர்ப்பாடுகள் நேரக்கூடும் என்றும் கண்டோம். நிருவாக ரீதியில் சில இடர்ப்பாடுகள் நேரலாம் என்றும், மேல்நாடுகளிலுள்ளது போன்ற நிறுவன அமைப்பு இந் நாடுகளில் இல்லாமையால் சில இடர்ப்பாடுகள் நேரலாம் என்றும், சில குறிப்பிட்ட வரிகளினால் மக்களின் வேலை செய்யும் ஆர்வமும், சேமிக்க என்னும் நோக்கமும், ஆபத்துகளைத் தாங்க முன்வரும் துணிவும் குன்றலாம் என்றும், குறுங்கால நோக்கங்கட்கும் (குறுங்காலத்தில் இந் நாடுகளின் பொருளாதார நடவடிக்கைகளில் பெரும் ஏற்ற இறக்கங்கள் நேரக்கூடும் என்றும் குறிப்பிட்டுள்ளோம்) நெடுங்கால நோக்கங்கட்கும் இடையே பிணக்கு நேரக்கூடும் என்றும் நாம்கண்டோம். மேலும், இந் நாடுகளில் குறிப்பிட்ட சில வரிமுறைகளைக் கையாளக்கூடாது என்றும் கண்டோம். உதாரணமாக, ஜனத்தொகை வளர்ச்சியை ஊக்குவிக்கக்கூடிய வரிமுறையையும் முதல்செறிவு உற்பத்திமுறைகளை ஊக்குவிக்கக்கூடிய வரிமுறையையும் கடைப்பிடித்தலாகாது என்றும் கண்டோம். எனினும், இந் நாடுகளின் நோக்கங்கள் அனைத்தையும் ஏககாலத்தில் நிறைவேற்றிவைக்கக்கூடிய வரிமுறையை நம்மால் உருவாக்க முடியவில்லை. பல்வேறு நோக்கங்களையும் ஏககாலத்தில் நிறைவேற்றி வைக்கக்கூடிய வரிமுறையை இந் நாடுகளில் உருவாக்குவது சாத்தியமானதன்று என்று ...ப் முடிவுகட்டு முன், இந் நாடுகளில் கடன் கொள்கை ஆற்றக்கூடிய

பங்கு யாது என்பதை விளக்கவேண்டுவது அவசியமாகும். உதாரணமாக, வரிமுறையானது வருமானம்சார் நெகிழ்ச்சி பெற்றிருப்பதால் மந்த (slump) காலங்களில் வரிகளின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் குறைந்து பெரும் அளவில் பற்றுக்குறை நேரும்பொழுது, பற்றுக்குறையை ஈடுகட்டத் தேவையான பணத்தை, எவ்விதமான பாதகமான விளைவுகளும் நேராத வகையில் கடன்களின்மூலம் பெற முடியும் என்பது உண்மையானல், இந் நாட்டு வரிமுறையில் நெடுங்கால நோக்கங்கட்கும் குறுங்கால நோக்கங்கட்கும் இடையே உள்ள பிணக்கை எளிதில் தீர்த்துக்கொள்ள முடியும். இந்த அடிப்படைக்கருத்தை மனத்தில்கொண்டு இந் நாடுகளில் பங்குமுறையும் பணமுறையும் எவ்வாறு அமைந்துள்ளன என்று காண முயலுவோம். இதை அடுத்து, மேனாடுகளிலுள்ள நிறுவன அமைப்பு இந் நாடுகளில் இல்லாமையால் பணக் கொள்கையும் (monetory policy) கடன் கொள்கையும் எவ்வாறான வரையறைகட்கு உட்படுத்தப்பட்டுள்ளன என்பதை ஆராய்வோம். பணக் கொள்கை கடன் கொள்கை ஆகியவற்றை இந் நாடுகளில் ஆற்றலோடு செயல்படுத்த முடியுமேயாயின், அவை எவ்வாறான கொள்கைகட்கு ஏற்ப அமைதல்வேண்டும் என்பதுகுறித்து அடுத்து விவாதிப்போம். இறுதியாக, அயல்நாட்டுக் கடன்கள் அயல்நாட்டு உதவிகள் ஆகியவை இந் நாடுகளில் என்ன பங்கு பெற முடியும் என்பதுகுறித்துச் சுருக்கமாக விளக்குவோம்.

பின்தங்கிய பல்வேறு நாடுகளில் ஒவ்வொரு நாட்டிலும் பணமுறையும் பங்கு முறையும் சிறந்த முறையில் உருவாகுவதற்கு ஏதுவான நிறுவன அமைப்புகள் யாவை என்று இங்கு ஒருசில பக்கங்களில் விளக்கிவிட முடியும் என்று எண்ணுவது மடமையாகும். இதற்குப் பதிலாக, பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளில் தற்சமயம் நிலவிவருகின்ற பண முறையும் பங்கு முறையும் எந்த அடிப்படையில் எக் காலத்தில் உருவாயின என்று சுருக்கமாக அறிய வரலாற்றின் ஏடுகளைத் திருப்பிப் பார்ப்போம். இதையடுத்து, அவ்வாறு ஆரம்பத்தில் உருவாகிய அடிப்படையைவிட்டு தற்சமயம் உள்ள முறைகள் முக்கியமாக எந்தெந்த விதத்தில் மாறுபட்டுள்ளன என்பதைச் சுட்டிக்காட்டுவோம். இவற்றை அறிந்துகொண்டபின் பணக் கொள்கையையும் கடன் கொள்கையையும் ஆற்றலுடன் செயல்படுத்த இந் நாடுகளிலுள்ள வாய்ப்புகள் யாவை என்பதை ஒருவாறு விளக்க முடியும்.

பிரிட்டனுக்குச் சொந்தமான காலனிகளில் நெடுங்காலமாகச் செலாவணியை வெளியிடக்கூடிய உரிமையைச் செலாவணிக் குழுவே (Currency Board) பெற்றிருந்தது. இக் குழு உள்நாட்டு

அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டதன்று. 100 சதவீத ஸ்டெர்லிங் டெபாசிட்டுகட்கு ஈடாகவே இக் குழுவானது உள்நாட்டுச் செலா வணியை வெளியிட்டுவந்தது. உதாரணமாக, இக் குழுவினிடம் 1,000ஸ்டெர்லிங் பவுன்கள் வந்து சேர்ந்தபொழுது 1,000 ஸ்டெர்லிங் பவுன் பெறுமானமுள்ள உள்நாட்டுச் செலாவணியைக் குழுவானது வெளியிட்டது. இதேபோல குழுவிடமிருந்து 1,000 ஸ்டெர்லிங் பவுன்கள் வெளியேறியபொழுது, 1,000 ஸ்டெர்லிங் பவுன் பெறுமான முள்ள உள்நாட்டுச் செலாவணியைக் குழுவானது புழக்கத்தி னின்றும் அகற்றியது. எனவே, குழுவானது ஒரு குறிப்பிட்ட ஆண்டு பெற்ற ஸ்டெர்லிங்கிற்கு ஏற்பவே அந்த ஆண்டில் புழக்கத்தி லுள்ள உள்நாட்டுச் செலாவணி அதிகரித்துவந்தது. இம் முறை யின்கீழ் உள்நாட்டுச் செலாவணியின் அளிப்பானது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையின் (balance of payments) நடப்புக்கணக்கைப் (current account) பொறுத்தே அமைந்திருந்தது என்று சிலர் வாதாடுகின்றனர். ஆனால், இது சரியான விவாதமன்று. ஏனெனில், உள்நாட்டுச் செலாவணியின் அளிப்பானது அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையின் நடப்புக்கணக்கைப் பொறுத்துதான் அமைய வேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை. உதாரணமாக, ஏற்று மதியானது இறக்குமதியைவிட அதிகமாக இருக்கக்கூடிய காலங் களில் தாம் ஈட்டக்கூடிய ஸ்டெர்லிங்குகளை ஏற்றுமதியாளர்களே வைத்துக்கொண்டால், உள்நாட்டுச் செலாவணி அதிகரிக்கும் என்று கூறமுடியாது. இதேபோல், இறக்குமதியானது ஏற்றுமதியை விட அதிகமாக இருக்கக்கூடிய காலங்களில், அயல் நாடுகளி னின்றும் போதுமான அளவு மூலதனம் ஒரு நாட்டிற்குக் கிடைக் குமேயாயின், அந்த நாட்டில் உள்நாட்டுச் செலாவணியின் அள வைக் குறைக்க வேண்டுவதில்லை; உள்நாட்டுச் செலாவணியின் அளவு அதிகமானலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. எனவே, உள் நாட்டுச் செலாவணியின் அளிப்பானது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையின் நடப்புக் கணக்கைமட்டுமன்றி மூலதனக் கணக்கையும் (capital account) பொறுத்த ஒன்றாகும். எனவே, ஏதாவது ஓர் ஆண்டில் நடப்புக் கணக்கு மூலதனக் கணக்கு ஆகியவற்றை ஒட்டி ஸ்டெர்லிங்கிற்கான தேவை அதிகரித்தால், உள்நாட்டுச் செலாவணி யின் அளிப்பு குறைய நேரிடும். இதேபோல, நாட்டுப் பொருளா தார வளர்ச்சியை முன்னிட்டு ஒவ்வோர் ஆண்டும் முந்திய ஆண்டை விட அதிகமான அளவு உள்நாட்டுச் செலாவணியைப் புழக்கத்தில் விடவேண்டிய அவசியம் நேர்ந்தால், செலாவணிக் குழுவானது ஒவ்வோர் ஆண்டும் இதற்கு ஏற்ப அதிகமான அளவு ஸ்டெர்லிங்கு களைப் பெற்றுவரவேண்டியது அவசியமாகும்.

பின்தங்கிய நாடுகளில் வழிவழியாக நிலவிவந்த செலாவணி முறையைப்பற்றி நாம் இதுகாறும் கண்டோம். அடுத்து இந் நாடுகளில் பாங்குமுறை எவ்வாறு அமைந்திருந்தது என்று காண்போம். உள்நாட்டிலிருந்த பாங்குகள் (banks) யாவும் அயல்நாட்டுப் பாங்குகளின் கிளைகளேயாகும். இப் பாங்குகளின் தலைமை அலுவலகங்கள் அயல்நாடுகளிலேயே இருந்தன. டெப்பாசிட்டர்களின் (depositors) பணத்தைப் பாதுகாப்பாக வைத்திருப்பது, அட்வான்சுகள் (advances) வழங்குவது, உண்டியல்களைக் (bills of exchange) கழிவு (discount) செய்வது, அயல்நாட்டுச் செலாவணி பேரங்களில் ஈடுபடுவது போன்ற பணிகளை இப் பாங்குகள் ஆற்றிவந்துள்ளன. மேல் நாடுகளிலுள்ள பாங்கு முறையினின்றும் இப் பாங்குமுறை முக்கியமாக இரண்டு விதங்களில் வேறுபட்டுள்ளது. முதலாவதாக, இப் பாங்குகள் மைய பாங்கின் (Central Bank) கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கவில்லை; இவை மைய பாங்கில் டெபாசிட்டுகளை இருப்பாக வைத்திருக்கவில்லை; இப் பாங்குகள் மைய பாங்கிடம் மறு கழிவு (re-discount) வசதிகள் பெற்றிருக்கவில்லை. இரண்டாவதாக, ரொக்கச் சொத்துகட்கும் டெபாசிட்டுகட்கும் இடையேயான விகிதமானது நிலையான ஒன்ருக அமைந்திருக்கவில்லை. ஏனெனில், இவ்வாறு கோரி சட்டம் வலியுறுத்தவில்லை; சம்பிரதாயமும் இருந்ததாகத் தெரியவில்லை. எனவே, இப் பாங்குகளிடமிருந்த ரொக்கச் சொத்துகளின் (liquid assets) அளவு மாருது இருந்த காலத்திலும் இவ்வாறன்றி மாறிக்கொண்டிருந்த காலத்திலும் (உதாரணமாக, ஏற்றுமதியின்மூலம் நாட்டிற்குக் கிடைத்துவந்த வருமானம் அதிகமாகும் காலங்களில் இவ்வாறு நேரலாம்,) பாங்குகள் உற்பத்தி செய்யக்கூடிய பணத்தைப்பற்றி எதுவும் திட்டவட்டமாகக் கூற முடியவில்லை. உதாரணமாக, ஜோர்டான் நாட்டில் பாங்குகளின் ரொக்கச் சொத்துகட்கும் (உள்நாட்டுச் சொத்துகளும் அயல் நாட்டுச் சொத்துகளும் இதில் அடங்கும்) டெபாசிட்டுகட்கும் இடையேயான விகிதம் 1950ஆம் ஆண்டு 38 சதவீதமாகவும் 1954ஆம் ஆண்டு 62 சதவீதமாகவும் இருந்தது; ஜமைக்காவில் இந்த விகிதம் 1945ஆம் ஆண்டில் 70 சதவீதமாகவும் 1949-ல் 18 சதவீதமாகவும் இருந்தது; காஞ நாட்டில் இவ் விகிதம் 1960ஆம் ஆண்டில் 50 சதவீதத்திற்கும் 60 சதவீதத்திற்கும் இடையே மூன்று மாதங்கட்கு ஒருமுறை மாறிமாறி அமைந்திருந்தது.

எனவே, பழைய முறையின்கீழ் நாட்டுச் செலாவணியின் அளிப்பும் மொத்த பாங்கு டெபாசிட்டுகளும் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கவில்லை. செலாவணியின் அளிப்பானது, சுயாதீனமுள்ள அல்லது ஓரளவிற்குச் சுயாதீனம் பெற்றிருந்த, செலாவணிக் குழுவினுல் தீர்மானிக்கப்பட்டு வந்தது.

நெகிழ்ச்சியேயற்ற சட்டதிட்டங்களின்கீழ் ஸ்டெர்லிங்கிற்கு ஈடாகவே இச் செலாவணிக் குழுக்கள் செலாவணியின் அளிப்பை நிர்ணயித்து வந்தன. பங்குதாரர்கள் தவிர வேறு யாருக்கும் கட்டுப்படாது தம்மிச்சைப்படி செயலாற்றிவந்த பாங்குகளால் மொத்த பாங்கு டெபாசிட்டுகள் நிர்ணயிக்கப்பட்டன. எனவே, நாட்டிலுள்ள பண அளிப்பானது வர்த்தகர்களின் தேவை பொதுமக்களின் தேவை ஆகியவற்றை ஒட்டிமட்டும் மாறிமாறி அமைந்துகொண்டு செயலற்றுத் திகழ்ந்ததே தவிர, ஒரு குறிப்பிட்ட மைய நிரு வாகத்தின் ஆற்றல்மிக்க கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்க வில்லை.

இவ்வாறான அமைப்பில் அண்மைக்காலத்தில், சில மாற் றங்கள் நேர்ந்துள்ளன. முதலாவதாக, எங்கெல்லாம் செலாவணிக் குழுக்கள் இன்னும் செயலாற்றி வருகின்றனவோ (முக்கியமாக, கிழக்கு ஆப்பிரிக்கா, மலேயா, ஹாங்காங் ஆகிய நாடுகளில் இன்னும் இம் முறை அமலில் இருந்து வருகின்றது) அங்கெல்லாம் விதிகள் ஓரளவுக்குத் தளர்த்தப்பட்டுள்ளன. 100 சதவீத ஸ்டெர்லிங் டெபாசிட்டுக்கு ஈடாகத்தான் உள்நாட்டுச் செலா வணியை இவை வெளியிடவேண்டும் என்ற கட்டுப்பாடு தற் சமயம் இல்லை; குறிப்பிட்ட சதவீதத்திற்கு (சாதாரணமாக, சுமார் 25 சதவீதத்திற்கு) உள்நாட்டுப் பத்திரங்களை[1] (security) காப்பாக வைத்துக்கொண்டு செலாவணியை வெளியிட இவை அனுமதி பெற்றுள்ளன. இது ஒரு பெரிய மாற்றம் என்று கூறத் தோன்ற லாம்; ஆனால், உண்மையில் அப்படி அன்று. ஏனெனில், பல ஆண்டு களாக செலாவணிக் குழுக்கள் பிரிட்டிஷ் ஸ்டெர்லிங் பத்திரங்களை மட்டுமன்றி ஸ்டெர்லிங் பிரதேசத்திலுள்ள ஏனைய நாடுகளின் பத்திரங்களையும் காப்பாக வைத்து செலாவணியை வெளியிட்டு வந் துள்ளன. எனவே, இம் மாற்றமானது ஒருவர் துணியை மற்றவர் வெளுத்துவந்த நிலை மாறி அவரவர் துணியை அவரவர் வெளுத்து வருகின்ற நிலை உருவாகியிருப்பதையே ஓரளவுக்கு ஒக்கும் என்று கொள்வதில் தவறில்லை. அதாவது, செலாவணிக் குழு வெளியிட்ட செலாவணிகட்கு ஒரு நாட்டின் பத்திரங்கள் பிறிதோர் நாட்டில் காப்பாக இருந்துவந்த நிலை மாறி, ஒரு நாட்டின் பத்திரங்கள் அந்த நாட்டுச் செலாவணிக் குழு வெளியிட்டு வருகின்ற செலாவணிகட்கு தற்சமயம் காப்பாக இருந்துவருகின்றன. இவ் உண்மையைக்

[1] உதாரணமாக, 75 சதவீத ஸ்டெர்லிங் இருப்புகட்கும் 25 சதவீத உள்நாட்டு அரசாங்கப் பத்திர இருப்புகட்கும் ஈடாக செலாவணியை வெளியிடும் அதி காரமானது மலேயா, சிங்கப்பூர், புருனி, சாரவாக், வட போர்னியோ ஆகிய பிரதேசங்கட்குப் பொதுவான செலாவணிக் குழுவிற்கு வழங்கப்பட்டிருக்கிறது.

கணக்கிட்டுக்கொண்டபோதிலும் செலாவணி வெளியிடும்முறையில் தெளிவான மாற்றம் நேர்ந்துள்ளது என்பதை மறுக்க முடியாது.

இரண்டாவதாக, இந் நாடுகளில் மைய பாங்குகள் நிறுவப்பட்டிருப்பது முக்கியமானதொரு மாற்றமாகும். இம் மைய பாங்குகள் நோட்டு வெளியிடும் உரிமை பெற்றுள்ளன. இவை, வாணிப பாங்குகளின் (Commercial Banks) நடவடிக்கைகளை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தியும் வருகின்றன. ஒவ்வொரு நாட்டிலுமுள்ள மைய பாங்கு ஆற்றிவருகின்ற பணிகளில் வேறுபாடுகள் உள்ளன. எனினும், இந் நாடுகளில் உருவாகியுள்ள பொதுவான முறைக்கு அண்மையில் ஜமைக்காவில் தோன்றியுள்ள மைய பாங்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழுகின்றது என்று கூறலாம். செலாவணி வெளியீட்டை நிருவகிப்பது வெளியிடப்பட்டுள்ள செலாவணிகட்குக் காப்பாக அமைந்துள்ள பத்திரங்கள் போன்ற முதலீடுகளைக் கண்காணிப்பது, அரசாங்கத்தின் பாங்கராகத் திகழுவது, வாணிப பாங்குகள் தன்னிடம் இருப்பாக வைத்திருக்க வேண்டிய டெபாசிட்டுகளை நிர்ணயித்து அவற்றைத் தானே வைத்திருப்பது, வாணிப பாங்குமுறை திறம்படச் செயலாற்றுவதற்கு இன்றியமையாத பல ஏற்பாடுகளைச் (உதாரணமாக, உண்டியல்களைக் கழிவு செய்வதற்கான ஏற்பாடுகளை) செய்வது—ஆகிய பல்வேறு பணிகளையும் இம் மைய பாங்கு ஆற்றிவருகின்றது. இந் நாட்டில் நோட்டு வெளியீட்டிற்குக் காப்பாகத் திகழக்கூடிய உள்நாட்டுப் பத்திரங்களின் பங்கை, முன்பு செலாவணிக் குழு முறையின்கீழ் 30 சதவீதமாக இருந்ததை, தற்சமயம் 50 சதவீதமாக உயர்த்தத் தீர்மானித்துள்ளனர்.[1]

இந் நாடுகள் பலவற்றில் உள்நாட்டு வாணிப பாங்குகள் தோன்றியுள்ளது மூன்றுவது மாற்றமாகும். இதன் விளைவாக, காலக்கிரமத்தில் இந் நாடுகளிலுள்ள வாணிப பாங்குமுறையில் ஒருமித்த தன்மை உருவாகி, இந் நாடுகளில் செயலாற்றி வருகின்ற அயல்நாட்டுப் பாங்குகட்கும் வெளி நாடுகளிலுள்ள அவற்றின் தலைமை அலுவலகங்கட்கும் இடையே இருந்துவருகின்ற இணைப்பானது குறைந்துவிடக்கூடும் என்று நாம் எதிர்பார்க்கலாம்.

மேற்போக்காக நோக்குங்கால் இம் மாற்றங்கள் வியக்கத்தக்கவை என்றும் பிரிட்டனுக்குச் சொந்தமான காலனிகட்கு

[1] International Monetary Fund, 'International Financial News Survey' *(23 September 1960)* ஐப் பார்க்கவும்.

விரைவில் சுதந்திரம் வழங்கப்பெறுமேயாயின், இந் நாடுகளிலுள்ள பழைய முறையானது முற்றிலும் மாற்றமுறும் என்றும் எண்ணத் தோன்றலாம். ஆனால், அண்மையில் விடுதலையடைந்துள்ள சில நாடுகளை உற்று நோக்கினால் இது உண்மையன்று என்பது நன்கு தெளிவாகும். இந் நாடுகளில் பெரும் அதிகாரங்களோடு மைய பாங்குகள் நிறுவப்பெற்றுள்ளபோதிலும், பண முறையும் பாங்கு முறையும் ஆற்றலுடன் செயலாற்றிவருகின்றன என்று கூறுவதற்கில்லை. மேலும், பணமுறையிலும் பாங்கு முறையிலும் பெருமளவு மாற்றங்கள் நேர்ந்துள்ளன என்று கூறிவிடமுடியாது. உதாரணமாக, கானா நாட்டில் மைய பாங்கு நிறுவப்பெற்று, மூன்று ஆண்டுகள் ஆன பின்னும்—அதாவது, 1960ஆம் ஆண்டின் நடுப் பகுதியில்—நாட்டில் வெளியிடப்பட்ட செலாவணிக்கு ஈடாக நூற்றுக்கு நூறு ஸ்டெர்லிங்கையோ அல்லது ஸ்டெர்லிங் பத்திரங்களையோ மைய பாங்கானது காப்பாக வைத்திருந்தது. மேலும், இந் நாட்டிலுள்ள வாணிப பாங்குகள் காப்பு இருப்பாக மைய பாங்கில் டெபாசிட்டுகளும் தம்மிடம் உள்நாட்டுப் பத்திரங்களும் வைத்திருந்தபோதிலும், இவை வாணிப பாங்குகளிடமிருந்த மொத்த ரொக்கச் சொத்துகளில் சுமார் நான்கில் ஒரு பங்கேயாகும்.[1]

1960ஆம் ஆண்டில்கூட லிபியா நாடு தான் வெளியிட்ட செலாவணிக்கு ஈடாக நூற்றுக்கு நூறு வெளிநாட்டுப் பத்திரங்கள் செலாவணிகள் ஆகியவற்றைத் தன்னிடம் இருப்பாக வைத்திருந்தது. இந் நாட்டிலுள்ள வாணிப பாங்குகள் தம்மிடமுள்ள சொத்துகளில் (assets) 20 சதவீதத்தை ரொக்கச் சொத்துகளாக வைத்திருக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டிருந்தபோதிலும், இந்த 20 சதவீத ரொக்கச் சொத்தை வாணிப பாங்குகள் உள் நாட்டிலேயே வைத்திருக்கவேண்டும் என்று எந்தவிதமான கட்டுப்பாடும் விதிக்கப்படவில்லை.[2]

லத்தின் அமெரிக்கா, ஆசியா, மத்தியக் கிழக்கு[3] ஆகிய பிரதேசங்களிலுள்ள நாடுகளில் நாம் இங்குக் குறிப்பிட்டுள்ளதை

[1] Bank of Ghana 'Roport' for year ending 30-6-60 ஐப் பார்க்கவும்.

[2] International Bank, 'The Economic Development of Libya' (Johns Hopkins, Baltimore), pp. 318—20.

[3] வாணிப பாங்குகள் தம்முடைய டெபாசிட்டுகளில் ஒரு பகுதியை மைய பாங்கில் இருப்பாக வைத்திருக்க வேண்டியுள்ள முறையானது, டெபாசிட்டு கட்குப் பாதுகாப்பாகவும் பாங்குகளின் ரொக்கத் தன்மைக்கு ஆதரவாகவும் அமைந்துள்ளதேயன்றி, பணக்கொள்கையின் நோக்கத்தை நிறைவேற்றக்

விடப் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ள பணமுறையும் பாங்கு முறையும் உருவாகியுள்ளன என்பது உண்மையேயாயினும், வேறு பல நாடுகளில் செலாவணி வெளியீடு பாங்குமுறை ஆகியவை அரசாங்கத்தால் ஆற்றலுடன் கட்டுப்படுத்தப்பட்டுவருகின்றன என்று கூறுவதற்கில்லை. ஏனெனில், இந் நாடுகளில், பணமுறையும் பாங்கு முறையும், அரசாங்கம், மைய பாங்கு, வாணிப பாங்குகள் ஆகியவற்றிற்கு இடையே உருவாக்கப்பட்டுள்ள ஏற்பாடுகளைமட்டும் சார்ந்து செயல்படுகின்றன என்று சொல்லிவிட முடியாது. வாணிப பாங்குகளும் மைய பாங்குகளும் இந் நாடுகளில் அரசாங்கத்தின் கட்டுப்பாடுகட்கு உட்படுத்தப்பட்டுவிட்டால் நிலைமை சீர் அடைந்துவிடும் என்று கூற முடியாது. ஏனெனில், இந் நாடுகளில் இன்றும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையே பண அளிப்பைக் கட்டுப்படுத்துகின்ற மாபெரும் சக்தியாகத் திகழுகின்றது. இந் நாடுகளின் மொத்த தேசிய வருமானத்தில் ஏற்றுமதிகள் பெரும் பங்கு பெறுவதோடு இவ் ஏற்றுமதிகள் ஆண்டிற்காண்டு பெருமளவு ஏற்ற இறக்கங்கட்கும் உள்ளாகி வருகின்றன. மேலும், பெரும்பாலான நாடுகளில் வாணிப பாங்கு (இவை அயல்நாட்டு பாங்குகளின் கிளைகளாக இருப்பதால்) வெளி நாடுகளினின்றும் தேவையான நிதிகளை எளிதில் பெற்று வருகின்றன.

இந் நாடுகளில் பண முறையும் பாங்கு முறையும் ஆற்றலின்றி விளங்குவதால் அரசாங்கக் கடன் எழுப்புவதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவாகவே உள்ளன. செலாவணிக் குழு முறை கடைப்பிடிக்கப்பட்டுவந்த காலத்தில் உள்நாட்டு பாங்குகளிடமிருந்து அரசாங்கமானது கடன் எழுப்புவதற்கான வாய்ப்புகள் மிகக் குறைவாகவே இருந்தன. நாணயமான தனியார் நிறுவனம் பாங்குகளிடமிருந்து எந்த அளவு கடன் வசதிகள் பெற்று வந்தனவோ அவற்றிற்கு மேலாக அரசாங்கம் எவ்வித வசதியும் பெற முடியவில்லை. இந் நாடுகளில் அரசாங்கமானது, அதிகப் பற்று (overdraft) முறையின்கீழ் உள்நாட்டு பாங்குகளிடமிருந்து கடன் உதவி பெற்றிருக்க முடியும் என்பதும் செலாவணிக் குழுவிடம் ஸ்டெர்லிங் கொடுக்கும்பட்சத்தில் உள்நாட்டுச் செலாவணிகள் பெற்றிருக்க முடியும் என்பதும் உண்மைதான். இருப்பினும், பிரிட்டனில் அரசாங்கம் பெற்றுவருகின்ற வசதிகளை இந்த அரசாங்கங்கள்

---

கூடிய ஆற்றல்மிக்க சாதனமாக மத்தியக் கிழக்கு நாடுகளில் பயன்பட்டுவரவில்லை என்று அண்மையில் மத்தியக் கிழக்கு நாடுகளைப்பற்றி எழுதியுள்ள விமர்சகர் ஒருவர் கூறியுள்ளது கவனிக்கத் தக்கதாகும். இவ் விஷயத்தை, A. Ali, Banking in the Middle East', 'International Monetary Fund Staff Papers' 1957—8. என்ற நூலில் காணலாம்.

பெற்றிருக்கவில்லை. உதாரணமாக, பிரிட்டனில் அரசாங்கமானது மைய பாங்கிடமிருந்து வழிவகைக் கடன்கள் (Ways and Means Advances) பெற்றுவருகின்றது. இது தவிர, நேரடியாகவோ அல்லது (கஜானு உண்டியல்கள்மூலம்) மறைமுகமாகவோ பிரிட்டனில் அரசாங்கம் வாணிப பாங்குகளிடமிருந்து கடன் பெற முடிகின்றது. இது நிற்க, பின்தங்கிய நாடுகளில் அரசாங்கமானது, சொத்துகளை வைத்திருக்கக்கூடிய பல அரசாங்கத் துறைகளிடமிருந்துகூட (உதாரணமாக, அரசாங்கச் சேமிப்பு பாங்குகளிடமிருந்துகூட) தமக்குத் தேவையான பணத்தைக் கடனுகப் பெற முடியாத நிலை இருந்தது. ஏனெனில், சொத்துகளை வைத்திருக்கக்கூடிய அரசாங்கத் துறைகள் யாவும் அச் சொத்துகளை ஸ்டெர்லிங்காகவோ அல்லது ஸ்டெர்லிங் பத்திரங்களாகவோ வைத்திருக்க வேண்டும் என்ற வரையறை விதிக்கப்பெற்றிருந்தது. இந் நாடுகளில் நெடுங்கால அரசாங்கக் கடன்கட்கான வாய்ப்புகள் இதைவிடச் சிறப்பாக இருந்தன என்று கூறுவதற்கில்லை. ஏற்றுமதிகட்கும் இறக்குமதிகட்கும் நிதி உதவி அளித்துவந்த வாணிப பாங்குகள் காலனி அரசாங்கத்தின் நெடுங்காலப் பத்திரங்களை வாங்கும் ஆர்வம் ஏதும் இன்றி இருந்ததில் வியப்பு ஏதும் இல்லை.

பாங்குகள் அரசாங்கத் துறைகள் ஆகியவற்றிடமிருந்து மட்டுமன்றி பொதுமக்களிடமிருந்தும் இந் நாடுகளில் அரசாங்கங்கள் பெரும் அளவில் கடன்பெற முடியவில்லை. இந் நாடுகளில் வெளியீட்டகங்கள் (issuing houses), தரகர்கள், பங்கு மார்க்கெட் (stock market) போன்ற நிறுவனங்கள் பெரும்பாலும் கிடையாது என்றே கூறலாம். ஏனெனில், இவை ஏற்படுவதற்குச் சாதகமான நம்பிக்கை நிறைந்த சூழ்நிலை இந் நாடுகளில் இல்லை. இவ்வாறுன சூழ்நிலையில் அரசாங்கக் கடன்கட்கான ஆதரவு பொதுமக்களிடம் இருப்பதற்கு நியாயமில்லை.

எனினும், இந் நாடுகளில் புதிய புதிய நிறுவனங்கள் உருவாகி வருவதை ஒட்டியும் பொதுவான பொருளாதார வளர்ச்சியை ஒட்டியும் பல மாற்றங்கள் நேர்ந்துள்ளன. உதாரணமாக, கானுவும் நைஜீரியாவும் சென்ற ஆண்டுவாக்கில் கஜானு உண்டியல்களை (Treasury bills) வெளியிட முடிந்தது. மேற்கு ஆப்பிரிக்காவில் அண்மையில் பிரிட்டிஷ் உண்டியல் ஏற்பகம் (acceptance house) ஒன்று தன்னுடைய கிளையை நிறுவியுள்ளது. பல நாடுகள் உள்நாட்டில் நெடுங்காலப் பத்திரங்களை (long term securities) வெற்றிகரமாக வெளியிட்டுள்ளன. (உதாரணமாக, ரொடீஷியக் கூட்டாட்சியும் நயாசாலாந்தும் **1960**ஆம் ஆண்டு, $6\frac{3}{4}$ சதவீத வட்டி உடையதும் **1980–5**-ல் திரும்பப் பெறக்கூடியதுமான பங்குத் தொகுப்பின்

(stock) மூலம் சுமார் 3 மில்லியன் பவுன் மதிப்புள்ள தொகையை மார்க்கெட்டிலேயே கடனுக எழுப்ப முடிந்தது.) இதுபோன்ற பல மாற்றங்கள் இந் நாடுகளில் நேர்ந்துவருவதோடு வேறு பல மாற்றங்களும் (உதாரணமாக, அரசாங்கங்கள் லாட்டரிப் பத்திரங்கள் வெளியிட்டுவருகின்றன)[1] நேர்ந்துவருகின்றன. எனினும், மேல் நாடுகளில் அரசாங்கங்கள் குறுங்காலக் கடன் நெடுங்காலக் கடன் ஆகியவற்றை எழுப்புவதற்குப் பெற்றுள்ள வசதிகள் இந் நாடுகளில் உருவாக நெடுங்காலம் ஆகக்கூடும் என்றே தோன்றுகிறது.[2]

இதுகாறும், குறைபாடுகளை உடைய பணமுறையின் விளைவாலும் பாங்கு முறையின் விளைவாலும் வளர்ச்சியுருத நாடுகளில் அரசாங்கமானது உள்நாட்டுக் கடன் எழுப்புவதற்கான வாய்ப்புகள் மிகக் குறைவானவையே என்று கண்டோம். அடுத்து, இவ்வாருன சூழ்நிலையில், தனது கொள்கைகளின்மூலம் தனியார் துறையை, மொத்தத் தேவையில் (aggregate demand) ஏற்படக்கூடிய மாற்றங்கட்கு ஏற்ப, அரசாங்கமானது ஊக்குவிப்பதோ அல்லது கட்டுப்படுத்துவதோ எந்த அளவுக்குச் சாத்தியமானது என்று காண்போம்.

நாட்டிலுள்ள கடன் வாங்குவோரையும் (borrowers) கடன் ஈவோரையும் (lenders) பாதிப்பதன்மூலம் பணக் கொள்கையானது செயல்பட்டுவருகின்றது. வட்டிவித உயர்வு, பாங்குகள் துணை ஈடு (collateral) கேட்பது, கடன் பங்கீட்டுமுறை (rationing of credit) செயல்படுத்தப்படுவது ஆகியவை கையாளப்படுவதால் கடன் வாங்குவோர் சிலர் கடன்பெற முன்வராதிருக்கலாம். வட்டி வீதங்கள் உயரக்கூடிய காலங்களில் மூலதன மதிப்புக் குறைவதை ஒட்டி மூலதன இழப்புகள் நேரக்கூடுமாதலால், கடன் ஈவோர் சிலர் கடன் கொடுக்க முன்வராதிருக்கலாம். வட்டி வீதம் உயருவதன் விளைவாகத் தனியார் சேமிப்புப் பெருகும்போது அரசாங்கமானது முதலீடுகளின்மீது கட்டுப்பாடுகளை விதிக்குமேயாயின்

[1] பிரிட்டிஷ் கால்பந்தாட்டப் போட்டி விளையாட்டுகள் தம் நாட்டு மக்களைப் பெரிதும் கவர்ந்துள்ளது வருந்தத்தக்கது என்று கானு நாட்டு நிதி மந்திரி 1960 ஆம் ஆண்டு ஜூலை 20 ஆம் தேதி தம்முடைய பட்ஜெட் பேச்சில் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதே விஷயத்தை 1960ஆம் ஆண்டிற்கான தமது பட்ஜெட் பேச்சில் நைஜீரியக் கூட்டாட்சியின் நிதி அமைச்சரும் கூறியுள்ளார்.

[2] சில ஆப்பிரிக்க நாடுகளின் மைய பாங்கு சாசனங்களில், அரசாங்கத்திற்கு ஒரு குறிப்பிட்ட ஆண்டில் மைய பாங்கு கடனுக வழங்கக்கூடிய மொத்தத் தொகை வரையறுக்கப்பட்டுள்ளது. 'Economic Bulletin for Africa', UN Economic Commission for Africa, January 1961 ஐப் பார்க்கவும்).

இதன் விளைவாகத் தனியார் நுகர்வு மேலும் குறையும். பல நாடுகளிலும் பணக் கொள்கையானது பல்வேறுவகையில் செயலாற்றப்பட்டுவருகின்றது. எனினும், சாதாரணமாக, எல்லா நாடுகளும் இரு பொதுவான முறைகளைக் கையாண்டு வருகின்றன—பண அளிப்பைக் கட்டுப்படுத்தும் நோக்கத்தோடு கையாளப்பட்டு வருகின்ற வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் (open market operations) முதலாவது முறையாகும்; நாட்டில் நிலவுகின்ற வட்டிவீதங்களில் மாற்றங்களை உண்டாக்கும் நோக்கத்தோடு மைய பாங்கானது தன்னுடைய மறுகழிவு (re-discount) வீதத்தை உயர்த்துவது இரண்டாது முறையாகும். இவ் இரு பழைமையான முறைகள் தவிர இவற்றிற்கு ஆக்கம் தேடும் வகையில் வேறு பல முறைகளும் கையாளப்பட்டுவருகின்றன. அரசாங்கத்தின் கடன் கழிவு நிதி (funding) நடவடிக்கைகள் (இவற்றின் நோக்கம் பாங்குகளிடமுள்ள ரொக்கச் சொத்துகளைக் குறைப்பதேயாகும்), மாறும் காப்பு இருப்பு விகித முறை (variable reserve ratio), நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ பாங்கு அட்வான்சுகள்மீது கட்டுப்பாடுகள் விதிப்பது (பொதுவான பாங்கு அட்வான்சுகள்மீதும் சில குறிப்பிட்ட தொழில்கட்கு வழங்கப்படுகின்ற பாங்கு அட்வான்சுகள்மீதும் இவ்வாறான கட்டுப்பாடுகள் விதிக்கப்பெறலாம்), தவணைக் கடன்களை (instalment credit) ஒழுங்குபடுத்துவது (உதாரணமாக, முதல் தவணைச் செலுத்தினம் ஒரு குறைந்த அளவினதாக இருக்கவேண்டும் என்று கட்டுப்பாடு செய்யலாம் அல்லது தவணைக் காலத்திற்கான உச்ச வரம்பினை ஏற்படுத்தலாம்) ஆகியவையே வேறு பல முறைகளாகும்.

குறைபாடுகளுடைய பண முறையும் பாங்கு முறையும் உள்ள பின்தங்கிய நாடுகளில்—அதாவது, காலனிமுறைப் பண ஏற்பாடுகள் உள்ள நிலையில்—பணக்கொள்கையை ஆற்றலுடன் செயலாற்றுவதற்கான வாய்ப்புகள் மிகமிகக் குறைவானவையேயாகும். இந் நாடுகளில் மத்திய அரசாங்கமானது பண அளவினை ஆற்றலுடன் கட்டுப்படுத்த முடியவில்லை; பாங்குகள் விதித்து வருகின்ற வட்டி வீதங்களையும் மத்திய அரசாங்கத்தால் ஆற்றலுடன் கட்டுப்படுத்த முடியவில்லை; பணத்தைப் பயன்படுத்தி வர்த்தக பேரங்கள் நடந்துவருகின்ற பகுதிகள் நாட்டில் மிகவும் குறைவாக உள்ளன.[1]

[1] நாட்டிலுள்ள பண அளவிற்கும் நாட்டின் மொத்த ஆக்கத்திற்கும் இடையேயுள்ள விகிதமானது நாட்டில் பணத்தைப் பயன்படுத்தி வர்த்தக பேரங்கள் நடத்திவருகின்ற பகுதிகளின் அளவை மதிப்பிடுவதற்கு ஏற்ற அளவுகோல் என்று கருதினால், பின்தங்கிய நாடுகளில் பொதுவாக இந்த விகிதமானது 10—20 சதவீதம் என்றும், பெரிதும் முன்னேறியுள்ள நாடுகளில் இவ் விகிதமானது 40—50 சதவீதம் என்றும் அறியவருகிறோம்.

இக் குறைந்த பகுதிகளிலும் ஒருசில பகுதிகளே பாங்குக் கடன்களைச் சார்ந்திருக்கின்றன.[1] ரொக்கத் தன்மை மாற்றங்களால் எளிதில் பாதிக்கப்படக்கூடிய நிதி நிறுவனங்கள் நாடு முழுவதும் பரவலாக அமைந்திருக்கவில்லை. இவ்வாருன நிலையில் மேல் நாடுகளில் உள்ளதுபோல இந் நாடுகளிலும் பணக் கொள்கையானது ஆற்றலுடன் திகழக்கூடும் என்று எண்ணுவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதை ஒக்கும். பாங்குகள் அல்லாத ஏனைய நிறுவனங்கள் தொழில்கட்குத் தேவையான நிதிகளைப் பெரும் அளவில் கடனுக வழங்கிவருவதனுல் பிரிட்டனின் பணக் கொள்கை பெரிதும் ஆற்றலுடன் திகழவில்லை என்று அண்மையில் பலர் கருத்துத் தெரிவித்துள்ளனர். பிரிட்டனிலேயே நிலைமை இவ்வாருக இருந்தால் பின்தங்கிய நாடுகளில் எவ்வாறு இருக்கக்கூடும் என்று நாம் கூற வேண்டுவதில்லை. இந் நாடுகளில் நிலைமை படுமோசமாக உள்ளது. பாங்குக் கடன்களைச் சாராத பல பொருளாதார நடவடிக்கைகள் இந் நாடுகளில் நேர்ந்துவருகின்றன என்பதுமட்டுமன்றி சட்டச் செலாவணியையும் பாங்குப் பணத்தையும் அரசாங்கமானது ஆற்றலுடன் கட்டுப்படுத்த இயலாத நிலையில் இருப்பதுவும் இதற்கான காரணமாகும்.

செலாவணிக் குழுமுறை ஒழிந்து மைய பாங்குகள் இந் நாடுகளில் உருவாகியுள்ளதை ஒட்டி பணக் கொள்கை செயலாற்றப்படுவதற்கு ஏதுவான உடனடியான மாற்றங்கள் நேர்ந்துள்ளன என்று கொள்வதற்கில்லை. இவ்வாறு இந் நாடுகளில் புதிய நிறுவனங்கள் ஏற்படுவதனுல் மட்டும் அரசாங்கப் பத்திரங்கட்கு ஒரு விசாலமான மார்க்கெட் உருவாகிவிடும், வாணிப பாங்குகளிடமுள்ள ரொக்க நிலைச் சொத்துகள் மிகக் குறைந்த அளவுக்குக் குறைக்கப்பட்டுவிடும், ஒரு நாட்டிற்கும் உலகிலுள்ள ஏனைய நாடுகட்கும் இடையே

[1] சில தனியார் முதலீடுகள் (உதாரணமாக, பெரிய கம்பெனிகளிலான முதலீடுகள்) அயல் நாட்டினரால் செய்யப்படுவதும், சில தனியார் முதலீடுகள் (உதாரணமாக, சிறிய அளவில் செய்யப்படுகின்ற விவசாயம்போன்றவை) நாணயமானவை என்று கூறுவதற்கில்லை என்பதும் இதற்கான காரணமாகும். முதலீடுகளில் பெரும்பாலானவை நெடுங்காலத்தில் நிறைவேறக்கூடியவையாக இருக்கலாம் (உதாரணமாக, கட்டடங்கள், சாலைகள் ஆகியவற்றிற்கான முதலீடுகள்) அல்லது சரக்குகளை இருப்புவைப்பதாக அமையலாம். எந்திர தளவாட சாமான்களில் செய்யப்படுகின்ற முதலீடுகளைவிடக் கட்டடம், இருப்புச் சரக்கு ஆகியவற்றில் செய்யப்படுகின்ற முதலீடுகளே வட்டி வீதத்தில் நேரக்கூடிய மாற்றங்களால் பெரிதும் பாதிக்கப்படக்கூடியவை. எனினும், பின்தங்கிய நாடுகளில் இதுபோன்ற முதலீடுகளில் பெரும்பாலானவை, அவை தனியார் துறையினரால் செய்யப்பட்டாலும் சரி அல்லது அரசாங்கத் துறையால் செய்யப்பட்டாலும் சரி, பாங்குக் கடன்களையோ அல்லது வேறு நிதி நிறுவனங்களையோ சார்ந்திருக்கவில்லை. எனவே, இவை முக்கியத்துவம் உடையவை என்று நாம் கருதவில்லை.

இருக்கக்கூடிய நிதி இணைப்புகள் அறுபட்டுவிடும் என்று கொள்வது சிறிதும் பொருந்தாது. மத்திய ஆப்பிரிக்கக் கூட்டாட்சியில் நடந்ததொரு நிகழ்ச்சி இதை விளக்கக்கூடிய சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழுகின்றது. இக் கூட்டாட்சியில் 1960ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் நாட்டிலுள்ள நிதிகள் லண்டன் பண மார்க்கெட்டால் ஈர்க்கப்பட்டதைத் தடுப்பதற்காகத் தம்முடைய டெபாசிட் வீதத்தையும் கடன் ஈயும் வீதத்தையும் வாணிப பாங்குகள் உயர்த்தின. இவை இவ்வாறு செய்தபின் தொடர்ந்து மைய பாங்கானது தன்னுடைய கழிவு வீதத்தை உயர்த்தியது! அரசாங்கத்தின் பணக் கொள்கையைவிட அயல் நாடுகளில் நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளே நாட்டுப் பண அமைப்பின்மீது மிகுதியான ஆற்றல்பெற்றுத் திகழுகின்றன என்பதை விளக்க இதைவிட வேறு உதாரணம் வேண்டுங்கொல்?

நாம் இவ்வாறு கூறிக்கொண்டே சென்றுல் அது மிகைபடக் கூறியதாக முடியலாம். ஏனெனில், பின்தங்கிய நாடுகள் யாவற்றிலும் பண முறையானது அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கவில்லை என்று கூறுவதற்கில்லை. சில நாடுகளில் பண முறையானது அரசாங்கத்தின் உறுதியான கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கின்றது.[1] இதற்குச் சிறந்ததோர் உதாரணம் இந்தியாவேயாகும். அங்கு 1960ஆம் ஆண்டு புழக்கத்தில் இருந்த மிகுதியான செலாவணியை அகற்றுமுகத்தான் முதன்முறையாக மாறும் காப்பு விகித முறை கையாளப்பட்டது. இது நிற்க. பின்தங்கிய நாடுகளின் பொருளாதார அமைப்பில் பெரும்பகுதி பணக் கொள்கை பாங்குக் கொள்கை ஆகியவற்றுல் பாதிக்கப்படுவதேயில்லை என்பது உண்மைதான் என்றுலும், நாட்டுப் பொருளாதார அமைப்பின் பெரும் பகுதிகள் மாற்றங்கட்கே உள்ளாவதில்லை என்பதுவும் உண்மையாகும்; எனவே, இப் பகுதிகளை நிலைபேருக்கம் (stabilization) செய்வதற்கென்று பணக் கொள்கையோ அல்லது வேறு கொள்கையோ கைக்கொள்ளவேண்டிய அவசியமில்லை—என்ற கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது. இக் கருத்து பழுதற்ற ஒன்று என்று தோன்றவில்லை. நாட்டின் பொருளாதார அமைப்பைப் பல கூறுகளாகப் பகுத்து ஒரு கூறுபாட்டிற்கும் ஏனைய கூறுபாடுகட்கும் இடையே யாதொருவிதமான இணைப்பும் இல்லை என்று கூறுவதை இக் கருத்து ஒக்கும். ஆனுல், இவ்வாறு நாட்டின் பொருளாதார அமைப்பை ஒன்ருேடொன்று சம்பந்தமில்லாத பல கூறுகளாகக் கருதுவது பொருந்தாததாகும். எனினும், இது

[1] எனினும், இந் நாடுகளில் கட்டுப்பாடுகள் விவேகமான முறையில் கையாளப்பட்டு வருகின்றன என்று கூறுவதற்கில்லை.

போன்ற குறைகளை மேலே விளக்கியுள்ள கருத்தினின்றும் களைந்து விட்டால் இக் கருத்தின் சாராம்சம் உண்மையானதுதான் என்று சொல்லத் தோன்றுகின்றது.

நாம் இதுகாறும் விவாதித்த விஷயங்களின் சுருக்கமான கருத்து வருமாறு: பல பின்தங்கிய நாடுகளில் குறைபாடுகளுடன் பண முறையும் பாங்கு முறையும் உருவாகியுள்ள சூழ்நிலையில் அரசாங்கம் எச் சந்தர்ப்பத்திலும் எளிதில் உள்நாட்டில் கடன் எழுப்புவதென்பது சாத்தியமானதொன்றன்று. இதேபோல, பணக்கொள்கையின்மூலம் தனியார் துறையின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதென்பதும் சாத்தியமானதொன்றன்று; இது பல வரையறைகட்கு உட்பட்டதேயாகும்.

பின்தங்கிய நாடுகளில் அரசாங்கச் செலவினங்கள் நெடுங்காலத்தில் உயர்ந்துகொண்டே செல்லும் தன்மையன என்றும் உள்நாட்டில் நேர்க்கூடிய நிகழ்ச்சிகளினுலோ அல்லது அயல் நாடுகளில் நேரக்கூடிய நிகழ்ச்சிகளினுலோ இந் நாடுகளில் வருமானமும் உற்பத்தியும் குறுங்காலத்தில் வன்மையான ஏற்ற இறக்கங்கட்கு உட்பட்டவை என்றும் நாம் ஏற்கெனவே கண்டோம். இந்த உண்மைகளோடு இவ் அத்தியாயத்தில் நாம் விவாதித்த விஷயத்தை இணைத்துத் தொகுத்துரைப்பதே அடுத்து நாம் செய்யவேண்டியதாகும்.

பின்தங்கிய நாடுகளில் அரசாங்கச் செலவு நெடுங்காலத்தில் உயர்ந்து செல்லக்கூடியது; இவ்வாறு உயர்ந்து கொண்டே செல்லக்கூடிய செலவை ஈடுகட்டுவதற்குப் போதுமான வருவாயை (revenue) அளிக்கக்கூடிய வரிமுறையை அரசாங்கம் கைக்கொள்ளவேண்டும். பெரிதும் வருமானம்சார் நெகிழ்ச்சியுடைய வரிகளையுடைய வரிமுறையே இதற்கு ஏற்ற ஒன்ருகும். இத்தன்மைத்தான வரிமுறை கடைப்பிடிக்கப்பட்டால், வரிவீதங்களை உயர்த்தவேண்டிய அவசியம் ஏதுமின்றியும் குறைபாடுகளையுடைய மூலதன மார்க்கெட்டில் கடன் எழுப்பவேண்டிய அவசியம் ஏதுமின்றியும், தேசிய வருமானம் உயரும்போதெல்லாம் அவ் உயர்வு வீதத்தைவிட அதிகமாகவே வருவாய் பெருகும். ஆனுல், ஏற்றுமதிப் பொருள்கட்கான அயல்நாட்டுத் தேவை குறைவதனுலும் விவசாயத்தில் மாசூல் பெரிதும் குறைவதனுலும் நாட்டில் வருமானங்களில் பெரும் வீழ்ச்சி நேருமேயாயின், இதன்விளைவாக வரியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாயில் நேரக்கூடிய வீழ்ச்சி வீதமானது வருமானங்களில் நேர்ந்துள்ள வீழ்ச்சி வீதத்தைவிட அதிகமாக இருக்கும். இவ்வாருன நிலையில். வருவாயில் நேர்ந்-

துள்ள வீழ்ச்சிக்கு ஏற்ப, செலவுகளை எளிதில் குறைக்க முடியா விட்டால் (பல நெடுங்காலத் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டு வருவதை ஒட்டி இந் நாடுகளில் வருவாய் குறையும் காலங்களில் செலவுகளை உடனடியாகக் குறைத்துவிட முடியாது) [1] இதன் விளைவாகப் பட்ஜெட்டில் பற்றுக்குறை (deficit) ஏற்படும். இந் நாடுகளில் அரசாங்கக் கடன் எழுப்புவதற்கான வாய்ப்புகள் மிகக் குறைந்தவையாக இருப்பதால், இவ்வாறு எழக்கூடிய பற்றுக்குறையை அகற்றுவதற்கு எம் முறைகளைக் கையாண்டு நிதி திரட்டுவது என்று எளிதில் தீர்மானித்துவிட முடியாது; பல பிரச்சினைகள் எழக்கூடும். எனவே, எளிதில் தீர்த்துவைக்க முடியாத ஓர் இருதலைக்கொள்ளி எறும்புபோன்ற நிலை இந் நாடுகளில் உருவாகியுள்ளது—அதாவது, வரி அமைப்பானது வருமானம்சார் நெகிழ்ச்சியற்றதாக இருந்தால், நெடுங்காலத்தில் நிதி நெருக்கடிகள் நேர்கின்றன; வரி அமைப்பானது வருமானம்சார் நெகிழ்ச்சியுடையதாக இருந்தால், குறுங்காலத்தில் நிதி நெருக்கடிகள் நேர்கின்றன.

இவ்வாருன இடர்ப்பாடுகள் இந் நாடுகளில் சில நிறுவனங்கள் உருவாகாததனால் நேர்ந்துள்ளன. எனவே, முழு அளவிலான பண முறையும் பாங்கு முறையும் இந் நாடுகளில் உருவாகிவிடுமேயாயின் இதுபோன்ற பிரச்சினைகள் மறைந்தொழிந்துவிடும் என்று சிலர் விவாதிக்கலாம். இங்கு நாம் இரண்டு கருத்துகளைக் குறிக்க விரும்புகிறேம். முதலாவதாக, உலகிலுள்ள மிகச்சிறிய நாடுகள் சிலவற்றில்—உதாரணமாக, மால்டா, மொரீஷஸ் போன்றவற்றில்—பிற நாடுகளைச் சார்ந்திராத முழு அளவினதான பண முறையை உருவாக்குவதென்பது உண்மையிலேயே சாத்தியமானதுதானு? என்ற வினு எழுகின்றது. தற்சமயத்தில் நிலவிவரக்கூடிய முறையை நீடிப்பதே சிறந்தது என்று எண்ணத் தோன்றுகிறது. அதாவது, வேருெரு பெயரில் ஸ்டெர்லிங்கையே இந் நாடுகள் செலாவணியாகப் பயன்படுத்திவருகின்ற முறையே சிறந்தது என்று எண்ணத் தோன்றுகிறது. இம் முறை எளிதானதாகவும் குறைந்த செலவே நேரக்கூடியதாகவும் இருப்பதால் இவ்வாறு எண்ணத் தோன்றுகிறது. இம் முதல் குறிப்பைவிட நாம் குறிப்பிடப்போகும் இரண்டாவது குறிப்பு மிகவும் முக்கியமானதாகும். செலவுகளை ஈடுகட்டக் கடன் எழுப்புவதற்கு ஏதுவான சூழ்நிலைகள் எல்லா நாடுகளிலும் ஒரேமாதிரியாக அமைந்துள்ளன என்று கூற முடியுமா? என்ற வினுவே நாம் ஆராயவேண்டிய

[1] முதலாவது அத்தியாயத்தில் தரப்பட்டுள்ள அட்டவணைக்கான விளக்கத்தைப் பார்க்கவும்.

இரண்டாவது குறிப்பாகும். இவ் வினவை தீர்க்கமாக ஆராய்ந்து விடைகாண முயன்ருல் நாம் பல விஷயங்களையும் இங்கு விரிவாக ஆராயவேண்டியிருக்கும்; ஆனல், அது சாத்தியமானதொன்றன்று. எனவே, சுருக்கமாக ஓரிரண்டு விஷயங்களைமட்டும் இங்குக் காண்போம். மொத்தத் தேவையை (aggregate demand) நாட்டில் கட்டுப்படுத்தி வைத்திருக்கவேண்டும் என்ற கருத்திற்கு ஆதரவாக வழக்கமாகத் தரப்படுகின்ற விவாதங்களை நாம் கருத்தில் கொண்டால், இரண்டு சூழ்நிலைகளில் பற்ருக்குறை நிதியாக்க முறை (deficit financing) பொருத்தமற்றது என்று சொல்லத் தோன்றுகிறது. முதலாவதாக, நெடுங்காலத்தில் நிலவக்கூடிய வேலையின்மை (unemployment) குறை வேலை உடைமை (underemployment) ஆகியவை மூலதனம், தொழில்நுட்ப அறிவு, திறனுடைய மேலதிகாரிகள் ஆகிய உற்பத்திக் காரணிகள் நாட்டில் அருகி உள்ளதை ஒட்டி நேரக்கூடியவையேயன்றி மொத்தத் தேவை குறைவந்த ஒட்டி நேரக்கூடியவையல்ல. இரண்டாவதாக, குறுங்காலத்தில், நாட்டில் வருமானங்கள் ஏற்ற இறக்கங்கட்கு உட்படுவதற்கு ஏற்றுமதிப் பொருள்கட்கான தேவைகள் குறைவது, விவசாயத்தில் மாசூல் குறைவது ஆகியவையே முக்கியமான காரணங்களாகுமேயன்றி, உள் நாட்டில் செய்யப்படுகின்ற முதலீடுகள் (investments) குறைவது காரணமல்ல. இவ் இரு நிலைகளிலும் உள்நாட்டுக் கடன்களை எழுப்பி பற்ருக்குறையை ஈடு செய்ய முனைவது உகந்ததன்று. இவ்வாறு முனைந்தால் நாட்டில் பணவீக்க அழுத்தம் உருவாகலாம் அல்லது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலைக் குலைவு (disequilibrium) ஏற்படலாம் அல்லது இவை இரண்டும் ஒருங்கே நேரலாம். எனினும், வெளி நாடுகளை நாடிச் சென்றிருக்கக்கூடிய நிதிகள்[1] அரசாங்கத்தின் கடன் நடவடிக்கைகளின் விளைவால் உள்நாட்டில் அரசாங்கத்திடம் போய்ச் சேர்ந்தால், அரசாங்கத்தின் கடன் நடவடிக்கையால் நாட்டில் பணவீக்கம் உருவாகும் என்று கூறுவதற்கில்லை. அல்லது உள் நாட்டில் செய்யப்படுகின்ற முதலீட்டையும் நுகர்வையும் அரசாங்கமானது நேரடியாகக் கட்டுப்படுத்துமேயாயின், நாட்டில் பணவீக்கம் உருவாகும் என்று கூறுவதற்கில்லை. மேலும், ஓரளவு பணவிக்கம் நன்மையாக அமையுமேயன்றித் தீங்காக அமைந்துவிடாது என்பது உண்மையாகும். இதனல் முதலீடுகள் ஊக்குவிக்கப்படுவதோடு விரும்பத்தக்க வகையில் நாட்டின் வருமானங்கள் பகிர்ந்தளிக்கப்படலாம். மேலும், நாணயமாற்று வீதத்தில் (exchange rate) உரிய மாற்றங்களைச் செய்வதன்மூலமும் நேரடிக்

[1] E T Nevin, 'Capital Funds in Underdeveloped Countries' (Macmillan, London, 1961), p. 51 ஐப் பார்க்கவும்.

கட்டுப்பாடுகள்மூலமும் அயல் நாட்டுக் கொடுப்பல்நிலையில் நேரக்கூடிய சமநிலைக் குலைவினைச் சீர்செய்ய முடியும். எனினும், ஜனநாயக நாடுகளில் இவற்றிற்கான வாய்ப்புகள் மிகக் குறைவானவையாகும். அரசாங்கமானது கடன் எழுப்புவதற்கு ஆதரவாக இவை தவிர வேறு பல கருத்துகளும் தரப்பட்டுள்ளன. (உதாரணமாக, அரசாங்கக் கடன் நடவடிக்கைகள் உள்நாட்டில் மூலதன மார்க்கெட் வளருவதற்குத் தூண்டுகோலாக அமையக்கூடும் என்று விவாதிக்கப்படுகின்றது.)[1] எனினும், இவ் விவாதங்கள், அரசாங்கமானது தனக்குத் தேவைப்படக்கூடிய கடன்களை என்றென்றும் எளிதில் எழுப்பக்கூடியதாக இருக்கவேண்டும் என்ற கருத்திற்கு ஆக்கம் தேடும் வகையில் அமைந்துள்ளனவேயன்றி, இங்கு நாம் ஆராய்ந்து கொண்டிருக்கின்ற விஷயத்திற்கு—அதாவது, குறுங் காலத்தில் நேரக்கூடிய பற்றுக்குறையை அரசாங்கமானது எவ்வாறு அகற்ற முடியும் என்ற பிரச்சினைக்கு—விடையளிக்கத்தக்கன அல்ல என்பதை நாம் உணரவேண்டும்.

வழிவழியாகப் பிரயோகிக்கப்பட்டுவந்துள்ள பணக் கொள்கையையும் கடன் கொள்கையையும் பின்தங்கிய நாடுகளில் அரசாங்க வருவாய் குறையக்கூடிய காலங்களில் அதைச் சரிசெய்யுமுகத்தான் ஓரளவுக்குத்தான் பயன்படுத்த முடியும் என்பதே நம்முடைய பொதுவான முடிவாகும். மேல் நாடுகளிலுள்ளதுபோன்ற நிறுவன அமைப்பு பின்தங்கிய நாடுகள் பலவற்றுள் இல்லாதிருப்பதே இதற்கான காரணமாகும். மேலும், இவ்வாருன நிறுவன அமைப்பு இந் நாடுகளில் இருப்பினும் அல்லது இல்லாதொழியினும், இந் நாடுகளில் அரசாங்கமானது உள் நாட்டில் கடன் எழுப்புவதை முன்னிட்டு சில விரும்பத்தகாத விளைவுகள் நேரக்கூடும். அண்மையில் லத்தீன் அமெரிக்கா,[2] பிரிட்டிஷ் கரிபியப்பிரதேசம் ஆகியவற்றில் நேர்ந்துள்ள நிகழ்ச்சிகட்கு இடையே உள்ள வேறுபாடுகளையும், மற்றும் அண்மையில் இந்தோனேஷியா, மலேஷியா ஆகியவற்றில் நேர்ந்துள்ள நிகழ்ச்சிகட்கிடையே உள்ள வேறுபாடுகளையும் உற்றுநோக்கினல், பழைமையான செலாவணிக் குழுமுறைச் சிறப்புகளே அற்றது என்று சொல்லத் தோன்றவில்லை. புதிய முறைகளைக் கையாண்டு வருகின்ற புதிய நாடுகள் செலாவணிகளைத் தேவைக்கு அதிகமாக வெளியிட்டு தம்முடைய நாட்டுச் செலாவணியின் மதிப்பைத்

[1] E.T. Nevin. 'Capital Funds in Unerdeveloped Countries' (Macmillan, London, 1961), p. 90 ஐப் பார்க்கவும்.

[2] லத்தீன் அமெரிக்காவின் அண்மைக்கால அனுபவத்தைப்பற்றிய சுருக்கமான விளக்கத்தைக் கீழே தந்துள்ள புத்தகத்தில் காணலாம்: Benham and Holley, 'Short Introduction to Economy of Latin America' (London, 1960) pp. 8—9.

தாழ்த்திக்கொள்வர் என்று தோன்றுகிறது. வேறு எதையும்விட இதை அவர்கள் எளிதில் செய்துவிடக்கூடும் என்று கூறத் தோன்றுகிறது.

இதுபோன்ற இடர்ப்பாடுகளினின்றும் விடுபடவேண்டுமானல், இந் நாடுகளிலுள்ள அரசாங்கங்கள் வளமையான காலங்களில் உபரித்தொகையைச் சேர்த்துவைத்துக்கொள்ள வேண்டும். மேலும், இதுபோன்ற காலங்களில் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ அயல்நாட்டுச் செலாவணிகளையும் சேர்த்து வைத்துக்கொள்ள வேண்டும். இக் கொள்கையைக் கடைப்பிடிக்க ஆரம்பிக்குமுன் சிறந்த முறையில் திட்டமிடவேண்டியது அவசியமாகும். எனினும், வருவாய் அதிகரித்துக்கொண்டிருக்கக்கூடிய காலங்களில் அவை மேன்மேலும் அதிகரித்துக்கொண்டே போகக்கூடும் என்று கருதி அரசாங்கமானது தன்னுடைய செலவுகளையும் அதிகரித்துக்கொள்ளலாம். இவ்வாறு செலவுகளும் அதிகரித்தால், வரிமுறையானது வருமானம்சார் நெகிழ்ச்சி உடையதாக இருந்தபோதிலும் வளமையான காலங்களில் உபரி வருவாய் கிடைக்கும் என்று சொல்வதற்கில்லை. மேலும், வளமையான காலம் எது, வளமையற்ற காலம் எது என்று தீர்மானிப்பதை ஒட்டிச் சில பிரச்சினைகள் எழலாம். விற்பனை நிறுவனங்களின் நடவடிக்கைகளை விளக்கும்போது இப் பிரச்சினைகள்குறித்து நாம் ஏற்கெனவே விவாதித்துள்ளோம்.[1] இக் கொள்கையானது இவ்வாறு பல வரையறைகட்கு உட்பட்டது என்பது உண்மையேயாயினும், கடைப்பிடிப்பதற்கு இதுவே ஏற்றது என்று தோன்றுகிறது. வளமற்ற காலத்தில் ஏற்றுமதிகளினின்றும் கிடைக்கக்கூடிய வருமானம் (இதை ஒட்டி அரசாங்கத்தின் வருவாயும்) குறைந்தபோதிலும், ஏற்கெனவே தான் சேர்த்துவைத்துள்ள உபரி இருப்புகளை அரசாங்கம் பயன்படுத்திக்கொள்ளலாம். இக் கொள்கையைக் கடைப்பிடிப்பதால் ஒரே கல்லில் இரண்டு மாங்காய் விழுமாறு செய்துவிட முடியும்— அதாவது, வருவாய் குறைகின்ற காலங்களில் உள்நாட்டில் கடன் எழுப்ப வேண்டிய அவசியம் ஏதுமின்றி அரசாங்கமானது தன்னுடைய

1 வரிமுறையின்மூலமாகவோ (உதாரணமாக, ஏற்றுமதி வரி, விற்பனை நிறுவனங்கள் விலையை நிர்ணயிப்பது, இறக்குமதி வரி ஆகிய முறைகளைக் கையாளுவதன் மூலமாகவோ) அல்லது பணமுறையின்மூலமாகவோ (உதாரணமாக, இறக்குமதியாளர்கள் முன்கூட்டியே பணத்தை அரசாங்கத்திடம் இருப்பாக வைக்கவேண்டும் என்று விதிப்பதன்மூலமாகவோ) இக் கொள்கையை அரசாங்கம் செயல்படுத்தமுடியும். இது அந்தந்த நாட்டில் உருவாகியுள்ள நிறுவன அமைப்பைப் பொறுத்த ஒன்றாகும். அண்மையில் இதுபோன்ற விஷயங்களை J. O. W. Olakanpo அவர்கள் 'Economica' (November 1961) என்ற சஞ்சிகையில் 'Monetary Management in Dependent Economies' என்ற தலைப்பின்கீழ் விவாதித்துள்ளார்.

செலவுகளை முன்பு இருந்த அளவிலேயே நிறுத்திக்கொள்ள முடியும்; மேலும், இதுபோன்ற காலங்களில் அரசாங்கமானது இறக்குமதியைக் குறைத்துக்கொள்ள வேண்டியதில்லை. தான் ஏற்கெனவே சேர்த்து வைத்துள்ள அயல்நாட்டுச் செலாவணிகளை இறக்குமதிகட்காகப் பயன்படுத்திக்கொள்ள முடியும்.

பிரிட்டனுக்குச் சொந்தமான காலனிப் பிரதேசங்களில் இக் கொள்கையைக் கடைப்பிடிப்பதற்கான சாத்தியக்கூறுகள் ஏதேனும் உள்ளனவா என்று காண முயலுவது பயனுள்ள செயலேயாகும். 1960ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதத்திலும், 1961ஆம் ஆண்டு ஜூன் மாதத்திலும் இந் நாடுகளிடம் இருப்பாக இருந்த ஸ்டெர்லிங் சொத்துகள் எவ்வளவு என்பதைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை காட்டுகின்றது:

**ஸ்டெர்லிங் சொத்துகள்**

*(மில்லியன் பவுன்களில்)*

| | | செப்டெம்பர் 1960 | ஜூன் 1961 |
|---|---|---|---|
| செலாவணிக் குழுவிடம் இருந்தவை | ... | 274 | 246 |
| சட்டபூர்வமான நிதிகளும் குறிப்பிட்ட காரியங்கட்கென்று ஒதுக்கிவைக்கப்பட்டுள்ள நிதிகளும் | ... | 160 | 139 |
| பொது நிதிகள் ... ... | ... | 272 | 190 |
| விற்பனை நிறுவனங்கள் ஆகியவற்றிடம் இருந்த நிதிகள் | ... | 51 | 18 |
| பிரிட்டனிலுள்ள பாங்குகளிடம் இருந்த நிதிகள் | ... | 241 | 191 |
| மொத்தம் | ... | 998 | 784 |

**மூலம்:** Digest of Colonial Statistics.

**குறிப்பு:** செப்டெம்பர் 1960-க்கான புள்ளிவிவரங்களில் நைஜீரியா, சியரே லியோன் நாடுகட்கான புள்ளிவிவரங்களும் அடங்கியுள்ளன. ஆனால், ஜூன் 1961-க்கான புள்ளிவிவரங்களில் இந் நாடுகட்கான புள்ளிவிவரங்கள் இடம்பெறவில்லை. இரண்டு ஆண்டுகட்கும் இடைப்பட்ட காலத்தில் இவ் இரு நாடுகளும் சுதந்திரம் பெற்றதே இதற்கான காரணமாகும்.

மேலே உள்ள அட்டவணையில் முதலாவது இனம் 'செலாவணிக் குழுவிடம் உள்ள ஸ்டெர்லிங்' என்பதாகும். இதுகுறித்து நாம்

ஏற்கெனவே விளக்கம் தந்துள்ளோம். 'சட்டபூர்வமான நிதிகளும் குறிப்பிட்ட காரியங்கட்கென்று ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள நிதிகளும்' என்ற இனத்தின்கீழ் கடன் தீர்க்கும் நிதிகள் (sinking funds) சேமிப்பு பாங்குகளின் சொத்துகள், அரசாங்கத்துறைத் தொழில் களின் புதுப்பித்தல் நிதி (renewal), தேய்மான நிதி, ஓய்வு ஊதிய நிதிகள் ஆகியவை அடங்கும். தம் இச்சைப்படி காலனி அரசாங் கங்கள் பயன்படுத்திவரக்கூடிய காப்பு இருப்புகளையே (reserves) 'பொது நிதி' என்ற இனம் குறிக்கின்றது. 'விற்பனை நிறுவனங்களின் நிதி' என்ற இனம் குறித்து ஏற்கெனவே நாம் மூன்ரும் அத்தியாயத் தில் விளக்கியுள்ளோம். கடைசியாக உள்ள இனமான 'பிரிட்டனி லுள்ள பாங்குகளிடமிருந்த நிதிகளை' ப்பற்றி விளக்கம் ஏதும் தேவை இல்லை என்று எண்ணுகிறோம்.

மேற்போக்காக நோக்காமல் ஊன்றி நோக்கினல் நாம் மேலே கொடுத்துள்ள அட்டவணையில் குறிக்கப்பட்டுள்ள காப்பு இருப்புகள் நெருக்கடிகாலத் தேவைகட்குப் பெரிதும் பயன்படக்கூடியவை அல்ல என்பது புலனுகும். உள் நாட்டில் வெளியிடப்பட்டுள்ள செலாவணிகட்கு ஈடாகச் சட்ட ரீதியாக, எந்த அளவு ஸ்டெர்லிங் காப்பு இருப்பாக செலாவணிக் குழுவினிடம் இருக்க வேண்டுமோ அதைவிட அதிகமான ஸ்டெர்லிங் இக் குழுவினிடம் இருந்தாலொழிய, இதனிடமுள்ள சொத்துகளை நாம் மேலே விளக்கியுள்ள கொள்கைக்கு ஆதரவாகக் கையாள முடியாது. இதேபோல, குறிப்பிட்ட காரியங்கட்கென்று ஒதுக்கப்பட்டுள்ள நிதிகளை உள்நாட்டுச் செலாவணியாகவும் வைத்திருக்கலாம் என்று அனுமதித்தாலொழிய (இது சாத்தியமானதன்று. உதாரணமாக, வெளிநாட்டுக் கடன்களைத் தீர்ப்பதற்காகச் சட்டபூர்வமாக வைத் திருக்கக்கூடிய நிதிகளை ஸ்டெர்லிங்காகத்தான் வைத்திருக்க முடியும்) இந்த வகையிலுள்ள சொத்துகளையும் நாம் மேலே விளக்கியுள்ள கொள்கைக்கு ஆதரவாகக் கையாள முடியாது. அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டுள்ளதும் நெகிழ்ச்சித் தன்மை உடையது மான ஒரே இனம் 'பொது நிதிகளே' யாகும். ஆனல், இவை 1960-ல் ஆகட்டும் அல்லது 1961-ல் ஆகட்டும் மொத்த ஸ்டெர்லிங் இருப்பு களில் சுமார் நான்கில் ஒரு பங்குதான் என்பதை அட்டவணையின் மூலம் அறியலாம். மேலும், இப் பொது நிதிகள் அரசாங்கத்தின் மொத்தச் செலவு இனங்களில் சுமார் மூன்றில் ஒரு பாகமேயாகும். மற்றும் இவை இந் நாடுகள் இறக்குமதி செய்யக்கூடிய பொருள்களின் மொத்த மதிப்பில் சுமார் 12 சதவீதமேயாகும். இவ்வாறு நாம் ஒப்புநோக்குவதன்மூலம், அரசாங்கத்திடம் இருக்கக்கூடிய இருப்பு நிதிகள், மேலே நாம் விளக்கியுள்ள கொள்கையைக் கடைப்பிடிப்ப தற்குப் போதுமானவையா இல்லையா என்று அறிய வந்துள்ளோம்.

எதிர்காலத்தில் நாட்டில் நேரக்கூடிய ஏற்ற இறக்கங்களைத் தவிர்ப்ப தற்கு இந் நிதிகளைப் பயன்படுத்த எண்ணும் அரசாங்கமானது சிறந்த முறையில் இந் நிதிகட்கான மதிப்பீடுகள் செய்வதுடன் சுய கட்டுப்பாடுகளையும் விதித்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும்.

அடுத்து அயல்நாட்டுக் கடன்களைப்பற்றி விளக்குவோம். பின்தங்கிய நாடுகளிலுள்ள அரசாங்கங்கள் வெளி நாடுகளிலிருந்து சுலபமாகக் கடன் பெற இயலுமேயாயின், உள் நாட்டில் அவை கடன் எழுப்ப இயலாது இடர்ப்படுவது பெரும் பிரச்சினையாகத் தோன்றுது. ஒரு நாடு வெளி நாடுகளிடமிருந்து கடன் பெறுவதால் உடனடியாக அந் நாட்டின் உண்மையான செல்வ வளங்கள் அதிகரிக்கின்றன. எனினும், இத்தகைய கடன்களால் நெடுங் காலத்தில் இந் நாடுகளின் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை பாதிக்கப் படலாம் என்பதை நாம் மறந்துவிடலாகாது. பல காலமாக பிரிட்டிஷ் காலனிகள் லண்டனில் குறுங்காலக் கடன் வசதிகள் பெற்று வருகின்றன. கிரவுன் ஏஜென்டுகளால் (Crown Agents) நிருவகிக்கப் பட்டுவருகின்ற 'காலனிகளின் கூட்டு நிதி' (Joint Colonial Fund) என்ற நிதியிலிருந்து இந் நாடுகள் குறுங்காலக் கடன்கள் பெற்று வருகின்றன. ஆரம்பத்தில் இம் முறையானது காலனி நாடுகள் தங்கட்கிடையே கடன் பெற்றுக்கொள்வதற்குச் சாதகமாக இருக் கும் என்ற கருத்தில் உருவாக்கப்பட்டது; அதாவது, உபரி நிதி உள்ள நாடுகளிடமிருந்து பணத் தேவையுள்ள நாடுகள் கடன் பெற முடியும் என்ற அடிப்படையில் இம் முறை உருவாக்கப்பட்டது. தன்னுடைய முதலீடுகட்கு ஈடாகவோ அல்லது பிரிட்டனின் அங்கீகாரம் பெற்ற தும் தான் விரைவில் பெறக்கூடியதுமான கடனுக்கு ஈடாகவோ ஒரு காலனி நாடு இதுபோன்ற குறுங்காலக் கடன் வசதிகளைப் பெற்றுவந்தது. எனினும், அண்மைக் காலத்தில் முன்பு இருந்ததைப் போல இக் கடன் வசதியைப் பெரும்பாலான நாடுகள் பயன்படுத்த வில்லை என்பது உண்மையாகும். இது நிற்க. லண்டன் பண மார்க்கெட்டில் தமக்குத் தேவையான நெடுங்காலக் கடன்களை இந் நாடுகள் பல காலமாக எழுப்பிவருகின்றன. இக் கடன்கள் யாவும் தர்மகர்த்தா அந்தஸ்து பெற்றுத் திகழுகின்ற நன்மைகளை உடை யனவாகும். இக் கடன்கள் யாவும் எழுப்பப்பெறுமுன் இங்கிலாந்துத் தலைமை பாங்கால் (Bank of England) ஆய்வு செய்யப்பட்டு அங்கீகாரம் பெறவேண்டும். லண்டன் நெடுங்காலப் பத்திர மார்க்கெட்டில் அண்மைக் காலத்தில் நிலவிவருகின்ற சூழ்நிலையில் இம் மாதிரியான கடன்களைப் பெரும் அளவில் எழுப்ப இயலவில்லை; ஒருசில கடன்களை எழுப்புவதே சாத்தியமாக உள்ளது. பிரிட்டனில் காலனிகட்குக் கடன் வழங்கும் முறையில் அண்மையில் ஒரு புதுமை யான முறை புகுத்தப்பட்டுள்ளது. அதாவது, 1958ஆம் ஆண்டு

முதல் காலனி அரசாங்கங்கள் நேரடியாக இங்கிலாந்துக் கஜானு விடமிருந்து கடன் பெறவும் லண்டன் பண மார்க்கெட்டின்மூலம் கடன் பெறவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஆனுல், இவ்வித மான வசதிகள் குறிப்பிடத்தக்க மாற்றங்களை விளைவித்துள்ளனவா என்பது இன்னும் தெளிவாகவில்லை. தம்முடைய கஜானு உண்டியல் களை லண்டன் பண மார்க்கெட்டில் விற்பனை செய்வதன்மூலம் தமக்குத் தேவையான பணத்தைப் புரட்டுவதற்குக் காலனி அரசாங் கங்கட்கு இதுவரை அனுமதி வழங்கப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

லண்டனிலிருந்து தாம் பெற்று வருகின்ற கடன் வசதிகள் தவிர பிரிட்டிஷ் காலனிகள் அண்மையில் வேறு அயல் நாடுகளி லிருந்தும் கடன் வசதிகள் பெற்றுவருகின்றன. இவை காலனி களாக இருப்பதால் பன்னுட்டுச் செலாவணி நிதியினின்றும் (International Monetary Fund) கடன் வசதிகள் பெற இயலவில்லை. எனினும், உலக பாங்கிடமிருந்து (World Bank) பல நாடுகள் பெரு மளவு உதவி பெற்றுள்ளன. இது தவிர, வேறு சில நாடுகள் (உதாரணமாக, ஜமைக்கா, ரொடீஷிய நயாஸாலாந்து கூட் டாட்சி—இக் கூட்டாட்சியைக் காலனி என்று கூற முடியாது—ஆகி யவை) நியூயார்க் பண மார்க்கெட்டில் நேரடியாகவே கடன்களை எழுப்பியுள்ளன.

வளர்ச்சியுருத நாடுகட்குப் பொதுவாக அமைந்துள்ள கடன் வசதிகள் யாவை என்பதை ஆராயவேண்டியது அவசியமாகும். இவ்வாறு நாம் ஆராயப் புகின், நம்முடைய எல்லையைத் தாண்டிப் பரந்ததோர் பிரதேசத்திற்குள் நுழைய நேரிடும். எனினும், பல முக்கியமான விஷயங்கள் உள்ளன; அவற்றைப் பலரும் நன்கு அறிவர் என்பது உண்மையேயாயினும் ஈண்டும் விளக்கவேண்டியது அவசியமாகும். தற்காலத்தில் எல்லா நாடுகளும் தாம் விரைந்து முன்னேறவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருக்கின்ற சூழ் நிலையில் எல்லா நாடுகளிலும் மூலதனத்திற்கான தேவைகள் பெரிதும் பெருகியுள்ளன. எனவே, பின்தங்கிய நாடுகள் ஏனைய நாடுகளுடன் போட்டியிடவேண்டிய நிலையில் உள்ளன. இது போன்றதோர் நிலையில் ஏனைய நாடுகள் அனுமதிக்கக்கூடிய இலாப வீதத்தை அல்லது தரக்கூடிய வட்டி வீதத்தைப் பின்தங்கிய நாடு களும் அனுமதிக்க முன்வந்தாலன்றி இவை எளிதில் வெளிநாட்டு முதலீடுகளை அல்லது கடன்களைப் பெற இயலாது. இதேபோல பெரிதும் விரும்பப்படுகின்ற முதலீட்டு வாய்ப்புகள் (உதாரண மாக, கச்சாப் பொருள் உற்பத்தியைப் பெருக்குவது போன்றவை) பின்தங்கிய நாடுகளில் இருந்தாலன்றி இவை எளிதில் வெளிநாட்டு

முதலீடுகள் அல்லது கடன்களைப் பெற முடியாது. ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குள்ளும் இதுபோன்ற சூழ்நிலை உருவாகியுள்ளது. லண்டன் பண மார்க்கெட்டில் காலனிகள் தங்களுக்குள் போட்டியிட்டு வருவதோடு ஸ்டெர்லிங் பிரதேசத்தில் அங்கம் வகித்துவருகின்ற சுதந்திர நாடுகளுடனும்[1] போட்டியிட வேண்டியுள்ளது. இதுபோலவே உலகிலுள்ள ஏனைய முக்கியமான மூலதன மார்க்கெட்டுகளிலும் போட்டி நிலவிவருகின்றது. ஒரு குறிப்பிட்ட நாடு தன்னுடைய பொருளாதார வளர்ச்சி வேகத்தைத் துரிதப்படுத்தவே வெளி நாடுகளினின்றும் மூலதனம் பெற விழைகின்றது என்பது உண்மையேயாயினும், துரிதமாக முன்னேறிக்கொண்டும் வெளி நாட்டு மூலதனங்கட்கு அதிகமான இலாப வீதம் கிடைத்துக்கொண்டும் இருக்கக்கூடிய நாடுகளை நோக்கியே வெளிநாட்டு மூலதனம் கவரப்பட்டுச் செல்கின்றது. மேலும், விலைவீக்கம் (price inflation) உள்ள ஒரு நாட்டை நோக்கி வெளிநாட்டு மூலதனம் கவரப்பட்டுச் செல்லாது. இது குறுங்காலக் கடன்களைமட்டுமன்றி நெடுங்காலக் கடன்களைப் பொறுத்தவரையிலும்கூட உண்மையாகும். எனவே, வாய்ப்பு இல்லாத உள்நாட்டுச் சூழ்நிலையில் உள்நாட்டுக் கடன்களை எழுப்பி அதைச் செலவிட்டுவரக்கூடிய ஒரு நாடானது எளிதில் அயல்நாட்டுக் கடன்களைப் பெற இயலாது என்பது வெள்ளிடைமலை. ஒரு நாடானது அயல்நாடுகளிலிருந்து வாங்கியுள்ள கடன்கட்குச் செலுத்தவேண்டிய வட்டித் தொகையானது அந் நாட்டின் ஏற்றுமதியின்மூலம் கிடைக்கக்கூடிய தொகையில் 10-லிருந்து 20 சத வீதமாக இருக்கக்கூடிய நிலையில் முக்கியமான உலக மூலதன மார்க்கெட்டுகளில் அந் நாட்டால் கடன் எழுப்ப முடியாது என்று சிலர்[2] கருத்துத் தெரிவித்துள்ளனர். இதுபோன்ற சூழ்நிலைகளில், தனிப்பட்ட நாடானது, வெளிநாடுகளிலிருந்து கடன்பெறக்கூடிய ஆற்றல் குன்றித் திகழுகின்றது எனலாம்.

இனி அயல்நாட்டு உதவிகளைப்பற்றிக் காண்போம். தற்சமயம் திகைப்பூட்டக்கூடிய வகையில் பல்வேறு நாடுகளும் பல்வேறு நிறுவனங்களும் பல்வேறு வகையான உதவிகளைப் புரிந்துவருகின்றன. இவ்வாறு புரிந்துவரக்கூடிய உதவிகளை ஒவ்வொன்றாக விவாதிப்பது முடியாத காரியம். இதுமட்டுமன்று. இவற்றிற்கான பட்டியலைத் தயாரிப்பதும் சாத்தியமானதன்று. பிரிட்டிஷ் காலனிகள் பெற்று

1 இவ் விஷயத்தைப்பற்றிய சில குறிப்புகளை கீழே தரப்பட்டுள்ள புத்தகத்தில் காணலாம்: 'Report of Commission of Enquiry on Fiji,' 1959 (Legislative Council Paper No. 1 of 1960, Fiji).

2 A. Shonfield, 'The Attack on World Poverty', (Chatto and Windus, London, 1960) p. 90 ஐப் பார்க்கவும்.

வருகின்ற உதவிகளைமட்டுமே உற்று நோக்கினுல் இவ் உண்மை நன்கு புலனுகும். இந் நாடுகள் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து பலவிதமான உதவிகள் பெற்றுவருகின்றன. பட்ஜெட்டிலுள்ள வரவுசெலவுக் கணக்குகளை ஈடுசெய்வதற்கென்று பெற்றுவருகின்ற உதவி (அதாவது, உதவி மானியங்கள்—grant-in-aid), குறிப்பிட்ட வளர்ச்சித் திட்டங்கட்கு என்று (கடந்த இருபதாண்டுகளில் நிறைவேற்றப்பட்டுள்ள காலனிகளின் வளர்ச்சிச் சட்டங்களின்கீழும் காலனிகளின் சேமநலத் திட்டங்களின்கீழும்) பெற்றுவருகின்ற உதவி, சில சமயம் நேரக்கூடிய நெருக்கடி நிலையைச் சமாளிக்க (சூருவளி, ராணுவச் செலவு ஆகியவற்றிற்காக) அளிக்கப்படுகின்ற விசேஷ மானியங்கள்—என்று இவை பலதரத்தனவாக உள்ளன. இது மட்டுமன்றி இவை பல பன்னுட்டு நிறுவனங்களிடமிருந்தும் அமெரிக்க அரசாங்கத்திடமிருந்தும் வேறு பல வகைகளிலும் உதவி பெற்றுவருகின்றன. எனினும், இவ்வாறு அமைந்துள்ள பல வகையினவான உதவிகளைப்பற்றி விரிவாக விளக்குமுகத்தான் காலத்தை வீணுக்காது முக்கியமான அடிப்படைக் கருத்தைமட்டும் அணுக முயல்வோம். அதாவது, பல திட்டங்கட்காக அயல்நாட்டு உதவி பெற விழையும் நாடுகள் பலவாக இருப்பதால் இவற்றிற்கிடையே பெரும் போட்டி உருவாகி உள்ளது.[1] வெளிநாட்டு உதவி விரும்பத்தக்கதா இல்லையா என்ற வினு ஒருபுறம் இருக்கட்டும். ஏனைய நாடுகளைவிடத் தனக்கு உதவி அளிக்கவேண்டியது மிகவும் அவசியம் என்று ஒரு நாடானது ஆதாரம் காட்ட முடிந்தாலன்றி (இந் நாடுகள் உதவி பெற்றுவருவதைக் குறை கூறிக்கொண்டிருப்போர் இவ்வாறு வாதிடலாம். எந்தப் பின்தங்கிய நாட்டில் மாபெரும் கம்யூனிஸ்ட் கட்சி நிறுவப்பெற்றுள்ளதோ அந் நாடானது 'இரும்புத் திரை'க்கு உள்ளே இருக்கின்ற நாடுகளிடமிருந்து அதிக உதவி பெறலாம். இம்மட்டோ! இரும்புத் திரைக்கு வெளியே உள்ள நாடுகளிடமிருந்தும் அதிக உதவி பெறலாம்!) வெளி நாட்டு உதவிகளை நிரந்தரமாக நம்பிக்கொண்டிருப்பது அறிவற்ற செயலாகும். மேலும், குறுங்காலத்தில் பட்ஜெட்டில் வரவுக்கும் செலவுக்கும் இடையே ஏற்படக்கூடிய பற்றுக்குறையைப் போதுமான அளவு அயல்நாட்டு உதவிபெற்று எஞ்ஞான்றும் நிரப்ப முடியும் என்று எதிர்பார்ப்பதும் வீணேயாகும்.

[1] இந்தியா, பிரேஸில், மெக்ஸிகோ ஆகிய மூன்று நாடுகட்குமட்டுமே முக்கியமாக உலக நாடுகள் உதவிபுரிய வேண்டும்; ஏனெனில், இந் நாடுகட்குமட்டுமே உதவி புரிந்துவந்தால் சீரிய பலன் கிட்டும்—என்று அண்மையில் ஷான்ஃபீல்டு அவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார். (A. Shonfield, 'The Attack on World Poverty', Chatto and Windus, London, 1960 ஐப் பார்க்கவும்.)

# 6. சட்ட நிருவாக முறைகள்

சட்ட நிருவாக முறைகளைப்பற்றி விளக்குவதற்குமுன் பொருளாதாரத் திட்டத்தால் (Economic Plan) ஏற்படக்கூடிய நன்மைகளையும் தீமைகளையும் விரிவான முறையில் விவாதிப்பதோடு பொருளாதாரத் திட்டத்தில் வரிக் கொள்கையின் பங்கு யாது என்பதைத் தீர்மானிக்கவேண்டுவது மிக அவசியமானதாகும். எனினும், பொருளாதாரத் திட்டத்தைப்பற்றியே விரிவாக விவாதிக்கத் தலைப்பட்டால் இதைவிடக் கவர்ச்சி குன்றிய ஆனால் தன்னளவில் பெரிதும் முக்கியத்துவம் உடைய நிதி முறையைப்பற்றியும் அதை எவ்வாறு சீர்திருத்துவது என்பதுகுறித்தும் நாம் விவாதிக்க வாய்ப்பே இல்லாதுபோக நேரலாம். எனினும், நம்முடைய விவாதத்திற்கு அடிப்படையாக அமையக்கூடிய பொருளாதாரத் திட்டத்தைப்பற்றி ஒன்றுமே கூறாமல் விடுத்து நிதி நிருவாகத்தில்மட்டும் கருத்தைச்செலுத்துவது மடமையாகும். எனவே, இவ் இருவிதமான போக்குக்கும் பொதுவான முறையில் முதற்கண் பொருளாதாரத் திட்டத்தைப்பற்றிச் சுருக்கமான முறையில் விளக்கம் கொடுத்துவிட்டு இதை அடுத்து இதன் அடிப்படையில் நிதி நிருவாக முறைகளைப்பற்றி விளக்கமாக விவாதிக்க முயலுவோம்.

### பொருளாதாரத் திட்டமிடுதல்

பொருளாதாரத் திட்டத்தின் பங்கு யாது? முன்னேற்றத் திட்டங்கள் எவ்வாறு தீட்டப்படுகின்றன? என்பவைகுறித்துப் பொதுவான முறையில் விளக்கம் தருவதென்பது எளிய செயலேயாகும். எனினும், பொருளாதாரத் திட்டமிடுதலைப்பற்றிய இரண்டு எல்லை நிலைக் கருத்துகள் (extreme views) உள்ளன. அவற்றை இங்கு விளக்கவேண்டுவது அவசியமாகும். முதலாவது கருத்து வருமாறு: அரசாங்கமானது தன்னுடைய அலுவல்களைக் கண்காணிப்பதுதான் விரும்பத்தக்கது. தம்முடைய நடவடிக்கைகட்குத் தேவைப்படக்

கூடிய வருவாய்க்கான ஏற்பாடுகளைச் செய்வதே அரசாங்கத்தின் முக்கியப் பணியாக இருக்கவேண்டும்; இவ்வாறு அமைந்துவிடாது அரசாங்கமானது நாடு முழுவதற்குமான முன்னேற்றத் திட்டத்தைத் தீட்டுவதில் தன்னை ஈடுபடுத்திக்கொள்வது விரும்பத்தக்கதன்று; அரசாங்கமானது குறைந்த அளவு நடவடிக்கைகளில்மட்டுமே ஈடுபடவேண்டும்; அந்தந்த ஆண்டிற்குரிய வருவாய், செலவு ஆகிய வற்றில்மட்டும் கருத்தைச் செலவிடுவது போதுமானதாகும்; வரப்போகின்ற ஆண்டுகட்கெல்லாம் முன்கூட்டியே திட்டமிட முனைவது அநாவசியமேயாகும் என்பதே முதலாவது கருத்தாகும். பொருளாதாரத் திட்டமிடுதல் தற்சமயம் உலகெங்கணும் பரவியுள்ள நிலையில் இக் கருத்துப் பலருக்கும் விநோதமானதாகத் தோன்றலாம். இதில் விநோதம் ஏதுமில்லை. **1930—39**-க்கு முன் உலகிலிருந்த ஜனநாயக அரசாங்கங்கள் இக் கருத்தின் அடிப்படையிலேயே செயலாற்றி வந்தன. இரண்டாவது உலகப் போருக்குமுன் பிரிட்டிஷ் பார்லிமென்டில் பட்ஜெட்டுகள் சமர்ப்பிக்கப்பட்டபோது நிதி அமைச்சர்கள் ஆற்றிய உரைகளை மேலெழுந்தவாரியாக நோக்கினாலேயே இவ் உண்மை நன்கு புலனாகும்.

இக் கருத்துக்கு முற்றிலும் மாறுபாடாக உள்ள இரண்டாவது கருத்தை இனிக் காண்போம். பொருளாதாரத் திட்டமிடுதல் மிகவும் இன்றியமையாததாகும். எதிர்காலம் எவ்வாறு அமைய வேண்டும் என்பதை மதிப்பீடு செய்து அதற்கான விரிவான திட்டத்தை உருவாக்க வேண்டும்; சமுதாயத்தின் இன்றியமையாத தேவைகளை நிறைவேற்றும் நோக்கத்தோடு நாட்டுப் பொருளாதாரத்தின் பல்வேறு துறைகட்குமான திட்டங்களை வகுத்துக் குறியீடுகளையும் (targets) நிறுவ வேண்டும்; இந் நோக்கங்கள் நிறைவேறுவதற்கு ஏதுவான முறையில் அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகளையும் தனியார் துறையின் பொருளாதார நடவடிக்கைகளையும் ஒழுங்குபடுத்தவேண்டும் என்பதே இரண்டாவது கருத்தின் சாராம்சமாகும். இக் கருத்தையே மிர்டால் அவர்கள் தமது புத்தகத்தில்[1] இவ்வாறு வெளியிட்டுள்ளார்:

> 'பின்தங்கிய நாடுகள் ஒவ்வொன்றும் தனக்கு என்று ஒரு தேசியப் பொருளாதார முன்னேற்றக் கொள்கையை வகுத்துக் கொண்டுள்ளது. இது இந் நாடுகளின் அரசாங்கக் கொள்கைகளில் பொதுவாக நேர்ந்துள்ள மாபெரும் மாற்றமாகும்' (பக்கம் 79).

[1] **'Economic Theory and Underdeveloped Regions' (Duckworth, London, 1957).**

'தேசியத் திட்டங்கட்கான அளவைகள் (பிரமாணங்கள்) யாவும் விலைவாசி முறைக்குப் (price system) புறம்பானவையேயாகும்' (பக்கம் 89).

ஒருமித்த கருத்துகளாக இருந்தால் விவாதத்திற்கு இடம் இருக்க முடியாது. ஆனால், நாம் மேலே கொடுத்துள்ள இரண்டு கருத்துகளும் இரண்டு துருவங்கள் எனலாம். எனவே, விவாதத்திற்குப் பஞ்சமே இல்லை!

இங்குக் குறித்துள்ள இரண்டு கருத்துகளுக்கும் இடைப்பட்ட நிலையில் உள்ள கருத்தை ஆதாரமாகக் கொண்டு, திட்டமிடுதல் சம்பந்தமாக எழக்கூடிய பெரும் பிரச்சினைகளை நாம் அணுக முயலுவோம். 'இப்பொழுது நிகழ்ந்துகொண்டிருக்கின்ற நிகழ்ச்சிகளை மட்டுமன்றி எதிர்காலத்தில் நிகழக்கூடிய நிகழ்ச்சிகளையும் கவனத்தில் கொண்டு இவற்றிற்கு ஏற்ப அரசாங்கமானது முன்கூட்டியே திட்டம் தீட்டவேண்டும் என்ற பொதுவான கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதேயாகும்.' இக் கருத்தை எதிர்ப்பது முறையானதன்று. ஏனெனில், தொழில் நிறுவனங்கள்கூட இதுபோன்ற திட்டத்தை வகுத்துவருகின்றன. நடைமுறை ஆண்டிற்கான வரவுசெலவுத் திட்டத்தைமட்டும் தயாரிப்பதோடு அமைந்துவிடாது எதிர்காலத்தில் நேரக்கூடிய மூலதனச் செலவுகள், வேறு பல செலவுகள் ஆகியவற்றிற்கான திட்டத்தை முன்கூட்டியே உருவாக்குகின்றன. தொழில் நிறுவனங்களே இவ்வாறு செய்யவேண்டி இருக்கும் போது, நெடுங்காலத்திலும் தொடரக்கூடிய பெரிய அளவினதான பொருளாதார நடவடிக்கைகளைச் செயல்படுத்த வேண்டியுள்ள அரசாங்கமானது திட்டமிட்டுச் செயலாற்றுவது தவறு என்று கூறுவது மடமையேயாகும்.

தன்னுடைய அன்றாட நடவடிக்கைகட்குத் தேவையான நிதிகட்குமட்டும் ஏற்பாடு செய்வதோடு அமைந்துவிடாது நாட்டுப் பொருளாதார வளர்ச்சியிலும் கருத்தைச் செலுத்தவேண்டியது அரசாங்கத்தின் கடமையாகும். இந்த நோக்கத்துடன் அரசாங்கமானது நாட்டிற்கான தேசியக் கணக்குகளைத் தயாரிக்கவேண்டும். நாட்டின் உற்பத்தி மட்டம், வருமான மட்டம், செலவு மட்டம், மொத்த நுகர்வு, முதலீடு ஆகிய பல விஷயங்களும் இந்தக் கணக்கில் இடம்பெற வேண்டும். கடந்த காலத்திற்கான புள்ளி விவரங்களையும் நிகழ்காலத்திற்கான புள்ளி விவரங்களையும் சேகரிப்பதோடு இவற்றின் அடிப்படையில் எதிர்காலத்திற்கான மதிப்பீடுகளை உருவாக்கவேண்டும். இவ்வாறு செய்வதானது, குறுங்காலத்தில் நாட்டில் பணவீக்கம் (inflation), பணச்சுருக்கம் (deflation),

ஆகியவை நேராமல் தடுப்பதற்கு ஏதுவாக இருக்கும். மேலும், நெடுங்கால வளர்ச்சிக்கு உறுதுணையாக அமையக்கூடிய நடவடிக்கைகளை எடுப்பதற்கு இது வசதியாக இருக்கும். இவை தவிர அரசாங்கக் கொள்கைகளை உருவாக்குவதற்கும் இது உறுதுணையாக அமையக்கூடும். உதாரணமாக, பொருள்கள், சேவைகள் ஆகியவற்றிற்கான தேவைகள் எதிர்காலத்தில் 4½ சதவீதம் அதிகமாகக் கூடும். ஆனால், இவற்றின் அளிப்பு எதிர்காலத்தில் 4 சதவீதமே அதிகரிக்கக்கூடும் என்று மதிப்பிடப்படும் பட்சத்தில், இதை ஓர் எச்சரிக்கையாகக் கொண்டு, எதிர்காலத்தில் நாட்டில் பணவீக்க நிலை உருவாகாது தடுக்குமுகத்தான் இவற்றின் நுகர்வைக் கட்டுப்படுத்துவதற்கான திட்டங்களை வகுக்க முடியும். அரசாங்கச் செலவுகளால் நெடுங்காலத்தில் நேரக்கூடிய விளைவுகள் யாவை என்று அறிந்துகொள்வதற்கு இம் மதிப்பீடு உறுதுணையாக அமையக் கூடியவையாகும். ஒரு குறிப்பிட்ட ஆண்டில் அரசாங்கம் செய்கின்ற செலவானது அதற்கு அடுத்த ஆண்டும் விளைவுகளை ஏற்படுத்தக்கூடியதேயாகும். எனவே, ஒரு குறிப்பிட்ட ஆண்டில் செய்யப்படுகின்ற செலவால் எதிர்காலத்தில் நேரக்கூடிய விளைவுகள் யாவை என்று கணக்கிடாது வரவுசெலவுத் திட்டத்தைத் தயாரிப்பதும் அதை அங்கீகாரம் செய்வதும் விரும்பத்தக்கதன்று. உதாரணமாக, நிகழ் காலத்திலுள்ள ஜனத்தொகையை மதிப்பிட்டு எதிர்காலத்தில் இருக்கக்கூடிய ஜனத்தொகையை மதிப்பிடாது தீட்டப்பட்டுள்ள சுகாதாரம், கல்வி ஆகியவற்றிற்கான திட்டங்கள், எதிர்காலத்தில் ஜனத்தொகை அதிகமாக நேரிட்டாலும், ஜனத்தொகைத் தொகுப்பானது—அதாவது, வயதின் அடிப்படையிலும் பாலின் அடிப்படையிலும் அமைந்திருக்கக்கூடிய தொகுப்பானது—மாறி அமைந்தாலும், பயனற்றவையாகிவிடக்கூடும். குறுங்காலத்தில் நேரக்கூடிய இதுபோன்ற மாற்றங்களை முன்கூட்டியே மதிப்பிட்டுக் கொள்வதென்பது சிரமமான காரியமேயன்று. எதிர்கால மாற்றங்கள்குறித்து அரசாங்கமானது முன்கூட்டியே மதிப்பிட்டுக் கொண்டால், தன்னுடைய நடவடிக்கைகளை விவேகத்துடன் ஒழுங்குபடுத்திக்கொள்ள முடியும். இவ்வாறான மதிப்பீடுகள் அரசாங்கத்திற்கு மட்டுமன்றி நாட்டிலுள்ள தொழில் அதிபர்களுக்கும் உறுதுணையாக அமையக்கூடும். எனவே, அரசாங்கமானது எதிர்காலத்திற்கான மதிப்பீடுகள் செய்து திட்டமிட்டுச் செயலாற்றவேண்டியது மிகவும் அவசியமானது என்று தோன்றுகிறது. எனினும், இம்முறையில் உள்ள சில இடர்ப்பாடுகளையும் நாம் அறியவேண்டியது அவசியமாகும். சில சமயங்களில் அரசாங்கத்தின் மதிப்பீடுகள் தவறானவையாக இருந்துவிடக்கூடும். சிறந்த பொருளாதாரப் புள்ளிவிவரத் தகவல் துறையை உடைய நாடுகள்கூட இதற்கு விதிவிலக்கல்ல. உதாரணமாக, இரண்டாம் உலகப்போர் முடிவடையும் தருவாயாக

இருந்த சமயம், அமெரிக்கத் தகவல் துறையானது, போர் முற்றுப் பெற்றபின் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படும் என்று தன்னுடைய ஊகத்தை அறிவித்தது. ஆனால், இது பொய்த்துவிட்டது. இது போல பல சமயங்களில் தவறான மதிப்பீடுகளை அமெரிக்கத் தகவல் துறை வெளியிட்டிருக்கின்றது. இங்கு நாம் கொடுத்துள்ள ஓர் எடுத்துக்காட்டே போதுமானதாகும் என்ற நோக்கத்தால் இவற்றை நாம் விளக்க முற்படவில்லை. பெரிதும் முன்னேறியுள்ள அமெரிக்காபோன்ற நாடுகளிலேயே நிலைமை இவ்வாறாக இருந்தால், பின்தங்கிய நாடுகளைப்பற்றி நாம் ஏதும் சொல்லாமலேயே விளங்கும். இந் நாடுகளில் தகவல் துறைகள் பின்தங்கிய நிலையிலேயே உள்ளன. இது நிற்க. பின்தங்கிய நாடுகளின் பொருளாதார அமைப்பு சிக்கல்களே அற்றது; எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய விதத்தில் உள்ளது; எனவே, இந் நாடுகளில் எதிர்காலத்தைப்பற்றி முன்கூட்டியே மதிப்பீடுகள் செய்வது மிகவும் எளிதானதேயாகும்—என்று சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர். இந் நாடுகளில் வெளிநாட்டு வாணிபத்தின் எதிர்காலப் போக்கைப் பற்றிய மதிப்பீடுகள் செய்வது எளிதல்ல (ஓரிரு பொருள்களின் ஏற்றுமதியைமட்டும் சார்ந்திருக்கக்கூடிய நாட்டில் இவ்வாறான மதிப்பீடுகள் செய்வது பெரிதும் சிரமமான ஒன்றாகும்) என்பது உண்மையேயாயினும், இந் நாடுகளின் பொருளாதார அமைப்பின் பெரும்பகுதி ஜீவன மட்ட அளவில் அமைந்துள்ளவையே யாகும்; இந்தப் பகுதிகளில் மாற்றங்கள் ஏதும் பெரிதாக நிகழ்வதில்லை; எனவே, இந் நாடுகளில் எதிர்காலத்தைப்பற்றிய மதிப்பீடுகள் செய்வது சாத்தியமேயாகும்—என்றும் இவர்கள் வாதாடுகின்றனர். எனினும், இக் கருத்தை ஏற்றுக்கொள்ள இயலாது. ஏனெனில், எந்த எடுகோள்களின் அடிப்படையில் இவர்கள் இக் கருத்தை விளக்கியுள்ளனரோ அவை தவறானவையாகும். உதாரணமாக, இந் நாடுகளில் —சிறப்பாக ஆப்பிரிக்க நாடுகளில்—உள்நாட்டு வாணிபம் எளிய முறையில் அமைந்துள்ள ஒன்று என்று கொள்வதற்கில்லை. இதில் பல சிக்கல்கள் உள்ளன. மேலும், பெரும்பாலான நாடுகளின் மொத்த வருமானத்தில் குறிப்பிடத்தக்க அளவு மாற்றங்கள் நேரவில்லை என்பது உண்மையேயாயினும், இந் நாடுகளில் வருமானமானது ஆண்டிற்கு ஆண்டு மாறிக்கொண்டிருக்கின்ற வீதமானது அதிகமாகவே உள்ளது.

எதிர்காலத்தைப்பற்றிய மதிப்பீடுகள் செய்வதில் அரசாங்கத் துறையினர்மட்டுமே தவறிழைக்கக்கூடியவர் என்று நாம் கருதுவதாக எண்ணிவிடலாகாது. தொழில் அதிபர்களின் மதிப்பீடுகளும் எஞ்ஞான்றும் பழுதற்றவை என்று கூறிவிட முடியாது. இங்கு நாம் கவனத்தில் கொள்ளவேண்டுவது கீழே குறித்துள்ள அடிப்படைக்

கருத்தையேயாகும். அதாவது, இவ் உலகில் எதையும் உறுதியாகக் கூறமுடிவதில்லை; எதிர்பாராத வகையில் பெரிதும் மாறக்கூடியது இவ் உலகம்; எனவே, எதிர்காலத்தைப்பற்றிய மதிப்பீடுகளை வேத வாக்காகக் கொள்ளக்கூடாது. நிகழ்காலத்தின் அடிப்படையில் எதிர்காலத்தைப்பற்றி ஒருவாறு அறிந்துகொள்வதற்காக மதிப்பீடு கள் செய்வதில் தவறேதும் இல்லை. ஆனால், இந்த மதிப்பீடுகள் பழுதற்றவை என்று கருதி எதிர்கால நடவடிக்கைகட்கு உறுதுணை யாக அமையக்கூடியவை என்று கொள்வது சரி என்று தோன்ற வில்லை. மேலும், பின்தங்கிய நாடுகளில் எதிர்காலத்திற்கான விரி வான திட்டம் தீட்டுவதானது சமுதாயத்தில் வறிய நிலையில் உள்ள மக்களின் கவனத்தை ஈர்க்கக்கூடிய ஒன்ருகும். எனவே, மக்களின் கவனத்தை ஈர்ப்பதையே முக்கியமாகக் கொண்டு தவருன மதிப் பீடுகள் செய்யாமல் கண்காணித்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும்.

அரசாங்க வருவாய், அரசாங்கச் செலவு, தேசிய வருவாய் போன்றவற்றை நடப்பு ஆண்டுக்கு மட்டுமன்றி அடுத்து வரக்கூடிய ஆண்டுகட்கும் மதிப்பீடு செய்யவேண்டியது அவசியமேயாகும். எனினும், மதிப்பீடு செய்யப்பட்ட புள்ளி விவரங்கள் நூற்றுக்கு நூறு சரியானவை என்று கொள்ளக்கூடாது—என்று இதுவரை நாம் விவாதித்தது, அரசாங்கமானது எந்த அடிப்படையில் எந்த அளவுக்கு என்னென்ன முறைகளைக் கையாண்டு நாட்டுப் பொரு ளாதார நடவடிக்கைகளில் தலையிட வேண்டும் என்பதை உணர்த்துகின்றது என்று எண்ணிவிடலாகாது. ஏனெனில், எந்த அளவுக்கு அரசாங்கம் பொருளாதார நடவடிக்கை களில் தலையிடுவது உசிதமானது (உதாரணமாக, தனியார் மூல தனம், நடப்புச் செலவு ஆகியவற்றை முழு அளவில் கட்டுப்படுத்த வேண்டுமா அல்லது இவற்றின் ஒருசிலவற்றை மட்டும் கட்டுப் படுத்தி ஏனையவற்றைக் கட்டுப்படுத்தாதிருக்க வேண்டுமா என்பன போன்றவற்றைத் தீர்மானிப்பது), எவ்வெம் முறைகளைக் கடைப் பிடித்தல் நலம் (உதாரணமாக, வரிமுறைகளையா அல்லது பண முறைகளையா அல்லது நேரடிக் கட்டுப்பாடுகளையா அல்லது அர சாங்கத் துறையை உருவாக்குவதன்மூலமா) என்பன போன்றவை பெரும்பாலும் அரசியல்வாதிகளாலேயே தீர்மானிக்கப்படுகின்றன.[1]

1 பெரிய திட்டங்கள் தீட்டி செயல்படுத்துவதால், நாட்டிலுள்ள மக்களின் ஆர்வம் கிளர்ந்தெழுவது, நாட்டிலுள்ள செல்வங்கள் முழுவதும் பயன்படுவதற் கான வாய்ப்பு ஏற்படுவது போன்ற பொருளாதார நன்மைகள் விளையக்கூடும் என்ற கூற்றைப் பேராசிரியர் பாயர் அவர்கள் வன்மையாக மறுத்துரைத்துள்ளார் கள். (P. T. Bauer, 'Indian Economic Policy and Development,' Allen and Unwin, London, 1961, pp. *99-102* ஐப் பார்க்கவும்.)

இவ்வாறு அரசியல்வாதிகள் தீர்மானிப்பதும் பொருளாதார அமைப்பைப்பற்றிய எதிர்காலத்திற்கான மதிப்பீடுகள் செய்வதும் கொள்கையளவில் வேறுபட்டவை என்பதை நாம் அறியவேண்டும். மேலும், மதிப்பீடுகள் செய்வதும் திட்டமிடுவதும் வெவ்வேறானவை என்ற போதிலும் சில சமயங்களில் இவை இரண்டிற்குமிடையேயுள்ள வேறுபாடுகள் மறைந்தொழிந்து இரண்டும் ஒன்றே என்று தோன்றுகிறது. மேலும், மதிப்பீடு செய்வது திட்டமிடுதலில் வந்து முடிவுறுகின்றது. இவ் விஷயங்கள் சர்ச்சைக்குரியவை என்ற எண்ணத்தில் இத்துடன் முடித்துக்கொண்டு மேலே செல்வோம்.

நிதிக் கட்டுப்பாட்டு முறையைப்பற்றி விரிவான முறையில் விவாதிக்கப் புகுமுன் மற்றும் ஒரு பொதுவான விஷயத்தைக் கவனிக்கவேண்டியுள்ளது. நாட்டுப் பொருளாதார நடவடிக்கைகளை ஊக்குவிப்பதில் நிதித்துறையின் பங்கு யாது? ஏனைய துறைகளின் பங்கு யாது? என்ற வினாவுக்கு நாம் விடையிறுக்க வேண்டியுள்ளது. சாதாரண காலங்களில் பிரிட்டனில் மதிப்பீடுகள் செய்வது, செலவுகளை ஒழுங்குபடுத்துவது, அரசாங்கத்தின் பொதுவான பொருளாதாரக் கொள்கையை உருவாக்குவது ஆகிய பல பணிகளை ஆற்றுவதன்மூலம் கஜானாவானது நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் பெரும் பங்கு வகித்துவருகின்றது. இவ்வாறன்றி, முதலாவது இரண்டாவது உலகப்போர் நடந்துகொண்டிருந்த காலங்களில் போர் முயற்சிகளைச் சீரியமுறையில் நிறைவேற்றுவதற்கு என்று உருவாக்கப்பட்டிருந்த துறைகளே இதுபோன்ற பணிகளில் ஈடுபடுத்தப்பட்டிருந்தன.[1] பின்தங்கிய நாடுகளில் இவ் இரு முறைகளில் எம் முறையைக் கைக்கொள்வது சாலச் சிறந்தது? என்பதை நாம் தீர்மானிக்க வேண்டும். முதல் முறை கடைப்பிடிக்கப்பட்டால் திட்டத்துறையைவிட (அல்லது வளர்ச்சி ஊக்கத்துறையைவிட) நிதித்துறையே ஆற்றலுடன் திகழக்கூடும். இரண்டாவது முறை கடைப்பிடிக்கப்பட்டால் நிதித்துறையைவிட திட்டத்துறையே ஆற்றலுடன் திகழக்கூடும். எனவே, முதல் முறை கடைப்பிடிக்கப்பட்டால் நிதிக் கட்டுப்பாடுகளும் முறைகளும் பெரிதும் முக்கியத்துவம் பெறும்; ஆனால், இரண்டாவது முறை கடைப்பிடிக்கப்பட்டால் நிதிக் கட்டுப்பாடுகளும் முறைகளும் இந்த அளவுக்கு முக்கியத்துவம் பெறும் என்று கொள்வதற்கில்லை.

1 நிதிஅமைச்சராக இருந்த திரு. லாயிட் ஜார்ஜ் 1915 ஆம் ஆண்டு இப் பதவியை விடுத்து யுத்த தளவாட அமைச்சராகப் பதவியேற்றார். ஆரம்பத்தில் இந்த அமைச்சில் இருவர் மட்டுமே பணிபுரிந்துவந்தனர். ஆனால், விரைவில் இத் துறையானது போர் முயற்சிகளைக் கண்காணித்துவந்த முக்கியத் துறையாக மாறியது.

நாம் மேலே எழுப்பியுள்ள வினவிற்கான விடையானது, அரசாங்கம் எந்த அளவுக்கு நாட்டுப் பொருளாதார நடவடிக்கைகளில் தலையிட்டு வருகின்றது என்பதையும் எவ்வெம் முறைகளைக் கையாண்டுவருகின்றது என்பதையும் பொறுத்ததாகும். அரசாங்கம், தன்னுடைய நடவடிக்கைகளை வரையறை செய்து கொண்டு, தனியார் துறையின் வளர்ச்சிக்குக் குந்தகமாக இருக்கக்கூடிய இடையூறுகளை அகற்றுவதில்மட்டும் ஈடுபட்டிருந்தால், நிதித்துறையே ஆற்றலுடன் விளங்கும் என்பதில் கிஞ்சித்தேனும் ஐயமில்லை. இவ்வாறன்றி நாடு முழுவதற்குமான பெரிய திட்டத்தையே வகுத்து அதைச் செயல்படுத்துவதில் அரசாங்கம் ஈடுபட்டிருந்தால் திட்டத்துறையே ஆற்றலுடன் விளங்கும். இவ் இரண்டு முறைகளிலும் இரண்டாவது முறையானது யுத்த காலங்களில் அரசாங்கம் கடைப்பிடிக்கக்கூடிய முறையினின்றும் வேறுபட்டதன்று என்று எண்ணிவிடலாகாது. யுத்தகாலங்களில் தீர்மானிக்கப்படவேண்டிய உற்பத்தி நோக்கங்கள் திட்டமிட்ட பொருளாதாரம் தீர்மானிக்கவேண்டியவற்றைவிட மிகவும் குறைவானவையேயாகும். தனிப்பட்ட நபர்களின்மீது யுத்த காலத்தில் எளிதில் கட்டுப்பாடுகளை விதித்துச் செயலாற்ற முடியும். ஆனால், சாதாரண காலங்களில் ஜனநாயக நாடுகளில் இது போன்ற கட்டுப்பாடுகளை எளிதில் விதித்துச் செயலாற்றிவிட முடியாது. யுத்த கால நடவடிக்கைகளும் கட்டுப்பாடுகளும் குறுகிய காலத்திற்குமட்டும் செயலாற்றப்படக்கூடியவை. ஆனால், வளர்ச்சித் திட்டத்தின்கீழ் வரக்கூடிய நடவடிக்கைகளும் கட்டுப்பாடுகளும் இத் தன்மையின என்று கூற முடியாது. மேலும், கடன்-குத்தகை முறை (Lend-Lease system) யுத்த காலத்தில் கடைப்பிடிக்கப்பட்டதால் அயல் நாட்டுக் கொடுப்பல்நிலையை ஒட்டி இடர்ப்பாடுகள் ஏதும் நேரவில்லை. ஆனால், சாதாரண காலங்களில் பொருளாதாரத் திட்டத்தின்கீழ் பொருளாதார வளர்ச்சியானது மெதுவாக படிப்படியாக நெடுங்காலத்தில் நேரக்கூடிய ஒன்றாகும். எனவே, நுகர்வுப் பொருள்கள்மீதும் தொழிலாளர்கள்மீதும் இறுக்கமான கட்டுப்பாடுகளை எளிதில் விதித்துவிட முடியாது. மேலும், யுத்தகாலத்தில் கையாளப்படுவதுபோன்ற முறைகளைக் கையாண்டு அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையை ஒட்டி நேரக்கூடிய இடர்ப்பாடுகளை அகற்றிவிட முடியாது. இந்திய நாட்டின் அண்மைக்கால அநுபவம் இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழுகிறது. எனவே, திட்டமிட்டுச் செயலாற்றிக் கொண்டிருக்கின்ற ஜனநாயக நாடுகள் நிதித்துறையையும் தங்கள் முயற்சிக்கு ஆதரவாக அமைத்துக்கொள்ள வேண்டும்; நிதித்துறை ஆற்றக்கூடிய பங்கை

இந் நாடுகள் குறைத்து மதிப்பிட்டுவிடலாகாது.[1] இது நிற்க; அரசாங்கச் செலவுக்கான திட்டங்களைத் தீட்டக்கூடிய அதிகாரம் உடைய இரு துறைகள் ஒன்றுக்கொன்று கட்டுப்படாமல் செயலாற்றிக்கொண்டிருக்குமேயாயின், நிருவாகரீதியாக, இதைவிட மோசமான நிலை வேறு இருக்க முடியாது. சில பின்தங்கிய நாடுகளில் இதுபோன்ற நிலையே ஏற்பட்டுள்ளது. இந் நாடுகளில் சாதாரண செலவினங்கள் வருவாய் ஆகியவற்றிற்காக பட்ஜெட் தயாரிக்கும் பணியில் நிதி அமைச்சர் ஈடுபடுகிறார். இதுதவிர, வளர்ச்சித் திட்ட அமைச்சர் பொருளாதார வளர்ச்சியைத் துரிதப் படுத்துவதற்கு ஆகக்கூடிய செலவினங்கட்காகத் தனியாகத் திட்டம் தீட்டுவதோடு வரித் திட்டங்களையும் உருவாக்குகிறார். இவ்வாறு இரண்டு துறைகள் இரண்டு பட்ஜெட்டுகள் தயாரிப்பது முறையானதல்ல. இம் முறைக்கு எதிராக உள்ள ஆட்சேபங்கள் வருமாறு. வரிமுறையைப் பொறுத்தவரையில் பொருளாதார அமைப்பை இரு கூறாகப் பிரிக்க முடியாது. ஒரே சேணத்தின்கீழ் ஒரே காலத்தில் இரண்டு குதிரைகளைப் பூட்டி சவாரி செய்ய முடியாததுபோல, பொருளாதார அமைப்பின்கீழ் வரிவிதிக்கும் ஆற்றலுடன் இருவேறு துறையினர் செயலாற்றுவது இயலாத தொன்றாகும். இவ் உண்மையைப் பிரிட்டன் இரண்டாம் உலகப் போருக்குப்பின் கசப்பான அநுபவத்தின் வாயிலாக உணர்ந்தது. **1947**ஆம் ஆண்டு நவம்பர் மாதம் சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் பொருளாதார விஷயங்களை ஒழுங்குசெய்யும் பொறுப்பை மேற்கொண்ட பின்தான் இதுபோன்ற பிரச்சினைக்கும் பிரிட்டனால் தீர்வுகாண முடிந்தது. பிரிட்டனைப்போல கசப்பான அநுபவத்திற்குப்பின் தான் பின்தங்கிய நாடுகள் இவ் உண்மையை உணரவேண்டும் என்பதில்லை. இவ்வாறான அநுபவம் நேருவதற்கு இடம் கொடாமலேயே இவ் உண்மையை இந் நாடுகள் உணரத் தலைப்படுவதே நலமானதாகும்.

பட்ஜெட் முறையில் எந்த நாட்டிலும் நான்கு படித்தரங்கள் உள்ளன. முதலாவது படி பட்ஜெட்டைத் தயாரிப்பதாகும். இந் நிலையில் வரப்போகின்ற ஆண்டிற்கான வருவாய், செலவு ஆகியவற்றிற்கான மதிப்பீடுகள் செய்யப்படுகின்றன. அரசாங்கத்தின் நிருவாகத் துறையே இப் பணியை முழுக்க முழுக்க ஆற்றவேண்டியுள்ளது. இரண்டாவது படி பட்ஜெட்டை அங்கீகரிப்பதாகும். இந்

[1] வேறு துறைகட்கான அமைச்சர்களைவிட நிதித்துறைக்கான அமைச்சர் நீண்ட காலம் சோவியத் ரஷ்யாவில் பதவியில் இருந்து வர முடிகின்றது. இந் நாட்டில் ஏனைய துறைகளைவிட நிதித் துறையானது பெரிதும் முக்கியத்துவம் அற்றது என்பதை இது சுட்டிக் காட்டுகின்றதுபோலும்.

நிலையில், சட்ட மன்றமானது பட்ஜெட்டை ஏற்றுக்கொள்ளலாம் அல்லது நிராகரித்துவிடலாம். மூன்ருவது படி பட்ஜெட்டைச் செயல் படுத்துவதாகும். இந் நிலையில், நிதி வசூல் செய்வதும் செலவினங் கட்குப் பணம் வழங்கப்பெறுவதும் நடைபெறுகின்றன. இப் பணி யானது பெரும்பாலும் நிருவாகத் துறையிலேயே ஆற்றப்பட்டு வருகின்றது. நான்காவது படி, செயல்படுத்தப்பட்ட பட்ஜெட்டை ஆய்வதாகும். இப் பொறுப்பானது ஓரளவுக்கு நிருவாகத் துறை யையும் ஓரளவுக்கு சட்டமன்றத்தையும் சார்ந்த ஒன்ருகும். இந்த நான்கு படிகளையும் ஒட்டி எழக்கூடிய முக்கியமான பிரச்சினைகள் சிலவற்றை இனி ஆராய்வோம்.

**பட்ஜெட் தயாரித்தல்**

மத்திய அரசாங்கத்திற்குப் பல இனங்களை ஒட்டி ஆகக்கூடிய செலவு, மற்றும் பல வழிகளிலும் கிடைக்கக்கூடிய வருவாய் ஆகிய வற்றிற்கான மதிப்பீடுகள் யாவற்றையும் ஒருங்கே தொகுத்து பட் ஜெட்டை உருவாக்கவேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும். இது மிகவும் எளிய செயல்தான் என்று தோன்றலாம். ஆனால், இவ் விதிக்கு ஏற்பப் பல நாடுகள் பட்ஜெட்டைத் தயாரிக்கத் தவறிவிடு கின்றன என்பதை நாம் அறியவேண்டும். சில நாடுகளின் பட் ஜெட்டில் அடங்கியிருக்கவேண்டிய எல்லா இனங்களும் முறை யாகவே உள்ளன; ஆனால், செலவுகள், வருவாய் ஆகியவை உதிரி யாகவும் துண்டுதுண்டாகவும் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளன (இவை சட்டமன்றத்தால் அங்கீகரிக்கவும் பெறுகின்றன); இவற்றை எந்த வகையிலும் ஒருங்கே இணைப்பதில்லை. வேறு சில நாடுகளில் செலவு இனங்களின்கீழ் வரவேண்டிய சில இனங்கள் பொது பட் ஜெட்டில் இடம் பெறுவதில்லை. இவற்றிற்காக குறிப்பிட்ட காரியங் கட்கென்று ஒதுக்கப்பட்டுள்ள வருவாய் பயன்படுத்தப்படுகின்றது. டிரினிடாட் நாட்டில் 1950—59-ன் முதற் பகுதியில் கோக்கோவுக்கு ஊக்கக் கொடை அளிக்கப்பட்டுவந்த முறையை இதற்கு உதாரண மாகக் கூறலாம். இரண்டாவது உலகப் போருக்கு முன் இருந்ததை விட இக் காலத்தில் கோக்கோவின் விலை பத்து மடங்கு அதிகரித் திருந்தபோதிலும், மற்றும் கான, நைஜீரியா போன்ற நாடுகள் கோக்கோ சாகுபடி செய்கின்ற விவசாயிகளின்மீது விதித்த வரி களின்மூலம் பெரும் வருவாய் ஈட்டிக்கொண்டிருந்தபோதிலும், டிரினிடாடில் நடந்தது என்ன தெரியுமா? கோக்கோ தொழிலுக்கு ஊக்கக் கொடையாகப் பல மில்லியன் டாலர்கள் அளிக்கப்பட்டு வந்தது. ஏன் இந்த நிலை? என்ற வினு எழுவது இயற்கையே. முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலையின்கீழ் 20 ஆண்டுகட்கு முன் டிரினி டாடில் இத் தொழிலை ஊக்குவிக்குமுகத்தான் ஒரு விசேஷ நிதி உரு வாக்கப்பட்டிருந்தது. (ஏற்றுமதி வரி குதிரைப் பந்தய வரி போன்ற

வற்றின்மூலம் கிடைத்த வருவாயினின்றும் இந் நிதி உருவாக்கப்பட்டிருந்தது.) இவ்வாறு பட்ஜெட்டிற்குப் புறம்பாக ஒரு நிதி உருவாக்கப்பட்டிருந்தமையால் முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலையிலும் கோக்கோவுக்கு ஊக்கக் கொடை வழங்கவேண்டி நேர்ந்தது.

ஒருங்கே இணைக்கப்பட்டதும் எல்லா விஷயங்களும் உள் அடங்கியுள்ளதுமான பட்ஜெட் தயாரிக்கப்படவேண்டுவது மிக அவசியம் என்ற கருத்துக்கு ஆக்கம் தேடும் வகையில் நாம் மேலே கொடுத்துள்ள உதாரணம் அமைந்துள்ளது என்று கூறலாம். இம் முறையில் பட்ஜெட்டைத் தயாரிக்கத் தவறினல், ஒரே தன்மைத்தான பட்ஜெட்டுக் கொள்கையைக் கடைப்பிடிக்க முடியாது போகலாம். நாட்டின் பொதுவான பட்ஜெட்டின்கீழ் ஒருசில வருவாய்கள் காட்டப்படாது இவற்றைச் சில குறிப்பிட்ட செலவினங்கட்கு என்று ஒதுக்கிவிட்டால் பல குறைகள் நேரக்கூடும். உதாரணமாக, ஓர் இனத்திற்கான செலவை மற்ருேர் இனத்திற்கான செலவோடு ஒப்பிட்டு எடைபோட முடியாது. அதாவது, எந்த இனத்திற்கான செலவுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது, எந்த இனத்திற்கு ஓரளவு முக்கியத்துவம் கொடுப்பது என்று தீர்மானிக்க இயலாது போகலாம். மேலும், குறிப்பிட்ட காரியங்கட்கென்று ஒதுக்கப்பட்டுள்ள வருவாய்கள் சிறந்த பயனை விளைவிக்கக்கூடிய வகையில் செலவிடப்பெறும் என்று கொள்வதற்கில்லை. இதுபோன்ற சீர்கேடுகளைத் தவிர்க்கும் நோக்கத்தோடு ஒருங்கே இணைக்கப்பட்டதும் எல்லா விஷயங்களும் உள்ளே அடங்கியுள்ளதுமான பட்ஜெட் தயாரிக்கப்பட வேண்டியது மிக அவசியமாகும். அதாவது, வருவாயைக் கூட்டு மொத்தமாகக் காட்டக்கூடியதும், துண்டுதுண்டாகச் செலவு இனங்களைக் காட்டாது ஒருங்கிணைக்கப்பட்ட செலவினங்களை மொத்தமாகக் காட்டக்கூடியதாகவும் பட்ஜெட் தயாரிக்கப்பெற வேண்டும். மேலும், குறிப்பிட்ட செலவினங்கட்குக் குறிப்பிட்ட வருவாய் ஈடுகட்டக்கூடிய வகையில் பட்ஜெட் தயாரிப்பது விரும்பத்தக்கதன்று.[1]

[1] அரசாங்கச் செலவுகளையும் அரசாங்க வருவாய்களையும் ஏககாலத்தில் மதிப்பிடவேண்டும் என்று கூறிவிட்டு சில செலவினங்கட்காக சில வருவாய்களை ஒதுக்குவது சிறந்தது என்று J.M.Buchanan தம்முடைய 'The Public Finances,' (Irwin Homewood, Illionois, 1960) என்ற புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ஏககாலத்தில் செலவுகளையும் வருவாய்களையும் மதிப்பிடவேண்டியுள்ளதால் சில வருவாய்களைச் சில செலவுகட்கென்றுஒதுக்க வேண்டிய கட்டாயம் நேரக்கூடும் என்று கூறுவதற்கில்லை. உதாரணமாக, கல்விக்கென்று அரசாங்கம் அதிகப் பணம் செலவிடத் தீர்மானித்திருப்பதை ஒட்டி, கல்விச் செலவுகட்கென்று தனியே ஒரு நிதியை உருவாக்கிப் பயன்படுத்தவேண்டிய அவசியம் ஏதுமின்றி, அரசாங்கமானது வருமான வரியினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயை அதிகரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யலாம்.

நாம் மேலே விளக்கியுள்ள விதிக்கு ஒரு விலக்கு உள்ளது. அரசாங்கமானது வர்த்தகரீதியான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்குமேயாயின் இவற்றிற்கென்று தனியே கணக்குகள் தயாரிப்பது மிகவும் அவசியமாகும். இவ்வாறு செய்தால், வர்த்தக நிறுவனங்கள் கடைப்பிடித்து வருகின்ற கணக்கீட்டு முறையைக் கடைப்பிடிக்க முடிவதோடு, அரசாங்கத்துறைத் தொழில் நிறுவனங்களின் இலாபத்தையோ அல்லது நஷ்டத்தையோ யாவரும் அறியுமாறு செய்ய முடியும். இது நிற்க, அரசாங்கத்தின் நிருவாகத் துறைகள் பல வர்த்தக நடவடிக்கைகளை ஒத்த பணிகளைப் புரிந்துவருவதோடு இவற்றிற்கென்று கட்டணமும் விதித்துவருகின்றன. நிதித்துறை நாட்டிற்கென்று பொதுவாகத் தயாரிக்கின்ற பட்ஜெட்டின் கீழ் இந்த வருவாயைக் கொண்டுவருவதைவிட, இவ்வாருன கட்டணம் விதித்துவருகின்ற துறைகள் பெற்றுவரக்கூடிய வருவாயை இத் துறைகளே வைத்துக்கொள்ளுமாறு அநுமதித்து அவை இவ்வாறு பெற்று வரக்கூடிய வருவாய்க்கு ஏற்ப பொது பட்ஜெட்டில் இத் துறைகட்கென்று ஒதுக்கப்படுகின்ற தொகையைக் குறைத்துக் கொள்ளலாம்.

ஒருங்கிணைக்கப்பட்ட எல்லா விஷயங்களும் அடங்கிய பட்ஜெட்டைத் தயாரிக்க வேண்டுவது அவசியமே என்று வைத்துக்கொண்டால், இவ்வாருன பட்ஜெட் எவ் வடிவம் பெறவேண்டும் என்ற வினு எழுகின்றது. மூலதனச் செலவானது நடைமுறைச் செலவினின்றும் வேறுபடுத்தப்பட்டு இவை இரண்டும் தனித்தனியே காட்டப்பெற வேண்டுமா? என்ற வினுவே பின்தங்கிய நாடுகளைப் பொறுத்தவரையில் பெரும் பிரச்சினையாக உள்ளது. இம் முக்கிய பிரச்சினை தவிர வேறு பல பிரச்சினைகளும் உள்ளன. செலவிடும் காரியங்களின் அடிப்படையில் செலவுகளை வகைப்படுத்தவேண்டுமா? அல்லது செலவிடும் பல அரசாங்கத் துறைகளின் அடிப்படையில் வகைப்படுத்த வேண்டுமா? என்பது ஒரு பிரச்சினையாகும். வருவாய் எவ்வாறு வகைப்படுத்தப்பட வேண்டும்? தனியார் சேமிப்பினின்றும் வந்த வருவாய் என்ற அடிப்படையிலா? அல்லது தனியார் நுகர்வைக் குறைத்துவந்த வருவாய் என்ற அடிப்படையிலா? அல்லது வேறு எந்த அடிப்படையில் வருவாயை வகைசெய்வது? என்பது மற்ருெரு பிரச்சினையாகும். தவருன அடிப்படையில் வருவாயையும் செலவையும் வகைப்படுத்தியுள்ள சில நாடுகளின் பட்ஜெட்டை நாம் ஆராய்ந்தால் எது சரியான முறை என்பது தெளிவாகிக்கொண்டுவரும். முன்பு பிரிட்டனின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த நாடுகளிலும் தற்சமயம் உட்பட்டுள்ள நாடுகளிலும் செலவுகளை சாதாரண பட்ஜெட், வளர்ச்சித் திட்ட பட்ஜெட் என்று இரு பெரும் பிரிவாக வகுத்து வருகின்றனர். வளர்ச்சித் திட்டங்கட்கான செலவை

நிதித்துறை கணக்கிடாது வளர்ச்சித் திட்டத்திற்குப் பொறுப்பான துறை கணக்கிடுகின்றது. இவ்வாறு செயற்கையான வகையில் செலவுகளை இந் நாடுகள் இரு பெரும் பிரிவுகளாக வகைப்படுத்திவருவது அறிவுடைய செயல் என்று தோன்றவில்லை. மேலும், இவ்வாறு செய்வதானது, சாதாரணச் செலவானது நாட்டின் வளர்ச்சிக்கென்று ஏதும் செய்ய இயலாது; வளர்ச்சித் திட்டங்கட்கான செலவு யாவும் நாட்டின் வளர்ச்சிக்கு உதவக்கூடியவை என்று பொருள்படும்.[1] இது தவறாகும்; இதை ஏற்றுக்கொள்வதற்கில்லை. வேறு ஒரு தவற்றினையும் பின்தங்கிய நாடுகள் செய்து வருகின்றன. இவை மூலதனச் செலவுகளை வருவாய் ஈட்டப்படுகின்ற பல மார்க்கங்களின் அடிப்படையில் பலவாறு வேறுபடுத்திக் காட்டிவருகின்றன. உதாரணமாக, மூலதனச் செலவானது மானியங்களின் உதவியால் செய்யப்படுகின்றதா அல்லது கடன்மூலம் எழுப்பப்பட்ட பணத்தின்மூலம் செய்யப்படுகின்றதா அல்லது உபரி வருவாயினின்றும் செய்யப்படுகின்றதா என்ற அடிப்படையில் இந் நாடுகள் மூலதனச் செலவைப் பாகுபடுத்தி ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாததுபோலக் காட்டிவருகின்றன. கடன்களின்மூலம் திரட்டப்பட்ட பணத்தை மூலதனச் செலவுக்குப் பயன்படுத்தாவிடில் இக் கடனுக்குச் செலுத்தவேண்டிய வட்டியை எவ்வாறு ஈட்ட முடியும் என்ற அடிப்படையில் தொழில் நிறுவனங்கள் செய்துவருவதுபோல அரசாங்கமும் மூலதனச் செலவுக்கென்று கடன் தொகையானது பயன்படுத்தப்பட்டு வருவதாகக் காட்டிவருகின்றது. இது தவறான கருத்தாகும். அரசாங்கமானது கடன் மூலம் திரட்டியுள்ள பணத்திற்குக் கொடுக்கவேண்டிய வட்டியானது அரசாங்கத்தின் வரிவிதிக்கக்கூடிய ஆற்றலைப் பொறுத்ததேயன்றி அக் கடன் தொகையைக் கொண்டு செய்யப்பட்டுள்ள குறிப்பிட்ட முதலீட்டிலிருந்து கிடைக்கக்கூடிய இலாபத்தைப் பொறுத்ததன்று. 'தேசிய வருவாய் அதிகரித்துக்கொண்டே இருக்கும்; இதன் விளைவாகக் கடன்கட்கான வட்டித் தொகையை அரசாங்கமானது எளிதில் செலுத்திவிட முடியும்; மேலும், கடன்தீர் நிதி அமைப்பு (amortisation) முறையைக் கடைப்பிடிக்க முடியும்' என்று பிறர் எண்ணுமாறு தன்னுடைய நடவடிக்கைகளை அரசாங்கமானது ஒழுங்குபடுத்தினால், அரசாங்கக் கடன் எழுப்புவதற்கு, சிறப்பாக வெளிநாட்டுக் கடன் எழுப்புவதற்கு மிகவும் வாய்ப்பான சூழ்நிலை உருவாகும் என்பதில் ஐயமில்லை. இவ்வாறான சூழ்நிலை உருவாக்குவதற்கு நாம் மேலே கண்ட அர்த்தமற்ற கணக்கீட்டு முறைகளைக்

1 'பொருளாதார முன்னேற்றமும் முன்னேற்றத் திட்டமும் ஒரே பொருளை உணர்த்தக்கூடிய இரு சொற்றொடர்கள் என்று பலரும் பயன்படுத்திவருவது தவறாகும்,' என்று P. T. Bauer, 'Indian Economic Policy and Development' என்ற தம்முடைய புத்தகத்தில் கூறியுள்ளார்.

க்கையாளவேண்டிய அவசியம் ஏதுமில்லை. இதேபோல அரசாங்க முதலீடுகளின் நிகர மதிப்பில் நேர்ந்துள்ள மாற்றங்களை உணர்த்தும் வகையில் மூலதன பட்ஜெட்டுகள் உருவாக்கப்பட வேண்டும் என்ற கருத்தும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று.[1]

பட்ஜெட் கொள்கையை உருவாக்குவதற்கும் அதை நிருவகித்து வருவதற்கும் அரசாங்கத்திற்கு உறுதுணையாக அமையக்கூடுமாயின் மூலதன பட்ஜெட்டைத் தனியாக உருவாக்குவதில் தவறொன்றும் இல்லை. இவ்வாறே அரசாங்கச் செலவு, வருவாய் ஆகியவை வகைப்படுத்தப்படுகின்ற முறையும் அரசாங்கத்தின் கொள்கைக்கு ஆக்கம் தரும் வகையில் அமைதல் வேண்டும். இது நிற்க, பொதுத் துறைகள்[2] பலவற்றில் வர்த்தகரீதியில் செலவுகளை, மூலதனச் செலவு (தேய்மானத் தள்ளுபடிகட்கான வசதிகளுடன்) என்றும் நடைமுறைச் செலவென்றும் பாகுபாடு செய்வதால் பயன் ஏதும் விளையக் கூடும் என்று தோன்றவில்லை. உதாரணமாக, பள்ளிக்கூடக் கட்டிடங்கள் கட்டுவதற்கு ஆகின்ற செலவுகளைமட்டும் மூலதன ஆக்கத்திற்கு (capital formation) உறுதுணையாக இருக்கக்கூடியவை என்று கணக்கிட்டுக்கொண்டு ஆசிரியர்கட்கு அளிக்கப்படுகின்ற ஊதியத்தை அவ்வாறு கணக்கிடாததுகுறித்து யாரும் இதுவரை திருப்திகரமான விளக்கம் தந்துள்ளதாகத் தெரியவில்லை. இதே போல வெஸ்ட்மினிஸ்டரிலுள்ள பாராளுமன்றக் கட்டடங்கட்கான தேய்மானத் தள்ளுபடிகளை எந்த அடிப்படையில் வழங்கவேண்டும் என்பதுகுறித்து இதுவரை யாரும் திருப்திகரமான விளக்கம் தந்துள்ளதாகத் தெரியவில்லை. ஒரு குறிப்பிட்ட அரசாங்கத்தின் மூலதனச் செலவு எவ்வளவு என்று அறிந்துகொள்ள வேண்டுவது இன்றியமையாததுதான் என்றாலும், அரசாங்கத்தின் மூலதனச் செலவை நடைமுறைச் செலவினின்றும் முற்றிலும் வேறுபடுத்திக் கணக்கிட்டுக் காட்டவேண்டும் என்று கூறுவது பொருந்தாது. இவ்வாறு முற்றிலும் வேறுபடுத்திக் கணக்கிட்டுக் காட்டும்போது, ஜடப் பொருள் முதல் ஆக்கத்திற்கும் (physical capital formation) கடன்கட்கும் இடையேயுள்ள வித்தியாசங்கள் விளக்கமுற்றால் பாதகம் ஒன்றுமில்லை. ஆனால், இவ்வாறு செய்வதை ஒட்டி இவ் இரண்டுக்கும் இடையேயுள்ள வேறுபாடு மறைந்தொழிய நேர்ந்தால்

[1] R. A. Musgrave, 'The Theory of Public Finance' (McGraw-Hill, New York 1959) p. 562ஐப் பார்க்கவும்.

[2] அரசாங்க வர்த்தக நிறுவனங்களின் வரவுசெலவுக் கணக்கை, அரசாங்கத்தின் பொதுவான வரவுசெலவுக் கணக்கில் நாம் உட்படுத்தவில்லை என்பதை மறந்துவிடலாகாது.

(உதாரணமாக, நைஜீரியக் கூட்டாட்சியின் கணக்குகளில் இவ்வாறு நேர்ந்துள்ளது என்று தோன்றுகின்றது) விளையக்கூடிய பயன் யாது என்பது தெளிவாகவில்லை.

வருவாய், செலவு ஆகியவற்றை எவ்வாறு வகைப்படுத்துவது என்று தீர்மானிக்கும்போதும் மேலே நாம் விளக்கியுள்ள கொள்கைகளைக் கடைப்பிடிப்பதே சிறந்தது என்று தோன்றுகின்றது. உதாரணமாக, தன்னுடைய கொள்கையை உருவாக்குவதற்கு, நாட்டிலுள்ள தொழில்கட்கு இடையேயுள்ள உறவுகளைப்பற்றிய செய்திகளை விரிவான முறையில் அறியவேண்டுவது அவசியமானது என்று அரசாங்கம் கருதினுல், நாட்டில் முக்கியமான பொருள்களை உற்பத்தி செய்துவருகின்ற தொழில்கட்காகத் தான் எவ்வளவு செலவு செய்துவருகின்றது என்று அரசாங்கம் தெரிவிக்கவேண்டியது அவசியமாகும். தனியார்துறையினர் தங்கள் வரவுகளையும் செலுத்தினங்களையும் அவை வருமான பேரங்களை ஒட்டி எழுந்தவையா அல்லது மூலதன பேரங்களை ஒட்டி எழுந்தவையா என்று பாகுபாடு செய்து காட்டுவதற்கு மாறுபாடாக, அரசாங்கமானது தேசிய கணக்கீட்டு முறையைக் கைக்கொள்ள வேண்டுமா அல்லது வேறு முறையைக் கைக்கொள்ள வேண்டுமா என்ற விஷயம் நாட்டில் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்ற பார்லிமென்ட் கட்டுப்பாட்டு முறையைப் பொறுத்த ஒன்றுகும். உதாரணமாக, ஒரு நிதி ஆண்டு முடிவுற்றதும் அந்த ஆண்டின் நிதி நடவடிக்கைகளால் நேர்ந்துள்ள விளைவுகள் யாவை என்று சட்டமன்றம் அறிய விரும்பினுல், ரொக்கக் கணக்கீட்டு முறையையே (cash accounting system) (வழக்கமான வர்த்தகக் கணக்கிட்டு முறைக்கு மாருக) கடைப்பிடிக்க வேண்டியது அவசியமாகும். அந்தந்த நாடுகளில் நிலவிவருகின்ற சூழ்நிலையைப் பொறுத்தே இதுபோன்ற வினுக்கட்கான விடைகள் அமையும்.[1]

ஒவ்வோர் ஆண்டிற்கும் ஒவ்வொரு பட்ஜெட் தயாரிக்கப்பட வேண்டுமா இல்லையா என்பதை நாம் அடுத்து ஆராயவேண்டும். ஒவ்வோர் ஆண்டிற்கும் ஒவ்வொரு பட்ஜெட் தயாரிக்கவேண்டும் என்று கருதினுல், ஓராண்டுக் காலத்திற்குமேல் நீடித்துச் செல்லக் கூடிய செலவினங்களை எவ்வாறு கணக்கிடுவது? என்ற வினு எழுவது இயற்கையே. இது சிக்கலான விஷயமேயாகும். எந்த

[1] அயல்நாட்டு உதவி அளித்து வருகின்ற நாடுகள் தாம் அளித்துள்ள நன்கொடைகளைத் (gifts) தனிக் கணக்காகக் காட்டவேண்டும் என்று வற்புறுத்தினுல் உதவி பெற்றுள்ள நாடானது இவ்வாறு செய்வதைத் தவிர வேறு வழியில்லை. ஆனுல், இவ்வாறு செய்வதானது பட்ஜெட்டைப் பொறுத்தவரையில் சாதகமான தொன்று என்று கொள்வதற்கில்லை.

நாடும் இப் பிரச்சினைக்குத் திருப்திகரமான தீர்வு கண்டுள்ளது என்று தோன்றவில்லை.[1] ஒருவகைச் செலவுக்குப் பொருந்தக்கூடிய கால வரையறை பிறிதொரு வகைச் செலவுக்கும் பொருந்தக்கூடும் என்று கொள்வதற்கில்லை. எனவே, இப் பிரச்சினைக்குத் திருப்திகரமான பொதுவான தீர்வுகாண முடிவதில்லை. எல்லா விஷயங்களையும் தீர்க்கமாக ஆராய்ந்து பார்க்கும்போது, நெடுங்காலச் செலவுத் திட்டங்களை ஆரம்ப காலத்தில் மிகவும் விழிப்புடன் ஆராய்ந்து ஆகக்கூடிய காலத்தை வரையறை செய்துகொண்டு பின் ஆண்டுதோறும் முறைப்படி பட்ஜெட்டில் கணக்கிட்டுக்கொள்வதே இதற்குச் சிறந்ததொரு தீர்வாகத் தோன்றுகிறது. எனினும், 'சொல்வது எளிது, ஆனால், செய்வது கடினம்' என்ற மொழி இக் கருத்துக்கும் பொருத்தம் உடையது என்பதை நாம் உணரவேண்டும்.

பட்ஜெட்டைத் தயாரிக்கும்பொழுது மதிப்பீடுகள் பெரிதும் குறைவானவைகளாகவோ அல்லது பெரிதும் அதிகமானவைகளாகவோ அமைந்துவிடாமல் கண்காணித்துக்கொள்ள வேண்டுவது மிகவும் அவசியமாகும். கரிபியப் பிரதேசத்திலுள்ள[2] 13 பிரிட்டிஷ் காலனிகளில் இருபத்து நான்கு ஆண்டுகட்கான பட்ஜெட்டில் செய்யப்பட்டிருந்த நிதி மதிப்பீடுகள் பெரிதும் குறைபாடுகள் உடையவையாக இருந்தன என்று அப் பிரதேசத்தில் நடத்தப்பெற்ற ஆராய்ச்சி ஒன்று சுட்டிக்காட்டுகின்றது. செலவை மட்டுமன்றி வருவாயையும் இந் நாடுகள் குறைத்து மதிப்பிட்டுள்ளன என்றும் செலவைவிட வருவாயையே இவை பெரிதும் குறைவாக மதிப்பிட்டுள்ளன என்றும் அந்த ஆராய்ச்சி கூறுகின்றது. பிரிட்டனில்,[3] மேலே குறிப்பிட்டுள்ள நாடுகளைப்பற்றி ஆராய்ந்த காலத்தில்லாது வேறு ஒரு காலத்தில், மதிப்பீடு செய்யப்பட்டிருந்த வருவாயானது, இக் காலனி நாடுகளில் இருந்ததைப்போலல்லாது, உண்மையில் கிட்டிய வருவாயைப் பெரிதும் ஒட்டியே இருந்தது; இவ்வாறே மதிப்பீடு செய்யப்பட்ட செலவுகள் உண்மையில் செய்யப்பட்ட செலவுகளைப் பெரிதும் ஒட்டியே இருந்தன. எனினும், பிரிட்டிஷ் பட்ஜெட்டுகள் வேலை நிறைவு (full employment) எய்துவதைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தன என்பதையும், இந் நிலை எய்துவதற்கு வேலையற்றிருந்தோர் 1·5 சதவீதத்திலிருந்து 2 சத

[1] அமெரிக்கா பிரிட்டன் ஆகிய நாடுகள் கடைப்பிடித்துவருகின்ற முறைகளை கீழே கொடுத்துள்ள புத்தகம் ஒப்பிட்டு நோக்கி விளக்கியுள்ளது: S. H. Beer, 'Treasury Control' (Oxford University Press, 1956) Ch. II.

[2] இவ்வத்தியாயத்திற்கான பிற்சேர்க்கை I ஐப் பார்க்கவும்.

[3] A. R. Prest, 'Errors in Budgeting in the U.K', 'British Tax Review' (Jan-Feb. 1961) ஐப் பார்க்கவும்.

வீதத்திற்கு அதிகமாகாமல் இருக்கவேண்டும் என்பதையும், ஆனால் இந் நிலையைப் பிரிட்டன் அடையத் தவறியது என்பதையும், எனவே பிரிட்டிஷ் பட்ஜெட்டுகளின் மதிப்பீடுகளில் நேர்ந்திருந்த குறைபாடுகள் குறிப்பிடத்தக்கவை அல்ல என்று சொல்வதற்கில்லை என்பதையும் நாம் அறியவேண்டும். இத்தன்மைத்தான பிரமாணங்களின் அடிப்படையில் தற்சமயம் பின்தங்கிய நாடுகளின் பட்ஜெட்டுகளை எடைபோடுவது முறையாகாது. எனினும், பெரிதும் குறைபாடுகளை உடைய மதிப்பீடுகளின் அடிப்படையில் எந்த ஓர் அரசாங்கமும் தன்னுடைய பொருளாதாரக் கொள்கையை வெற்றிகரமாக செயல்படுத்த முடியாது என்பதை நாம் அறிய வேண்டும். முறைகள் ஆராய்ச்சி (systems analysis), சாதனைமுறை பட்ஜெட் (performance budgeting) ஆகிய முறைகள் பிரபலமாகிப் பெரிதும் பயன்படுத்தப்பட்டால் மதிப்பீடு செய்யும் முறையில் படிப்படியான முன்னேற்றம் காண இயலும் என்று தோன்றுகிறது.

## பட்ஜெட் அங்கீகாரம்

பட்ஜெட் எவ்வாறு அங்கீகாரம் பெறுகின்றது என்பதுகுறித்து விரிவான முறையில் விவாதிக்கவேண்டுவதில்லை. ஒருங்கிணைக்கப்பட்ட எல்லா விஷயங்களும் உள்ளடங்கிய ஒரு பட்டியலாகப் பட்ஜெட் திகழ்ந்தால், சட்டசபையானது பட்ஜெட் சமர்ப்பித்துள்ள திட்டங்களின்மீதே பெரிதும் விவாதங்களை நடத்தும்; இல்லையேல் விவாதங்கள் இவ்வாறு அமையக்கூடும் என்று சொல்வதற்கில்லை. பட்ஜெட்டின்மீது பார்லிமென்டில் சிறந்த முறையில் விவாதம் நடக்க வேண்டியது இன்றியமையாததாகும். பட்ஜெட்டைத் தீர்க்கமாக விவாதிக்காது பார்லிமென்டானது அதை அங்கீகாரம் செய்யக் கூடாது. இதேபோல, பட்ஜெட் சமர்ப்பித்துள்ள திட்டங்களை முற்றிலுமாகப் பார்லிமென்டானது நிராகரித்துவிடவும் கூடாது. முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் இப் பிரச்சினைகளைத் திருப்திகரமான முறையில் தீர்த்துவைத்துள்ளன என்று சொல்வதற்கில்லை. அண்மையில் பெரிதும் விவாதம் ஏதுமின்றியே பட்ஜெட்டிற்கு பிரிட்டிஷ் பார்லிமென்டானது அங்கீகாரம் அளித்துவருகின்றது. அமெரிக்காவில் இதற்கு நேர்மாறாக நடந்துவருகின்றது; அதாவது, பட்ஜெட் சமர்ப்பிக்கின்ற திட்டங்கள் உருத்தெரியாமல் மாற்றப்படுகின்றன. இந்த இரண்டு நிலைகட்கும் இடைப்பட்ட நிலை உருவாக வேண்டுவது விரும்பத்தக்கதாகும். அதாவது, பட்ஜெட்டைப் பொதுவான முறையில் விரிவாகச் சட்டமன்றம் விவாதிப்பதும் கமிட்டிகள் பட்ஜெட் தந்துள்ள மதிப்பீடுகளைத் தீர்க்கமாக ஆராய்வதும் மிகச் சிறந்த முறையாகும். எனினும், இம் முறையைக் கைக்கொள்ளும் விதம் நாட்டிற்கு நாடு வேறுபடக்கூடும்.

வருவாய்க்கான சட்டம் வகுக்கும்போது கவனக்குறைவாக விதிகளைத் தயாரிப்பதும் ஆராய்ச்சி இன்றி அயல்நாட்டுச் சட்டத்தை அப்படியே கைக்கொள்ள முயலுவதும் பயனற்றது என்று சொல்வதைவிட மட்டமானது என்று கூறுவதே பொருந்தும்.

## பட்ஜெட்டைச் செயல்படுத்துதல்

இத் தலைப்பின்கீழ் பல விஷயங்களை விவாதிக்கவேண்டியுள்ளது. முதற்கண் வருவாய் குறித்து விளக்கம் காண்போம். வரிவசூல் செய்வதற்கான ஏற்பாடுகள் மிகச்சிறந்த முறையில் அமைந்திருக்கவேண்டுவது மிக அவசியமாகும். வரி கொடாது தப்பிக்க இயலாத வகையில் ஏற்பாடுகள் அமைந்திருக்கவேண்டும்; வரி கொடுக்கவேண்டியவர்கள் சரியான தொகையைக் கொடுப்பதற்கான ஏற்பாடுகள் இருக்கவேண்டும்; மேலும், இந்தச் சரியான தொகையானது குறைவுருமல் கஜானுவைச் சென்றடைவதற்கான ஏற்பாடுகளும் இருக்கவேண்டும். வரிவசூல் முறைபற்றி அண்மையில் திரு. கால்டார்[1] அவர்கள் தம்முடைய 'இந்திய வரிமுறைச் சீர்திருத்தம்' என்ற புத்தகத்தில் கொடுத்துள்ள கருத்துகளைச் சிறிது விளக்கமாகக் காணவேண்டுவது அவசியமாகும். கால்டார் பிரஸ்தாபித்துள்ள வரிமுறையானது, வரி கொடுக்கவேண்டியவர்கள் வரிகொடாது தப்பிக்க முடியாத வகையில் அமைந்துள்ளது. (அதாவது, ஒருவகை வரியின்கீழ் வரிகொடுக்கவேண்டியவர் தவருன செய்திகளைக் கொடுத்துத் தப்பிக்க முயன்ருல் அவர் மற்ருெருவகை வரியின்கீழ் அதிகமான வரி கொடுக்கவேண்டியது நேரிடும்.) பேராசிரியர் ஹிக்கின்ஸ்[2] அவர்கள் கால்டார் பிரஸ்தாபித்துள்ள வரித் திட்டத்தை ஏற்றுக்கொண்டு தமது கருத்துகளையும் இணைத்து விரிவான முறையில் விளக்கியுள்ளார். தனியார் வருமானவரி, கம்பெனி வருமான வரி, பொது விற்பனை வரி, ரொக்கம் உட்பட்ட சொத்துகள் மீதான (மாறுபட்ட விதத்திலான) வரி, தேவைக்குமேல் மிகுதியாக இருப்புச் சரக்கு வைத்திருக்கும் தொழில்களின்மீதான வரி, தனியார் மீதான செலவு வரி—ஆகியவை பேராசிரியர் ஹிக்கின்ஸ் பிரஸ்தாபித்துள்ள வரிமுறையில் அடங்கியுள்ள வரிகளாகும். இவ் வரிமுறை கைக்கொள்ளப்பட்டால் வரி கொடுக்கவேண்டியவர் வரி கொடாமல் தப்பித்துவிட முடியாது; வரித்தொகையைவிடக் குறைவாகக் கொடுத்தும் தப்பித்துவிட முடியாது—என்று ஹிக்கின்ஸ் அவர்கள் கூறியுள்ளார்.

[1] Kaldor, 'Indian Tax Reform' Ministry of Finance,' India, 1956.

[2] B. Higgins, 'Economic Development' (Norton, New York, 1959), Ch. 23 ஐப் பார்க்கவும்.

சிறந்த விவாதங்களின் அடிப்படையில் அமைந்துள்ள வரிகளைக் கொண்டது என்ற வகையில் மேலே நாம் விளக்கியுள்ள வரிமுறையானது கவர்ச்சியுடையதாகவே தோன்றுகிறது. இவ் வரிமுறை வலியுறுத்துவதுபோல, வரி கொடுக்காமலேயே தப்பிப்பதையும் கட்டவேண்டிய வரியைக் கட்டாமல் தப்பிப்பதையும் தடைசெய்வதற்கான ஏற்பாடுகள் செய்யவேண்டியது அவசியமாகும். இக் கருத்தானது எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடியதேயாகும். இதேபோல, வசூலிக்கப்படாமல் தேங்கியுள்ள வரித்தொகையை வசூலிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யவேண்டியது அவசியம் என்ற கருத்தும் எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒன்றேயாகும். எனினும், மேலே நாம் விளக்கியுள்ள வரிமுறைக்கு எதிராக மூன்றுவிதமான ஆட்சேபங்கள் கூறமுடியும். முதலாவதாக, இவ் வரிமுறையைச் செயல்படுத்துவதில் நிருவாக சம்பந்தமான இடர்ப்பாடுகள் பல நேரலாம். இம் முறையானது ஆற்றல் மிக்கதாகத் திகழ வேண்டுமேயாயின், தனிப்பட்ட வரி செலுத்துவோர் மிகவும் சிக்கலான அறிக்கைகள்[1] பல சமர்ப்பிக்க வேண்டியதிருக்கும். இது மட்டுமன்றி இவ் வரிமுறை எந்தெந்தப் பொருள்கட்குப் பொருந்துமோ அந்தப் பொருள்கள் ஓரிடத்திலின்றும் பிறிதோரிடத்திற்குச் செல்வதைக் கண்காணித்தல்,[2] சில்லறை வியாபாரிகள் தம்முடைய விற்பனைகளைக் குறித்து வைத்திருக்குமாறு செய்தல், சொத்துகளின் (மோட்டார் வாகனங்களும் இதனுள் அடங்கும்) விற்பனைகள் யாவற்றையும் அறிவிக்குமாறு செய்தல், வரிகொடாமல் தப்பிக்கக்கூடியவர்களைக் கண்டுபிடிப்பதற்கென்று பொதுமக்களிலேயே ஒருசிலரை ஏற்பாடு செய்தல்,[3] மின்சாரக் கணக்கீட்டு எந்திரத்தை

[1] அண்மையில் இலங்கையில் நிறைவேற்றப்பட்டுள்ள சட்டத்தின் பிரகாரம் (இச் சட்டம் கால்டார் சமர்ப்பித்த அறிக்கையை ஒட்டி அமைந்துள்ளது. கால்டார் இலங்கைக்கு சமர்ப்பித்துள்ள வரித்திட்டமானது இவர் இந்தியாவிற்குச் சமர்ப்பித்துள்ள திட்டத்தை பெரிதும் ஒத்திருக்கின்றது. Kaldor, 'Suggestions for a Comprehensive Reform of Direct Taxation,' Colombo, *1960*.) வரிசெலுத்துவோர் 8 பக்கங்கள் கொண்ட நமூனு ஒன்றையும் 6 பட்டியல்களையும் பூர்த்திசெய்ய வேண்டியுள்ளது. R. Goode, 'New Systems of Direct Taxation in Ceylon,' 'National Tax Journal' (Dec. *1960*) ஐப் பார்க்கவும்.

[2] இவ் வரித் திட்டத்தின்கீழ் நாட்டிலுள்ள எல்லா மக்களும் வரக்கூடும் என்பது உண்மையன்று. இத் திட்டத்தை உருவாக்கியவர் எல்லா மக்களுக்கும் பொருந்தக்கூடிய வகையில் இதை உருவாக்கவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

[3] 'வரி செலுத்தாது தப்பிக்க முயல்வோரைப்பற்றி (உதாரணமாக, வரி செலுத்தாது மறைத்துள்ள விற்பனைக் கணக்கைப்பற்றி) அறிவிப்பவருக்கு, இதன் மூலம் கிடைக்கக்கூடிய வரித் தொகையில் ஒரு பகுதியை அரசாங்கம் கொடுக்க வேண்டும்.' என்று ஹிக்கின்ஸ் கூறியுள்ளார். B. Higgins, 'Economic Development' (Norton, New York, 1959).

வேலையில் அமர்த்துதல்—ஆகியவற்றிற்கான ஏற்பாடுகளையும் செய்யவேண்டியதிருக்கும். இத்தனை ஏற்பாடுகளையும் செய்வ தென்பது எளிதான காரியமன்று. இதை நினைத்துப்பார்த்தாலேயே பெரிதும் அச்சமாக இருக்கின்றது. எனவே, இம் முறையிலுள்ள குறைபாடுகளைச் சுட்டிக்காட்ட எவ்வாறு துவங்குவது என்பது நமக்குப் புலனாகவில்லை. ஒருசில குறைபாடுகளைமட்டும் காண் போம். மக்களின் கவனக் குறைவினால் தஸ்தாவேஜுகள் (தமக் குப் பாதகமான குறிப்புகளை உடைய தஸ்தாவேஜாக இருப்பின், மக்கள் எவ்வளவு கவனக்குறைவாக இருக்கக்கூடும் என்பது நாம் கூருமலேயே விளங்கும்) மறைந்துபோக நேரலாம். சில்லறை வியாபாரிகள் கல்வி அறிவில்லாதவராக இருந்தாலும் இவ்வாறு நேரக்கூடும். இதுபோன்ற வரித் திட்டம் கைக்கொள்வதற்கு சாத் தியமானதாக இருந்தால் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகள் இத் திட்டத்தைக் கடைப்பிடித்திருக்குமன்றோ? ஆனால், அவை இத் திட்டத்தைக் கடைப்பிடிக்காதது எதைக் குறிக்கின்றது? இத் திட்டம் குறைபாடுகள் நிரம்பப்பெற்ற ஒன்று என்பதையன்றோ குறிக் கின்றது. மேலும், நேர்மையும் திறமையும் மிக்க நிருவாகம் பின் தங்கிய நாடுகளில் பெரிதும் அமைந்திருக்கவில்லை. இவ்வாருன நிலையில் இது போன்ற வரித் திட்டத்தை எங்ஙனம் செயலாற்ற முடியும்? எனவே, இவ் வரித் திட்டத்தைக் கடைப்பிடித்தால் பல நிருவாக சிரமங்கள் நேரக்கூடும். எனினும், எந்தத் திட்டத்திலு முள்ள குறைபாடுகளை நிருவாக ரீதியாகச் சுட்டிக்காட்டுவது எளி தானது. எனவே, வேறு அடிப்படையிலும் இவ் வரித் திட்டத் திலுள்ள குறைபாடுகளைச் சுட்டிக்காட்ட வேண்டுவது மிக அவசிய மாகும். இரண்டாவதாக, இவ் வரித்திட்டமானது மக்களை ஊக்கு விக்கத் தவறலாம் என்ற அடிப்படையில் இதிலுள்ள குறைபாடு களைக் காண்போம். தான் சமர்ப்பித்துள்ள வரித் திட்டம் முத லீட்டை ஊக்குவிக்கும் வகையில் அமைந்துள்ளது (அதாவது, மூலதனப் பொருள்களின்மீது விதிக்கக்கூடிய வரி வீதமானது ரொக்கச் சொத்துகளின்மீது விதிக்கக்கூடிய வரிவீதத்தைவிடக் குறைவானது) என்று பேராசிரியர் ஹிக்கின்ஸ் விளக்க முயன்றுள் ளார்.[1] எனினும், சோம்பேறியாக இல்லாமலும் ஜீவன மட்டப் பொருளாதாரத்திலேயே அழுந்திக்கிடந்து வரிமுறைக்கு உட் படாது விலகி இருக்காமலும் மக்கள் வேலை செய்வதில் நாட்ட

[1] இவ் வரித் திட்டத்தின்கீழ் தனியாரின் சேமிப்பு எவ்வாறு ஊக்குவிக்கப்படும் என்பது தெளிவாகவில்லை. ஏனெனில், இத் திட்டத்தின்கீழ் செலவு வரி விதிக்க வேண்டியிருப்பதோடு மூலதனச் சொத்துகளின்மீதும் பல வரிகள் விதிக்கவேண் டியுள்ளது. எனவே, இத் திட்டத்தின் விளைவால் தனியார் சேமிப்பு உயரக்கூடுமா என்பதுகுறித்து உறுதியாக எதுவும் சொல்வதற்கில்லை.

முடையோராய் இருப்பதற்கு உறுதுணையாகத் தம்முடைய வரித் திட்டம் அமையக்கூடுமா என்பதுகுறித்துப் பேராசிரியர் ஹிக்கின்ஸ் தம்முடைய புத்தகத்தில் விளக்கியிருப்பதாகத் தெரியவில்லை. வேலை செய்வதில் மக்கள் நாட்டமுடையோராய் இருப்பதற்கு வரிகள் எங்ஙனம் தூண்டுகோலாக அமையக்கூடும் என்பதுகுறித்து மீண்டும் இங்கு நாம் விளக்க விரும்பவில்லை. எனினும், எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியுள்ளதாகக் கூறப்படுகின்ற வரித் திட்டமானது மக்களை ஊக்குவிப்பதுபோன்ற சில விரும்பத்தக்க அமிசங்களையும் பெற்றிராவிட்டால், பழைமையான பொருளாதார முறைகளைப் படிப்படியே விடுத்து தற்காலப் பொருளாதார முறைகளைக் கடைப்பிடிக்க முயன்றுவருகின்ற பின்தங்கிய நாடுகளில் இதுபோன்ற வரிமுறைகள் கையாளப்பட்டால் மக்களின் ஆர்வத்திற்குக் குந்தகம் நேரலாம் என்றே எண்ணத்தோன்றுகிறது. மேலும், பொதுவாக இவ் வரித் திட்டமானது நிலையில்லாத ஓர் சூழ்நிலையில் நியாயமற்றதாக அமையக்கூடும் என்று தோன்றுகிறது. இவ்வாறான விளைவு நேருங்கால் நெடுங்கால முதலீட்டிற்கு இன்றியமையாத உறுதிப்பாடு மக்கள் உள்ளத்தில் தோன்ற வாய்ப்பு உள்ளதா ? என்பது ஐயப்பாட்டிற்கு உரிய ஒன்றேயாகும். இறுதியாக அரசியல் ரீதியாக அமைந்துள்ள முக்கியமான ஆட்சேபம் ஒன்றைக் காண்போம். இவ் வரித்திட்டத்தின்கீழ் தம்மைப்பற்றி மக்கள் அதிகமான செய்திகளைச் சமர்ப்பிக்கவேண்டியிருக்கும். இதன்விளைவாக நீதி விசாரணை செய்வது போன்ற ஒரு விரும்பத்தகாத நிலை நாட்டில் உருவாகலாம். 'நீ x பவுன் வரி கொடுக்க வேண்டும். இல்லையேல்...........' என்று மக்களை நோக்கி அதிகாரிகள் துப்பாக்கியோடு பயமுறுத்தக்கூடியது போன்றதோர் நிலை உருவாகலாம். எனவே, மேலே விளக்கியுள்ள வரித்திட்டத்தைக் கடைப்பிடித்தால், அதிகச் செலவின்றி நிருவகிக்கக்கூடிய, போலீஸ் ராஜ்யம் போன்றதோர் நிலை நாட்டில் உருவாகலாம்.

எனவே, மேலே விளக்கியுள்ள வரித்திட்டமானது சிறந்த விவாதங்களின் அடிப்படையில் அமைந்துள்ள நேர்த்தியானதோர் திட்டமாக இருக்கின்றபோதிலும், நிருவாகரீதியாக நோக்கினால் இத் திட்டத்தைக் கடைப்பிடிப்பது சாத்தியமானதன்று; பொருளாதார அடிப்படையில் நோக்கினால் இத் திட்டம் பொருத்தமற்றது; (பெரும்பான்மையான மக்களைப் பொறுத்தவரையில்) அரசியல் ரீதியாக நோக்கினால் இத் திட்டம் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று — என்று நாம் முடிவுகட்டவேண்டியுள்ளது. நடை முறைக்கு ஒத்துவரக் கூடியதாக உள்ள திட்டங்களே பெரிதும் பயனளிக்கக்கூடியவையாகும். வரிவசூலிப்பவருக்கு வசூலிக்கப்பட்ட தொகையில் ஒரு

பகுதியைக் கொடுப்பது என்ற ஒரு முறையைப்பற்றி கெய்லி பிரபு தமது 'ஆப்பிரிக்க ஆராய்ச்சி' (African Survey)[1] என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். உதாரணமாக, பெச்சுவனலாண்டில் 1938ஆம் ஆண்டுமுடிய வருமான வரியானது (அதாவது, தலைவரி போன்றது) இந்த அடிப்படையிலேயே வசூலிக்கப்பட்டு வந்தது. இதுபோன்ற கமிஷன் அடிப்படையிலல்லாது சாதாரணமாக ஸ்வாஸிலேண்டில்[2] விதிக்கப்பெற்ற வருமானவரியைவிட இது பெரிதும் வெற்றியளித்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். ஆரம்பநிலையில் வரி முறையை சிக்கலான உபாயங்களின் அடிப்படையில் செயல்படுவதற்கு முனைவதைவிட இங்கு நாம் குறிப்பிட்டுள்ள எளிதான முறையைக் கையாண்டால் திருப்திகரமான விளைவுகள் ஏற்படக்கூடும் என்று தோன்றுகின்றது. தனியார்மீது பரந்த அளவில் வரிகளை விதிக்க விரும்பிய பின்தங்கிய நாடுகள் ஆரம்ப காலத்தில் இம்முறையை ஆராய்ந்து பயனுள்ள வகையில் கடைப்பிடித்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகின்றது.

இதுகாறும் வருவாயைப்பற்றிய விரிவான விளக்கத்தைக் கண்டோம். இனி செலவுகளைப் பொறுத்தவரையில் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளைக் காண்போம். பணத்தைச் செலவிட்டு வருகின்ற பல்வேறு அரசாங்கத் துறைகளின்மீதும் சீரியமுறையில் கட்டுப்பாடுகள் விதிக்கப்பெற்றிருக்க வேண்டும். இவ்வாறான கட்டுப்பாடுகள் விதிக்கப்பெற்றால்தான், சட்டமன்றம் அங்கீகரித்துள்ள செலவும் இத் துறைகள் செய்கின்ற செலவும் ஒத்து அமையும். மேலும், அவசியம் நேர்ந்தால் பல்வேறு துறைகளின் செலவு நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தக்கூடிய அதிகாரமானது கஜானவுக்கு வழங்கப்பெறவேண்டும். இதுபோன்றதோர் முறையே பிரிட்டனில் கடைப்பிடிக்கப்பட்டுவருகின்றது. பொதுப்பணியின்கீழ் (civil service) உள்ள பல்வேறு துறைகளின் தலைவர்களே அவ்வத் துறை செய்துவரக்கூடிய செலவுக்குப் பொறுப்பு என்று பிரிட்டனில் விதிக்கப்பெற்றுள்ளது. மேலும், சட்டமன்றம் அங்கீகரித்துள்ள செலவும் இத் துறைகள் செய்கின்ற செலவும் ஒத்திருக்கின்றனவா என்று கஜான கண்காணித்துவருகின்றது. இதுபோக அரசாங்கப் பொதுத் துறைத் தணிக்கையாளரும் (Comptroller and Auditor General) இதைக் கண்காணித்துவருகிறார். இவர் நேரடியாக மன்னரால் நியமனம் செய்யப்படுகிறார். பதவியி

[1] Lord Hailey, 'An African Survey' (Oxford University Press, 1957) pp. 654-5ஐப் பார்க்கவும்.

[2] Lord Hailey, 'An African Survey' (Oxford University Press, 1957) ஐப் பார்க்கவும்.

லுள்ள அரசாங்கத்திற்கு இவர் கட்டுப்பட்டவர் அல்லர். இம் முறைகள்தவிர வேறு முறைகளின் மூலமும் செலவுகளைக் கட்டுப் படுத்த முடியும். எனினும், வேறு முறைகளும் நாம் இங்கு விளக்கி யுள்ள பொதுவான கொள்கைகட்கு ஏற்ப அமையவேண்டுவது இன்றியமையாததாகும். அதாவது, செலவினங்களைக் கட்டுப் படுத்துவதில் கஜானு முதன்மைபெற்றுத் திகழவேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும்.

### செயல்படுத்தப்பட்ட பட்ஜெட்டை ஆய்வது

இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் பெரும்பாலான நாடு களிலுள்ள ஏற்பாடுகள் பெரிதும் குறைபாடு உள்ளமையே யாகும். நிதி ஆண்டு முற்றுப்பெற்றதும் முதலாவதாகச் செய்யவேண்டுவது அவ் ஆண்டிற்கான கணக்குகளைக் காலதாமதமின்றி முடிப்பதாகும். முடிவுள்ள ஆண்டிற்கான கணக்கை முடிப்பதற்கு பெரிய நிறுவனங் களில் சிறிது காலம் ஆவதுபோல அரசாங்கத்திற்கும் பல மாதங்கள் ஆகக்கூடும். ஆனால், சில நாடுகளில் கணக்கை முடிக்கப் பல ஆண்டுகள் ஆகின்றன என்பது உண்மையேயாகும்.[1] இரண்டாவ வதாக, தணிக்கையாளர் (Auditor) தமது அறிக்கையினை வரைய வேண்டும். இந் நிலையிலும் அதிகமான காலதாமதம் ஏற்படக் கூடும்.[2] இறுதியாக, கடந்தகாலச் செலவுகளைப் பார்லிமென்டா னது சிறப்பான முறையில் தீர்க்கமாக ஆராயவேண்டும். இந் நிலை யில் பல குறைபாடுகள் நேரக்கூடும். பிரிட்டனில் பார்லிமென்டில் அரசாங்கக் கணக்குகளை ஆய்வதற்கென்று ஒரு கமிட்டி நிறுவப் பெற்றிருக்கின்றது. பல்வேறு துறைகள் பணத்தை எவ்வாறு செல விட்டு வருகின்றன என்பதுகுறித்து விரிவான முறையில் விசாரணை செய்யவும் பல்வேறு துறைகளின் அதிகாரிகளை அரசாங்க வக்கில் போன்று இரக்கமற்ற முறையில் குறுக்கு விசாரணை செய்யவும் இக் கமிட்டிக்கு அதிகாரம் வழங்கப்பெற்றிருக்கின்றது. இதனால் பல ஆண்டுகளாக மதிப்பிடற்கரிய பயன் விளைந்துவருகின்றது. பிரிட் டனில் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்ற முறை தவிர வேறு பலமுறை களும் உள்ளன. வேறு எந்த முறை கைக்கொள்ளப்பட்டாலும், செயல்படுத்தப்பட்ட பட்ஜெட்டைப்பற்றிப் பொதுவான முறையில் சட்டமன்றம் விவாதிப்பதற்குப் பல்வேறு துறைகளின் கணக்குகளை விரிவான முறையில் கமிட்டி ஒன்று ஆராய்வதற்குமான ஏற்பாடு

[1] உதாரணமாக, 1951—2-க்கான ஜமைக்கா நாட்டு அரசாங்கத்தின் வரவு செலவுக் கணக்குகள் 1955ஆம் ஆண்டுவரை வெளியிடப்படவில்லை.

[2] ஜமைக்காவில் 1957 மார்ச் 31 ஆம் தேதியோடு முடிவடைந்த நிதி ஆண்டிற் கான தணிக்கையாளரின் அறிக்கையானது 1959ஆம் ஆண்டு மார்ச் 10ஆம் நாளே சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது.

களைச் செய்யவேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும். இவ்வாருன ஏற்பாடுகள் ஏதுமில்லாத நிதிக் கட்டுப்பாட்டுமுறையைக் குறைபாடு உடையது என்றே கருதவேண்டும். பல நாடுகளிலுமுள்ள சட்டமன்றங்களில் இதற்கான ஏற்பாடுகள் இல்லை என்றே கூறவேண்டும். அவ்வாருயின், சட்டமன்றங்கள் தமது பணியைச் செவ்வனே ஆற்றத் தவறிவிட்டன என்றே சொல்லவேண்டும்.[1]

நிதிக் கட்டுப்பாட்டு முறை சிலருக்கு மட்டுமே தெரிந்திருந்தால் போதுமானது என்றும் கவர்ச்சியற்ற ஒன்று என்றும் சில தவருன கருத்துகள் உள்ளன. முற்றிலும் புதிய பொருள்களை ஏற்றுக் கொண்டுள்ள அரசாங்கங்களும் தனியார் துறையினரின்கீழிருந்த பொறுப்புகளைத் தாங்களே ஏற்றுக்கொண்டுள்ள அரசாங்கங்களும் நிதிக் கட்டுப்பாட்டு முறையைச் செவ்வனே செயல்படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யவேண்டுவது மிகவும் இன்றியமையாத தாகும். அரசாங்க நிருவாகத்தினர் நல்ல முறையில் செலவுகளைக் கட்டுப்படுத்திவந்தபோதிலும் இவர்களுடைய நடவடிக்கைகளைக் கண்காணித்துக் கட்டுப்படுத்தக்கூடிய ஏற்பாடு ஒன்றையும் செய்ய வேண்டுவது மிகவும் அவசியமானதாகும். மேலும், பின்தங்கிய நாடுகளில் அரசாங்கப் பொதுநிதிகளைப்பற்றி அறியவேண்டும் என்ற வேட்கையும் ஆர்வமும் பொதுமக்களிடம் கிடையாது என்று கூறலாம். பொதுமக்கள் இதுபோன்ற விஷயங்களில் ஆர்வம் உள்ளவராக இருந்தாலன்றி அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகள் செவ்வனே நடைபெறும் என்று கூறுவதற்கில்லை. எனவே, பொது மக்களின் ஆர்வத்தைத் தூண்டிவிட்டு ஊக்குவிக்கவேண்டுவது மிகவும் அவசியமானதாகும். நிதிமுறையின் எல்லா நிலைகளிலும் சட்டமன்றமானது முழு அளவிலான விவாதமும் ஆராய்ச்சியும் நடத்துமேயாயின், அது பொதுமக்களின் ஆர்வத்தைத் தூண்டி விடுவதோடு ஊக்குவிக்கும் என்பதில் ஐயமில்லை.[2]

1 'அரசாங்கச் செலவுகளை லிபியாவில் பார்லிமெண்டும் மேல் சபையும் சிறந்த முறையில் கட்டுப்படுத்திவருகின்றன என்று கூறுவதற்கில்லை. ஏதோ கடனுக்குச் செய்வதுபோல் இவை செய்துவருகின்றன'—என்று International Bank, 'Report on Libya' p.93-ல் கூறப்பட்டுள்ளது.

2 அண்மையில் பிரிட்டனில் அரசாங்கச் செலவுக் கட்டுப்பாடு குறித்து ஓர் அறிக்கை வெளியிடப்பட்டுள்ளது. இவ் அறிக்கையின் சாராம்சத்தையும் இவ் அறிக்கையைப்பற்றிய விமர்சனத்தையும் இவ் அத்தியாயத்திற்கான பிற்சேர்க்கை II-ல் காணலாம்.

# பிற்சேர்க்கை I

**பிரிட்டனுக்குச் சொந்தமான கரிபியப் பிரதேசத்திலுள்ள அரசாங்கங்களின் மதிப்பீடுகள் எந்த அளவுக்குத் திருத்தமானவை?[1]**

மதிப்பீடுகள் எந்த அளவுக்குத் திருத்தமானவை என்று அறிய முதற்கண் மதிப்பீடுசெய்யப்பட்ட வருவாய், செலவு ஆகியவற்றிற்கும் உண்மையான வருவாய், செலவு ஆகியவற்றிற்குமான புள்ளி விவரங்களை ஒவ்வொரு காலனிக்கும் 24 ஆண்டுகட்குத் திரட்டினோம். வருவாய், செலவு ஆகியவற்றின் மதிப்பீட்டில் நேர்ந்துள்ள சராசரி மொத்த சதவீதப் பிழையை (average gross percentage error) ஒவ்வொரு காலனிக்கும் கீழ்க்கண்ட முறைப்படி கணக்கிட்டோம். முதற்கண் மதிப்பீடு செய்யப்பட்ட வருவாய்க்கும் (அல்லது செலவிற்கும்) உண்மையான வருவாய்க்கும் (அல்லது செலவிற்கும்) இடையே உள்ள விகிதம் கண்டுபிடிக்கப்பட்டது. ஒவ்வோர் ஆண்டிற்கும் தனித்தனியே இவ்வாறுன விகிதம் கண்டுபிடிக்கப்பட்டது. அடுத்து, ஒவ்வோர் ஆண்டிற்குமான இந்த விகிதத்தை 100-லிருந்து கழித்தோம். இறுதியாக 24 ஆண்டுகட்கான சராசரி (mean) கண்டுபிடிக்கப்பட்டது. இவ்வாறு சராசரி மொத்த சதவீதப் பிழை கண்டுபிடிக்கப்பட்டது. சராசரி நிகர சதவீதப் பிழையைக் (average net percentage error) கண்டுபிடிப்பது மிகவும் சுலபமாகும். இது மதிப்பீடுசெய்யப்பட்ட வருவாய்க்கும் உண்மையான வருவாய்க்கும் இடையேயுள்ள 24 ஆண்டுகட்கான சதவீத விகிதங்களின் சராசரியேயாகும். எனவே, மொத்த சதவீதப் பிழையானது எந்த ஒரு பிழையையும்—அதாவது, அதிக மதிப்பீட்டுப்பிழையையும் குறைந்த மதிப்பீட்டுப் பிழையையும்—நிறை (weight) செய்துள்ளது. ஆனால், நிகர சதவீதப் பிழையானது, அதிக மதிப்பீட்டைக் குறைந்த மதிப்பீடு ஈடுசெய்துவிடும் என்ற அடிப்படையில் கணக்கிடப்பட்டுள்ளது. கீழ்க்காணும் அட்டவணை மொத்த சதவீதப் பிழைகளைக் குறிக்கின்றது.

**1930—53-க்கான மொத்த சதவீத மதிப்பீட்டுப் பிழை**

*(சராசரி மொத்த சதவீதப் பிழை)*

| காலனி | வருவாய் | செலவு |
|---|---|---|
| பார்படோஸ் ... ... ... | 14·2 | 7·7 |
| பிரிட்டிஷ் கயானு ... ... | 12·5 | 7·9 |
| பிரிட்டிஷ் ஹொண்டுராஸ் ... ... | 13·3 | 5·4 |

[1] இது A. R. Prest, 'A Fiscal Survey of the British Caribbean' (HMSO London, 1957) pp. 114—15-லிருந்து எடுக்கப்பட்டதாகும்.

| காலனி | வருவாய் | செலவு |
|---|---|---|
| ஜமைக்கா ... ... ... | 7·9 | 5·8 |
| டிரினிடாட் ... ... ... | 12·6 | 6·6 |
| அன்டிகுவா ... ... ... | 3·4 | 12·6 |
| மான்ட்செர்ரட் ... ... ... | 17·4 | 10·4 |
| செயின்ட் கிட்ஸ் ... ... ... | 11·3 | 4·1 |
| வர்ஜின் தீவுகள் ... ... ... | 28·0 | 7·3 |
| டொமினிகா ... ... ... | 11·6 | 5·6 |
| கிரனடா ... ... ... | 13·4 | 7·1 |
| செயின்ட் லூசியா ... ... ... | 11·0 | 6·5 |
| செயின்ட் வின்சென்ட் ... ... | 11·8 | 5·8 |

மூலம்: Blue books, Estimates, Accounts of colonies concerned.

குறிப்புகள் : 1. உதவி மானியங்கள், காலனி அபிவிருத்தி வரவுகள், காலனி க்ஷேமநல வரவுகள், நில விற்பனைகள் ஆகியவை வருவாயில் கணக்கிடப்படவில்லை.

2. அரசினர் பொறியியல் பணித்துறைச் (PWD) செலவு, விசேஷச் செலவு, காலனி அபிவிருத்திச் செலவு, க்ஷேமநலச் செலவு ஆகியவை செலவில் கணக்கிடப்படவில்லை.

பல குறிப்பிடத்தக்க அம்சங்களை இவ் அட்டவணை உணர்த்துகின்றது. இவற்றை விவாதிக்குமுன் சில விஷயங்களைந் தெளிவுபடுத்தவேண்டியுள்ளது. வேண்டுமென்றே சில இனங்களை நாம் வருவாய், செலவு ஆகியவற்றில் கணக்கிடவில்லை. உதாரணமாக, வருவாயின்கீழ் உதவி மானியங்களை நாம் கணக்கிடவில்லை. ஏனெனில், இவற்றை முன்கூட்டியே மதிப்பிடுவது மிகவும் கடினமான செயலாகும். எனவே, காலனிகட்குப் பெரிதும் சாதகமான முறையிலேயே வருவாய், செலவு ஆகிய சொற்களுக்கு நாம் பொருள் கற்பித்துள்ளோம்.

நாம் மேலே குறித்துள்ள மொத்த சதவீதப் பிழை மதிப்பீடுகள், பட்ஜெட் மதிப்பீடானது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ எந்த அளவுக்குத் திருத்தமின்றி உள்ளது என்பதை உணர்த்துகின்றன. வருவாயைப் பொறுத்தவரையில், இரண்டு காலனிகளைத் தவிர ஏனைய காலனிகளில் சராசரி மதிப்பீட்டுப் பிழை 11 சதவீதமாகவோ அல்லது இதற்கு அதிகமாகவோ இருந்தது என்பதை அறியலாம். 'சராசரி' என்ற சொல் என்ன பொருளை உணர்த்துகின்றது என்பதை நாம் இங்கு நினைவுகூரவேண்டும். குறிப்பிட்ட ஓராண்டில் நிலை எவ்வாறு இருந்தது என்பதைச் சராசரி உணர்த்த முடியாது. ஏனெனில், நாம் மேலே கொடுத்துள்ள சராசரி வீதத்தைவிடக் குறிப்பிட்ட ஓராண்டில் பிழைகள் அதிகமாக இருந்திருக்கக்கூடும். செலவுகளைப் பொறுத்தவரையில், சராசரி சதவீதப் பிழை

மதிப்பீடுகள் குறிப்பிடத்தக்க அளவினவாகும். எனினும், அன்டிகுவா காலனியைத் தவிர ஏனைய காலனிகளைப் பொறுத்தவரையில் இவை வருவாய்கட்கான பிழை மதிப்பீடுகளைவிடப் பெரிதும் குறைவானவை என்பதை மேலேயுள்ள அட்டவணை தெளிவாக்குகின்றது.

இவ் அட்டவணையின்மூலம் நாம் அறியவந்துள்ள விஷயங்கட்குப் பலவாருன காரணங்கள் கற்பிக்க முடியும். இந் நாடுகள் உஷ்ணப் பிரதேசத்திலுள்ளவை. உஷ்ணப் பிரதேசத்திலுள்ள நிலைமையின்கீழ்(உதாரணமாக, உலக மார்க்கெட்டில் நிலவுகின்ற விலைவாசிகளின் ஏற்ற இறக்கங்களை இந் நாடுகள் பெரிதும் சார்ந்திருக்க வேண்டியுள்ளது) பல இடர்ப்பாடுகட்கிடையே சிறந்த முறையில்—உதாரணமாக, பிரிட்டனில் செய்யப்படுவதைப்போல சிறந்த முறையில்—மதிப்பீடுகள் செய்ய முடிவதில்லை என்று ஒருவகையான விளக்கம் தர முயலலாம். இது உண்மையானுல், அன்டிகுவா, ஜமைக்கா ஆகிய நாடுகளின் மதிப்பீடுகளிலுள்ள பிழைகள் ஏனைய நாடுகளின் மதிப்பீடுகளிலுள்ள பிழைகளைவிடக் குறைவாக இருப்பதற்கு நாம் என்ன காரணம் கூறமுடியும்? ஏனைய நாடுகளைப் போலவே இந் நாடுகளிலும் புயல், வறட்சி ஆகியவற்ருல் கேடுகள் நேர்ந்தன. இது நிற்க. பெரும்பாலான நாடுகளில் திறம்பட மதிப்பீடு செய்யக்கூடிய ஆற்றல்படைத்தோர் இல்லாதது இதற்கான காரணமாக இருக்கக்கூடும் என்பது மற்ருெரு விளக்கமாகும். அண்மைக் காலத்திற்கான உண்மையான செலவு, வருவாய் ஆகியவற்றிற்கான புள்ளிவிவரங்களை இந் நாடுகள் மிகவும் தாமதமாகப் பிரசுரித்து வருவது, மதிப்பீடுகள் செய்வதிலுள்ள சிக்கல்கள், மதிப்பீடு செய்யப்பட்ட புள்ளிவிவரங்கள் சரியானவையா என்று ஆராயக்கூடிய நிறுவனங்கள் ஏதும் இல்லாமை—ஆகிய விஷயங்கள் இந்த விளக்கத்திற்கு ஆக்கம் தேடும் வகையில் அமைந்துள்ளன. மேலும், இவ்வாறு பிழைபட மதிப்பீடு செய்வதானது, வேண்டுமென்றே அரசாங்கம் கடைப்பிடித்துவருகின்ற கொள்கையாக இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. வருவாய்கட்கான மதிப்பீடுகட்கும் செலவுகட்கான மதிப்பீடுகட்கும் இடையே பெரும் வேறுபாடுகள் இருப்பது இக்கருத்திற்கு ஆக்கம் தேடும் வகையில் அமைந்துள்ளது.

நாம் கணித்துள்ள நிகர சதவீதப் பிழைகளால் இப் பிரச்சினையைத் தீர்த்துவைக்க முடியுமா என்று இனிக் காண்போம்.

## 1930—53-க்கான நிகர சதவீத மதிப்பீட்டுப் பிழை

| காலனி | சராசரி நிகர சதவீதப் பிழை வருவாய் | சராசரி நிகர சதவீதப் பிழை செலவு |
|---|---|---|
| பார்படோஸ் | 85·8 | 94·0 |
| பிரிட்டிஷ் கயானு | 88·5 | 93·5 |
| பிரிட்டிஷ் ஹொண்டுராஸ் | 92·5 | 98·0 |
| ஜமைக்கா | 92·5 | 95·5 |
| டிரினிடாட் | 88·0 | 94·8 |
| அன்டிகுவா | 99·0 | 90·5 |
| மான்ட்செர்ரட் | 97·3 | 105·0 |
| செயின்ட்கிட்ஸ் | 91·5 | 98·6 |
| வர்ஜின் தீவுகள் | 90·0 | 100·2 |
| டொமீனிகா | 93·7 | 99·6 |
| கிரனடா | 89·0 | 93·5 |
| செயின்ட் லூசியா | 90·5 | 94·8 |
| செயின்ட் வின்செண்ட் | 88·2 | 94·3 |

மூலம் : Blue Books, Estimates, Accounts of colonies concerned.

குறிப்புகள் : 1. உதவி மானியங்கள், காலனி அபிவிருத்தி வரவுகள், காலனி க்ஷேம நல வரவுகள், நில விற்பனைகள் ஆகியவை வருவாயில் கணக்கிடப்படவில்லை.

2. அரசினர் பொறியியல் பணித்துறைச் (PWD) செலவு, விசேஷச் செலவு, காலனி அபிவிருத்திச் செலவு, க்ஷேம நலச் செலவு ஆகியவை செலவில் கணக்கிடப்படவில்லை.

மேலே உள்ள அட்டவணையில் வருவாய் என்ற தலைப்பின்கீழ் 13 புள்ளிவிவரங்களையும், செலவு என்ற தலைப்பின்கீழ் 13 புள்ளி விவரங்களையும் ஆக மொத்தம் 26 புள்ளிவிவரங்களைத் தந்துள்ளோம். இந்த 26-ல் 24 புள்ளிவிவரங்கள், உண்மையான செலவு அல்லது வருவாயானது மதிப்பிடு செய்யப்பட்ட செலவு அல்லது வருவாயை விட அதிகமாக இருந்தது என்பதைத் தெளிவுறுத்துகின்றன. மேலும், மதிப்பீடுசெய்யப்பட்ட புள்ளிவிவரங்களைவிட உண்மையான புள்ளிவிவரங்களானவை, செலவைவிட வருவாயைப் பொறுத்த வரையில் அதிகமாக அமைந்திருந்தன என்பதையும் அட்டவணை அறிவிக்கின்றது. உதாரணமாக, மேலே கொடுத்துள்ள 13 நாடு களில் 11 நாடுகளில் இவ்வாறு அமைந்திருந்தது.

இவ் உண்மைகள் நாம் மேலே குறிப்பிட்டுள்ள கருத்துக்கு— அதாவது, வருவாய் செலவு ஆகியவற்றிற்கான மதிப்பீடுகளில் நேர்ந் துள்ள பிழைகள் இயல்பாக நேரக்கூடியவைஅல்ல என்றும் வேண்டு மென்றே பின்தங்கிய நாடுகள் இவ்வாறு மதிப்பீடுகள் செய்து வருகின்றன என்றும் நாம் விளக்கியுள்ள கருத்துக்கு ஆதரவாக

அமைந்துள்ளவை என்பது குறிப்பிடத்தக்கது. வருவாய், செலவு ஆகியவற்றை—குறிப்பாகச் செலவை—வேண்டுமென்றே குறைத்து இந் நாடுகள் மதிப்பீடு செய்வதற்கான காரணம்தான் என்ன என்பதை ஆராயுமுன் வேறொரு காரணத்தை விளக்கவேண்டியுள்ளது. கடந்த சில ஆண்டுகளாக உலகெங்கும் பணவீக்க நிலை நிலவி வருகின்றது. இந் நிலையில் எதிர்காலத்தில் நேரக்கூடிய வருமான உயர்வு, விலை உயர்வு ஆகியவற்றைத் துல்லிதமாக மதிப்பிட முடியாது. இவற்றை நிதித்துறையைச் சேர்ந்தவர்கள் குறைத்து மதிப்பிட்டிருக்கலாம். எனவே, வருவாய் செலவு ஆகியவற்றிற்கான புள்ளிவிவரங்களையும் குறைத்து மதிப்பிடவேண்டி நேர்ந்திருக்கலாம். 1939ஆம் ஆண்டுக்குமுன் வருவாய், செலவு ஆகியவற்றிற்கான மதிப்பீடுகள் உண்மையான புள்ளி விவரங்களைவிட அதிகமாக இருந்ததும், 1939ஆம் ஆண்டுக்குப் பின் இம் மதிப்பீடுகள் உண்மையான புள்ளி விவரங்களைவிடக் குறைவாக இருந்துவருவதும் இக் கருத்துக்கு ஆக்கம் தேடும் வகையில் அமைந்துள்ளன. எனினும், இந் நாடுகள் செலவுகளைவிட வருவாயையே பெரும்பாலும் குறைத்து மதிப்பிட்டுள்ளன. எனவே, சீர்தூக்கி நோக்குங்கால், இவ்வாறான மதிப்பீடுகள் வேண்டுமென்றே முன் கூட்டியே செய்யப்பட்டவை என்றே தோன்றுகிறது. (உதாரணமாக, நாம் கணக்கிட்டுள்ள 24 ஆண்டுகளில் ஒவ்வோர் ஆண்டும் பார்படோஸ் நாடும் செயின்ட் வின்செண்ட் நாடும் தங்களுடைய வருவாயைக் குறைத்தே மதிப்பிட்டுள்ளன.) எனினும், முன்னெச்சரிக்கையாக வேண்டுமென்றே அரசாங்கங்கள் வருவாயையும் செலவையும் குறைவாக மதிப்பிட்டனவா அல்லது உள்ளவாறு மதிப்பிட்டால் அதிகமான செலவுகள் செய்ய நேரிடும் என்று கருதி கொள்கையளவில் குறைவாக மதிப்பிட்டனவா என்று பொதுவாக எல்லா நாடுகட்கும் பொருந்தக்கூடிய வகையில் ஏதும் கூறிவிட முடியாது.[1] குறைவான மதிப்பீடு செய்யப்படுவதற்கு இவை இரண்டுமே காரணங்களாக இருக்கக்கூடும் என்று நாம் கருதுகிறோம்.

## பிற்சேர்க்கை II

### அரசாங்கச் செலவின்மீதான கட்டுப்பாடு

மேலே குறித்துள்ள தலைப்பின்கீழ்,[2] அண்மையில் பிரிட்டனில் ஒரு முக்கியமான—அதிகாரபூர்வமான—அறிக்கை வெளியிடப்

[1] உதவி மானியங்கள் பெற்று வருகின்ற பிரதேசங்கள் ஏனைய பிரதேசங்களை விட வருவாயைக் குறைவாகவும் செலவை அதிகமாகவும் மதிப்பீடு செய்துவருகின்றன என்று கூறுவதற்கில்லை.

[2] 'Control of Public Expenditure' ('Plowden Committee Report'), Cmnd.1432. HMSO, July 1961.

பட்டுள்ளது. இவ் அறிக்கையில் கண்டுள்ள கருத்துகள் சிலவற்றை விவாதித்து அவை நாம் மேலே விளக்கியுள்ள கருத்துகளோடு எந்த அளவுக்குப் பொருந்துகின்றன என்பதை ஆராய்வோம்.

இவ் அறிக்கையின் முதல் பகுதியில் ('அரசாங்கச் செலவிற்கான முடிவுகள் எடுக்கப்படுகின்ற முறை' என்பது இதன் தலைப்பாகும்) வழிவழியாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்ற முறை விளக்கப்பட்டுள்ளது. அடுத்து, கடந்த சுமார் இருபது ஆண்டுகளில் நேர்ந்துள்ள மாற்றங்கள் இந்த முறையை ஆற்றல் குன்றியதாக ஆக்கி உள்ளது என்று விவாதிக்கப்பட்டுள்ளது. பின், இம் முறையைப் புனருத்தாரணம் செய்வதற்கு அடிப்படையாக அமையக்கூடிய நான்கு கொள்கைகள் விளக்கப்பட்டுள்ளன.

(a) வரப்போகின்ற ஆண்டுகளில் ஆகக்கூடிய அரசாங்கச் செலவுகுறித்து (மத்திய அரசாங்கச் செலவு மட்டுமன்றி ஸ்தல ஸ்தாபனங்களின் செலவுகுறித்தும்) முன்கூட்டியே ஒழுங்கான முறையில் ஆய்வு செய்ய வேண்டும்.

(b) இடையிடையே தடைப்பட்டுச் செல்லக்கூடிய செலவுகளால் நிலைகுலைவு ஏற்படுவதைத் தவிர்ப்பதற்காக, அரசாங்கச் செலவுகுறித்துத் தீர்மானங்கள் செய்யும் போது அவை—அதாவது அத்தீர்மானங்கள்—பெரிதும் சாத்தியமுள்ளவையாகவும் நிலைத்திருக்கக்கூடியவையுமாக இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும்.

(c) அரசாங்கச் செலவை அளப்பதற்கும் கட்டுப்படுத்துவதற்கும் உறுதுணையாக உள்ள சாதனங்களை, உதாரணமாக, மதிப்பீட்டு முறையையும் சாதனை முறை பட்ஜெட்டுகளையும் சீர்திருத்த வேண்டியது அவசியமாகும்.

(d) கூட்டு மொத்தமான முடிவுகள் எடுப்பதற்கு ஏதுவாக அமைந்துள்ள சில ஏற்பாடுகளை இன்னும் சிறப்புமிக்கதாகச் செய்யவேண்டுவது அவசியமாகும்.

பொறுப்புகளை எவ்வாறு கஜானாவுக்கும் வேறு துறைகட்கும் இடையே பகிர்ந்து அளிக்கவேண்டும் என்பதுகுறித்து அறிக்கை

யின் இரண்டாவது பகுதி ('அரசாங்கத் துறைகள் கஜானு ஆகிய வற்றின் பொறுப்புகள்' என்பது இதன் தலைப்பாகும்) விவாதிக்கின்றது. இவை ஆற்றிவருகின்ற பணிகளைத் தற்போது இருப்பதை விட வேறுவிதமாக இவைகட்கிடையே பகிர்வு செய்யவேண்டுமா என்பதுகுறித்தும் பணிகளை எவ்வாறு சிறப்பானமுறையில் ஆற்ற முடியும் என்பதுகுறித்தும் இப் பகுதி விவாதிக்கின்றது. கஜானுவானது ஆற்றிவருகின்ற பணிகளில் காலப்போக்கில் மாற்றங்கள் செய்யவேண்டியது நேரலாம் என்று குறிப்பிட்டுள்ளபோதிலும், வேறு பல துறைகளினும் கஜானுவே எஞ்ஞான்றும் பெரிதும் முக்கியத்துவம் உடையதாகத் திகழவேண்டும் என்று இப் பகுதி தெளிவாக விளக்குகிறது.

அறிக்கையின் மூன்ருவது பகுதிக்கு இடப்பட்டுள்ள தலைப்பானது 'பார்லிமென்டின் கட்டுப்பாடு' என்பதாகும். பன்னிரெண்டு மாதங்கட்கு ஒரு முறை என்ற அடிப்படையில் பட்ஜெட்டானது தயாரிக்கப்பட்டு வருவதற்கும் இதற்கு மேற்பட்ட கால அளவுக்குத் தயாரிக்கப்பெருமைக்குமான காரண விளக்கத்தை இப் பகுதியில் காணலாம். ரொக்கமுறை (cash system) கையாளப்படவேண்டுமா அல்லது அக்ருவல்ஸ் முறை (accruals system) கையாளப்படவேண்டுமா என்றும் இப் பகுதி விவாதிக்கின்றது. திட்டமிட்ட செலவினங்களைப் பார்லிமென்டானது அங்கீகரிக்கவேண்டுமேயன்றி உண்மையான செலவினங்களை அல்ல என்றும் விளக்கப்பட்டுள்ளது. பார்லிமென்டிலுள்ள மூன்று முக்கியமான நிதிக் கமிட்டிகளின் (அரசாங்கக் கணக்குக் கமிட்டி, மதிப்பீட்டுக் கமிட்டி, தேசியத் தொழில்கட்கான கமிட்டி) அலுவல்கள் யாவை என்பது குறித்த விளக்கமும் தரப்பட்டுள்ளது. சாத்தியமான மாற்றங்கள் குறித்து ஆலோசனைகள் வழங்கப்பட்டுள்ளபோதிலும் தற்சமயம் கடைப்பிடிக்கப்பட்டுவருகின்ற முறை சிறப்பானதுதான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

அறிக்கையின் நான்காவது பகுதிக்கு இடப்பட்டுள்ள தலைப்பு 'முடிவாகச் சில குறிப்புகள்' என்பதாகும். எதிர்காலத்தில் அரசாங்கச் செலவினங்கள் எவ்வாறு நிருவகிக்கப்பெற வேண்டும் என்ற விஷயம்குறித்து பலவாருக அமைந்துள்ள சிறுசிறு குறிப்புகளை இப் பகுதியில் காணலாம். அரசாங்க நிதிகள் எவ்வெம் முனைகளில் விரயமாக்கப்படலாம் என்பதை இப் பகுதி சுட்டிக்காட்டுகின்றது. அரசாங்கப் பொது நிதிபற்றிய எல்லா விஷயங்களையும் மக்கள் தீர்க்கமாக அறிந்திருக்க வேண்டுவது இன்றியமையாதது என்று அறிக்கை முடிவில் குறிப்பிட்டுள்ளது.

பிரிட்டனிலுள்ள நிறுவன அமைப்பு பிரிட்டிஷ் முறைகள் ஆகியவற்றிற்கு ஏற்றவகையில் இவ் அறிக்கையானது தயாரிக்கப்பட்டுள்ளது. எனவே, இவ் அறிக்கையில் கண்டுள்ள குறிப்புகளை எவ்வித மாற்றமும் இன்றி அப்படியே வேறு எந்த நாட்டிற்கும் பொருந்துமாறு செய்யலாம் என்று எண்ணுவது மடமையாகும். மற்றும் ஒரு விஷயமும் கவனிக்கத்தக்கது. பிரிட்டனில் உள்ள நிறுவனங்கள் யாவும் எவ்வித வேறுபாடுமின்றி அமைந்திருக்கக்கூடிய நாட்டில் கூட இவ் அறிக்கையில் கண்டுள்ள குறிப்புகளை எவ்வித மாற்றமுமின்றி அப்படியே கடைப்பிடிக்க முடியாது. ஏனெனில், இவ் அறிக்கையிலுள்ள பத்திகள் (paragraphs) சிலவற்றிற்குப் பலர் பலவாறு பொருள்கொள்ள முடியும். எனவே, இப் பத்திகளை இதுபோன்ற நாடுகட்குப் பொருந்துமாறு எவ்வாறு செய்வது என்பதைத் தீர்மானிப்பதில் சில இடர்ப்பாடுகள் நேரக்கூடும்.[1] இவ்வாறு இந்த அறிக்கையில் கண்டுள்ள குறிப்புகள் பல வரையறைகட்கு உட்பட்டவை என்பது உண்மையேயாயினும், இவ் அத்தியாயத்தில் நாம் விவாதித்துள்ள பல விஷயங்களோடும் பெரிதும் சார்புடைய பல பகுதிகள் இவ் அறிக்கையில் உள்ளன என்பதை மறுத்தற்கு இயலாது.

அரசாங்கத்தின் ஏனைய துறைகளைவிட கஜானுவே முதன்மை பெற்றுத் திகழவேண்டும் என்று இவ் அறிக்கை வலியுறுத்துவது கவனிக்கத்தக்கதாகும். கடந்த காலத்தில் கஜானுவானது விரிவான முறையில் இறுதிவரை அரசாங்கச் செலவைக் கட்டுப்படுத்திவந்த முறையை இனிமேலும் கடைப்பிடிக்கவேண்டிய அவசியம் இல்லை என்றாலும், அரசாங்கச் செலவுகளைத் தீர்மானிப்பது, எந்தெந்தச் செலவுகள் முக்கியமானவை என்பதைத் தீர்மானிப்பது ஆகிய முக்கியப் பொறுப்புகளைக் கஜானுவே நிருவகித்துவரவேண்டும் என்று அறிக்கையில் 79 ஆம் பத்தியில் விளக்கப்பட்டிருக்கின்றது. அரசாங்கச் செலவுகட்கான திட்டம் ஐந்து ஆண்டுகட்கு ஒருமுறை தீட்டப்பட்டபோதிலும் கஜானுவே இத் திட்டத்திற்குப் பொறுப்பாக இருக்கவேண்டும் என்றும் அறிக்கை தெளிவாகக் கூறு

1 நெடுங்காலத்தில் அரசாங்கச் செலவுகள் வளர்ந்து செல்வது எவ்வாறான வரையறைகட்கு உட்பட்டது என்பதை அறிக்கையின் 16ஆவது பத்தி விளக்குகின்றது. எனினும், தேசிய உற்பத்தியின் வளர்ச்சியை அரசாங்க வருவாயின் வளர்ச்சியினின்றும் இப் பகுதியானது தெளிவானமுறையில் வேறுபடுத்திக் காட்டத் தவறிவிட்டது (அல்லது தேசிய உற்பத்தி வளர்ச்சி, அரசாங்க வருவாய் வளர்ச்சி ஆகியவை தற்போதுள்ள வரி முறையின் அடிப்படையிலும் வேறுவிதமான வரிமுறையின் அடிப்படையிலும், எவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்புடையன என்பதை விளக்கத் தவறிவிட்டது). மேலும், அரசாங்கமானது தானே செய்துவருகின்ற செலவு வளர்ந்து வருவதைப் பிறர்மூலம் செய்துவருகின்ற செலவு வளர்ந்து வருவதினின்றும் இப் பகுதியானது தெளிவான முறையில் வேறுபடுத்திக் காட்டத் தவறிவிட்டது.

கின்றது. அரசாங்கச் செலவின் அளவு பெருகியிருப்பது, இச் செலவினங்கள் பெரிதும் சிக்கல் நிறைந்தவையாக இருப்பது, நிதிக்கொள்கையில் கெயின்ஸ் அவர்களின் கருத்துக்கு ஏற்ப நேர்ந்துள்ள புரட்சி ஆகியவை இவ்வாறு ஐந்தாண்டுகட்கு ஒருமுறை அரசாங்கச் செலவுக்கான திட்டம் தீட்டப்படுவதற்கான அவசியத்தை ஏற்படுத்தியுள்ளன என்று அறிக்கையில் 10ஆவது பத்தியில் விளக்கப்பட்டுள்ளது. நெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப் பட்டுவருகின்ற கணக்கீட்டுமுறையையே—அதாவது, ஆண்டிற்கு ஒருமுறை ரொக்க அடிப்படையில் கணக்கிடப்பட்டுவருகின்ற முறையையே — அறிக்கை ஏற்றுக்கொண்டுள்ளது. அக்ரூவல்ஸ் கணக்கீட்டுமுறை (accruvals accounting), கமிட்மென்ட் பட்ஜெட் முறை (commitments budgeting) ஆகியவற்றை அறிக்கையானது ஆணித்தரமாக நிராகரித்துள்ளது. தேசியக் கணக்குகளுடன் பொருந்தக்கூடிய வகையில் அரசாங்கமானது தனது கணக்குகளை வைத்திருக்கவேண்டும் என்று அறிக்கை வலியுறுத்துகிறது. மேலும், அமெரிக்காவில் 'முறை ஆராய்ச்சி' (systems analysis) என்ற பெயருடன் திகழுகின்ற அளவு வகைக் கட்டுப்பாட்டு முறையை[1] (Quantitative Methods of Control) அதிகமான அளவு பயன்படுத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்றும் அறிக்கை கூறுகிறது.

சில குறிப்பிட்ட பகுதிகள் தவிர ஏனைய பகுதிகளில் அரசாங்கச் செலவை மதிப்பீடு செய்வதற்கு நாம் மேலே குறிப்பிட்டுள்ள முறைகள் கடைப்பிடிக்கப்படுவதற்கான வாய்ப்புகள் மிகக் குறைவானவையேயாகும். எனினும், இம் முறைகளைக் கடைப்பிடிக்க முயலுவதில் தவறேதும் இல்லை. இது நிற்க. செலவினங்களைக் கட்டுப்படுத்த முயலும்போது பார்லிமென்டின் போக்கு எதிர் மறையாக அமைவதைவிட ஆக்கம் விளைவிக்கக்கூடியதாக அமைய வேண்டுவது மிகவும் அவசியமாகும் என்று அறிக்கை கூறியுள்ளது. உதாரணமாக, உண்மையான செலவினங்கள் பார்லிமென்டால் அங்கீகரிக்கப்பட்ட செலவினங்களோடு சிறு சிறு விஷயங்களைப் பொறுத்தவரையிலும் பொருந்துகின்றனவா என்று அரசாங்கக் கணக்குக் கமிட்டியானது உற்றுநோக்கிக்கொண்டிருப்பதைவிட பல்வேறு துறைகள் எங்ஙனம் பணத்தைச் சிறந்த முறையில் செலவிட முடியும், எங்ஙனம் பண விரயத்தைத் தவிர்க்க முடியும் என்று இக் கமிட்டியானது அறிவுரை வழங்கினுல் அது பெரிதும் பயனுள்ளதாக இருக்கும். இக் கருத்தானது அறிக்கையில் 83 ஆம்

1 இம் முறைகளைப்பற்றிய விரிவான விளக்கத்தைக் கீழே கொடுத்துள்ள புத்த கத்தில் காணலாம்: R. N. McKean, 'Efficiency in Government Through Systems Analysis (John Wiley, New York, 1958).

பத்தியில் விளக்கப்பட்டுள்ளது; இக் கருத்தைப் பின்தங்கிய நாடுகளில் கடைப்பிடிக்க இயலாது என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஏனெனில், இதைச் செயல்படுத்துவதற்குப் பெரிதும் நாணயமான, நேர்மையான ஊழியர்கள் பொதுப்பணித்துறையில் (Civil Service) அலுவல் புரிந்துவரவேண்டும். பின்தங்கிய நாடுகளில் இதுபோன்ற வாய்ப்பான சூழ்நிலை கிடையாது எனலாம். ஸ்தலஸ்தாபனங்கட்கு அளிக்கப்பட்டுவருகின்ற மானியங்களைக் குறிப்பிட்ட செலவினங்கட்கு என்று வழங்காது பொதுவாக வழங்கிவந்தால், ஸ்தலஸ்தாபனங்கள் சிறந்தமுறையில் செயலாற்றுவதற்கு இது உறுதுணையாக விளங்கும் என்று அறிக்கையில் 42ஆம் பத்தியில் விளக்கப்பட்டுள்ளது. இக் கருத்து எல்லா நாடுகட்கும் பொருந்தக்கூடிய ஒன்ருகும்.

அரசாங்கச் செலவானது பெரிய மாற்றங்கட்கு உட்படாது நிலைபேறு உடையதாக இருக்கவேண்டுவது அவசியமாகும் என்று அறிக்கையில் 18-லிருந்து 29-பத்தி முடிய விளக்கப்பட்டுள்ள கருத்து கவனிக்கத்தக்கதாகும். அரசாங்கச் செலவினங்களில் பெரிய விரைவான மாற்றங்கள் (கால இடையீடுகள்—time-lags—நேர்வதால்) சாத்தியமானதல்ல என்றும், (பண விரயமும் திறன் இன்மையும் நேரக்கூடுமாதலால்) விரும்பத்தக்கதல்ல என்றும் அறிக்கை வலியுறுத்தியுள்ளது. வாணிபச் சுழலைக் (trade cycle) கட்டுப்படுத்துவதற்காக அரசாங்கச் செலவினங்கள் ஏற்ற இறக்கங்கட்கு உட்பட்டவையாக இருக்கவேண்டும்[1] என்று 1944ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட அரசாங்க அறிக்கை பெரிதும் வலியுறுத்திய கருத்துக்கு இது புறம்பானதாகும்.[2] எனினும், இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் அறிக்கையானது பிரச்சினையை முறைப்படி அணுகாது, பிரச்சினையைவிட்டு விலகிச்சென்றுள்ளது என்றே கூற வேண்டும். நாட்டின் மொத்தச் செலவில் அரசாங்கச் செலவு பெரும் பங்கு வகித்து வருகின்றது என்பதையும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையை ஒட்டி அடிக்கடி நெருக்கடிநிலை நேர்ந்துவருகின்ற உறுதிப்பாடற்ற உலகில் நாம் வசித்துவருகிறோம் என்பதையும் இவ்வறிக்கை தெளிவுறுத்துகிறது. இவ்வாருன சூழ்நிலையில் அரசாங்கச்

1 'தனியார் முதலீட்டில் நேரக்கூடிய தவிர்க்கமுடியாத ஏற்ற இறக்கங்களை ஈடுகட்டும் நோக்கத்தோடு அரசாங்க முதலீட்டின் காலமும் அளவும் ஒழுங்குபடுத்தப்படவேண்டும்.' என்ற கருத்தை இது வலியுறுத்தியது. 'Employment Policy' Cmnd. 6527, HMSO, 1944) p.18.

2 '1944 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட அரசாங்க அறிக்கையில் கண்டிருந்த கருத்தை ஏற்கெனவே 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட கீழ்க்காணும் அரசாங்க அறிக்கை ஆணித்தரமாக மறுத்துள்ளது. The White Paper on 'Public Investment' (Cmnd. 1203, HMSO, 1960).

செலவானது மொத்தச் செலவில் பெரும் பங்கு வகிப்பதுடன் திடீர் மாற்றங்கட்கு உட்படாததாக இருக்க முடியும் என்ற கருத்து நியாயமானதாகவும் சாத்தியமானதாகவும் தோன்றவில்லை. பொருளாதார அமைப்பினைப் பெரிதும் அழுத்தங்கட்கு உட்படுத்தாத வகையில் அரசாங்கச் செலவு நடவடிக்கைகள் அமைய வேண்டும் என்றும் (பத்தி 2), சில செலவினங்கள் ஓரளவுக்குக் குறைக்கப்படவேண்டும் என்றும் (பத்தி 23), அரசாங்கத் துறைகள் யாவற்றிலும் ஒரே சதவீதத்தில் செலவுகளைக் குறைப்பது விரும்பத்தக்கதன்று (இது குறுங்காலத்திலல்லாது நெடுங்காலத்திற்குப் பொருந்தக்கூடியது என்ற வகையில் விளக்கப்பட்டுள்ளது) என்றும் (பத்தி 98), அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒருசில குறிப்புகள் உள்ளனவேயன்றி இம் முக்கியப் பிரச்சினையை அறிக்கையானது தீர்க்கமாக ஆராய்ந்திருப்பதாகத் தெரியவில்லை.

இதுபோன்ற சில குறைபாடுகள் இருந்தபோதிலும் பின்தங்கிய நாடுகளைப் பொறுத்தவரையில் இவ் அறிக்கை பெரிதும் பயனுள்ளதேயாகும். அரசாங்கப் பொது நிதி நிருவாகம்பற்றி பின்தங்கிய நாடுகள் இவ் அறிக்கையினின்றும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் பல உள்ளன. ஜனநாயகக் கட்டுப்பாட்டின் கீழ் எவ்வாறு திறமையான நிருவாகத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யமுடியும் என்பதைப் பின்தங்கிய நாடுகள் அறிந்துகொள்வதற்கு இவ் அறிக்கை உதவியாக இருக்கக்கூடும். மேலும், தற்போது முன்னேற்ற நிலையில் உள்ள நாடுகள் முன்னேற்றம் அடைந்துகொண்டிருந்த காலங்களில் இழைத்திருந்த தவறுகளைப் பின்தங்கிய நாடுகள் இழைத்துவிடாது கண்காணித்துக் கொள்வதற்கும் இவ்வறிக்கை உறுதுணையாக இருக்கக்கூடும் என்பதில் ஐயமில்லை.

[1] அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகளைப்பற்றிய விஷயங்கள் யாவற்றையும் மக்கள் நன்கு அறிந்திருக்க வேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும் என்று (105—6 பத்திகளில்) அறிக்கையானது வலியுறுத்துகிறது.

# 7. கூட்டரசு நிதியை ஒட்டி எழக்கூடிய பிரச்சினைகள்

இரண்டாவது உலகப் போருக்குப் பின் உலகில் பல புதிய கூட்டரசுகள் உருவாகியுள்ளன. இதை ஒட்டி அண்மையில் கூட்டரசு அமைப்புகளை உடைய நாடுகளின் பொருளாதாரப் பிரச்சினைகள் பெரிதும் விவாதிக்கப்பட்டுவருகின்றன. அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா போன்ற பழைமையான கூட்டரசு நாடுகளின் பொருளாதாரப் பிரச்சினைகள் என்ஞான்றும் விவாதிக்கப்பட்டுவருகின்றன என்பது உண்மையேயாயினும், அண்மையில் இந்தியா, பாகிஸ்தான், மலேயா, நைஜீரியா, மத்திய ஆப்பிரிக்கா, மேற்கிந்தியத் தீவுகள் (பிரிட்டிஷ் காமன்வெல்த்திலுள்ள நாடுகளைமட்டும் இங்குக் குறிப்பிட்டுள்ளோம்) ஆகிய கூட்டரசு நாடுகள் உருவாகியிருப்பதை ஒட்டி இந் நாடுகளின் பொருளாதாரப் பிரச்சினைகள் புதியதோர் ஆர்வத்துடன் விவாதிக்கப்பட்டுவருகின்றன. காலப்போக்கில் உலகிலுள்ள கூட்டரசு நாடுகளின் எண்ணிக்கை பெருகும் என்றே தோன்றுகிறது. சுதந்திர ஆர்வமுள்ள பல சிறிய நாடுகள், சுதந்திரம் பெற்றபின், தனிப்பட்ட முறையில் வெளிநாடுகளில் தூதரகங்களை நிறுவுதல், நாட்டுப் பாதுகாப்பிற்கான ஏற்பாடுகள் செய்தல், நவீன வரிமுறைகளைக் கையாளுதல் ஆகியவற்றைக் கடைப்பிடிப்பதற்குப் போதுமான வசதி இல்லாத நிலையில் உள்ளன. எனவே, இதுபோன்ற நாடுகள் பல ஒன்றுகச் சேர்ந்து கூட்டரசை உருவாக்க முனையலாம். தற்போதுள்ள கூட்டரசு நாடுகளில் இவை அங்கம் பெற முயலலாம். அல்லது இவை ஒன்றுசேர்ந்து புதியதோர் கூட்டரசு நாட்டை உருவாக்கலாம். எனவே, கூட்டரசு நாடுகளில் எழக்கூடிய பொருளாதாரப் பிரச்சினைகளை ஒரு முழு அத்தியாயத்தில் விளக்கப் போந்துள்ளோம்.

கூட்டரசுகளின் அடிப்படையான அரசியல் அமிசங்கள் யாவை? முக்கியமான பொருளாதார அமிசங்கள் யாவை? என்பவைகுறித்து

முதற்கண் விளக்கத் தீர்மானித்துள்ளோம். இதை அடுத்து, மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்கட்கும் இடையேயுள்ள நிதி உறவுகளை ஆராய்வோம். புதிய கூட்டரசுகளில் ஆரம்ப காலங்களில் இவ் உறவுகள் எவ்வாறு இருக்கக்கூடும் என்பது குறித்தும் காலப்போக்கில் எம்மாதிரியான பிரச்சினைகள் உருவாகக் கூடும் என்பதுகுறித்தும் நாம் விவாதிக்கவேண்டியதிருக்கும். இக் கூட்டரசுகளின் நடப்புக்கணக்குப் பேரங்களிலேயே நாம் பெரிதும் கவனம் செலுத்தவேண்டியிருக்கும். எனினும், கடன்முறை பண முறை ஆகியவற்றைப்பற்றியும் ஒருசிறிது விளக்க முயலுவோம். இறுதியாக, உலகப் போருக்குப்பின் தோன்றியுள்ள சில புதிய கூட்டரசுகள் தங்களுடைய பொருளாதாரப் பிரச்சினைகளை எவ்வாறு தீர்க்க முயன்றுவருகின்றன என்பதுகுறித்துச் சுருக்கமாக விளக்குவோம்.[1]

## கூட்டரசின் அரசியல் அமிசங்களும் பொருளாதார அமிசங்களும்

கூட்டரசு முறையின் அரசியல் அமிசங்கள்குறித்துப் பேராசிரியர் வியர் (Prof. Wheare) அவர்கள் தந்துள்ள விளக்கமே தொன்மையான விளக்கமாகத் திகழுகின்றது. அவருடைய விளக்கம் வருமாறு: முதலாவதாக, கூட்டரசின்கீழ் மத்திய அரசாங்கத்திற்கும் சம அந்தஸ்து உள்ள மாகாண அரசாங்கங்கட்கும் இடையே அதிகாரங்கள் பகிர்ந்து அளிக்கப்படவேண்டும். இரண்டாவதாக, ஒவ்வோர் அரசாங்கமும் தன்னுடைய ஆட்சிக்குக்கீழ் வரக்கூடிய மக்களுடன் நேரடித் தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். மூன்றுவதாக, ஒவ்வோர் அரசாங்கமும் தனது எல்லைக்கு உட்பட்டே தனது நடவடிக்கைகளை வகுத்துக்கொள்ள வேண்டும். நான்காவதாக, ஒவ்வோர் அரசாங்கமும் தனது எல்லைக்கு உட்பட்ட நடவடிக்கைகளைப் பொறுத்தவரையில் பிற அரசாங்கங்களைச் சாராமல் இருக்கவேண்டும். இந்த நான்கு அமிசங்களில் முதல் இரண்டு அமிசங்களைத் தற்போதும் எல்லாக் கூட்டரசுகளிலும் காணலாம். ஆனால், மூன்றுவது நான்காவது அமிசங்கள், பழைய கூட்டரசுகளைப் பொறுத்தவரையில், முற்றிலும் பொருந்தும் என்று கொள்வதற்கில்லை; புதிய கூட்டரசுகளைப் பொறுத்தவரையில் இவை பொருந்

[1] எக்ஸ்டெர் பல்கலைக் கழகத்தில் 1959ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் நடைபெற்ற மாநாட்டில் வாசிக்கப்பெற்ற பல கட்டுரைகள், இந்த விஷயங்களைப் பொறுத்தவரையில், பெரிதும் உறுதுணையாக இருந்தன என்பதை இங்குக் குறிப்பிட விரும்புகிறேம். இம் மாநாட்டில் நாம் வாசித்த கட்டுரையில், ஒரு சிறு பகுதியை இவ் அத்தியாயத்தின் இறுதியில் பிற்சேர்க்கையில் தந்துள்ளோம இம் மாநாட்டில் வாசிக்கப்பெற்ற கட்டுரைகள் யாவும் பின்னுல் கீழ்க்காணும் புத்தகமாக வெளிவிடப்பட்டுள்ளது. 'Federalism and Economic Growth' (U. .. Hicks, F. G. Cornell, J. R. Hicks, W. T. Newlyn, A. H. Birch and p:l lished by Allen Unwin, Londor, 1961).

தவே பொருந்தாது என்று சிலர் கருதுகின்றனர்.[1] 19 ஆம் நூற்றுண்டில் மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் நிதி அமைப்பைப் பொறுத்தவரையில் ஒன்றுக்கொன்று தொடர்பு ஏதுமின்றி இருந்தன; வேறு சில விஷயங்களைப் பொறுத்த வரையிலும் கூட இவை ஒன்றுக்கொன்று தொடர்பு ஏதுமின்றி இருந்தன. இந் நிலை தற்காலத்திற்கும் பொருந்தும் என்று கொள்வதற்கில்லை. நீதி விஷயங்களைப் பொறுத்தவரையில் தற்சமயம் மாகாண அரசாங்கங்கள் ஓரளவுக்கு மத்திய அரசாங்கத்தைச் சார்ந்தே உள்ளன. அரசியல் சட்டத்தின்பிரகாரம் மாகாண அரசாங்கங்கள் கையாள வேண்டிய விஷயங்களையும், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைக் கருத்தில்கொண்டு, மத்திய அரசாங்கமும் கையாண்டுவருகின்றது; இதற்கு ஏற்பத் தன்னுடைய நிதிக் கொள்கையையும் உருவாக்கிவருகின்றது. எனவே, கூட்டரசுகளில் மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்கட்கும் இடையே நெருங்கிய உறவுகள் கிடையாது என்று முன்பு கூறிவந்தது தற்காலத்திற்குப் பொருந்தாததாகும். கூட்டரசில், தற்காலத்தில், நிருவாகரீதியாக, மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்கட்கும் இடையே பெருமளவுக்கு ஒத்துழைப்பு உள்ளது; இவ் அரசாங்கங்கள் ஓரளவுக்கே ஒன்றை ஒன்று சாராமல் இயங்கிவருகின்றன.

இவ்வாறு பழைய கூட்டாட்சி முறையானது புதிய கூட்டாட்சி முறையினின்றும் வேறுபடுவதற்கு ஒரு முக்கிய காரணம் உள்ளது. அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளில் தனித்திருந்த அரசாங்கங்கள் ஒருங்கிணைய முன்வந்ததை ஒட்டி இந் நாடுகளில் கூட்டரசு முறை உருவாகியது. (இவ்வாறு உருவாகிய முறையை 'இணைந்த கூட்டரசுமுறை'—Federalism by aggregation—என்று கூறுவது பொருந்தும்.) ஆனல், புதிய நாடுகளில் இதற்கு மாறுபாடாக நேர்ந்துள்ளது. இந் நாடுகள் காலனிகளாக இருந்த சமயம் இவை ஒருமுக ஆட்சிமுறையின்கீழ் (Unitary Govt.) இருந்தன. விடுதலை பெற்ற பின் இவை கூட்டரசு முறையைக் கடைப்பிடித்துவருகின்றன. (இவ்வாறு உருவாகியுள்ள முறையைப் 'பிரிந்த கூட்டரசுமுறை'—Federalism by devolution—என்று கூறுவது பொருந்தும்.) புதிய கூட்டரசுகளில் மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்கட்கும் இடையே நெருங்கிய ஒத்துழைப்பும் குறைந்த அளவு சார்பு இன்மையும் ஏற்பட்டிருப்பதற்கு வேறு பல காரணங்களும் உள்ளன என்பது உண்மையேயாயினும், இங்கு நாம்

[1] A. H. Birch, Federalism, Finance and Social Legislation' (Oxford, 1955), esp. pp. 305—6 ஐப் பார்க்கவும்.

விளக்கியுள்ள காரணம் பெரிதும் முக்கியத்துவம் உடையது என்பதை நாம் மறந்துவிடலாகாது.

கூட்டரசு நாட்டின் பொருளாதார அமிசங்களை அறிவதற்கு முன், ஒரு முக்கியமான விஷயத்தை நாம் கவனிக்கவேண்டியுள்ளது. கூட்டரசு உருவாகாமல் அதற்குப்பதில் ஒருமுக ஆட்சி ஏற்பட்டிருந்தால் இந் நாட்டின் பொருளாதார அமைப்பு எங்ஙனம் வேறுபட்டிருக்கும் என்பதை நாம் ஆராயவேண்டும். மேலும், கூட்டரசுக்குப் பதிலாக அந்த நாடானது பல தனித்த சிறிய நாடுகளாகப் பிரிந்தால், இந் நாட்டின் பொருளாதார அமைப்பானது எங்ஙனம் வேறுபட்டு விளங்கும் என்பதையும் நாம் ஆராயவேண்டும். உதாரணமாக, தற்சமயம் நைஜீரிய நாடு ஒரு கூட்டரசாக உள்ளது. நைஜீரியாவானது கூட்டரசை ஏற்படுத்தியிராவிட்டால், ஒருமுக அரசை ஏற்படுத்தியிருக்கும் அல்லது பல சிறிய நாடுகளாக—வடக்கு, மேற்கு, கிழக்கு ஆகிய பகுதிகள் தனித்தனியாகப்—பிரிந்திருக்கும். இவ்வாறு கூட்டரசுக்கு மாறுபாடாக அமையக்கூடிய சாத்தியமான நிலைகளையும் நாம் அறிந்துகொள்ளாவிட்டால் கூட்டரசின் பொருளாதார அமிசங்கள்பற்றிய முறையான விளக்கத்தைக் காணமுடியாது. எனினும், நாம் இவ்வாறு மாறுபட்ட நிலைகளை ஆராய்வதற்கு வரலாற்று அடிப்படையிலான காரணங்கள் ஏதும் இருப்பதாகத் தவருக எண்ணிவிடலாகாது. நம்முடைய விளக்கத்திற்கு ஏற்ற முறையிலேயே நாம் இவ்வாறு கற்பித்துப்பார்க்கிருேம் என்பதை அறியவேண்டும். அதாவது, ஒரு கூட்டரசு எவ்வாறு உருவாகியது என்ற விஷயம் நமக்கு முக்கியமானதொன்றன்று; ஆனல், கூட்டரசுக்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட நாட்டில் எந்தவிதமானஅரசுக்கான சாத்தியக் கூறுகள் உள்ளன என்பதை அறியவேண்டுவது மிகவும் முக்கியமானதாகும். நைஜீரியாவானது இணைந்த கூட்டரசு முறையை ஒட்டியல்லாது பிரிந்த கூட்டரசு முறையை ஒட்டியே தற்சமயம் கூட்டரசாக விளங்கிவருகின்றது என்பது உண்மையேயாயினும், நைஜீரியாவானது கூட்டரசாக இல்லாமல், தனித்த சிறு நாடுகளாகப் பிரிந்திருந்தால் பொருளாதார நிலைமை எவ்வாறு வேறுபட்டிருக்கும் என்பதே, நம்முடைய விளக்கத்திற்கு ஏதுவாக அமையக் கூடிய நிலையாகும்.

கூட்டரசு முறை கடைப்பிடிக்கப்பட்டுள்ள நாடு ஒன்றில், கூட்டரசுக்குப் பதிலாக, நாடு முழுவதற்குமான ஒருமுக ஆட்சி ஏற்படுவதே கற்பனை செய்து பார்க்கக்கூடிய நிலை என்று வைத்துக்கொள்வோம். இவ்வாருன நிலையில் இக் கூட்டரசின் பொருளாதார அமிசங்கள் ஒருமுக அரசின் பொருளாதார அமிசங்களினின்றுப் பெரிதும் வேறுபட்டிருக்கும் என்று கூற முடியாது. ஒரே ஒரு விதத்தில்

மட்டும் இவை வேறுபட்டு விளங்கும்—அதாவது, ஒருமுக அரசில் மத்திய அரசாங்கம் மட்டுமே இடம் பெற்றிருக்கும்; ஆனால், கூட்டரசில் மத்திய அரசாங்கம்மட்டுமன்றி மாகாண அரசாங்கங்களும் இடம் பெற்றிருக்கும். எனவே, கூட்டரசில் ஒருமுக அரசைவிட, அதிக அளவு செல்வ வளங்களை நிருவாகச் செலவாகப் பயன்படுத்த வேண்டியதிருக்கும். எனினும், இக் கருத்து எல்லா நாடுகட்கும் ஒன்றுபோலப் பொருந்தக்கூடியது என்று கொள்வதற்கில்லை. இது அந்தந்த நாட்டின் அரசியல் சட்டத்திலுள்ள ஏற்பாடுகளைப் பொறுத்ததாகும். சில கூட்டரசு நாடுகளில், கூட்டரசு தோன்றியிருப்பதன் விளைவாகப் பெரிய அளவிலான அதிகார வர்க்கம் (bureaucracy) ஏற்பட்டிருக்கலாம்; ஆனால், வேறு சில கூட்டரசுகளில் நிருவாக மாற்றங்கள் எதுவுமே நேராதிருக்கலாம். இது நிற்க. ஒருமுக அரசுமுறையைக் கடைப்பிடித்துவரக்கூடிய நாட்டில் தேசியப் பொருளாதாரத் திட்டம் நாடு முழுவதிலும் ஆற்றலுடன் செயலாற்றப்படலாம்; ஆனால், கூட்டரசு முறையில் பல அரசாங்கங்கள் இருப்பதை முன்னிட்டுப் பொருளாதாரத் திட்டத்தை ஆற்றலுடன் செயலாற்ற முடியாது இருக்கலாம். கொள்கையளவில் இவ்விரு முறைகளில் இவ்விஷயத்தைப் பொறுத்தவரையில் எம்முறை நன்மை பயக்கக்கூடியது? எம்முறை தீமை பயக்கக்கூடியது? என்பதை ஈண்டு நாம் ஆராய விரும்பவில்லை. எனினும், மேலே நாம் கூறியுள்ள கருத்தானது பொதுவாக எல்லா நாடுகட்கும் பொருந்தக் கூடியது என்று கொள்வதற்கில்லை. வரலாற்று அடிப்படையில் அமைந்துள்ள உண்மைகள் இதையே உணர்த்துகின்றன. உதாரணமாக, மத்திய ஆப்பிரிக்கக் கூட்டரசில்[1] நான்கு அரசாங்கங்கள் செயலாற்றிவருகின்றன; இது, இந் நாட்டில் முன்னேற்றத் திட்டத்தை வெற்றிகரமாக செயலாற்றுவதற்கு இடையூறாக உள்ளது என்ற கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆனால், இந்தியாவில் இதற்கு மாறுபாடாக அமைந்துள்ளது. இந்தியாவும் ஒரு கூட்டரசு நாடேயாகும்; எனினும், இதனால் இந் நாட்டின் திட்டக் கமிஷனின் நடவடிக்கைகள் தடைப்பட்டு வருகின்றன என்று கூற முடியாது. எனவே, நாம் மேலே கூறியுள்ள கருத்தானது முடிந்த முடிவு என்று கொள்ள முடியாது.

இனி, ஒரு நாடானது கூட்டரசாக இல்லாவிடில் அது தனித்த பல சிறிய நாடுகளாகப் பிரிந்திருக்கும் என்று வைத்துக்கொள்வோம். கூட்டரசைத் தனித்த பல சிறிய நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதென்பது எளிதான விஷயம் அன்று; பல சிக்கல்கள் உள்ளன. முதற்

[1] D. T. Jack, 'Report on Economic survey of Nyasaland,'. 1958-59 (Federation of Rhodesia and Nyasaland, 1960).

கண், சில தவருன் கருத்துகளை மறுத்துரைக்க வேண்டியுள்ளது. பல தனித்த சிறு நாடுகள் ஒருங்கு இணைந்து கூட்டாட்சி முறையை ஏற்படுத்தினுல் பல பொருளாதார நன்மைகள் கிடைக்கலாம் என்று சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர். கூட்டரசு உருவாக்கப்படுவதன் விளைவாக, இந் நாடுகட்கு இடையே தடை ஏதுமின்றிப் பொருள்கள் ஒரு பகுதியிலிருந்து ஏனைய பகுதிகட்குச் சென்றுவர முடியும். தொழிலாளர்களும் இவ்வாறு எளிதில் ஒரு பகுதியினின்றும் ஏனைய பகுதிகட்குச் சென்றுவர முடியும். நாடு முழுவதற்கும் பொதுவான பணமுறை உருவாக்கப்படுவதால் (உதாரணமாகப் பல தனித்த நாடுகளில் அயல் நாட்டுக் காப்பு இருப்புகள் கூட்டரசு முறையின் கீழ் இணைக்கப்படுவதால்) பல சிக்கன நலன்கள் (economies) கிடைக்கக்கூடும்—என்று இவர்கள் விவாதித்துள்ளனர். ஆனுல், இது போன்ற நன்மைகள் கூட்டரசுகளில் மட்டுமே விளையக் கூடியவை என்று கொள்ளுவது பொருந்தாததாகும். கூட்டரசுமுறையைக் கடைப்பிடிக்காத நாடுகளில்கூட இதுபோன்ற நன்மைகள் விளைந்துவருகின்றன. உதாரணமாக, கூட்டரசு முறையைக் கடைப்பிடிக்காத நாடுகள் பல ஒன்றுசேர்ந்து சுங்க ஒன்றிப்புகளை (costoms unions) ஏற்படுத்தியுள்ளன. மேலும், இந் நாடுகளில் தொழிலாளர்கள் யாதொருவிதமான தடையுமின்றி ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குச் சென்று வருவதற்கான ஏற்பாடுகள் உள்ளன. (உதாரணமாக, ஐரிஷ் குடியாட்சிக்கும் பிரிட்டனுக்கும் இடையே தடையின்றி தொழிலாளர்கள் சென்றுவர முடியும். ஆனுல், இந் நாடுகள் இரண்டும் கூட்டரசாக உருவெடுக்க வாய்ப்புகள் உள்ளன என்று யாரும் கூறமாட்டார்கள்.) மேலும், சுங்க ஒன்றிப்புகள் தொழிலாளர் தடையின்றி ஒரு பகுதியிலிருந்து ஏனைய பகுதிகட்குச் சென்று வரக்கூடிய ஏற்பாடுகள் ஆகியவை இல்லாத கூட்டரசுகளும் (உதாரணம், பிரிட்டனுக்குச் சொந்தமான மேற்கிந்தியத் தீவு) உலகில் உள்ளன. மேலே நாம் சிலர் கருதுவதாகத் தந்துள்ள கருத்துகளும் இவை போன்ற கருத்துகளும் தவருனவை என்று நாம் எண்ணுவதால், இவற்றை விளக்குவதில் வீணுகக் காலத்தைச் செலவிடாது மேலே செல்வோம்.[1]

கூட்டரசு முறையிலுள்ள அரசாங்க அமைப்பை ஒருமுக அரசு முறையிலுள்ள அரசாங்க அமைப்புடன் ஒப்பிட்டு நோக்கினுல், கூட்டரசில் மூன்றுவிதமான அரசாங்கங்களும் (அதாவது, மத்திய அரசாங்கம், மாகாண அரசாங்கங்கள், ஸ்தல ஸ்தாபனங்கள்)

1 அரசியல் காரணங்களை முன்னிட்டுச் சில நாடுகள் ஒன்றுசேர்ந்து கூட்டரசாக உருவெடுக்க முடியாத நிலையில், இந் நாடுகள் தங்கட்கென்று பொதுவான சுங்க ஒன்றிப்பு போன்றவற்றையும் ஏற்படுத்துவது சாத்தியமில்லை.

ஒருமுக அரசில் இரண்டுவிதமான அரசாங்கங்கள் மட்டும் (அதாவது, மத்திய அரசாங்கம், ஸ்தல ஸ்தாபனங்கள்) செயலாற்றி வருகின்றன என்பதை நாம் அறியவருவோம். எனவே, ஒருமுக அரசைவிட, கூட்டரசில் உண்மையான நிருவாகச் செலவானது அதிகமாக இருக்கும் என்று எண்ணத் தோன்றுகின்றது. ஆனால், இது சர்ச்சைக்குரிய விஷயமாகும். அரசாங்க நிருவாகத்தில் பருமச் சிக்கனங்கள் (economies of scale)[1] விளைவதற்கு வாய்ப்புகள் உள்ளனவா என்பது தெளிவாக விளங்கவில்லை. எனினும், சில சமயங்களில் இக் கருத்தில் நாம் கவனம் செலுத்தவேண்டிய அவசியம் நேரலாம். இதைக் கூறும்போது மேற்கிந்தியத் தீவு எம் நினைவிற்கு வருகின்றது. இக்கூட்டரசில் பல சிறு பிரதேசங்கள் அங்கம் வகித்து வருகின்றன. இவை ஒவ்வொன்றும் தனித்தனியே வருமான வரி விதித்து நிருவகித்து வருகின்றன. இந் நாட்டில் இம் முறை ஒழிந்து நாடு முழுவதற்கும் ஒரே மாதிரியான வருமான வரிமுறை கடைப்பிடிக்கப்பட்டால் நிருவாகச் சிக்கன நலன்கள் விளையும் என்று கூறத் தோன்றுகின்றது.[2] மேற்கிந்தியத் தீவில் உள்ளதுபோன்ற பிரச்சினைகள் உள்ள கூட்டரசுகளை நோக்கும்பொழுது, பல தனித்த சிறிய நாடுகளைவிட இவை இணைந்து உருவாக்கக்கூடிய கூட்டரசில் நிருவாகச் செலவு குறைவாக இருக்கும் என்று பொதுவாகக் கூறமுடியாது. ஏனெனில், சில சமயங்களில் பல தனித்த சிறிய நாடுகளைவிடக் கூட்டரசில் நிருவாகச் செலவுகள் அதிகமாக இருக்கக்கூடும்.

தேசியப் பொருளாதாரத் திட்டங்களைப் பொறுத்தவரையில், ஒரு விதத்தில், பல தனித்த சிறிய நாடுகளைவிடக் கூட்டரசு முறையே சிறந்தது என்று கூறத் தோன்றுகிறது. (ஒரு நாடு பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அப் பகுதிகள் தனித்து இயங்கி வருவதற்குப் 'பால்கனைசேஷன்' — Balkanization — என்று பெயர். ஆப்பிரிக்காவில் தற்சமயம் உள்ள நிலையைப் பார்க்கும்போது இதை 'ஆஃப்ரிக்கனைசேஷன்' — Africanization — என்று அழைக்கலாம் என்று சொல்லத் தோன்றுகிறது.) உதாரணமாக, மிகப்பெரிய நாட்டில் ஒரு பகுதியில் துன்பம் நேரும்பொழுது (உதாரணமாக, ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் சரியும்பொழுது) வேறுபகுதிகளும் துன்பத்திற்கு ஆளாகும் என்று கொள்வதற்கில்லை. எனவே, கூட்டரசுகளில் இதுபோன்ற சீரிய பயன்கள் கிட்டும் என்று நம்பலாம். கூட்டரசில் அங்கம் வகித்துவருகின்ற பிரதேசங்கள்

[1] E. A. G. Rabinson, 'Economic Consequences of the Size of Nations' (Macmillan, London, 1960, for International Economic Association), pp. 223–40ஐப் பார்க்கவும்.

[2] A. R. Prest, 'Fiscal Survey of British Caribbean, p. 131 ஐப் பார்க்கவும்.

ஒவ்வொன்றின் அளவு, இவற்றிற்கு நேரக்கூடிய பொருளாதாரத் துன்பங்களின் வகைகள் (ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் வெவ்வேறு பகுதிகளில் நேரக்கூடிய துன்பங்களையும் கணக்கிட்டுக்கொள்ள வேண்டும்) ஆகியவற்றைக் கணக்கிட்டால் இவ்வாறு கூட்டரசில் விளையக்கூடிய பயன்களின் முக்கியத்துவத்தை அறிந்துகொள்ள முடியும். எனவே, இவ் விஷயம் கருத்துச் செறிவானது என்பதில் ஐயமில்லை. அரசாங்கங்கள் தமக்குத் தேவையான கடன்களை எழுப்பும் விஷயத்தைப் பொறுத்தவரையில், பல தனித்த சிறு நாடுகளைவிடக் கூட்டரசு நாடே சிறந்த நிலையில் உள்ளதென்று கூறலாம். கூட்டரசு நாடு ஒன்றில் மூலதனமானது உள் நாட்டிற்குள் தடையின்றி ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சென்று வர முடியும்; மூலதனமானது இவ்வாறே வெளிநாடுகட்கும் சென்று வர முடியும். எனினும், கூட்டரசுகளில் பெரும்பாலும் மாகாண அரசாங்கங்களைவிட மத்திய அரசாங்கமானது குறைந்த செலவில் கடன்களை எழுப்ப முடிகின்றது. இந்த வாய்ப்பான நிலையைச் சிறப்புறப் பயன்படுத்தவேண்டுவது கூட்டரசின் தலையாய பணிகளுள் ஒன்றாக இருக்கவேண்டும்.

நாம் இதுகாறும் கூறிய விளக்கத்தினின்றும் பொருளாதார அம்சங்களைப் பொறுத்தவரையில் கூட்டரசு நாட்டிற்கும் ஒருமுக அரசு நாட்டிற்கும் இடையே உள்ள இயல்பான வேறுபாடுகள் மிகச் சிலவேயாகும் என்பதை அறியலாம். ஒருமுக அரசில் மத்திய அரசாங்கம் மட்டும் இடம்பெற்றுள்ளது. ஆனால், கூட்டரசில் மத்திய அரசாங்கம் மட்டுமன்றி மாகாண அரசாங்கங்களும் இடம் பெற்றுள்ளன; இந்த ஒரு வேறுபாட்டை ஒட்டியே இவ்விருவகை அரசுமுறைகட்கும் இடையே பொருளாதார வேறுபாடுகள் உள்ளன என்பதை நாம் அறிந்துகொள்ளவேண்டும். இதை அறிந்து கொண்டால், கூட்டரசிலுள்ள முக்கியமான நிதிப் பிரச்சினைகளை எளிதில் விவாதிக்க முடியும்.

### கூட்டரசு நிதிகள்

இணைந்த கூட்டரசு முறையை ஒட்டியோ அல்லது பிரிந்த கூட்டரசு முறையை ஒட்டியோ, கூட்டரசு ஒன்று நிறுவப்பட இருக்கிறது என்றும் இவ் அரசில் மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்கட்கும் இடையே ஏற்படக் கூடிய நிதி சம்பந்தமான பிரச்சினைகளைத் தீர்த்துவைக்க வேண்டியுள்ளது என்றும் வைத்துக்கொண்டு, கூட்டரசு நிதிகளுடன் தொடர்புடைய கொள்கைகளையும் நடைமுறைகளையும் ஆராயத் தலைப்படுவோம். கூட்டரசில் மத்திய அரசாங்கத்தின் வருவாயானது, செலவைவிட அதிகமாக இருக்கலாம். அல்லது,

மாகாண அரசாங்கங்களின் வருவாயானது செலவை விட அதிகமாக இருக்கலாம். இவ்வாறன்றி, மத்திய அரசாங்கத்தின் செலவானது, வருவாயைவிட அதிகமாக இருக்கலாம். அல்லது மாகாண அரசாங்கங்களின் செலவானது, வருவாயைவிட அதிகமாக இருக்கலாம். எனினும், பெரும்பாலும் மாகாண அரசாங்கங்களைவிட மத்திய அரசாங்கத்தின் வருவாயே செலவைவிட அதிகமாக இருந்துவருகின்றது என்ற உண்மையை வரலாறு தெளிவுறுத்துகிறது. அதற்கான காரணம் வருமாறு: கூட்டரசு ஏற்படுவதை ஒட்டி சுங்க ஒன்றிப்பு அல்லது நாடு முழுவதற்கும் பொதுவான (மத்திய அரசாங்கத்தால் நிருவகிக்கப்படுகின்ற) சுங்கமுறை நிருவப்பெறுகின்றது.[1] இதனுல், இறக்குமதி வரி விதிக்கும் உரிமையை மத்திய அரசாங்கமே பெற்றிருக்கின்றது. எனவே, இறக்குமதி வரியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய் முழுவதையும் மத்திய அரசாங்கமே பெற்றுவருகின்றது. பின்தங்கிய நாடுகளில் பொதுவாக மொத்த வரி வருவாயில், இறக்குமதி வரிகள் மூலம் கிடைத்துவருகின்ற வருவாயே பெரும் பங்கு வகித்து வருகின்றது. எனவே, இந் நாடுகளில் மொத்த வரிவருவாயில் மாகாண அரசாங்கங்களைவிட, மத்திய அரசாங்கமே பெரும் பங்கு பெற்றுவருகின்றது. இவ்வாருன சூழ்நிலையில், நாட்டின் மொத்தச் செலவில் மாகாண அரசாங்கங்களைவிட மத்திய அரசாங்கத்தின் பங்கு குறைவாக இருந்தால் மத்திய அரசாங்கத்தின் செலவைவிட வருவாயே அதிகமாக இருக்கும். இவ்வாறன்றி, நாட்டின் மொத்தச் செலவில் மத்திய அரசாங்கத்தைவிட மாகாண அரசாங்கங்களின் பங்கு குறைவாக இருந்தால், மாகாண அரசாங்கங்களின் செலவைவிட வருவாயே அதிகமாக இருக்கும். இதுநிற்க. பிரிந்த கூட்டரசு முறையை ஒட்டி ஏற்பட்டுள்ள கூட்டரசு நாட்டில் மத்திய அரசாங்கமானது பெரிதும் ஆற்றலுடன் திகழக்கூடும். ஆனுல், இணைந்த கூட்டரசு முறையை ஒட்டி ஏற்பட்டுள்ள கூட்டரசு நாட்டில் மத்திய அரசாங்கமானது இந்த அளவுக்கு ஆற்றலுடன் திகழ்ந்துவரும் என்று கொள்வதற்கில்லை. எனவே, இதுபோன்ற கூட்டரசுகளில் ஆரம்பத்திலிருந்தே மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்கட்கும் இடையே பெரிதும் சமனற்ற நிலை தோன்றி இருக்கக்கூடும்.

[1] மேற்கிந்தியத் தீவுக் கூட்டரசை உருவாக்குவதற்கான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தபொழுது மத்திய அரசாங்கமே இறக்குமதி வரிகள் யாவற்றையும் வசூல் செய்யவேண்டும் என்ற கருத்துத் தெரிவிக்கப்பட்டது. ஆனுல், இறுதியாகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளில் இக் கருத்தை ஏற்கவில்லை. இக் கூட்டாட்சியில் மாகாண அரசாங்கங்கள் தொடர்ந்து சுங்கவரி விதிக்கும் அதிகாரம் பெற்றிருப்பதே இதற்குக் காரணமாக இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

காலப்போக்கில் வேறுபல நிதிப்பிரச்சினைகள் உருவாகக்கூடும். மத்திய அரசாங்கம், மாகாண அரசாங்கங்கள் ஆகியவற்றின் தராதர நிலையில் மாற்றங்கள் நேரலாம். இது சம்பந்தமாக நாம் பல விஷயங்களைக் கவனிக்கவேண்டியுள்ளது. முதற்கண், மாகாணங்களின் வருவாயைவிட மத்திய அரசாங்கத்தின் வருவாயானது விரைந்து அதிகரித்துக்கொண்டிருக்கலாம். உதாரணமாக, கம்பெனி வரிகள் மத்திய அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பெற்றிருந்தால் இவ்வாறு நேரக்கூடும். ஏனெனில், கம்பெனிமுறை கையாளப்படாத துறைகளைவிடக் கம்பெனித்துறையே நாட்டில் விரைந்து வளர்ச்சியடைந்துவரமுடியும். இரண்டாவதாக, மத்திய அரசாங்கச் செலவுகளைவிட மாகாண அரசாங்கச் செலவுகள் விரைந்து அதிகரித்துக்கொண்டிருக்கலாம். இவ்விரு காரணங்களையும் முன்னிட்டு, காலப்போக்கில் மத்திய அரசாங்கத்திடம் உபரியும் அல்லது மாகாண அரசாங்கங்கட்குப் பற்றுக்குறையும் அல்லது இவ்விரண்டு விளைவுகளும் நேரலாம். ஆரம்ப காலத்தில், ஒரு கூட்டரசானது மத்திய அரசாங்க உபரியுடனும் மாகாண அரசாங்கப் பற்றுக்குறைகளுடனும் செயலாற்றத் தொடங்கியிருந்தால், மத்திய மாகாண அரசாங்கங்களின் செலவு, வருவாய் ஆகிய இரண்டும் ஒரே வீதத்தில் வளர்ந்துகொண்டிருந்தபோதிலும், காலப்போக்கில் மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்கட்கும் இடையே ஓர் சமனற்ற நிலையே வளர்ந்திருப்பதை நாம் காணமுடியும். சமூக சேவைகட்கான செலவு அளவுக்குமீறி அதிகரிப்பதே இதுபோன்ற சிரமங்கட்குக் காரணம் ஆகும் என்று வரலாற்றின் அடிப்படையில் அமைந்துள்ள உண்மைகள் புலப்படுத்துகின்றன. சமூகப் பாதுகாப்பானது மாகாண அரசாங்கங்களின் பொறுப்பாக இருந்து வருவதால் மாகாண அரசாங்கங்கள் நிதிநெருக்கடிகட்கு உள்ளாகி வருகின்றன. இந் நிலையில் கூட்டரசிலுள்ள பின்தங்கிய மாகாணமே பெரிதும் நிதிநெருக்கடிகட்கு உள்ளாகிவருகின்றது.

மாகாணங்கள் பலவற்றின் வளர்ச்சிவீதம் ஒரேமாதிரியாக அமையாது பலவாறுக அமைவதால் என்னென்ன பிரச்சினைகள் தோன்றக்கூடும் என்பதை நாம் அடுத்து ஆராயவேண்டியுள்ளது. முதலாவதாக, கூட்டரசின்கீழ் சில மாகாணங்களின் வளர்ச்சிவீதம் மிகக் குறைவாகவும் வேறு சில மாகாணங்களின் வளர்ச்சிவீதம் மிக அதிகமாகவும் இருக்கக்கூடும். கூட்டரசில் ஒரு மாகாணத்தினின்றும் பிறிதோர் மாகாணத்திற்கு பொருள்களும் உற்பத்திக் காரணிகளும் தடையின்றி சென்றுவரமுடிவதை ஒட்டி மாகாணங்கள் பலவற்றின் தலா வருமானங்கள் பெரிதும் வேறுபட்டு விளங்கக்கூடிய நிலை உருவாகாது தடுக்கப்படும் என்பது உண்மையேயாயினும், மாகாணங்கட்கிடையே வளர்ச்சிவீதத்தைப் பொறுத்தவரையில் ஏற்றத்

தாழ்வுகள் இருந்தேவருகின்றன. இதனல் குறைந்தபட்சம் இரண்டு நிதிப் பிரச்சினைகள் உருவாகக்கூடும். முதலாவதாக, கூட்டரசின் ஆரம்பகாலத்தில் உபரி, பற்றுக்குறை ஆகியவற்றைப் பொறுத்த வரையில் மாகாணங்கட்கிடையே எவ்விதமான வேறுபாடுகள் இருந்திருக்கக்கூடுமோ அதைவிட மாறுபட்ட வேறுபாடுகள் காலப் போக்கில் தோன்றிவிடும். விரைந்த வளர்ச்சிவீதத்தை உடைய மாகாணங்கள், குறைந்த வளர்ச்சிவீதத்தையுடைய மாகாணங்களை விட (வருவாய், செலவு ஆகிய இரண்டைப் பொறுத்தவரையிலும்), பெரிதும் பயனடைவதே இதற்கான காரணமாகும்.[1] இரண்டாவ தாக, குறைந்த வளர்ச்சிவீதத்தை உடைய மாகாணங்கள் மத்திய அரசாங்கத்திடமிருந்தும் முன்னேற்றம் அடைந்துள்ள அண்டை மாகாணங்களிடமிருந்தும் உதவிபெற முயலலாம். இது போன்ற நிலையில் ஆரம்பத்தில் செய்யப்பட்ட ஏற்பாடுகள் காலப்போக்கிலும் பொருந்தக்கூடியவையாக இருக்கும் என்று கொள்வதற்கில்லை.

ஆரம்ப காலத்திலும் காலப்போக்கிலும், அரசாங்கத்தின் செலவு, வருவாய் ஆகியவற்றில் நேரக்கூடிய சமனற்றநிலையை, பல வழிகளைக் கையாண்டு திருத்தி அமைக்க முடியும். இயல்பாகவே இவ்வாருன நிலை நேருவதைத் தடுக்குமுகத்தான், ஆரம்பகாலத் திலிருந்தே மாகாணங்கட்கு வரிகளின்மூலம் போதுமான அளவு வருவாய் கிடைத்துவருவதற்கான ஏற்பாடுகள் செய்யலாம். இந்த ஏற்பாடுகளைச் செய்வதற்குப் பொருத்தமான வரிகள் யாவை என்பதுகுறித்து அடுத்து நாம் ஆராயவேண்டியுள்ளது. சாதாரண மாக மாகாண அரசாங்கங்கட்கென்று ஒதுக்கப்படுகின்ற வரி களின் எண்ணிக்கை குறைவானதே யாகும். சொத்துவரியை மாகாணங்கட்கு ஒதுக்குவது பயனளிக்கக்கூடியதா என்று ஆராய் வோம். இது ஒரு சிறந்த வரி என்பதில் ஐயமில்லை. ஆனல், பின் தங்கிய நாடுகளில் சொத்துவரி முக்கியத்துவம் ஏதுமின்றித் திகழு கின்றது. இதைப்பற்றி விரிவாக நாம் அத்தியாயம் இரண்டில் ஏற்கெனவே விளக்கியுள்ளோம். செய்பொருள் வரிகளை மாகாணங் கட்கு ஒதுக்குவது சிறந்த பலனளிக்கக்கூடியதா என்பதை அடுத்து ஆராய்வோம். இவ் வரியிலும் பல குறைபாடுகள் உள்ளன. முதற் கண், இந் நாடுகளில் உற்பத்தியாகக்கூடிய பொருள்கள் மிகக் குறைவானவையேயாகும். பீர், சிகரெட், சோப் போன்ற பொருள்

[1] கிழக்கு ஆப்பிரிக்காவில் கூட்டரசுமுறை இல்லாவிட்டாலும், கென்யா வில் தொழில் வளர்ச்சியானது துரிதப்படுத்தப்பட்டிருப்பதனல் தங்கனிக்கா, உகாண்டா ஆகிய நாடுகளின் நிதிகள் எவ்வாறு பாதிக்கப்பட்டுள்ளன என்று திரு. நியூலின் அவர்கள் ('Federalism and Economic Growth,' p. 101)கொடுத் துள்ள உதாரணமானது மேலே நாம் விவாதித்துள்ள பிரச்சினைக்கும் சிறந்த தோர் எடுத்துக்காட்டாகத் திகழுகின்றது.

கள் தவிர ஏனைய பொருள்கள் இந் நாடுகளில் பெரிதும் உற்பத்தி செய்யப்படுவதில்லை. இரண்டாவதாக, செய்பொருள் வரிவீதம் மாகாணத்திற்கு மாகாணம் வேறுபடலாம். எனவே, ஒரு மாகாணத்தின் எல்லைப் பகுதிகளிலிருந்து பிறிதோர் மாகாணத்தின் எல்லைப்பகுதிகட்குப் பொருள்கள் கடத்தப்படலாம். இங்கு நாம் குறிப்பிட்டுள்ள இரண்டு குறைகளில், இரண்டாவது குறையானது சில சந்தர்ப்பங்களில் நேர வாய்ப்பு இல்லாதிருக்கலாம். உதாரணமாக, மாகாணங்களின் எண்ணிக்கை குறைவாக இருக்கும்பட்சத்தில் கள்ளக்கடத்தல்கள் பெரும் அளவுக்குச் செய்யப்படும் என்று கூறமுடியாது. இதேபோல, வரிவீதங்களிலுள்ள வேறுபாடு மிகமிகக் குறைவாக இருந்தாலும் கள்ளக்கடத்தல்கட்கான வாய்ப்புகள் குறையும். ஆனால், நாம் இங்கு விளக்கியுள்ள முதலாவது குறைபாடானது உண்மையிலேயே, செய்பொருள் வரி விதிப்பதைப் பொறுத்தவரையில், பெரிய குறைபாடாகும். வட அமெரிக்காவில் செய்திருப்பதைப் போல விற்பனை வரிகளை மாகாணங்கட்கு ஒதுக்கலாம் என்று சொல்லத் தோன்றலாம். ஆனால்,இவ் வரியும் பெரிதும் பயனளிக்கக்கூடியதன்று என்பது உண்மையாகும். பின்தங்கிய நாடுகளில் விற்பனை வரிகளால் பெரிதும் பயன் விளையக்கூடும் என்று எதிர்பார்க்க முடியாது என்று நாம் ஏற்கெனவே மூன்றும் அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். ஏற்றுமதி வரிகளை மாகாணங்கட்கு ஒதுக்குவதற்கான சாத்தியக் கூறுகளை அடுத்து ஆராய்வோம். ஏற்றுமதி வரிகளைப் பொறுத்தவரையில் நாம் சில விஷயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டியுள்ளது. கூட்டரசில் ஒரு மாகாணத்திலிருந்து ஏனைய மாகாணங்களின்வழியாகச் செல்லக்கூடிய பொருள்களின்மீது ஏனைய மாகாணங்களால் வரிவிதிக்கப் பெறலாம் (அல்லது ஓர் அரசாங்கம் வேறோர் அரசாங்கத்திற்குப் பணத்தைத் திருப்பிக் கொடுக்கவேண்டிய முறை சிக்கல்கள் நிறைந்ததாக இருக்கலாம்). எனவே, ஏற்றுமதி வரியை மாகாணங்கட்கு என்று ஒதுக்கினால், இதை ஒட்டி சில இடர்ப்பாடுகள் நேரலாம். இவ் இடர்ப்பாடுகள் நேராது தடுக்குமுகத்தான் பொருள்களை ஏற்றுமதி செய்யக்கூடிய மாகாணங்களே வெளிநாடுகளுடன் நேரடியான தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்வதற்கான வசதிகளைச் செய்யவேண்டும். இவ்வாறு ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்தின் வழியாகப் போகக்கூடிய பொருள்களின்மீது பெரும்பான்மையான கூட்டரசு நாடுகளில் வரிவிதிப்பதில்லை. இப் பொதுவான விதிக்கு மேற்கிந்தியத் தீவுக் கூட்டரசு விலக்காக உள்ளது. கம்பெனி வரிகளை மாகாணங்கட்கு மட்டும் என்று ஒதுக்குவது விரும்பத்தக்கதன்று. இவ்வாறு செய்தால் பல பிரச்சினைகள் தோன்றக்கூடும். பல மாகாணங்களில் கிளைகளை நிறுவியுள்ள கம்பெனிகள்மீது எந்த அடிப்படையில் வரி விதிப்பது? என்ற சிக்கலான பிரச்சினை தோன்றும்.

மேலும், நாட்டிலுள்ள கம்பெனிகள் எல்லாவற்றின்மீதும் ஒரே வீதத்தில் வரி விதிக்காது புல வீதங்களில் வரி விதித்தால், அயல்நாட்டுக் கம்பெனிகளும் அயல்நாட்டு முதலீடுகளும் பலவாருன வரி வீதங்கட்கு உட்படுத்தப்படும். இதனல் இந்நாட்டினருக்குச் சிலபிரச்சினைகள் தோன்றலாம். சாதாரணமாக மத்திய அரசாங்கமே இறக்குமதி வரிகளை விதித்து வருகின்றது (நாடு முழுவதற்கும் பொதுவான சுங்க முறை இல்லாத கூட்டரசு நாடுகள் இதற்கு விலக்காகும்). (அண்மைக்காலத்தில் நைஜீரியாவில் செய்திருப்பதைப் போல)[1] தனியார் வருமான வரியை மாகாணங்கட்கு ஒதுக்கலாம். ஆனல், பெரிதும் முக்கியத்துவம் உடைய இவ் வரியின்மீதான உரிமையை மத்திய அரசாங்கமானது சாதாரணமாக விட்டுக்கொடுத்துவிடும் என்று கருதுவதற்கில்லை.

சில குறிப்பிட்ட வரிகளை மாகாணங்கட்கு என்று ஒதுக்குவதன் மூலம் மாகாணங்களின் வருவாய், செலவு ஆகியவற்றைச் சமன் செய்ய முடியாவிட்டால் வசூலிக்கப்பட்ட வரித்தொகையை மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் தங்கட்கிடையே பகிர்ந்து கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்வதே சிறந்த வழி என்று தோன்றுகிறது. இவ் ஏற்பாடுகளைப் பல விதத்தில் உருவாக்க முடியும். மத்திய அரசாங்கம் விதித்து வசூலித்து வரக்கூடிய வரியினின்றும் கிடைக்கக்கூடிய தொகையை, மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும், தங்கட்கிடையே ஏற்பட்டுள்ள உடன்படிக்கையின் அடிப்படையில் பகிர்ந்துகொள்வது ஒரு முறையாகும். ஒரு மாகாணம் இவ் வரியின்மூலம் எவ்வளவு தொகையை வசூலித்திருக்குமோ அதற்கு ஏற்ப அந்த மாகாணத்தின் பங்கை நிர்ணயிக்கலாம். இதுபோன்ற முறையே நைஜீரியாவில் 1950—9-ல் கடைப்பிடிக்கப் பட்டது. நைஜீரியாவில் மத்திய அரசாங்கம் இறக்குமதி வரி விதித்து வருகின்றது. ஒவ்வொரு மாகாணமும், எந்த அளவுக்கு இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களை நுகர்ந்திருக்குமோ, அதற்கு ஏற்ப இவ் வரியினின்றும் கிடைத்த வருவாயானது, மாகாணங் கட்கிடையே பகிர்ந்தளிக்கப்பட்டது. நைஜீரியாவில் மாகாணங்களின் வருவாயில் இவ் வருவாயே பெரும் பங்கு வகித்துவந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும். கனடாவில் பல ஆண்டுகளாக நேர்முக வரிகளை விதிக்கும் உரிமையை மாகாண அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்திற்கே வழங்கி இருந்தன. இதற்கு ஈடாக, ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் இவ் வரிகளின்மூலம் வசூல் செய்யப்பட்ட வரித் தொகைக்கு ஏற்ப, இவ் வரிகளின்மூலம் கிடைத்த தொகையானது, மாகாணங்கட்கிடையே பகிர்ந்தளிக்கப்பட்டு வந்-

[1] Report of 'Fiscal Commission for Nigeria' (Cmnd. 481, HMSO, London, July 1958).

தது. 1962 ஆம் ஆண்டு ஏப்ரல் 1ஆம் தேதி முதல் இம் முறைக்கு ஒரு முடிவுகட்டுவதற்கான ஏற்பாடுகள் கனடாவில் செய்யப்பட்டு வருகின்றன. எனினும், கனடாவில் 1962 ஆம் ஆண்டிற்கு முன்பு கடைப்பிடிக்கப்பட்டுவந்த முறையானது, பங்கீட்டுக் கொள்கைக் குச் (principle of derivation) சிறந்ததோர் எடுத்துக்காட்டாகத் திகழுகின்றது.

பங்கீட்டுக் கொள்கையின் அடிப்படையிலன்றி வேறு முறை களிலும், மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங்கள் ஆகியவற் றிற்கிடையே, வரிவருவாயைப் பகிர்ந்தளிப்பதற்கான ஏற்பாடு களைச் செய்யலாம். மத்திய அரசாங்கமானது மாகாண அரசாங்கங் கட்கு ஒரு குறிப்பிட்ட மொத்தத் தொகையை அளிக்க முன்வரலாம். அல்லது குறிப்பிட்ட வரிகளினின்றும் கிடைத்து வரக்கூடிய வரு வாயில் ஒரு குறிப்பிட்ட சதவீதமானது மாகாணங்கட்கு வழங்கப் படலாம். இந்த ஏற்பாடுகளின்கீழ், மாகாணங்கள் யாவும் பெறக் கூடிய மொத்தத் தொகையை மத்திய அரசாங்கம் நிர்ணயிக்கலாம். அல்லது ஒவ்வொரு மாகாணமும் பெறக்கூடிய தொகையானது தனித்தனியே நிர்ணயிக்கப்படலாம். ஒவ்வொரு மாகாணமும் பெறக்கூடிய தொகையை நிர்ணயிக்கும்பொழுது ஒரு மாகாண மானது கூட்டரசில் அங்கம் வகிப்பதற்கு முன்பு தனிநாடாக இருந்த சமயம் எவ்வளவு வருவாய் ஈட்டிக்கொண்டிருந்திருக்குமோ, அதற்கு ஈடாக, அம் மாகாணம் பெறக்கூடிய தொகையை நிர்ணயிக் கலாம். இவ்வாறன்றி ஒரு மாகாணத்தின் ஜனத்தொகைக்கு ஏற்ப இத் தொகையானது நிர்ணயிக்கப்படலாம். அல்லது மாகாணத்தின் தேவையை உணர்த்தக்கூடிய இதுபோன்ற வேறு எளிய அளவை களின் அடிப்படையில் இத் தொகையானது நிர்ணயிக்கப்பெறலாம். உதாரணமாக, இந்தியாவில் ஒரு குறிப்பிட்ட வரியினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை மத்திய அரசாங்கமானது மாகாணங்கட்கு வழங்கிவருகின்றது. இந்தத் தொகையில் ஒவ்வொரு மாகாணத்தின் பங்கும் ஜனத்தொகையின் அடிப்படையிலோ அல்லது வேறு அளவைகளின் அடிப்படையிலோ நிர்ணயிக்கப்பெறுகின்றது.

நாம் மேலே விளக்கியுள்ள முறைகளினின்றும் வேறுபட்ட மற் றும் ஓர் முறையையும் கையாளலாம். இம் முறையின்கீழ், மத்திய அரசாங்கத்திற்கு என்று ஒதுக்கப்பட்டுள்ள வரியானது எந்த சத வீதத்தில் விதிக்கப்பெறுகின்றதோ அதோடு சேர்த்துக் கூடுதலான சதவீதத்தை விதிக்கும் உரிமையை மாகாண அரசாங்கங்கட்கு வழங்கலாம். உதாரணமாக, ஸ்விட்சர்லாந்தில் இம் முறை கடைப் பிடிக்கப்பட்டு வருகின்றது. இந் நாட்டில் கேண்டன் (canton)

விதித்துவருகின்ற வருமானவரியின்மீதும் மூலதன வரியின்மீதும் கம்யூன்கள் (communes) ஒரு ஃபிராங்கிற்கு ஒரு சென்டைம் (centime) மிகுதியான வரிவிதித்து வருகின்றன. கேன்டன்களும் கம்யூன்களும் ஒருங்கே இவ் வரிகளை விதித்துவந்தபோதிலும் கம்யூன்களே இவ் வரிகளை வசூலித்துவருகின்றன. இதேபோன்ற ஏற்பாடுகள் அண்மையில் ரொடீஷியா—நயாஸாலாந்து[1] கூட்டரசில் செய்யப்பட்டுள்ளன. மேலும், நைஜீரிய நாட்டில் மேற்குப் பிரதேசத்திலுள்ள அரசாங்கமும் ஸ்தலஸ்தாபனங்களும்[2] தங்கட்கிடையே இது போன்றதோர் ஏற்பாட்டைச் செய்துள்ளன. எனினும், இம்முறை கடைப்பிடிக்கப்பட்டுவருகின்ற விதமானது நாட்டிற்கு நாடு வேறுபட்டு விளங்குகிறது.

வருவாய், செலவு ஆகியவற்றிற்கிடையே ஏற்படக்கூடிய சமனற்ற நிலையைச் சீர்செய்வதற்கு வரிகளைக் கையாளுவதுமட்டும் போதுமானதாகாது என்று தோன்றினுல், மத்திய அரசாங்கமானது மாகாண அரசாங்கங்கட்கு மானியங்களை வழங்க முன்வரவேண்டும். மானியங்கள் பல அடிப்படையில் வழங்கப்பெறலாம். எனினும், குறிப்பிட்ட செலவினங்களோடு இணைக்கப்பட்ட மானியங்களைப் பொது மானியங்களினின்றும் வேறுபடுத்திக் காணவேண்டுவது அவசியமாகும். இணைக்கப்பட்ட மானியத்தின்கீழ் (specific grant), குறிப்பிட்ட இனம் ஒன்றிற்காக மாகாண அரசாங்கம் எவ்வளவு பணம் செலவிட முன்வருகிறதோ அவ்வளவு தொகையை மத்திய அரசாங்கமானது மாகாண அரசாங்கத்திற்கு மானியமாக வழங்கும். உதாரணமாக, போலீஸ் சேவைகட்காக மாகாண அரசாங்கமானது ஒரு மில்லியன் பவுன் தொகையைச் செலவிட முன்வந்தால், இதற்கென்று மத்திய அரசாங்கமானது ஒரு மில்லியன் பவுன் தொகையை மாகாண அரசாங்கத்திற்கு மானியமாக அளிக்கும். பொதுவான மானியத்தின்கீழ் (not related to any specific item of expenditure) மாகாணங்களின் தேவையை உணர்த்தக்கூடிய ஜனத்தொகை, குழந்தைகளின் எண்ணிக்கை, சாலைகளின் நீளம், போன்ற அளவைகளின் அடிப்படையில் மானியம் வழங்கப்பெறுகின்றது. இணைக்கப்பட்ட மானியத்திற்கும் பொதுவான மானியத்திற்கும் இடையேயுள்ள முக்கிய வேறுபாட்டைக் கீழே தந்துள்ள உதாரணம் நன்கு புலப்படுத்தும். கல்விச்செலவுக்கென்று இணைக்கப்பட்ட மானியம் வழங்கப்படுகின்றது என்று வைத்துக்கொள்வோம். பள்ளி செல்லும் குழந்தைகளின் அடிப்படையில் பொதுவான மானியம் வழங்கப்படுகின்றன

[1] இவ் அத்தியாயத்தின் கடைசிப் பத்தியைப் பார்க்கவும்.

[2] U. K. Hicks, 'Development from Below' (Oxford, 1961) p. 179.

என்று வைத்துக்கொள்வோம். கல்விக்காகவே பணத்தைச் செலவழித்தால்தான் இணைக்கப்பட்ட மானியம் வழங்கப்படும். பொதுவான மானியத்தைக் கல்விக்காகவே செலவளிக்கவேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை.[1] இது நிற்க. மானியம் எவ்வகையைச் சார்ந்ததாக இருப்பினும், அது குறுங்காலத்திற்கென்று வழங்கப்படலாம் அல்லது நிரந்தரமாகவே வழங்கப்பட்டு வரலாம்.

கூட்டரசு நிதி சம்பந்தமான சில பிரச்சினைகள் காலப்போக்கிலேயே ஏற்படக்கூடியவை என்று நாம் ஏற்கெனவே கண்டோம். அதாவது, கூட்டரசின் ஆரம்பகாலத்தில் செம்மையான ஏற்பாடுகளைச் செய்திருந்தபோதிலும் அவை காலப்போக்கில் பழுதுள்ளவையாக மாறக்கூடும். இவ்வித மாற்றங்கள் நேராதவண்ணம் கண்காணித்துக்கொள்ள, கொள்கை அளவில் இரண்டு வழிகளைக் கையாளலாம். முதலாவதாக, நிதி ஏற்பாடுகளை ஆராய்வதற்கென்று, குறிப்பிட்ட ஆண்டுகட்கு ஒருமுறை, ஏற்பாடுகள் செய்யலாம். உதாரணமாக, ஐந்து ஆண்டுகட்கு ஒருமுறை நிதிக் கமிஷன் ஒன்று நிறுவப்பெற வேண்டும் என்ற ஷரத்தானது இந்திய அரசியல் சட்டத்தில் உள்ளது. இந்த நிதிக் கமிஷன் ஆராயவேண்டிய விஷயங்கள் யாவை என்பதையும் அரசியல் சட்டம் தெளிவுறுத்தியுள்ளது. மத்திய அரசாங்க வரிகளினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயில் மாகாணங்கட்குப் பகிர்ந்தளிக்கப்படவேண்டிய பங்கு எவ்வளவாக இருக்க வேண்டும்? எந்த அடிப்படையில் இத் தொகையை மாகாணங்கட்கிடையே பகிர்ந்தளிக்க வேண்டும்? மாகாணங்கட்கு எந்தக் கொள்கையின் அடிப்படையில் உதவி மானியங்கள் வழங்குதல் வேண்டும்? என்பவைகுறித்து இந் நிதிக் கமிஷன் பரிந்துரைகள் வழங்கவேண்டும் என்று அரசியல் சட்டம் கூறுகின்றது. குறிப்பிட்ட காலத்திற்கு ஒருமுறை தவருமல் வரிமுறையை ஆராய்வதற்கென்று நைஜீரியாவில் கமிஷன் ஒன்றினை நிறுவவேண்டும் என்று இந் நாட்டு வரிமுறையைக் கடைசியாக ஆராய்ந்த கமிஷன் பரிந்துரைத்துள்ளது.[2] இரண்டாவதாக, மாகாணங்களின் வருவாய், செலவு ஆகியவற்றிற்கிடையே சமனற்ற நிலை தோன்றுமேயாயின், வெளிச்சார்பு ஏதுமின்றி அதை உடனடியாக சரிப்படுத்தக்கூடிய

[1] மேலே நாம் விளக்கியுள்ள இரண்டு வகையான மானியங்களின் சிறப்பு அம்சங்கள் பொருந்தப்பெற்ற மூன்ருவது முறை ஒன்றும் உள்ளது. இது விசேஷ மானிய முறையாகும். நெருக்கடி நிலைகள், இயற்கையின் சீற்றங்கள் ஆகியவற்றை ஒட்டி நேரக்கூடிய செலவுகளை ஈடுகட்டுவதற்காக இம் மானியம் வழங்கப்படுகிறது. இந்த மூன்ருவது வகை மானியத்தைப்பற்றி இங்கு விவாதிக்கும் நோக்கம் நமக்கு இல்லை.

[2] 'Report of Fiscal Commission for Nigeria' (Cmnd, 481, HMSO, London, July 1958) ஐப் பார்க்கவும்.

விதத்தில் வரி அமைப்பையும் மானிய அமைப்பையும் உருவாக்க லாம். இந்த இரண்டாவது முறை மிகவும் சிரமமானது என்பது கூரு மலேயே விளங்கும். ஏனெனில், ஆரம்பத்தில் உருவாக்கப்படுகின்ற ஏற்பாடுகள் பல வழிகளில் நிலை தடுமாறிச் செல்லக்கூடும். இவற் றிற்கு ஏற்ற வகையில் வரி அமைப்பையும் மானிய அமைப்பையும் உருவாக்குவதென்பது சாத்தியமானதொன்றன்று. இது நிற்க. மத் திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் வரியினின்றும் கிடைக் கக்கூடிய வருவாயைப் பொதுவாக எந்த அடிப்படையில் பங்கிட்டுக் கொள்வது பொருத்தமுடையது என்பதுகுறித்து அடுத்து ஆராய் வோம். வரிவருவாயில் ஒரு குறிப்பிட்ட மொத்தத் தொகையை மாகாணங்கட்குப் பகிர்ந்தளிப்பதைவிட ஒரு குறிப்பிட்ட சத வீதத்தை மாகாணங்கட்கு அளிப்பதற்கான ஏற்பாடுகள் செய்வதே சிறந்த முறையாகும். சதவீத முறை கடைப்பிடிக்கப்பட்டால், குறுங் காலத்தில், பொருளாதார வீக்க (boom) காலங்களில் வருவாய் அதிகரிப்பதை ஒட்டி மாகாணங்கள் பயனடையலாம். ஆனல், நாட் டில் மந்தநிலை (slump) ஏற்பட்டால் வருவாய் குறைந்து மாகாணங் களின் பங்கும் குறையும். எனவே, இம் முறையானது மாகாணங் களைப் பொறுத்தவரையில் குறுங்காலத்தில் கேடுகளை விளைவிக்கக் கூடும் என்று கருதலாம். இது உண்மைதான். எனினும், நெடுங்கால அடிப்படையில் நோக்குங்கால் குறிப்பிட்ட மொத்தத் தொகை முறையைவிட சதவீத முறையே மாகாணங்களைப் பொறுத்தவரை யில் பெரிதும் பயனுள்ளதாக அமையக்கூடியது. கூட்டரசு நாடு ஒன்றில் வருவாய், செலவு ஆகியவற்றிற்கிடையே காலப்போக்கில் சமனற்ற நிலை ஏற்படுவதைச் சரிசெய்யும் நோக்கத்தோடு அவ்வப் போது தேவைப்படும்பொழுது நாட்டின் வரிமுறையை ஆராய்வ தற்கென்று விசேஷக் கமிஷன்களை நிறுவலாம் என்று சிலர் கருத் துத் தெரிவித்துள்ளனர். இந் நாடுகளில் குறிப்பிட்ட காலத்திற் கொருமுறை வரிமுறையை ஆராய்வதற்கென்று ஏற்பாடுகள் ஏதும் இல்லாத நிலையில் இதுபோன்ற முறை பயனளிக்கக்கூடுமா என்பது ஐயப்பாட்டிற்குரிய ஒன்றேயாகும்.

### சாத்தியமான தீர்வுகள்

கூட்டரசு நிதிகள் சம்பந்தமான முக்கியமான பிரச்சினைகள் சில வற்றையும் அவற்றைத் தீர்ப்பதற்கென்று பல காலங்களில் கடைப் பிடிக்கப்பட்ட முறைகளைப்பற்றியும் நாம் இதுகாறும் சுருக்கமாக விளக்கினேம். இந்தப் பல முறைகளில், பொதுவான கொள்கையள வில், எந்தெந்த முறைகள் ஏற்றுக்கொள்ளத்தக்கவை என்பது குறித்து இனி ஆராய்வோம். இதற்காக முதற்கண், மத்திய அரசாங் கத்தினின்றும் மாகாண அரசாங்கங்கள் எந்த அளவுக்கு அரசியல்

விஷயங்களைப் பொறுத்தவரையில் தனித்து இயங்க விரும்புகின்றன என்பதைத் தீர்மானித்துக்கொள்ளவேண்டுவது மிகவும் அவசிய மாகும். மத்திய அரசாங்கத்தின் உரிமைகள் போற்றிப் பாதுகாக்கப் படுவதுபோல மாகாண அரசாங்கங்களின் உரிமைகளும் போற்றிப் பாதுகாக்கப்படவேண்டும் என்று நாம் கருதலாம். இவ்வாறு எண்ணி ஞல், நிதி விஷயங்களைப் பொறுத்தவரையிலும்கூட மாகாண அர சாங்கங்கட்குச் சுதந்திரம் வழங்கப்பட வேண்டும் என்பதையும் ஒப் புக்கொள்ள வேண்டும். எனவே, நிதி விஷயங்களைப் பொறுத்த வரையில் மாகாணங்கள் சுயேச்சையாக இருப்பதற்கு ஏதுவாக அவற்றிற்குச் சில வரிகளை ஒதுக்கவேண்டும். மானிய முறை கைக் கொள்ளுவது இக் குறிக்கோள்களுக்கு ஏற்றதாக அமைய முடியாது. வரிகளைப் பொறுத்தவரையிலும்கூட மத்திய அரசாங்கத்தோடு மாகாண அரசாங்கங்கள் பங்கிட்டுக்கொள்ளவேண்டிய வரிகளைவிட மாகாண அரசாங்கங்களின் முழுக் கட்டுப்பாட்டில் இருக்கின்ற வரி களே இக் குறிக்கோளை அடைவதற்கு உறுதுணையாக இருக்கமுடி யும். மாகாண அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்திடமிருந்து மானி யங்கள் பெறவேண்டிய கட்டாயம் ஏதும் இருந்தால், மாகாண அரசாங்கங்களின் சுதந்திரத்திற்குக் குந்தகம் ஏற்படாதிருக்க வேண்டும் என்று எண்ணிஞல், குறிப்பிட்ட செலவினங்களோடு இணைக்கப்படாத பொதுவான மானியங்களே வழங்கப்பெறவேண் டும். நாம் இங்கு விளக்கியுள்ள முறைகள் நாட்டிற்கு நாடு வேறுபட் டுத் திகழலாம். இங்கு நாம் விளக்கியுள்ள விஷயங்கள் கூட்டரசின் தன்மையை—கூட்டரசில் மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண அர சாங்கங்கட்கும் இடையே நெருக்கமான உறவுகள் இருக்கின்றதா அல்லது ஓரளவுக்குத்தான் உறவுகள் இருக்கின்றதா என்பதைப்— பொறுத்தவையாகும். எனினும், அடிப்படைக் கருத்து யாவருக்கும் விளங்கி இருக்கும் என்று எண்ணுகிரேம்.

இரண்டாவதாக, மானியங்கள் எந்த அடிப்படையில் வழங்கப் பெறவேண்டும்? தான் வசூலித்துள்ள வரித்தொகையை ஓர் அர சாங்கம் பிறிதோர் அரசாங்கத்திற்கு எந்த அடிப்படையில் திருப்பிக் கொடுக்கவேண்டும்? என்ற விஷயங்களை நாம் ஆராயவேண்டும். ஒரே அளவு ஜனத்தொகையுள்ள இரண்டு மாகாணங்களில் ஒரு மாகாணம் விரைந்து வளர்ச்சியுற்றுவருகின்றது என்றும் இரண்டா வது மாகாணம் வளர்ச்சி ஏதுமின்றி தேக்கமுற்றிருக்கின்றது என் றும் வைத்துக்கொள்வோம். இவ் இரண்டு மாகாணங்களுக்கும் மத்திய அரசாங்கமானது தான் வசூலித்துள்ள பணத்தை எந்த அடிப்படையில் பகிர்ந்தளிக்கவேண்டும் என்ற விஷயத்தை நாம் தீர்மானிக்கவேண்டியுள்ளது. மக்களுக்குத் தலா இவ்வளவு பணம்

என்ற அடிப்படையில் ஒரு சமமான தொகையை இவ் இரண்டு மாகாணங்கட்கும் வழங்குவது சரியான கொள்கையா? அல்லது தலா தொகையானது, தேக்கமுற்றுள்ள மாகாணத்தைவிட வளர்ச்சியுற்றுள்ள மாகாணத்திற்கு, அதிகமாக அளிக்கப்படுவது சரியான கொள்கையா? அல்லது தலா தொகையானது, வளர்ச்சியுற்றுள்ள மாகாணத்தைவிட தேக்கமுற்றுள்ள மாகாணத்திற்கு அதிகமாக அளிக்கப்படுவது சரியான கொள்கையா? என்பதை நாம் தீர்மானிக்கவேண்டியுள்ளது. முதலாவது கொள்கையைக் கடைப்பிடித்தால், அது ஜனத்தொகையின் அடிப்படையில் வரித்தொகையானது மாகாணங்கட்குப் பகிர்ந்தளிக்கப்படுவதை ஒக்கும். இரண்டாவது கொள்கையின் அடிப்படையில் வரித்தொகையானது பகிர்ந்தளிக்கப்பட்டதை ஒக்கும்.[1] மூன்றுவது கொள்கையைக் கடைப்பிடித்தால், அது, மாகாணங்களின் தேவையை ஒட்டி வரித்தொகையானது பகிர்ந்தளிக்கப்பட்டதை ஒக்கும். இம் மூன்று கொள்கைகளில் எக் கொள்கையைக் கடைப்பிடிப்பது என்ற பிரச்சினையானது நெடுங்காலமாகத் தீர்த்துவைக்க முடியாத பெரும் புதிராகவே உள்ளது. எனவே, இப் பிரச்சினைக்குச் சிறப்பான தீர்வு ஏதுமில்லை என்பது தெளிவாகும்.[2]

மூன்றுவதாக, நாட்டிலுள்ள செல்வ வளங்கள் பயன்படுத்தப்படுகின்ற விதத்தை,[3] தன்னுடைய நேரடித் தலையீட்டால், மத்திய அரசாங்கமானது எந்த அளவுக்கு ஒழுங்குபடுத்த முடியும் என்பது குறித்து ஆராய்வோம். போலீஸ், சாலைகள் போன்றவற்றிற்காக மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங்கட்குக் குறிப்பிட்ட செலவினங்களோடு இணைக்கப்பட்ட மானியங்கள் கொடுக்க முன்வந்தால், இதுபோன்ற இனங்கட்கு நாட்டின் செல்வ வளம் அதிகமாகப் பயன்படுத்தப்பெறும். இணைக்கப்பட்ட மானியங்கள் வழங்கப்பெறுவிட்டால், இதுபோன்ற இனங்கட்கு நாட்டின் செல்வ வளம் இந்த அளவுக்குப் பயன்படுத்தப்பெறும் என்று சொல்ல முடியாது. (கட்

1 வரிவருவாய், தலா வருமானம் ஆகியவற்றிற்கிடையே எதிர்மறையான உறவு இருக்கக்கூடிய நிலையில் இது பொருந்தாது. ஏனைய நிலைகளில் இது பொருத்தமுடையதாகும.

2 இந்த விஷயமும் இதனுடன் தொடர்புள்ள விஷயங்களும் , அண்மையில் கீழ்க்காணும் புத்தகத்தில் விவாதிக்கப்பட்டுள்ளது—R. A. Musgrave, 'A Fiscal Theory of Political Federalism' in Universities—National Bureau 'Public Finances' (National Bureau of Economic Research, Princeton University Press, Princeton, 1961).

3 ஒரு பிரதேசத்திற்கும் அண்மையிலுள்ள மற்றொரு பிரதேசத்திற்கும் ஒன்றாக மானியம் வழங்க வேண்டியது நேர்ந்தால், மத்திய அரசாங்கமானது மறைமுகமாகத் தலையிடுவதற்குரிய சூழ்நிலை ஏற்பட முடியும்.

டாயம் இப்படித்தான் நேரும் என்று கொள்வதற்கில்லை. பொது வான மானியங்கள் வழங்கப்படும்போதுகூட, இந்த இனங்கட்காக அதிகமான பணம் செலவழிக்கப்படலாம். எனினும், மாகாண அர சாங்கங்கள் இவ்வாறு செய்யமுனையும் என்பது ஐயப்பாட்டிற்கு உரியதேயாகும்.) தனியார் நலன்கட்கும் சமூக நலன்கட்கும் இடையேயுள்ள வேறுபாடுகளை அகற்றுவதற்காகவும், உதிரிச் சர்வா தீனப் போட்டியைத் (monopolistic competition) தவிர்ப்பதற்காக வும், இதுபோன்ற காரணங்களை முன்னிட்டும் அரசாங்கமானது தனியார் துறையின் நடவடிக்கைகளில் தலையிடுவது நியாயமானதே என்று கொள்ளலாம். ஆனால், தம் இச்சைப்படி தனியார், தொழில் களைத் தேர்ந்தெடுத்துப் பணிபுரிந்து வருவதில் அரசாங்கம் காரண மின்றித் தலையிட ஆரம்பிப்பது விரும்பத்தக்கதன்று. எனினும், இது சர்ச்சைக்குரிய விஷயம் என்று இதை இந்த அளவில் முடித்துக் கொள்கிறோம்.

ஆரம்பத்தில் கூட்டரசில் உருவாக்கப்பட்ட நிதி ஏற்பாடுகளைக் காலப்போக்கிற்கு ஏற்ப எவ்வாறு மாற்றி அமைப்பது? என்ற வினு வுக்கு இறுதியாக விடைகாண வேண்டியுள்ளது. ஆரம்பகாலத்தில் உருவாக்கப்பட்ட முறையானது காலப்போக்கில் குறைகளையுடைய முறையாக மாறிவிடாமல் அவ்வப்போது தேவையான மாற்றங்களை உடனுக்குடன் தானுகவே செய்துகொள்ளக்கூடிய முறையானது கொள்கையளவில் பல நன்மைகளை விளைவிக்கக்கூடியது என்பதில் ஐயமில்லை. ஆனல், இதுபோன்ற முறையை நடைமுறையில் உரு வாக்குவதென்பது எளிதான காரியமன்று. மேலும், இதுபோன்ற முறையினுல் கேடு ஏதும் விளையாது என்று சொல்லமுடியாது. உதா ரணமாக, இதுபோன்றதொரு முறை கைக்கொள்ளப்பட்டால், பொருளாதார வீக்க (boom) காலங்களில் மாகாண அரசாங்கங் களின் வருவாயானது, செலவைவிட அதிகமாக இருக்கும்; பொரு ளாதார மந்த (slump) காலங்களில் மாகாண அரசாங்கங்களின் செலவானது, வருவாயைவிட, அதிகமாக இருக்கும். இந் நிலை யானது வாணிபச் சுழலைத் தடுக்குமுகத்தான் கையாளப்படுகின்ற நிதிமுறையைப் போன்றுள்ளது. ஆனல், இதுபோன்ற விஷயங்கள் —அதாவது, வாணிபச் சுழலைத் தடுக்குமுகத்தான் கையாளப்படு கின்ற நிதிமுறை—மத்திய அரசாங்கத்திற்கு உட்பட்டவையாக இருக்கவேண்டுமேயன்றி மாகாண அரசாங்கங்கட்கு உட்பட்டவை யாக இருத்தல் கூடாது என்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். எனவே, தானுகவே குறைகளைச் சரிசெய்துகொள்ளக்கூடிய முறையா னது விரும்பத்தக்கதன்று என்று முடிவுகட்ட நேர்ந்தால், வேறு ஒரு முறையைக் கைக்கொள்ளலாம். குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு முறை

இந்தியாவில் நிதிக்கமிஷன் ஏற்படுத்துவதுபோலன்றி, நிதி ஏற்பாடு களைத் தொடர்ந்து ஆராய்ந்துகொண்டிருப்பதற்கென்று நிரந்தர மாகவே (உதாரணமாக, ஆஸ்திரேலியாவிலுள்ள மானியக் கமி ஷனைப்போல) ஒரு கமிஷனை ஏற்படுத்துவது சாலச்சிறந்தது என்று தோன்றுகிறது. இவ்வாறு நியமனம் செய்யப்படுகின்ற நிரந்தரக் கமிஷனில் அங்கம் வகித்துவரும் தனிப்பட்ட நபர்கள் காலப் போக்கில் மாறிக்கொண்டே இருந்தபோதிலும், நாட்டின் நிதி அமைப்பைப்பற்றிய எல்லா விஷயங்களையும் இக் கமிஷன் சேகரித்து வைத்திருக்கும். எனவே, அவ்வப்போது நிதிக் கமிஷன்களை நிறுவு வதைவிட, நிரந்தரமாகவே நிதிக் கமிஷன் ஒன்றினை நிறுவுவது பெரிதும் நன்மைகள் பயக்கக்கூடியது என்பதில் ஐயமில்லை.

மத்திய—மாகாண அரசாங்கங்களின் நிதிகளைப்பற்றிய பொது வான கருத்துகள் குறித்து நாம் இதுகாறும் விளக்கம் தந்தோம். அடுத்து, இரண்டாவது உலகப்போருக்குப்பின் உலகில் உருவாகி யுள்ள சில கூட்டரசுகள் செய்துள்ள நிதி ஏற்பாடுகளை இந்தப் பொது வான கருத்துகளின் அடிப்படையில், ஆராயவேண்டியுள்ளது. இதற்குமுன் நாம் ஒரு முக்கியமான விஷயத்தை இங்குக் குறிப்பிட விரும்புகிறோம். தனித்த பல சிறு நாடுகளைவிடக் கூட்டரசு நாடானது குறைவான செலவில் அயல்நாட்டுக் கடன் வசதிகள் (உள்நாட்டுக் கடன் வசதிகளும்கூட) பெறமுடியும் என்று நாம் ஏற்கெனவே கூறி யுள்ளோம்.[1] இதுபோன்ற அரிய வாய்ப்புகளை வீணுக்கிவிடாது பயன் படுத்துவதற்கான சிறந்த ஏற்பாடுகளைக் கூட்டரசுகள் செய்ய வேண்டுவது மிகவும் அவசியமாகும். மேலும், மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் கடன் எழுப்பும் விஷயத்தில் இணைந்து செயலாற்றிவரவேண்டியது மிகவும் அவசியமாகும். சாதாரணமாகக் கூட்டரசில் மாகாண அரசாங்கங்களைவிட மத்திய அரசாங்கத்தின் நாணயமே பெரிதாக மதிக்கப்படுகின்றது. மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் இணைந்து செயலாற்றி இதுபோன்ற வசதிகளைப் பெரிதும் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். விரிவு அஞ்சி ஒரு சிறு குறிப்பைமட்டும் இங்குப் பொறிக்க விரும்புகிறோம். ஆஸ்திரேலியாவில் கடன் கவுன்சில் ஒன்று நிறுவப்பெற்றுள்ளது. மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் இணைந்து இக் கவுன்சிலை நிறுவியுள்ளன. மத்திய அரசாங்கத்திற்கும் மாகாண

1 1953-க்கும் (கூட்டரசு உருவான ஆண்டு) 1959-க்கும் இடைப்பட்ட காலத் தில் நயாஸாலாந்தால் மிகுதியான அளவு கடன் எழுப்ப முடிந்தது என்று ஜேக் தமது அறிக்கையில் (D. T. Jack, 'Report on Economic Survey of Nyasaland,' 1958-59)சிறந்த சான்றுகள்காட்டி விளக்கியுள்ளார். 1959-க்குப்பின் இதுபோன்ற நிலையே நீடித்துள்ளதா? இல்லையா? என்பது முற்றிலும் வேறுபட்ட விஷயமாகும்.

அரசாங்கங்கட்கும் தேவையான கடன்களை எழுப்பும் பணியில் இக் கவுன்சிலானது ஈடுபட்டுள்ளது. ஆஸ்திரேலியாவில் உள்ள இது போன்ற கடன் கவுன்சில்களைப் பின்தங்கிய நாடுகள் நிறுவவேண்டு வது இன்றியமையாததாகும். இதற்கு மாறாக, கனடாவில் உள்ளது போன்ற முறை தம் நாடுகளில் ஏற்பட்டுவிடாது இந் நாடுகள் கண் காணித்துக்கொள்ள வேண்டும். உள்நாட்டிலும் அமெரிக்காவிலும் தம் இச்சைப்படி கடன்களை எழுப்பிக்கொள்வதற்கு கனடாவில் மாகாணங்கட்கு உரிமை வழங்கப்பெற்றிருக்கின்றது.

### இரண்டாம் உலகப்போருக்குப்பின் உருவாகியுள்ள கூட்டரசுகள்

இதுகாறும் நாம் மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங்கள் ஆகியவற்றிற்கிடையேயுள்ள நிதி உறவுகளைப் பல கோணங்களி லிருந்து நோக்கி, பல காலங்களில் கடைப்பிடிக்கப்பட்ட முறைகளை எடுத்துக்காட்டாகத் தந்து விளக்கியுள்ளபோதிலும், இரண்டாவது உலகப்போருக்குப்பின் தோன்றியுள்ள கூட்டரசுகள் சிலவற்றைப் பற்றி முறைப்படி இன்னும் சிறிது தெரிந்துகொள்வது பயனுள்ளது என்று கருதுகிறோம். எனவே, கடந்த பத்து ஆண்டுகளில் உலகில் தோன்றியுள்ள நைஜீரியக் கூட்டரசு, மேற்கிந்தியத் தீவுக் கூட் டரசு, மத்திய ஆப்பிரிக்கக் கூட்டரசு ஆகியவற்றில் உருவாக்கப்பட் டுள்ள நிதி ஏற்பாடுகளை நாம் இங்குச் சுருக்கமாகக் காண்போம்.

பிரிந்த கூட்டரசு முறையை ஒட்டி நைஜீரியக் கூட்டரசு உரு வாகியுள்ளது. கூட்டரசு நிறுவப்பெற்ற காலந்தொட்டு, மத்திய அரசாங்கத்தைவிட மாகாண அரசாங்கங்களே ஆற்றல்மிக்கவை யாக வளர்ந்துகொண்டிருப்பதை இக் கூட்டரசில் காணலாம். 1958ஆம் ஆண்டுவரை இறக்குமதிவரி, ஏற்றுமதிவரி, செய்பொருள் வரி ஆகியவற்றை மத்திய அரசாங்கமே வசூலித்துவந்தது. எனினும், பங்கீட்டுக் கொள்கையின் அடிப்படையில் இவ் வரி களினின்றும் கிட்டிய வருவாயின் ஒரு பகுதியை, மத்திய அரசாங்க மானது மாகாண அரசாங்கங்கட்கு வழங்கிவந்தது. இதுபோலவே, மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழிருந்த தனியார் வரு மான வரியினின்றும் கிடைத்துவந்த தொகையின் ஒரு பகுதியை மத்திய அரசாங்கமானது மாகாண அரசாங்கங்கட்கு வழங்கி வந்தது. (ஆப்பிரிக்கர்களின்மீது விதிக்கப்பெற்ற வருமான வரி யானது மாகாணங்கட்கே ஒதுக்கப்பெற்றிருந்தது. இவ் வரிமுறை யானது, குடியுரிமை வழங்கப்பெறாத அயல் நாட்டினர்மீது விதிக் கப்பெற்ற வருமான வரிமுறையினின்றும் வேறுபட்டதாகும்.) இந் நாட்டில் 1958ஆம் ஆண்டில் நிதிக் கமிஷன் தன்னுடைய பரிந்துரை களை வெளியிட்டது. இவ் அறிக்கையை ஒட்டி மாகாண அரசாங்கங் களின் கை மேலும் ஓங்குவதற்கான வாய்ப்புகள் பெருகியுள்ளன.

இதுகாறும் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ் இருந்த முக்கியமான ஏற்றுமதிப் பொருள்களின்மீதான வரிகளை மத்திய அரசாங்கம் இழக்கநேர்ந்துள்ளது. இவ் ஏற்றுமதிப் பொருள்கள்மீது விற்பனை வரிகளை விதிப்பதற்கான அதிகாரமானது மாகாணங்கட்கு வழங்கப்பெற்றிருக்கின்றது. மேலும், தனியார் வருமான வரிகள் யாவும் (லாகோஸ் நீங்கலாக) மாகாணங்கட்கே ஒதுக்கப்பட்டுள்ளன. எனினும், இவற்றிற்கு மாருகவும் சில ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. முன்பு இறக்குமதி வரிகளினின்றும் கிட்டிய வருவாயின் ஒரு பகுதியை மத்திய அரசாங்கமானது மாகாண அரசாங்கங்கட்கு, பங்கீட்டுக் கொள்கையின் அடிப்படையில், வழங்கிவந்தது. தற்சமயம் இம் முறை கைவிடப்பட்டுள்ளது. இதற்குப் பதில், இறக்குமதி வரிகளினின்றும் கிடைக்கக்கூடிய வருவாயில் ஒரு பகுதியை மத்திய அரசாங்கமானது 'பகிர்வுக்கான' திரட்டில் (Distributable Pool) சேர்க்க வேண்டியுள்ளது. மாகாணங்களின் ஜனத்தொகை, மாகாணங்களின் பொதுவான தேவை ஆகியவற்றின் அடிப்படையில் இத் திரட்டிலிருந்து மாகாணங்கட்கு மானியங்கள் வழங்கப்பெறுகின்றன. கடன்கள் எழுப்பும் விஷயத்தைப் பொறுத்தவரையில் மத்திய அரசாங்கத்திற்கு அதிகமான அதிகாரங்கள் வழங்கப்பெற்றுள்ளன. இவை தவிர, அவ்வப்போது தேவை நேரும்பொழுது வரிமுறையை ஆய்வதற்காக விசேஷக் கமிஷனை நிறுவுவதற்கான அதிகாரமும் மத்திய அரசாங்கத்திற்கு வழங்கப்பெற்றிருக்கின்றது.

வலிமைகுன்றிய கூட்டரசுகளில் மேற்கிந்தியத் தீவுக் கூட்டரசும் ஒன்ருகும். சுங்க ஒன்றிப்பு, நாடு முழுவதற்கும் பொதுவான அயல்நாட்டுச் சுங்கமுறை, தடையின்றி தொழிலாளர் ஒரு மாகாணத்திலிருந்து பிறிதொரு மாகாணத்திற்குப் போய்வரக்கூடிய வாய்ப்பு, முற்றிலும் ஒருங்கிணைக்கப்பட்ட பணமுறை—ஆகியவற்றுள் எதுவும் இக் கூட்டரசில் இடம்பெறவில்லை. ஆரம்பகாலத்தில் சிகரெட், பீர், சாராயம், பெட்ரோல் ஆகிய பொருள்களின்மீது ஏற்றுமதி வரியும் இறக்குமதி வரியும் விதிக்கக்கூடிய அதிகாரத்தை மத்திய அரசாங்கம் பெற்றிருந்தது. மேலும், செலாவணி வெளியீடுமூலம் கிடைக்கக்கூடிய இலாபம் முழுவதும் மத்திய அரசாங்கத்தையே சார்ந்தது என்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வருமான வரி, இலாப வரி ஆகியவற்றை விதிக்கும் அதிகாரத்தை மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் பெற்றிருக்கின்றன. எனினும், முதல் ஐந்து ஆண்டுகட்கு மத்திய அரசாங்கமானது இவ் வரிகளை விதிக்கக்கூடாது என்று வரையறை செய்யப்பட்டுள்ளது. மத்திய அரசாங்கம், மாகாண அரசாங்கங்கள் ஆகியவற்றின் கடன் நடவடிக்கைகளை இணைப்பதற்கென்று கடன் கவுன்சில் ஒன்று நிறுவப்பெறவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது. லண்டனில்

1961 ஆம் ஆண்டு இந் நாட்டின் அரசியல் சட்டத்தை உருவாக்குவதற்காக நடைபெற்ற மகாநாட்டின் விளைவாக, இந் நாடு சுதந்திரம் (இதற்கென்று குறிக்கப்பெற்றுள்ள ஆண்டு 1962 ஆகும்) பெற்ற பின், இந்த ஏற்பாடுகள் மாற்றங்கட்கு உள்ளாகலாம். எந்த விதமான மாற்றங்கள் நேர்ந்தபோதிலும் வருமான வரியையல்லாது இறக்குமதி வரிகளையே மத்திய அரசாங்கம் சார்ந்திருக்கின்ற நிலை நீடிக்கும் என்று தோன்றுகிறது.[1,2]

வேறு சில காரணங்களை முன்னிட்டு மத்திய ஆப்பிரிக்கக் கூட்டரசின் எதிர்காலமும் ஐயப்பாட்டிற்கு உரியதாக உள்ளது. சுங்க வரிகள், செய்பொருள் வரிகள் ஆகியவை மத்திய அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ளன. (பெட்ரோல்மீதான செய்பொருள் வரி மாகாணங்கட்கு ஒதுக்கப்பட்டுள்ளது.) எனினும், ஏற்றுமதி வரிகளினின்றும் கிடைக்கக்கூடிய நிகர் வருவாயில் 38 சதவீதமானது (குறிப்பிட்ட விகிதத்தில்) மாகாணங்கட்கு வழங்கப்பெறவேண்டும். வருமானவரியைப் பொறுத்தவரையில் ஒரு சிக்கலான முறை கடைப்பிடிக்கப்பெற்றுவருகின்றது. மத்திய அரசாங்கமானது அடிப்படை வருமானவரியை விதிக்கின்றது. (இதிலிருந்து கிடைக்கக்கூடிய வருவாயில் 38 சதவீதமானது குறிப்பிட்ட விகிதத்தில் மாகாணங்கட்கு வழங்கப்பெறவேண்டும்.) இந்த அடிப்படை வரிக்குமேல் மாகாண அரசாங்கங்கள் தண்டம் (surcharge) விதித்துவருகின்றன. தனியார் வருமானவரியின்மீதும் கம்பெனி வருமானவரியின்மீதும் இந்தத் தண்டம் விதிக்கப்படுகின்றது. மாகாண அரசாங்கங்கட்காக மத்திய அரசாங்கம் இத் தண்டத்தை வசூலித்துவருகின்றது. நாம் ஏற்கெனவே விவாதித்துள்ள தண்ட விதிப்புக் கொள்கைக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு என்று கூறலாம். ஆப்பிரிக்கர்களின்மீது விதிக்கப்படுகின்ற தலைவரியானது (poll tax) மாகாணங்கட்டு ஒதுக்கப்பெற்றுள்ளது. மத்திய

[1] குறைந்தது 9 ஆண்டுகட்கு மத்திய அரசாங்கமானது (மத்திய அரசாங்க வருமானங்கள் தவிர ஏனைய வருமானங்களின்மேல்) வருமான வரியும் இலாப வரியும் விதிக்க முடியாது. இவ் வரிகளை விதிக்க எண்ணினால், மத்திய சட்டசபைகளுடைய அனுமதி பெறவேண்டும். மேலும், ஒவ்வொரு மாகாண சட்ட சபையும் பெரும்பான்மையான வாக்குகளை அளித்து இதற்கு ஆதரவு தெரிவிக்கவேண்டும். (Report of 'West Indian Constitutional Conference 1961,' Cmnd. 1417, HMSO, London, 1961.)

[2] நாம் மேலே கூறியுள்ள விஷயங்களை எழுதி முடித்தபின், ஜமைக்காவும் டிரினிடாடும் கூட்டரசிலிருந்து விலகிவிட்டன. இவை நீங்கலாக உள்ள ஏனைய பிரதேசங்கள் கூட்டரசு முறையின்கீழ் தொடர்ந்து செயலாற்றிவரக்கூடுமா என்பதுபற்றி எதுவும் இதுவரை தெரியவில்லை.

அரசாங்கக் கடன் கவுன்சில் ஒன்று இந் நாட்டில் பல ஆண்டுகளாகச் செயலாற்றிவந்துள்ளது. இவ்வாருக அமைந்துள்ள வரி ஏற்பாடுகளில் சில மாற்றங்கள் செய்ய வேண்டும் என்று மாங்க்டன் கமிஷன்[1] ஆலோசனைகளை வழங்கியுள்ளது. (உதாரணமாக, கம்பெனி வரி வீதங்களை எதிர்காலத்தில் மத்திய அரசாங்கமே நிர்ணயிக்கவேண்டும்; எனினும், கம்பெனி வரிமீது கூடுதலாகத் தண்டம் விதிக்கும் உரிமையை மாகாணங்கள் பெற்றிருக்க வேண்டும்; தனியார் வருமான வரி வீதங்களை மாகாண அரசாங்கங்களே நிர்ணயிக்கவேண்டும் என்பவை, சில ஆலோசனைகளாகும்.) எனினும், நாம் இப் புத்தகத்தை எழுதிக்கொண்டிருக்கும்பொழுது, இந்த ஆலோசனைகள் யாவும் நிர்ணயம்பெருத நிலையில் உள்ளன என்பதைக் குறிப்பிட விரும்புகிறேம்.

## பிற்சேர்க்கை I

### கூட்டரசில் தோன்றக்கூடிய சில விசேஷ பிரச்சினைகள்[2]

ஓரளவுக்கு வெற்றியளித்து வருகின்ற முன்னேற்றக் கொள்கையைக் கடைப்பிடித்துவருகின்ற கூட்டரசில், இதன் விளைவாகக் கூட்டரசுமுறை எங்ஙனம் பாதிக்கப்படும்? என்ற ஒரு குறிப்பான வினவைப் பேராசிரியர் ஹிக்ஸ் எழுப்பியுள்ளார். பேராசிரியரின் வினவானது கீழ்க்கண்டவாறு பொருள்படுகின்றது என்று நாம் கொள்ளலாம்—கூட்டரசின் பொருளாதார வளர்ச்சியானது முன்னேறிச் செல்வதை ஒட்டி, ஏனைய மாகாணங்களைவிடச் சில மாகாணங்களில் அதிகமான அளவு புதிய தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன என்று வைத்துக்கொண்டால், இக் கூட்டரசானது பிரிந்து சிதறக்கூடிய அபாயம் ஏதும் உளதா?

[1] 'Report of Advisory Commission on Review of Constitutions of Rhodesia and Nyasaland', Cmnd. 1148 (HMSO, London, October 1960).

[2] எக்ஸிடரில் 1959-ஆம் ஆண்டு நடைபெற்ற மாநாட்டில் வெளியிடப்பட்ட கருத்துகளையே இங்கு இப் பிற்சேர்க்கையில் தந்துள்ளோம். இது ஏற்கெனவே கீழ்க்காணும் புத்தகத்தில் பிரசுரமாகியுள்ளது. U.K. Hicks, et al., 'Federation and Economic Growth' (Allen and Unwin, London, 1961) pp. 83-5. எந்தக் கட்டுரையைப்பற்றி நாம் இங்குக் கருத்துத் தெரிவித்துள்ளோமோ அதைப் பேராசிரியர் ஹிக்ஸ் கீழ்க்காணும் தலைப்பின்கீழ் கீழ்க்காணும் புத்தகத்தில் வெளியிட்டுள்ளார். 'National Economic Development in the International Setting', in 'Essays in World Economics', Oxford University Press, Oxford, 1959.

இப் பிரச்சினையை அணுகுவதற்கு நாம் கூட்டரசின் தன்மை குறித்துச் சில எடுகோள்களை (assumptions) அமைத்துக்கொள்ள வேண்டுவது அவசியமாகும். கூட்டரசில் ஒரு மாகாணத்திலிருந்து பிற மாகாணங்கட்குத் தடை ஏதுமின்றி தொழிலாளர்கள், மூலதனம், பொருள்கள் ஆகியவை போய்வர முடியும் என்று நாம் வைத்துக் கொள்வோம். எல்லாக் கூட்டரசுகளிலும் இதுபோன்ற நிலை உள்ளது என்று கூறுவதற்கில்லை. (உதாரணமாக, மேற்கிந்தியத் தீவுகள் இதற்கு விதிவிலக்காக உள்ளன.) எனினும், பொதுவாக இந்த எடுகோளே நடைமுறையைப் பெரிதும் ஒத்துவரக்கூடியது என்று நாம் கருதலாம். நாம் மேலே கூறியுள்ளதுபோல, கூட்டரசில் ஒரு பகுதியினின்றும் ஏனைய பகுதிகட்குத் தொழிலாளர்கள், மூலதனம், பொருள்கள் ஆகியவை தடையின்றிப் போய்க்கொண்டும் வந்து கொண்டும் இருந்தால், நாடு பொதுவாகப் பொருளாதார வளர்ச்சி யுறுவதை ஒட்டி, எந்த மாகாணமாவது கூட்டரசைவிட்டுப் பிரிந்து செல்ல விழையுமா? என்ற வினாவுக்கு நாம் விடைகாண முயல வேண்டும். கூட்டரசிலுள்ள வலிமை வாய்ந்த மாகாணமானது (அதாவது, கூட்டரசின் பொருளாதார வளர்ச்சியால் பெரிதும் பயனடைந்திருக்கக்கூடிய மாகாணமானது) தான் தொழில்துறையில் அடைந்துள்ள முன்னேற்றம் குறித்து திருப்தி அடையலாம்; எனினும், வளர்ச்சியுறாத பிற மாகாணங்களிலிருந்து வேலைதேடித் தொழிலாளர்கள் இம் மாகாணத்தை நோக்கி வருவதானது இம் மாகாணத்திற்கு அதிருப்தியை ஏற்படுத்தலாம். கூட்டரசிலுள்ள வலிமை யற்ற மாகாணமானது தான் கூட்டரசைவிட்டுப் பிரிந்து தனித்திருந்தால், தொழில் முன்னேற்றம் நேர்ந்திருக்கும் என்று எண்ணலாம்; எனினும், இவ்வாறு பிரிந்திருக்கும் பட்சத்தில் தற்சமயம் தன்னிடமுள்ள தொழிலாளர்களைப் பிற மாகாணங்கட்கு அனுப்பி வருவதைப்போல அனுப்ப இயலாதுபோக நேரிடும் என்பதையும் இம் மாகாணமானது உணரும். எனவே, இவ்வாறு ஒரு விஷயம் பாதகமாக இருந்தால் அதற்கு ஈடுகட்டும் வகையில் பிறிதோரு விஷயம் சாதகமாக அமைந்துவிடுவதால், கூட்டரசு முறிய நேர்ந்தால் சுங்க ஒன்றிப்பும் தொழிலாளரின் தடையற்ற போக்குவரவும் நீடித்திருக்குமா அல்லது மறைந்தொழியுமா? என்பதை நாம் அறிய வேண்டுவது அவசியமாகும்.

இரண்டாவதாக, கூட்டரசிலிருந்து விலகி தனக்கென்று ஒரு சுங்க அமைப்பை உருவாக்கியுள்ள ஒரு பிரதேசத்தில், எத்தன்மைத்தான சூழ்நிலையில், முன்பு இருந்ததைவிட அதிகமான அளவு தொழில் முன்னேற்றம் ஏற்பட முடியும்? என்ற வினாவிற்கான விடையை நாம் காண முயல வேண்டும். வர்த்தகம் எவ்வாறு தோன்றுகின்றது, எவ்வாறு மாறி அமைகின்றது என்பவை

குறித்து நிலவி வருகின்ற விவாதங்கள் யாவும் இவ் வினவிற்கு விடையிறுக்கப் பயன்படக்கூடியவையாகும். A B ஆகிய இரண்டு பிரதேசங்கள் ஒரு கூட்டரசின்கீழ் இருந்தன என்றும், இவை தற்சமயம் கூட்டரசைவிட்டு விலகித் தனிநாடுகளாக உள்ளன என்றும், முன்பு மத்திய அரசாங்கம் எவ்வளவு சுங்கவரி விதித்ததோ அதே அளவு சுங்கவரியையே இவ் இரு பிரதேசங்களும் தற்சமயம் தனித்தனியே விதித்துவருகின்றன என்றும் வைத்துக்கொள்வோம். இதுபோன்ற நிலையில், முன்பு கூட்டரசில் இணைந்திருந்தபோது B-யிலிருந்து தான் பெற்றுவந்த பொருள்களின்மீது இப்பொழுது A-யானது சுங்க வரி விதிக்கும். இதனால் B-யிலிருந்து இப் பொருள்கள் தற்சமயம் A-க்குச் செல்லமுடியாதிருக்கலாம். இதன் விளைவாக, இப் பொருள்களைத் தயாரிக்கும் தொழிற்சாலைகள் A-யில் நிறுவப்பெறலாம். எனினும், A-யில் இதுபோன்ற மாற்றம் உறுதியாக நேரக்கூடியது என்று கொள்வதற்கில்லை. ஏனெனில், இவ் இரு நாடுகளும் கூட்டரசில் இணைந்திருந்தபொழுது, B-யில் இப் பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டமையால், C என்ற நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட இதே பொருள்கள், கூட்டரசிற்குள் நுழைய முடியாதிருந்திருக்கலாம். இப்பொழுது இவை தனிநாடுகளாகச் செயலாற்றிவரும்பொழுது C நாட்டிலிருந்து இப் பொருள்களை A-யானது இறக்குமதி செய்யலாம். எனவே, கூட்டரசிலிருந்து விலகிய பின் A-யும் B-யும் தனித்தனியே முந்திய வீதத்தில் சுங்கவரி விதித்து வந்தபோதிலும், A-யில் புதிய தொழில்கள் தோன்றக்கூடும் என்று திட்டவட்டமாகக் கூற முடியாது. இதனுடைய அடிப்படைக் கருத்து என்னவென்றால், கூட்டரசைவிட்டு விலகியபின், A-யானது தன்னுடைய தொழில் வளர்ச்சியைப் பெருக்க எண்ணினால், அது விதித்து வருகின்ற சுங்க வரி விதமானது B-யிலிருந்து மட்டுமன்றி C-யிலிருந்தும் வரக்கூடிய பொருள்களைத் தடைசெய்யக்கூடிய விதத்தில் அதிகமாக இருக்கவேண்டும். ஆனால், இவ்வாறு A-யானது அதிக அளவு சுங்கவரி விதிக்கத் துவங்கினால் B, C ஆகிய நாடுகள் எதிர் நடவடிக்கைகள் எடுக்கத் துவங்கும் என்பது நாப் கூறுமலேயே விளங்கும்.

மூன்றாவதாக, கூட்டரசை விட்டு விலகியபின் ஒரு பிரதேசத்தின் அரசாங்கப் பொது நிதியில் நேரக்கூடிய மாற்றங்கள் எவ்வாறாக இருக்கும்? என்ற வினவிற்கு விடை காணவேண்டியுள்ளது. கூட்டரசின்கீழ் இருவித அரசாங்கங்கள்—மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும்—உள்ளன. ஆனால், கூட்டரசைவிட்டு விலகியுள்ள பிரதேசத்தில் ஒரே ஓர் அரசாங்கம்மட்டும்தான்—மத்திய அரசாங்கம்மட்டும்தான்—இடம்பெற்றிருக்கும். இதனால் நிருவாகச் செலவு குறையலாம். மற்றும், கூட்டரசின்கீழ் ஒரு

பகுதியில் வசூல் செய்யப்பட்ட வரித்தொகை வேறொரு பகுதிக்கு மாற்றப்படலாம். ஆனால், கூட்டரசைவிட்டு விலகியுள்ள தனி நாட்டில் இவற்றிற்கான அவசியம் ஏதுமில்லை. எனவே, இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில், கூட்டரசைவிட்டு விலகியுள்ள நாடானது பயனடைந்துள்ளதா அல்லது பயனடையவில்லையா என்பதை நாம் கவனிக்கவேண்டும். மேலும், கூட்டரசைவிட்டு விலகியபின், ஒரு பிரதேசத்தால் வருமான வரிமுறையை முன்பு இருந்ததைவிடச் சிறந்த முறையில் மாற்றி அமைக்க முடிந்தால், கூட்டரசில் இணைந்திருந்த சமயம் நேர்ந்ததைவிடத் தற்சமயம் இப் பிரதேசத்தில் தொழில் முன்னேற்றம் துரிதமாக நடைபெற்று வரும்.

வேறு சில விஷயங்களையும் நாம் கவனிக்கவேண்டியுள்ளது. அவற்றை இங்குச் சுருக்கமாகக் குறிப்போம். கூட்டரசைவிட்டு விலகியுள்ள பிரதேசத்தில் அயல்நாட்டு மூலதனத்தின் நடமாட்டம் எவ்வாறு பாதிக்கப்படும்? கூட்டரசில் இணைந்து இருந்த காலத்தில் கூட்டரசின் ஏனைய பிரதேசங்களிலிருந்து இப் பிரதேசத்திற்கு வந்துகொண்டிருந்த மூலதன ஓட்டங்கள் தற்சமயம் எவ்வாறு பாதிக்கப்படும்? கூட்டரசு முழுவதற்கும் பொதுவாக உருவாகியிருந்த பணமுறை அகற்றப்படுமா? பொதுவான பணமுறை அகற்றப்பட்டால் (உதாரணமாக, காப்பிருப்பாக உள்ள அயல்நாட்டுச் செலாவணியின் அளவு குறைவதுபோன்ற) இழப்புகள் ஏதேனும் நேருமா? கூட்டரசைவிட்டு ஒரு பிரதேசம் விலக நேர்ந்ததற்குக் காரணம்தான் என்ன? கூட்டரசில் இணைந்திருந்தால் புதிதாக நிறுவக்கூடிய தொழில்களில் பெரும்பகுதி தனக்குக் கிடைக்காமல் போகலாம் என்பது காரணமாக இருக்குமா? அல்லது கூட்டரசிலுள்ள ஏனைய பகுதிகளில் நிறுவப்பெற்றுள்ள தொழில்களைத் தான் பெறமுடியாது என்பது காரணமாக இருக்கலாமா? (அதாவது, நைஜீரியாவைப்போன்ற, தொழில் வளர்ச்சிக்கு முன்பு உருவாகக்கூடிய, கூட்டரசு வெற்றியுடன் செயலாற்றிவர வாய்ப்புள்ளதா? அல்லது ஜமைக்காவைப்போன்ற, தொழில் வளர்ச்சி நேர்ந்தபின் உருவாகக்கூடிய, கூட்டரசு வெற்றியுடன் செயலாற்றிவர வாய்ப்புள்ளதா?)—என்பனபோன்ற பல விஷயங்களையும் நாம் தீர்மானிக்கவேண்டும்.

இங்கு நாம் குறிப்பிட்டுள்ள விஷயங்கள் யாவற்றையும் மனத்தில் கொண்டு, நைஜீரியக் கூட்டரசை நோக்கினால், நிலைமை பெரிதும் நம்பிக்கையற்றது என்று கூறத் தோன்றுது. (பிற பகுதிகளிலுள்ள துறைமுகங்களைப் பயன்படுத்துவதற்கு அநுமதிக்காவிட்டால்) வடக்குப் பிரதேசமும் (பிற பகுதிகளில், இங்கிருந்து தொழிலாளர் புகுவது அநுமதிக்கப்படாவிட்டால்) கிழக்குப் பிரதேச

மும் (வடக்குப் பிரதேசத்திலும் கிழக்குப் பிரதேசத்திலும் உள்ள மார்க்கெட்டுகளில் தான் உற்பத்தி செய்துள்ள பொருள்கள் நுழைவதற்குத் தடைவிதிக்கப்பெற்ருல்) மேற்குப் பிரதேசமும் நைஜீரியக் கூட்டரசை விட்டுப் பிரிந்துசெல்ல முயலும். மேற்கு இந்தியத் தீவுகளின் நிலைமை, நைஜீரியாவின் நிலைமையைவிட, முற்றிலும் மாறுபட்டதாகும். ஒரு பிரதேசத்திற்கும் மற்ருெரு பிரதேசத்திற்கும் இடையே உள்ள தூரம், பழக்கவழக்கங்களை மாற்ற இயலாமை, ஒருமுக அரசில் இருப்பதுபோலன்றி இரண்டுவகையான அரசாங்கங்கள் இருப்பதால் நேரக்கூடிய செலவு; பல பிரதேசங்களின் பொருளாதார அமைப்பானது பெரிதும் ஒத்திருப்பது, ஒவ்வொரு பிரதேசமும் தம்முடைய நலத்தையே பெரிதும் பாராட்டுவது— போன்ற காரணங்களை முன்னிட்டு மேற்கிந்தியக் தீவுகளில் கூட்டரசு முறையானது சுமுகமாகச் செயலாற்றிவரும் என்று நாம் உறுதியாகக் கூற முடியாது.

பேராசிரியர் ஹிக்ஸ் அவர்கள் எழுப்பியுள்ள ஒரு குறிப்பான வினவை ஆராயுமுகத்தான், கூட்டரசில் இயல்பாகத் தோன்றக் கூடிய பொருளாதாரப் பிரச்சினைகள் பெரும்பாலானவற்றை நாம் விளக்கிவிட்டோம் என்று கூறலாம். நாம் மேலே விளக்கிய பல விஷயங்களையும் முறைப்படி கீழே ஒழுங்குபடுத்தியுள்ளோம்:

1. கூட்டரசோடு ஒப்பிட்டு நோக்குவதற்குப் பொருத்தமான மாறுபட்ட நிலை எது? நாடு முழுவதற்கும் பொதுவான ஒருமுக அரசா? அல்லது கூட்டரசு சிதறி, பல தனித்த சிறு நாடுகள் தோன்றியிருக்கக்கூடிய நிலையா?

2. சுங்க ஒன்றிப்பு, தடையின்றித் தொழிலாளர்கள் ஒரு பிரதேசத்திலிருந்து பிறிதோர் பிரதேசத்திற்குப் போய் வரக்கூடிய வசதி—போன்ற பொருளாதார மாற்றங்கள் பொதுவாகக் கூட்டரசு ஏற்படுவதனுல் நேரக்கூடியவையாகும். கூட்டரசு முறையை ஏற்படுத்தாமலேயே, நாடுகள் இதுபோன்ற ஏற்பாடுகளை எந்த அளவுக்குச் செய்துகொள்ள முடியும்?

3. கூட்டரசு முறைக்கே உரித்தான, கூட்டரசை விட்டு இணைபிரியாத, பொருளாதார அம்சங்கள் யாவை?

இங்கு நாம் எழுப்பியுள்ள மூன்று வினக்களில் 2ஆவது 3ஆவது வினக்கட்கான பதில் இவ்வாறு அமையமுடியும். கூட்டரசு ஏற்படுவதனுல் அரசாங்க வருவாய், அரசாங்கச் செலவு ஆகியவற்றில்மட்டுமே மாற்றங்கள் கட்டாயம் நேரும். எனினும், இதுபோன்ற மாற்றங்களை (கூட்டரசு ஏற்பட்டிருப்பதால் நேர்ந்துள்ள அதிகமான நிருவாகச் செலவு தவிர ஏனையவற்றை) கொள்கையளவில் மட்டுப்படுத்திவிட முடியும்.

# பொருட்குறிப்பு அகராதி

# கலைச்சொற்கள்

(தமிழ்—ஆங்கிலம்)

| | |
|---|---|
| அட்வான்சுகள் | Advances |
| அடுக்கு | Slab |
| அதிகப் பற்றுக் கடன் | Overdraft |
| அதிகார வர்க்கம் | Bureaucracy |
| அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை | Balance of payments |
| அயல் நாட்டு வாணிபம் | Foreign Trade |
| அரசாங்கத் துறை | Public sector |
| அரசாங்கப் பொதுத் தணிக்கையாளர் | Comptroller and Auditor General |
| அரசாங்கப் பொது நிதி இயல் | Public Finance |
| அளிப்பு | Supply |
| ஆபத்து | Risk |
| ஆலிகாப்பலி | Oligopoly |
| இறக்குமதி வரி | Import Duty |
| இறப்பு வீதம் | Death Rate |
| இறுதி நிலைச் செலவு | Marginal cost |
| இறுதி நிலைச் சேமிப்பு நாட்டம் | Marginal propensity to save |
| இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு | Bank of England |
| இணைந்த கூட்டாட்சி முறை | Federalism by aggregation |
| இனம் | Item |
| இரட்டை வரிவிதிப்பு முறை | Double Taxation |
| இரவல்-குத்தகை முறை | Lend-Lease System |
| இலாபம் | Profit |
| இலாப ஈவு | Dividend |
| இழந்த வாய்ப்புக் கிரயம் | Opportunity cost |
| ஈடுசெய் செலவு | Replacement cost |
| உத்தம அளவு | Optimum size |
| உதவி மானியம் | Grant-in-aid |
| உதிரிச் சர்வாதீனப் போட்டி | Monopolistic competition |

| | |
|---|---|
| உபரி | Surplus |
| உற்பத்தி | Output |
| உற்பத்திக் காரணிகள் | Factors of production |
| உற்பத்தித் திறன் | Productivity |
| உற்பத்தியாளர் | Producer |
| உண்டியல் | Bill of Exchange |
| உண்டியல் ஏற்பகம் | Acceptance House |
| உலக பாங்கு | World Bank |
| உழைப்பு அழுத்தமான | Labour Intensive |
| உழைப்பைக் குறைக்கும் | Labour-saving |
| உழைப்பிலா வருமானம் | Unearned income |
| உள்ளிடுகை | Input |
| ஊக்கக் கொடை | Subsidy |
| எடுகோள் | Assumption |
| எதிர்பாராமல் வரக்கூடிய இலாபங்கள் | Windfall gains |
| ஏற்றுமதி வரி | Export duty |
| ஒருமுக ஆட்சி முறை | Unitary govt. |
| கச்சாப் பொருள் | Raw material |
| கடன் ஈவோர் | Lender |
| கடன் கழிவு நிதி | Funding |
| கடன் தீர்க்கும் நிதிகள் | Sinking Fund |
| கடன்தீர் நிதி அமைப்பு | Amortisation |
| கடன் பங்கீட்டு முறை | Rationing of credit |
| கடன் வாங்குவோர் | Borrower |
| கனரகத் தொழில் | Heavy industry |
| கனிப் பொருள்கள் | Minerals |
| கருப்பத் தடை | Birth control |
| கவர்ச்சி விளைவு | Demonstration effect |
| கழிவு | Discount |
| கஜானா உண்டியல் | Treasury bill |
| காப்பு இருப்பு | Reserve |
| காப்புச் சுங்கவரி | Protective tariff |
| கால இடையீடு | Time-lag |
| குறித்த வீத வரி | Specific duty |
| குறுங்காலம் | Short period |
| குறைந்து செல் செலவு விதி | Law of diminishing cost |
| குறை வேலை உடைமை | Underemployment |
| குவிவு | Concentration |
| கூட்டரசு நிதி | Federal finance |

| | |
|---|---|
| கூட்டுப் பங்கு நிறுவனம் | Joint-stock enterprise |
| சட்டபூர்வமான சர்வாதீனம் | Statutory monopoly |
| சடப் பொருள் முதல் ஆக்கம் | Physical capital formation |
| சமநிலை | Equilibrium |
| சமநிலைக் குலைவு | Disequilibrium |
| சமநிலை பட்ஜெட் | Balanced budget |
| சமநிலை பட்ஜெட் பெருக்கி | Balanced budget multiplier |
| சமூகப் பாதுகாப்பு | Social security |
| சர்வாதீனம் | Monopoly |
| சராசரிச் செலவு | Average cost |
| சாதனைமுறை பட்ஜெட் | Performance budgeting |
| சிக்கன நலன்கள் | Economies |
| சிறப்பு மட்டம் | Relative level |
| சிறப்புத் தேர்ச்சி | Specialisation |
| சுங்க வரி | Tariff |
| சுங்க ஒன்றிப்பு | Customs union |
| செய்பொருள்கள் | Manufacturers |
| செய்பொருள் வரி | Excise tax |
| செலுத்தினங்கள் | Payments |
| செலவீட்டு வரி | Expenditure tax |
| செலாவணிக் குழு | Currency board |
| சேதாரத் தள்ளுபடிகள் | Wear and tear allowances |
| சேமிப்பு | Saving |
| சொத்து | Asset |
| தண்டம் | Surcharge |
| தணிக்கையாளர் | Auditor |
| தவணைக் கடன் | Instalment credit |
| தன்னாட்சி உரிமையுள்ள | Autonomous |
| தனியார் சேமிப்பு | Private saving |
| தனியார் துறை | Private sector |
| தனியார் வருமான வரி | Personal income-tax |
| தராதர மட்டம் | Relative level |
| தர்மகர்த்தா | Trustee |
| தலா வருமானம் | Per capita income |
| தள்ளுபடி | Allowance |
| தலைவரி | Poll tax |
| திறம்பெறுத் தொழிலாளர் | Unskilled labour |
| திறன் | Efficiency |
| திறன் உடைத் தொழிலாளர் | Skilled labour |
| துணை ஈடு | Collateral |

| | |
|---|---|
| தேசிய வருமானம் | National income |
| தேய்மானம் | Depreciation |
| தேர்வு | Choice |
| தேர்வுச் சுயேச்சை | Freedom of choice |
| தேவை | Demand |
| நடப்புக் கணக்கு | Current account |
| நடப்புப் பண்டம் | Current good |
| நடைமுறை முதல் | Working capital |
| நஷ்டம் | Loss |
| நாட்டின் மொத்த ஆக்கம் | Gross national product |
| நாணய மாற்று வீதம் | Exchange rate |
| நிகழுமை | Probability |
| நிறை செய்யப்பட்ட சராசரி | Weighted average |
| நிரப்புப்பாடு | Complementarity |
| நிலைபேருக்கம் | Stabilisation |
| நிலைமுதற் பொருள்கள் | Fixed capital |
| நிலையான செலவு விதி | Law of constant cost |
| நீடித்த நுகர்வுப் பொருள் | Durable consumer good |
| நுகர்வு | Consumption |
| நுகர்வுப் பொருள்கள் | Consumer goods |
| நெடுங்காலம் | Long-run |
| நெடுங்காலப் பத்திரம் | Long-term security |
| நேர்மை | Equity |
| பட்ஜெட் | Budget |
| பத்திரம் | Security |
| பதிலீட்டு விளைவு | Substitution effect |
| பற்றுக்குறை | Deficit |
| பற்றுக்குறை நிதியாக்கம் | Deficit financing |
| பங்குத் தொகுப்பு | Stock |
| பங்கு மார்க்கெட் | Stock market |
| பண்ணை விலை | Ex-farm price |
| பணக் கொடை | Gratuity |
| பணக் கொள்கை | Monetary policy |
| பணச்சுருக்கம் | Deflation |
| பணவீக்கம் | Inflation |
| பன்னாட்டுச் செலாவணி நிதி | International monetary fund |
| பயன்பாடு | Utility |
| பருமச் சிக்கனங்கள் | Economies of scale |
| பல நாணய மாற்று வீதங்கள் | Multiple exchange rates |
| பாங்கு | Bank |

| | |
|---|---|
| பிறப்பு விகிதம் | Birth rate |
| பிரிந்த கூட்டாட்சி முறை | Federation by devolution |
| புதுப்பித்தல் | Renewal |
| புலனுகா | Invisible |
| புலனுகும் | Visible |
| பெறுமான விகித வரி | Ad valorem tax |
| பெருக்கி | Multiplier |
| பொதுச் சேமிப்பு | Public saving |
| பொதுப் பணி | Civil service |
| பொதுப்பயன் தொழில் | Public utility |
| பொறுப்பு | Liability |
| பொருள் வருமானம் | Income in kind |
| பொருளாதாரக் கோட்பாடு | Economic theory |
| பொருளாதாரப் புலவர் | Economist |
| மறு கழிவு | Rediscount |
| மறைமுக வரிமுறை | Indirect taxation |
| மந்தம் | Slump |
| மனித உழைப்பு மணி | Man-hour |
| மாறும் காப்பு விகித முறை | Variable Reserve Ratio |
| மானியம் | Grant |
| மார்க்கெட் பொருளாதார அமைப்பு | Market economy |
| முதற்கருவிப் பொருள்கள் | Capital goods |
| முதல் செறிவான | Capital intensive |
| முதலாட்சி உற்பத்தி முறை | Capitalistic method of production |
| முதலீடு | Investment |
| முதலீட்டு ஆதாயம் | Capital gains |
| முறைகள் ஆராய்ச்சி | Systems analysis |
| மூலதனம் | Capital |
| மூலதன ஆக்கம் | Capital formation |
| மூலதன இழப்பு | Capital loss |
| மூலதன இலாபங்கள் | Capital gains |
| மூலதனக் கணக்கு | Capital account |
| மூலதனக் குவிவு | Concentration of capital |
| மூலதன வரி | Capital tax |
| மூலப்பொருள்கள் | Primary products |
| மொத்த இலாபம் | Gross profit |
| மொத்தத் தேவை | Aggregate demand |
| மைய பாங்கு | Central Bank |

| | |
|---|---|
| ராயல்டி | Royalty |
| ரொக்கக் கணக்கீட்டு முறை | Cash accounting system |
| ரொக்கநிலைச் சொத்துகள் | Liquid assets |
| வர்த்தக சுங்க பொது ஒப்பந்தம் | Gatt |
| வரிக் கோட்பாடு | Fiscal theory |
| வரிக் கொள்கை | Fiscal policy |
| வருமானம் | Income |
| வருமான வரி | Income tax |
| வருமானப் பெருக்க விளைவு | Income generating effect |
| வருமானம் சார் தேவை நெகிழ்ச்சி | Income elasticity of demand |
| வருமான விளைவு | Income effect |
| வருவாய் | Revenue |
| வளர்ந்து செல் செலவு விதி | Law of increasing cost |
| வளர்வீத வரிமுறை | Progressive taxation |
| வழிவகைக் கடன்கள் | Ways and means advances |
| வாணிபச் சுழல் | Trade cycle |
| வாணிப மாற்று வீதம் | Terms of trade |
| வாணிப பாங்கு | Commercial Bank |
| வாழ்க்கைச் செலவு | Cost of living |
| விற்பனை நிறுவனம் | Marketing board |
| விற்பனை வரி | Sales tax |
| வினைமுடிந்த பொருள் | Finished good |
| வியாபாரப் பயிர்கள் | Cash crops |
| விலை | Price |
| விலைவர்சி முறை | Price system |
| விலை வீக்கம் | Price inflation |
| விளைவுபறித் தொழில்கள் | Extractive industries |
| வீதாசார வரி முறை | Proportional tax system |
| வெளியீட்டகம் | Issue house |
| வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் | Open market operations |
| வேலை செய்வோர் | Employee |
| வேலைப் பிரிப்பு | Division of labour |
| வேலையளிப்போர் | Employer |
| வேலை நிறைவு | Full employment |
| வேலையின்மை | Unemployment |
| வேலை வாய்ப்பு | Employment |
| ஜனத்தொகை | Population |
| ஜனத்தொகைக் கொள்கை | Population policy |
| ஜீவனம் | Subsistence |
| ஜீவன மட்டப் பொருளாதாரம் | Subsistence economy |

# கலைச்சொற்கள்

(ஆங்கிலம்—தமிழ்)

| | |
|---|---|
| Absolute level | சிறப்பு மட்டம் |
| Acceptance house | உண்டியல் ஏற்பகம் |
| Ad valorem tax | பெறுமான விகித வரி |
| Advances | அட்வான்சுகள் |
| Aggregate demand | மொத்தத் தேவை |
| Allowance | தள்ளுபடி |
| Amortisation | கடன்தீர் நிதி அமைப்பு |
| Assumption | எடுகோள் |
| Asset | சொத்து |
| Auditor | தணிக்கையாளர் |
| Autonomous | தன்னாட்சி உரிமையுள்ள |
| Average cost | சராசரிச் செலவு |
| Balance of payments | அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை |
| Balanced budget | சமநிலை பட்ஜெட் |
| Balanced budget multiplier | சமநிலை பட்ஜெட் பெருக்கி |
| Bank | பாங்கு |
| Bank of England | இங்கிலாந்துத் தலைமை பாங்கு. |
| Bill of exchange | உண்டியல் |
| Birth control | கருப்பத்தடை |
| Birth rate | பிறப்பு விகிதம் |
| Borrower | கடன் வாங்குவோர் |
| Budget | பட்ஜெட் |
| Bureaucracy | அதிகார வர்க்கம் |
| Capital | மூலதனம் |
| Capital account | மூலதனக் கணக்கு |
| Capital formation | மூலதன ஆக்கம் |
| Capital gains | மூலதன இலாபங்கள், முதலீட்டு ஆதாயம் |

| | |
|---|---|
| Capitalistic method of production | முதலாட்சி உற்பத்தி முறை |
| Capital tax | மூலதன வரி |
| Cash accounting system | ரொக்கக் கணக்கீட்டு முறை |
| Cash crops | வியாபாரப் பயிர்கள் |
| Central Bank | மைய பாங்கு |
| Choice | தேர்வு |
| Civil service | பொதுப் பணி |
| Collateral | துணை ஈடு |
| Commercial Bank | வாணிப பாங்கு |
| Complementarity | நிரப்புப்பாடு |
| Comptroller and Auditor General | அரசாங்கப் பொதுத்தணிக்கையாளர் |
| Concentration | குவிவு |
| Concentration of capital | மூலதனக் குவிவு |
| Consumer goods | நுகர்வுப் பொருள்கள் |
| Consumption | நுகர்வு |
| Cost of living | வாழ்க்கைச் செலவு |
| Current account | நடப்புக் கணக்கு |
| Current good | நடப்புப் பண்டம் |
| Currency Board | செலாவணிக் குழு |
| Customs union | சுங்க ஒன்றிப்பு |
| Death rate | இறப்பு வீதம் |
| Deficit | பற்றுக்குறை |
| Deficit financing | பற்றுக்குறை நிதியாக்க முறை |
| Deflation | பணச்சுருக்கம் |
| Demand | தேவை |
| Depreciation | தேய்மானம் |
| Demonstration effect | கவர்ச்சி விளைவு |
| Discount | கழிவு |
| Disequilibrium | சமநிலைக் குலைவு |
| Dividend | இலாப ஈவு |
| Division of labour | வேலைப் பிரிப்பு |
| Double taxation | இரட்டை வரி விதிப்பு முறை |
| Durable consumer good | நீடித்த நுகர்வுப் பொருள் |
| Economic theory | பொருளாதாரக் கோட்பாடு |
| Economies | சிக்கன நலன்கள் |
| Economies of scale | பருமச் சிக்கனங்கள் |
| Economist | பொருளாதாரப் புலவர் |
| Efficiency | திறன் |

| | |
|---|---|
| Emyloyment | வேலை வாய்ப்பு |
| Employee | வேலை செய்வோர் |
| Employer | வேலை அளிப்போர் |
| Equilibrium | சமநிலை |
| Equity | நேர்மை |
| Exhange rate | நாணயமாற்று வீதம் |
| Excise tax | செய்பொருள் வரி |
| Ex-farm price | பண்ணை விலை |
| Expenditure tax | செலவீட்டு வரி |
| Export duty | ஏற்றுமதி வரி |
| Extractive industries | விளைவுபறித் தொழில்கள் |
| Factors of production | உற்பத்திக் காரணிகள் |
| Federal finance | கூட்டரசு நிதி |
| Federalism by aggregation | இணைந்த கூட்டாட்சி முறை |
| Federalism by devolution | பிரிந்த கூட்டாட்சி முறை |
| Finished good | வினைமுடிந்த பொருள் |
| Fiscal policy | வரிக் கொள்கை |
| Fiscal theory | வரிக் கோட்பாடு |
| Fixed capital | நிலைமுதற் பொருள்கள் |
| Foreign trade | அயல்நாட்டு வாணிபம் |
| Freedom of choice | தேர்வுச் சுயேச்சை |
| Full employment | வேலை நிறைவு |
| Funding | கடன் கழிவு நிதி |
| Gatt | வர்த்தக சுங்க பொது ஒப்பந்தம் |
| Grant | மானியம் |
| Grant-in-aid | உதவி மானியம் |
| Gratuity | பணக்கொடை |
| Gross national product | நாட்டின் மொத்த ஆக்கம் |
| Gross profit | மொத்த இலாபம் |
| Heavy industry | கனரகத் தொழில் |
| Import duty | இறக்குமதி வரி |
| Income effect | வருமான விளைவு |
| Income elasticity of demand | வருமானம்சார் தேவை நெகிழ்ச்சி |
| Income in kind | பொருள் வருமானம் |
| Income tax | வருமான வரி |
| Income generating effect | வருமானப் பெருக்க விளைவு |
| Indirect taxation | மறைமுக வரி முறை |
| Inflation | பணவீக்கம் |
| Input | உள்ளிடுகை |

| | |
|---|---|
| Instalment credit | தவணைக் கடன் |
| International Monetary Fund | பன்னாட்டுச் செலாவணி நிதி |
| Investment | முதலீடு |
| Invisible | புலனாகா |
| Issue house | வெளியீட்டகம் |
| Item | இனம் |
| Joint-stock enterprise | கூட்டுப்பங்கு நிறுவனம் |
| Labour saving | உழைப்பைக் குறைக்கும் |
| Labour intensive | உழைப்பு அழுத்தமான |
| Law of constant cost | நிலையான செலவு விதி |
| Law of diminishing cost | குறைந்துசெல் செலவு விதி |
| Law of increasing cost | வளர்ந்துசெல் செலவு விதி |
| Lender | கடன் ஈவோர் |
| Lend-lease system | இரவல்-குத்தகை முறை |
| Liability | பொறுப்பு |
| Liquid assets | ரொக்க நிலைச் சொத்துகள் |
| Long period | நெடுங்காலம் |
| Long term security | நெடுங்காலப் பத்திரம் |
| Loss | நஷ்டம் |
| Man hour | மனித உழைப்பு மணி |
| Manufactures | செய்பொருட்கள் |
| Marginal cost | இறுதிநிலைச் செலவு |
| Marginal propensity to save | இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் |
| Market economy | மார்க்கெட் பொருளாதார அமைப்பு |
| Marketing board | விற்பனை நிறுவனம் |
| Minerals | கனிப்பொருள்கள் |
| Monetary policy | பணக் கொள்கை |
| Monopolistic competition | உதிரிச் சர்வாதீனப் போட்டி |
| Monopoly | சர்வாதீனம் |
| Multiple exchange rate | பலநாணய மாற்று வீதம் |
| Multiplier | பெருக்கி |
| National income | தேசிய வருமானம் |
| Oligopoly | ஆலிகாப்பலி |
| Open market operations | வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் |
| Opportunity cost | இழந்த வாய்ப்புக் கிரயம் |
| Optimum size | உத்தம அளவு |
| Output | உற்பத்தி |
| Overdraft | அதிகப் பற்றுக் கடன் |

| | |
|---|---|
| Payments | செலுத்தினங்கள் |
| Per Capita income | தலா வருமானம் |
| Performance budgeting | சாதனை முறை பட்ஜெட் |
| Personal income tax | தனியார் வருமான வரி |
| Physical capital formation | சடப்பொருள் முதல் ஆக்கம் |
| Poll tax | தலைவரி |
| Population | ஜனத்தொகை |
| Population policy | ஜனத்தொகைக் கொள்கை |
| Price | விலை |
| Price inflation | விலை வீக்கம் |
| Price system | விலைவாசி முறை |
| Primary products | மூலப்பொருள்கள் |
| Private saving | தனியார் சேமிப்பு |
| Probability | நிகழுமை |
| Production | உற்பத்தி |
| Producer | உற்பத்தியாளர் |
| Productivity | உற்பத்தித் திறன் |
| Progressive taxation | வளர்வீத வரிமுறை |
| Proportional tax system | வீதாசார வரிமுறை |
| Protective tariff | காப்புச் சுங்கவரி |
| Profit | இலாபம் |
| Public finance | அரசாங்கப் பொது நிதி இயல் |
| Public saving | பொதுச் சேமிப்பு |
| Public sector | அரசாங்கத் துறை |
| Public utility | பொதுப் பயன் தொழில் |
| Rationing of credit | கடன் பங்கீட்டு முறை |
| Raw material | கச்சாப் பொருள் |
| Relative level | தராதர மட்டம் |
| Renewal | புதுப்பித்தல் |
| Rediscount | மறு கழிவு |
| Replacement cost | ஈடுசெய் செலவு |
| Reserve | காப்பு இருப்பு |
| Revenue | வருவாய் |
| Risk | ஆபத்து |
| Royalty | ராயல்டி |
| Sales tax | விற்பனை வரி |
| Security | பத்திரம் |
| Saving | சேமிப்பு |
| Short-period | குறுங்காலம் |
| Sinking fund | கடன் தீர்க்கும் நிதிகள் |

| | |
|---|---|
| Skilled labour | திறன் உடைத் தொழிலாளர் |
| Slab | அடுக்கு |
| Slump | மந்தம் |
| Social security | சமூகப் பாதுகாப்பு |
| Specialisation | சிறப்புத் தேர்ச்சி |
| Specific duty | குறித்த வீதவரி |
| Stabilisation | நிலைபேருக்கம் |
| Statutory Monopoly | சட்டபூர்வமான சர்வாதீனம் |
| Stock | பங்குத் தொகுப்பு |
| Stock market | பங்கு மார்க்கெட் |
| Subsidy | ஊக்கக் கொடை |
| Subsistence | ஜீவனம் |
| Substitution effect | பதிலீட்டு விளைவு |
| Subsistence economy | ஜீவன மட்டப் பொருளாதாரம் |
| Surcharge | தண்டம் |
| Surplus | உபரி |
| Supply | அளிப்பு |
| Systems analysis | முறைகள் ஆராய்ச்சி |
| Tariff | சுங்கவரி |
| Terms of trade | வாணிப மாற்று வீதம் |
| Time-lag | கால இடையீடு |
| Trade cycle | வாணிபச் சுழல் |
| Treasury bill | கஜானு உண்டியல் |
| Trustee | தர்மகர்த்தா |
| Unearned income | உழைப்பிலா வருமானம் |
| Underemployment | குறைவேலை உடைமை |
| Unemployment | வேலையின்மை |
| Unitary Govt. | ஒருமுக ஆட்சிமுறை |
| Unskilled labour | திறம்பெறுத் தொழிலாளர் |
| Utility | பயன்பாடு |
| Variable reserve ratio | மாறும் காப்புவிகித முறை |
| Visible | புலனுகும் |
| Wages and means advances | வழிவகைக் கடன்கள் |
| Wear and tear allowance | சேதாரத் தள்ளுபடி |
| Weighted average | நிறை செய்யப்பட்ட சராசரி |
| Windfall gains | எதிர்பாராமல் வரக்கூடிய இலாபங்கள் |
| Working capital | நடைமுறை முதல் |
| World Bank | உலக பாங்கு |

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9

## 1966 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

**பொருளாதாரம்**

| | | | |
|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்—II | சி. வேலாயுதம் | 9—00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | திருமதி ஆர். தாமரஜாட்சி | 12—00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்—I | தி. சி. மோகன் | 12—00 |
| 4. | ,, —II | எம். ஏ. அரூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | 10—75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க. முத்தையன் | 7—00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்—II | சி. வேலாயுதம் | 11—50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7—50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5—50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4—75 |
| 10. | இந்தியப் பொருளியல்—I | எம். பாலசுப்பிரமணியன் | 10—00 |
| 11. | ,, II | எம். ஸ்ரீரங்குநாதன் | 4—25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை—I | சி. சுந்தரராஜன் | 10—75 |
| 13. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 10—50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு—I | கி. சி. இராமசாமி | 6—00 |
| 15. | ,, II | ,, | 6—00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5—00 |

| | | | |
|---|---|---|---|
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு—I | மு. க. சுப்பிரமணியம் | 11—00 |
| 18. | ,, II | பி. வி. சீனிவாசன் | 6—00 |
| 19. | ,, III | ,, | 6—50 |
| 20. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்—I | மா. குமாரசாமி | 10—00 |
| 21. | ,, II | அர. சேஷாசலம் | 9—50 |
| 22. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி—I | தே. வேலப்பன் | 10—00 |
| 23. | ,, II | ஜி. சிதம்பரம் | 8—00 |
| 24. | பணம்—சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10—00 |
| *25. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடைய பிள்ளை | 9—50 |
| 26. | பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | சூ. ரா. கறுப்பண்ணன் | 11—00 |
| 27. | பென்ஹாம் பொருளாதாரம்—I | ஏ. குழந்தை | 11—00 |
| 28. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 7—00 |
| *29. | வரவுசெலவுத் திட்டம் | ஆர். ரங்காச்சாரி | 6—00 |



வரலாறு

| | | | |
|---|---|---|---|
| *30. | பிரிட்டன் வரலாறு—I | கி. ர. அனுமந்தன் | 10—00 |
| *31. | ,, II | ,, | 9—75 |
| *32. | ஐரோப்பிய வரலாறு—I | டி. வி. சொக்கப்பா | 4—50 |
| 33. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றாண்டு காலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15—00 |
| 34. | இங்கிலாந்து வரலாறு—I | இரா. அண்ணாமலை | 13—00 |
| 35. | ,, II | பா. மாணிக்கவேலு | 13—00 |
| 36. | ,, III | என். ஜே. ராஜகோபால் | 8—00 |
| 37. | ,, IV | ,, | 8—00 |

*மூலநூல் (Original Book)

வரலாறு—தொடர்ச்சி

| | | | |
|---|---|---|---|
| 38. | இங்கிலாந்தின் வரலாறு—I | க். த. திருநாவுக்கரசு | 15—00 |
| 39. | ,, II | எம். எக்ஸ். மிராண்டா | 8—00 |
| 40. | ,, III | ,, | 5—00 |
| 41. | இந்தியாவின் சிறப்பு வரலாறு—I | தி. வெ. குப்புசாமி | 7—50 |
| 42. | ,, II | ஏ. உஸ்மான் ஷெரீப் | 9—00 |
| 43. | ,, III | அ. பாண்டுரங்கன் | 11—00 |
| 44. | கிரேக்க நாட்டு வரலாறு—I | சைமன் ஐ. எஸ். பாக்கியநாதன் | 7—50 |
| 45. | ,, II | ,, | 7—00 |
| 46. | ,, III | பி. இராமானுஜம் தேவதாஸ் | 7—75 |

அரசியல்

| | | | |
|---|---|---|---|
| *47. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4—75 |
| 48. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8—50 |
| 49. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8—50 |
| 50. | பன்னாட்டு அரசியல்—I | திருமதி நூர்ஜஹான் பாவா | 16—00 |
| 51. | பொதுத்துறை ஆட்சி இயல்—I | வீ. கண்ணையா | 9—00 |
| 52. | ,, II | அ. ஜெகதீசன் | 7—25 |
| 53. | பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்—I | வீ. கண்ணையா | 7—50 |
| 54. | ,, II | டி. செல்லப்பா | 7—50 |

உளவியல்

| | | | |
|---|---|---|---|
| 55. | குழந்தை உளவியல்—I | கி. ர. அப்புள்ளாச்சாரி | 8—00 |
| 56. | ,, II | ,, | 7—00 |

| | | | |
|---|---|---|---|
| 57. | உட்சவர் மனம் | சி ந. வைத்தீஸ்வரன் | 7—00 |
| 58. | இளையோர் உளவியல்—I | தி. இரா. அரங்கராசன் | 12—00 |
| 59. | ,, II | ,, | 9—00 |
| 60. | சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9—25 |
| 61. | பிறழ்நிலை உளவியல் | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | 11—00 |
| 62. | பித்தரின் உள்ளம் | ,, | 3—00 |
| *63. | ருமர உள்ளம் | டாக்டர் மு  அறம் | 6—25 |

தத்துவம்

| | | | |
|---|---|---|---|
| 64. | இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5—50 |
| *65. | அறிவு ஆராய்ச்சி இயல் | ஆர். இராமானுஜாச்சாரி | 3—50 |
| *66. | மேலைநாட்டுத் தத்துவம் | ஆர். எஸ். தேசிகன் | 3—50 |
| 6 . | அத்துவித தத்துவம் | கோ. மோ. காந்தி | 6—50 |
| 68. | ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 5—50 |
| 69. | இந்தியத் தத்துவம் | வ. அ. தேவசேனுபதி<br>பா. நா. சண்முகசுந்தரம் | 3—50 |

அறவியல்

| | | | |
|---|---|---|---|
| 70. | அறவியல்—ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8—50 |

அளவையியல்

| | | | |
|---|---|---|---|
| 7 . | அளவை இயல்—தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2—50 |

* மூல நூல் (Original Book)

### மானிடவியல்

| | | | |
|---|---|---|---|
| *72. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4—75 |
| 73. | பண்பாட்டுக் கோலங்கள் | கி.பூ. சுப்பிரமணியன் | 5—50 |
| 74. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3—50 |

### சமூகவியல்

| | | | |
|---|---|---|---|
| 75. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10—00 |

### புவியியல்

| | | | |
|---|---|---|---|
| 76. | ஆசியா–I | கொ. சேஷ. நரசிம்மன் | 9—50 |
| 77. | ,, II | ,, | 8—75 |
| 78. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8—50 |
| *79. | தென்கிழக்கு ஆசியா | ஜி. கிருஷ்ணமூர்த்தி | 8—50 |
| *80. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |
| *81. | தென் அமெரிக்கா | எம். என். பத்மநாபன் | 9—00 |
| *82. | தென் கண்டங்கள் — ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 1—00 |
| *83. | ,, — ஆஃபிரிக்கா | எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | 3—25 |
| *84. | புவிப்புறவியல்-II | நா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *85. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *86. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *87. | சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6—50 |
| 88. | காலநிலை இயல்–I | கொ. சேஷ நரசிம்மன் | 10—00 |
| 89. | ,, II | ,, | 5—00 |

90. வளியியலுக்கு ஓர் அறிமுகம் ... ... கோ. இராமசாமி ... 11—00
*91. புவி அமைப்பு இயல் ... ... சி. விசுவநாதன் ... 4—75

**புள்ளியியல்**

*92. புள்ளியியல் — அறிமுகம் ... ... சு. வைத்தியநாதன் ... 10—00
93. புள்ளியியல் முறைகள்—I ... ... கோ. சண்முகசுந்தரம் ... 10—00
94. „ —II ... ... கே. ஆர். இராஜகோபாலன் ... 14—00
95. நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் ... ... தி. வி. லட்சுமிநரசிம்மன் ... 6—50

**உயர் கணிதம்**

*96. ஆயத்தொலை வடிவகணிதம் ... ... டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை ... 12—50
*97. வகை நுண்கணிதம் ... ... „ ... 8—00
*98. தொகை நுண்கணிதம் ... ... தி. கோவிந்தராசன் ... 9—00

**விலங்கியல்**

*99 விலங்கியல் ... ... பெ. மா. அண்ணாமலை, இரா. முருகேசன் ... 12—00

**பௌதிகவியல்**

100. ஒளி நூல் ... ... ச. சம்பத்து ... 10—00

*மூல நூல் (Original Book)

**விஞ்ஞானம்**

| | | | | |
|---|---|---|---|---|
| *101. | வானவெளி வெற்றி | ... ... | டாக்டர் எம். ஏ. தங்கராஜ் ... | 6—00 |
| *102. | ரேடியோ | ... ... | ,, பி. திருஞானசம்பந்தம் ... | 4—75 |
| *103. | எக்ஸ்-கதிர்கள் | ... ... | பெ. நா. அப்புசாமி, ஜே. பி. மாணிக்கம் | 4—50 |
| *104. | பாம்புகள் | ... ... | பெ. மா. அண்ணாமலை ... | 3—50 |
| *105. | தாவரம்—வாழ்வும் வரலாறும் | ... ... | டாக்டர் கு. சீனிவாசன் ... | 8—00 |
| *106. | கரும்பு | ... ... | கு. பெரியசாமி ... | 4—00 |

**மருத்துவம்** ... ...

| | | | | |
|---|---|---|---|---|
| *107. | நீரிழிவு—க்ஷயரோகம் | ... ... | டாக்டர் ஜி. வேங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் ... | 2—50 |
| 108. | மகப்பேறும் மாதர் நோயும் | ... ... | டாக்டர் (குமாரி) மணிமேகலை ... | 8—25 |
| *109. | பாக்டீரியா | ... ... | சு. சுந்தரம் ... | 2—50 |

**பொறியியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| 110. | நீங்களே வீட்டைக் கட்டலாம் | ... ... | கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர் சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் ... | 8—50 |

**சட்டம்**

| | | | | |
|---|---|---|---|---|
| *111. | குற்றவியல் சட்டம் | ... ... | எம். சண்முகசுப்பிரமணியம் ... | 10—00 |

**பொது நூல்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| 112. | மகாத்மாகாந்தி | ... ... | சரஸ்வதி தங்கையன் ... | 3—25 |
| 113. | விவசாயப் புரட்சி | ... ... | வி. கார்த்திகேயன் ... | 8—00 |
| 114. | சேமக் கை-நூல் | ... ... | ஆ. சுப்பிரமணியம் ... | 2—50 |
| *115. | முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் | ... ... | எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் ... | 9—00 |
| *116. | உணவும் ஊட்டமும் | ... ... | தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார் ... | 4—50 |

* மூல நூல் (Original Book)

